# சநாதநதர்மம்.

3-ம் பிரிவு.

இது

ஹைகோர்டு வக்கீலும்
மதுரை பிரஹ்மஞானசபை பிரஸிடெண்டுமாகிய
ப. நாராயண ஐயரால்,

மொழிபெயர்க்கப்பட்டது.

“அறத்தினூங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.”—திருக்குறள்.

பிரதிகள் 1000.

சென்னை:

ஆநந்தா அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப் பெற்றது.

1905.

# மொழிபெயர்ப்பாளரின் முன்முகம்.



மகாக்ஷேத்திரமாகிய காசியில் ஸ்தாபிக்கப்பட்டு நடந்து வருகிற "பிரதான ஹிந்து வித்தியாசாலை" சபையார்கள் நம்மாணுக்கரின் உபயோகத்துக்காகச் சர்வஹிந்துக்களுக்கும் பொதுவான ஆரியமதக் கொள்கைகள் தருமங்கள் இவைகளின் சாராம் சங்களை நம் வேதசாஸ்திர புராணாதிகளிலிருந்து எடுத்துத் தொகுத்துச் "சநாதனதருமம்" எனப்பெயருமிட்டு ஆங்கிலபாஷையில் ஓர் அருமையான நூல் வெளியிட்டார்கள். அது மூன்று பிரிவுள்ளது. அம்மூன்றில் இந்நூல் மூன்றாவது.

சொற்சுவை, பொருட்சுவை செறிந்த இம்முதனூலை, நம் தமிழ்நாட்டார் அனைவருக்கும் பயன்படும்படி "அன்பெனு நறவமாந்தி மூங்கையான் பேசலுற்றான் என்னயான் மொழியலுற்றுத்" தமிழில் மொழிபெயர்க்கலானேன்.

இதிற் காணும்குற்றங் குறைகளை நீக்கிக் குணத்தைக் கைக்கொள்ளும்படி அன்னமொத்த அறிவுடையோரை மிகவும் வணக்கமாய் வேண்டுகிறேன்.

இவ்வரிய நூலைத் தமிழில் மொழி பெயர்க்கும்படி எனக்கு அனுமதி கொடுத்த காசிப் பிரதான ஹிந்து வித்தியாசாலைச் சபையார்க்கும்

இதனை மொழிபெயர்க்குங்கால் என்கூடவே இருந்து உதவிபுரிந்தவரும், என் ஞான சகோதரரும் வித்தியா

இலாகா பென்ஷன் சூபர்வைசருமாகிய மகா-ா-ா-ஸ்ரீ ஸி. நாராயணசாமி ஐயர் அவர்களுக்கும்

என்மீது அன்புகூர்ந்து தம் அருமைக்காலத்தையும் நுண்ணறிவையும், முப்பாஷைத்திறமையையும் உபயோகித்து இம்மொழிபெயர்ப்பைச்சீர்ப்படுத்திச் சிறப்புச் செய்த என் அருமை நண்பரும் மதுரை ஜில்லாகோர்டு வக்கீலுமாகிய மகா-ா-ா-ஸ்ரீ பி. எஸ். சுப்பிரமணிய ஐயர் அவர்கக்ளுக்கும்

இந்நூலின் தமிழைச் சீருறச்செய்து அச்சியற்றுங் கால் யான் விரும்பிய உதவிகளை அன்புடன் புரிந்த சேது பதி ஹைஸ்கூல் உதவி உபாத்தியாயரும் விவேகபாநு பத்திராதிபருமாகிய என் நண்பர் மகா-ா-ா-ஸ்ரீ எஸ். சாமிநாதையர் அவர்களுக்கும், நன்றிபாராட்டல் என் கடமை.

மதுரை,
15-12-05.

ப. நாராயணன்.

# பொருளடக்கம்



## முகவுரை I—IV.

IV

## மூன்றாவது பாகம்.





# முகவுரை.

காசிப் பிரதான "ஹிந்து வித்தியா சாலை" சபையார்களுடைய விசாரணையி லிருக்கிற பள்ளிக் கூடங்களில், "சமய நெறிகளையும்" "தருமத்தையும்" கற்பிக்கும் முறைகளை அவர்கள் அடியில்வருமாறு விவரித்திருக்கிறார்கள்:—

காசிப் பிரதான "ஹிந்து வித்தியா சாலை" யின் முக்கியமான கருத்து என்னவெனில், தற்கால ரீதிக்குத் தக்கபடி ஹிந்து சமயநெறிகளையும், தருமத்தையும் மேல் திசையாரது சாஸ்திரத்துடன் கற்பிக்க வேண்டுமென்பதேயாம்:—

"சமய நெறி" களையும் "தருமத்தை" யும் கற்பித்தலானது விஸ்தாரமாகவும், நிஷ்பக்ஷபாதமாகவும், எச்சமயத்திற்கும் விரோத மற்றதாகவும் இருக்கவேண்டியதுடன் ஹிந்து மதத்தின் கோட்பாடுகளுக்கு அமைந்ததாகவும் இருத்தல் வேண்டும். பலவாறான ஹிந்து மனோபாவங்களை யனுசரித்ததாகவும் அவைகளுக்குப் புறம்பான அபிப்பிராயங்களை யனுசரிக்காத தாகவும் ஷெ கல்வி இருத்தல் வேண்டும். நமது தேசத்தில் சாஸ்திரீயமென்று அங்கீகரிக்கப்படும் தரிசனங்களில் விவாதமுள்ளவும் ஆக்ஷேபத்திற் கிடமானவைகளுமான விஷயங்களை விலக்க வேண்டும். தற்கால ராஜரீக சம்பந்தமான விஷயங்களிலும், வர்ணாசிரம தருமங்களைப்பற்றிய நவீன அபிப்பிராயங்களிலும் சம்பந்தித்தல் கூடாது. ஆனால் ஷெ உபதேசமானது மாணாக்கர்கள் தகுந்த பிராயம் வந்

ததின்மேல், அவரவர் புத்தியின் தன்மைக்கும், அந்தக் கரண விருத்திக்குத் தக்கவாறு மென்மேலும் அபிவிருத்தியடையும் வண்ணம் "சமயநெறி," "தருமம்" இவைகளின், பலமான அஸ்திவாரத்துக்கு ஹேதுவாக விருக்க வேண்டும்:—

ஈசுவரபக்தி, தருமசிந்தை, தீரத்தன்மை, சுவாசிரயம், நேர்மை, சத்தியம், சாந்தம், சமாதானம், என்ற குணங்கள் ஏற்பட ஆதாரமாக விருத்தல் வேண்டும். அதாவது, மாணுக்கன் அந்த உபதேசத்தினுல் குணவானுகவும், பரோபகாரியாகவும் ஆகவேண்டும். ஒருவன் இவ்வுலகத்தில் இவ்விதமாக இருக்கவேண்டியது என்பதையும், அவன் பிறர் சம்பந்தப்பட்ட மட்டில் இவ்விதமாய் நடந்து கொள்ளவேண்டிய தென்பதையும் விவரித்துக் காட்டுகின்ற மூலாதாரமான மதக் கொள்கைகளே மேற்கூறியதை உண்டுபண்ணப் போதுமானவைகளாகவிருக்கின்றன. ஹிந்துக்களனைவரையும் பொதுவான ஓரே மதத்தில் ஒருங்கு சேர்க்கும் மார்க்கத்தைத் தெளிவாகவும் சுலபமாகவும் கற்பித்தல் வேண்டும். அவர்களுக்குள் பேதத்தை யுண்டுபண்ணக் கூடியவைகளை யெல்லாம் கவனிக்கக்கூடாது. கடைசியாக, அப்படிக் கற்பிப்பதின் நோக்கமானது,—ஹிந்துக்களுக்குள்ளிருக்கின்ற பலவாருன அபிப்பிராயங்களையும் ஆசாரங்களையும் துவேஷியாமல் இருப்பதுமன்றி அந்நிய மதஸ்தர்களின் சமயவழிபாடுகளை நிந்தியாமல் அவைகளும் ஈசுவரனையடைய மார்க்கங்களென்று நினைக்கும் சமதிருஷ்டியை அப்பியாசிக்கமுயல வேண்டு மென்பதுதான்.

I. ஆகவே="சமயநெறி," "தருமம்", சம்பந்தமான உபதேசமானது, எல்லா ஹிந்துக்களும் அங்கீகரிக்கக் கூடியதாக விருக்கவேண்டும்.

2. புறச் சமயங்களினின்றும் ஹிந்து மதத்தை வேறுபடுத்திக் காட்டக் கூடிய விசேஷ போதனைகள் அடங்கியதாக இருக்கவேண்டும்.

3. ஹிந்து மதத்திலுள்ள ஒரு குறிப்பிட்ட தரிசனம், அல்லது வகுப்பினருடைய தனிமையான பாவங்களைப் பக்ஷபாதமாக அனுசரிக்கக்கூடாது.

சநாதன தருமம் முதல் பாடம், இரண்டாம் பாடங்களைப் பள்ளிக்கூடங்களில் வாசித்ததின்மேல் இந்தப்புத்தகத்தை மேலான கலாசாலைகளில் மாணுக்கர் கற்கவேண்டும். மேற்குறித்த பாலசிக்ஷைக் கேற்பட்ட சிறு புஸ்தகங்களில் சாமான்யமாகச் சொன்ன விஷயங்களை யனுசரித்துச் சிறுவர்களின் மனங் கலங்காமலிருக்க வேண்டியது பற்றி முற்கூறிய விஷயங்களை விஸ்தாரமாகவும் தெளிவான விவரணங்களுடனும் இப்புத்தகம் அறிவிக்கிறது.

ஹிந்துக்களின் பெரும்பான்மையாருடைய பொதுவான சமயநெறிகளைத் தெரிவித்தும், ஆனால் அவைகளில் அவாந்தர பேதங்களான தனித்தனி யபிப்பிராயங்களை விலக்கியும் இப்புத்தகமும் முன்னிரண்டு புத்தகங்களைப் போலவே அமைந்துள்ளது. இப்புத்தகத்தின் அவதாரிகையில், ஒவ்வொரு மாணுக்கனும் ஹிந்து சமயத்தில் வழங்காநின்ற பலதரிசனங்கள் இன்னவின்னவென்பதையும், அததின் முக்கிய லக்ஷணங்களையும் தெரிந்துகொள்ள வேண்டியதாதலின் அவைகள் சுருக்கமாய் எழுதப்பட்டிருக்கின்றன. இது உள்பட மூன்று புத்தகங்களுக்கும் "சநாதனதருமம்" என்ற நாமம் ஆலோசனையின்மேல் அளிக்கலாயிற்று. நவீனஅபிப்பிரா

யங்களை விலக்கிப் புராதனசமயநெறிகளை வெளியிடுவதாதலின் இப்பெயர் பொருந்தும். முன்னாட்களிற்போல இந்நாளிலும் அது சர்வ சமயநெறிகளையும் தழுவியிருத்தல் வேண்டும்.

இப்புத்தகமும் ஹிந்துக்களுடைய சமயநெறியை நிலைநிறுத்தி அவர்களின் பொதுக்ஷேமத்திற்கும் ஐசுவரிய விருத்திக்கும் சாதனமாகக்கடவதாக.

---

௨௰.

உஜ்ஜ்வலா ஸ்ரீமதா தேந விநாயகேந
உஜ்ஜ்வலா ஸ்ரீமதா ந: ஸரஸ்வதீ |
உஜ்ஜ்வலா ஸ்ரீமதா ந: ஸம்ப்ரஜா
உஜ்ஜ்வலா ஸ்ரீமதா தேந ஸௌபாக்யஸ்ரீ || க ||

## அவதாரிகை.

ஸ்ரீ கணேசாய நம:.

ச்ருதிகளை ஆதாரமாகக் கொண்ட "ஸநாதந தருமம்" அல்லது "வைதிக தருமம்" என்று அறிந்து ஸமயமானது உலகத்தில் இப்பொழுது நடைபெறுகின்ற எல்லாச் சமயங்களிலும் புராதநமானது. அதன் தத்துவஞானம் ஒப்பற்ற மகிமையுள்ளது. அதன் பரிசுத்தமான தருமநீதி மற்றை எச்சமய தருமநீதிக்கும் கீழ்ப்பட்டதன்று. அதன் ஸம்ஸ்காரங்களும், தருமானுஷ்டானங்களும், காலதேச வர்த்தமானங்களுக்குத் தக்கபடி பொருந்தியமையக் கூடியவைகள். இந்த 'வைதிகசமயம்' குழந்தைகள் விளையாடக் கூடிய குட்டைகளும், தீரர்களும நீந்த மூழ்கக்கூடிய மடுக்களுமுள்ள நதிபோல் இருக்கின்றது. ஆகவே மனிதனின் ஒவ்வொரு கோரிக்கைக்கும் அதில் புகலிடமுண்டு. அதன் குறைவில்லா நிறைவுக்கு மற்றை எந்தச் சமயத்தினின்றும் கூட்டவேண்டுவது யாதொன்றுமின்றாம். அதைப் படிக்கப்படிக்க அறிவுக்குத் தெளிவும், மனத்திற்கு உபசாந்தியும், மென்மேலுமுண்டாகின்றன. அதைச்சிறிதேனும் கற்கும் சிறுவன் தானுள்ளளவரைச் சந்தோஷ அபிவிருத்திக்கும், ஆபத்துக்காலத்தில் மனச்சமாதானத்திற்கும் சாதனத்தைச் சம்பாதித்துக் கொள்ளுகிறான்.

*𑌧𑌾𑌰𑌣𑌾𑌦𑍍𑌧𑌰𑍍𑌮 𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌃
𑌧𑌰𑍍𑌮𑍋 𑌧𑌾𑌰𑌯𑌤𑌿 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 ॥

(இதன் பொருள்.) தரிக்கிறதினால் தருமமென்று சொல்லுகிறார்கள். அதாவது தருமமானது பிரஜைகளை நிலைநிறுத்துகின்றது (தாங்குகின்றது).

தருமமென்பது உலகவழக்குக்குச் சம்பந்தமில்லாத விருதா கோட்பாடுகளின் தொகுதியன்று; ஆனால் உலகம் அன்போடும் அருளோடும் நடைபெறும் வண்ணம் உற்ற சாதனமாம். ஆதலால் அதன் ஆதாரங்களை அறிவதும் அவ்வழி நடப்பதுந்தான் ஆரியதருமம். அது தம்முடையவும் ஏனையோருடையவும் சந்தோஷத்திற்கு உறுதியான மார்க்கமாகும். மதம் என்று பொருள்படுகின்ற (Religion) என்னும் சொல்லானது "சேர்த்துவைத்தல்" என்கிற அர்த்தத்தை யுடையது. "வைதிக" என்றால், "வேதம்" அல்லது முற்றறிவு பற்றியதென் றருத்தமாம். ஆகவே, "வைதிக தருமம்" என்றால் அறிவு நிறைந்த சமயம்.

இந்தச் "சநாதந தரும" த்தில் மிக்கவுத்தமமான வைகளில், விக்ஞானப் பயிற்சிக்கு வேண்டிய பூர்த்தியான வுபாயம் ஒன்று ஏற்பட்டுள்ளது. தவிரவும் ஆறுவிததாத்பரியங்களை ஆறுமுகங்களாகக் கொண்டிருப்பினும் ஒரே கருத்துள்ளதும் ஒரே பலனுக்கு ஏதுவாகின்றதுமான தத்துவ சாஸ்திரம் அதற்கு மகுடம்போல் விளங்குகின்றது. இம்மாதிரி விரிவான பலவிஷயந் தழுவியும் ஒழுங்கானதுமான விக்ஞான வுபாயம் வேறு சமயங்களிற்

---

* மகா பாரதம் - கர்ணபர்வம் - 69 வது அ - 59 வது சுலோகம்.

காணோம். இந்த "ஸநாதந தருமம்" முதல் பாலபாடத்தில் சங்கிரகமாய் எழுதியிருப்பதை இதன் மூலமாய் விஸ்தரிக்கிறோம்.

### ஸநாதன தருமத்திற்கு முதல்நூல் யாவை?

ஆரிய மதத்திற்கு முதல்நூல் நான்குவேதங்களடங்கிய சுருதிகளேயாம். இந்த நான்கு வேதங்களும் தொகுப்பாய் "வேதம்" அதாவது முற்றறிவு, அல்லது பரிபூர்ண ஞானம் என்று வழங்குகின்றன. இவையாவும் வெளிவந்து ருஷிகளின் ஞானதிருஷ்டியில் புலப்பட்டு ஆரிய ஜனங்களின் பிரயோஜனத்திற்காக ருஷிகளால் வாக்கிய ரூபமாய் அமைக்கப்பட்டுள்ளன.

*𑌯𑍁𑌗𑌾𑌨𑍍𑌤𑍇𑌽𑌨𑍍𑌤𑌰𑍍𑌹𑌿𑌤𑌾𑌨𑍍 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍
𑌸𑍇𑌤𑌿𑌹𑌾𑌸𑌾𑌨𑍍 𑌮𑌹𑌰𑍍𑌷𑌯𑌃 |
𑌲𑍇𑌭𑌿𑌰𑍇 𑌤𑌪𑌸𑌾 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍍
𑌅𑌨𑍁𑌜𑍍𑌞𑌾𑌤𑌾𑌃 𑌸𑍍𑌵𑌯𑌮𑍍𑌭𑍁𑌵𑌾 ||

(இ-ள்.) யுகங்களின் அந்தத்தில் வேதங்களும் இதிஹாஸங்களும் அந்தர்த்தானமாய்விட்டன (மறைந்துவிட்டன). சுயம்பு(பிரமா)வின் அனுக்கிரகத்தினால் மகாருஷிகள் தவத்தின் மூலமாய் திரும்பப் பெற்றார்கள்.

அப்படித் திரும்பக்கிடைத்த வேதங்களில் மாறுதல்கள் உண்டானதாகத் தெரிகிறது. அவ்விதம் ஒவ்வொரு யுகாரம்பத்திலும் அந்தந்தக் காலபாவத்துக்குத் தக்கபடி மாறுதல்கள் ஏற்படுகின்றன. இதற்கு ஆதாரம் தேவீ பாகவதத்தில் அடியில் வருமாறு இருக்கிறது.

---

வியாஸரால் சொல்லப்பட்டதாக சங்கராசார்யரவர்கள் எழுதிய சாரீர பாஷ்யம். I. iii. 29.

*வேதஶ்சைகோ பி பஹுதா
க்ருதோ ஹிதகாம்யயா |
அல்பாயுஷோ ல்பபுத்தீம்ஶ்ச
விப்ராந் ஜ்ஞாத்வா கலாவத ||

(இ-ள்.) வேதம் ஒன்றே. ஆனால் கலியுகத்தில் வியாஸாவதார மூலமாய் விஷ்ணுவானவர்—விப்பிராள் அற்பாயுசுள்ளவர்களாயும், அற்பபுத்தியுள்ளவர்களாயுமிருப்பார்கள். ஆகையால் அவைகளை முற்றிலும் கற்க அசக்தர்களாவார்களென்றுணர்ந்து ஜனானுகூலத்தின் பொருட்டு வேதத்தைப் பல வகுப்பாகப் பிரித்தனர்.

இவ்விதமாய் ருஷிகள் தங்களால் நியமிக்கப்பட்ட மதத்தை எப்போதும் கவனமாகக் காப்பாற்றி வருகிறதும்தவிர ஒவ்வொரு யுகத்தின் அபேட்சைக்கும் யோக்கியதைக்கும் தக்கவாறு சுருதியை மறைத்தும் வெளிப்படுத்தியும் வருகிறார்கள். இப்போது நடைபெறுகின்ற சுருதிகளில் மந்திரங்களின் கணக்கையும் முன்னிருந்ததாகத் தெரியவருகிற மந்திரங்களின் கணக்கையும் ஒப்பிடுங்கால் எவ்வளவோ மந்திரங்கள் மறைந்துபோயினவென்பது வெளியாகிறது. ஜனங்களின் நன்மைக்காகவே ருஷிகள் அவ்விதம் செய்திருக்கிறார்கள்.

இப்போது வழங்காநின்ற வேதங்களிலுள்ள உட்பிரிவுகள் மந்திரங்கள் இவைகளது கணக்கைவிட முன்னிருந்த வேதங்களில் அவைகள் அதிகமாக இருந்ததாகப் பதஞ்சலி மகாபாஷியத்தால் தெரியவருகிறது. அதில். ருக்வேதத்திற்கு 21 சாகைகள், யஜுர் வேதத்திற்கு 00 சாகைகள், சாமவேதத்திற்கு 1000 சாகைகள் அதர்வ வேதத்திற்கு 9 சாகைகள் உள்ளன வென்பது

* (தேவிபா-I. iii. 19.)

கூறப்பட் டிருக்கிறது. முக்திகோபநிஷத்தில் ருக் வேதத்திற்கு 21 சாகைகள், யஜுர் வேதத்திற்கு 109 சாகைகள், சாமவேதத்திற்கு 1000 சாகைகள், அதர்வ வேதத்திற்கு 50 சாகைகள் என்பதும் கூறப்பட் டிருக்கிறது. அவைகளிற் சொற்பந்தான் இப்பொழுது வழங்குகின்றன.*

ஒவ்வொரு வேதத்திற்கும் மூன்று பிரிவுகளுண்டு.

1. ஸம்ஹிதை (தொகுதி):—யக்ஞங்களிலும் மற்றை வைதிக கருமங்களிலும் உபயோகப்படுகின்ற கானங்க ளான்ற சூக்தங்களும், கருமங்களின் பலத்திற் காரணமாக விருக்கின்ற மந்திரங்களும் இதில் அமைக்கப் பட் டுள்ளன.

2. பிராமணங்கள்:—அவைகளில் ஆபஸ்தம்பருஷி கூறியவாறு, யக்ஞவிதிகள், பிராயசித்தம், ஸ்துதி, கதைகள், பரம்பராகதசாசனங்கள், இவைகள் அடங்கி யிருக்கின்றன. சூக்தங்களுக்கும் கிரியைகளுக்கும் உள்ள ஸம்பந்தத்தையும் அவைகள் விவரிக்கின்றன. அவைகள் கிரியைகளுக்குச் சம்பந்தப்பட்டன. ஆனால் கிரியாவிதிகள் ஆங்காங்கு விதித்துக் கூறப்பட்டிருப்பதுடன் உதாரண மான கதைகளும் வேதாந்த அபிப்பிராயங்களும் தத்துவ ஞான பாவங்களும் வெளியிடப்பட்டிருக்கின்றன. விசேஷ மாக அந்தப்படி தாண்டிய மகா பிராமணத்திலும் சதபத பிராமணத்திலும் காணலாம். பிராமணங் களின் கடைசியில் துறவிகள் அல்லது வானப்பிரஸ்தர் களுக்காக ஆரண்ணியகம் என்கிற பாகங்கள் அமைக் கப்பட்டிருக்கின்றன.

* இவ்விஷயத்தில் சாரணவ்யூகத்தை ஒப்பிடுக.

3. உபநிஷத்துக்கள்:—இவைகள் பிரம்மவித்தை யைப்பற்றிய சூட்சும உபதேச சாஸ்திரங்களாம். அவைக ளின்ஆதாரத்தின்மேல் தத்துவ சம்பந்தமான ஆறுதர்சனங் களேற்பட்டிருக்கின்றன. உபநிஷத்துக்கள் பலவுண்டு. அவற்றுள் 108 முக்கியமானவைகள். இவற்றுள் 10 அல்லது 12 பிரதானமானவைகள். மற்றவை சாமானிய மானவைகள்.

மேற்கண்ட பிரதானமான 12 உபநிஷத்துக்களுக் கும், வேதாந்த தர்சன ஸ்தாபர்களான ஆசாரியர்களா லும் அவர்களின் ஆதிசிஷ்யர்களாலும் பாஷ்யங்கள் செய் யப்பட்டிருக்கின்றன.

ருக்வேத சம்ஹிதை, அல்லது மந்திர சமூகம் 1017 சூக்தங்களுடையன. அவைகள் 10 மண்டலங்களாக (விரு த்தங்களாக) ப்பகுக்கப்பட்டிருக்கின்றன. பெரும்பாலும் சூக்தங்கள் தேவதாபிரார்த்தனைகள் (ஸ்தோத்திரங்கள்). ஆனால் இந்தப் புராதனமான ஆரியசுருதியில், ஒரு பரம் பொருள் உண்டென்பதைப் பற்றி வியக்தமாய் போதிக்கப் பட்டிருக்கிறது. அதைப்பற்றிப் பின் நாம் தெரிவிப்பாம். இந்தச் சுருதியானது அக்கினியில் ஆஹுதி செய்கின்ற ஹோதாவுக் குரித்தானது. அந்தப் பெயரினாலேயே ஹோ தாவுக்கு யாககாலத்தில் ஸ்வரத்வ தொனியுடன் உச்சரிக் கப்படுகின்ற ருக்குக்கள் நன்றாய்த் தெரியவேண்டுமென் பது புலப்படுகிறது.

யஜுர்வேத ஸம்ஹிதை 1886 சுலோகங்களடங்கிய 40 அத்தியாயம் அல்லது அதிகாரங்களுடையது. அவைக ளிலேறக்குறைய பாதி சுலோகங்கள் ருக்வேதத்திலும் வருகின்றன. இந்த யஜுர்வேதம் இரண்டு பிரிவுள்ளது.

கிருஷ்ண (கறுப்பு) என்றும், சுக்ல (வெளுப்பு) என்றும், அல்லது வாஜசனேயசம்ஹிதை என்றும் அவைகளுக்குப்பெயராம். இந்த வாஜஸனேயத்தில் சம்ஹிதை பாகம், பிராமண பாகத்தினின்றும் தனிமையாக விருக்கிறது. இவ்விரண்டிற்குள் இன்னும் சில சொற்ப வித்தியாசங்களுமுண்டு. சம்ஹிதையில் யாகங்களில் பிரயோகமாகும் தேவதாஹ்வானம் (தேவதைகளை யழைத்தல்) தேவதாஸ்துதி. வேதிகை, செங்கல், யூபஸ்தம்பம் முதலியவற்றின் விவரணங்களடங்கி யிருக்கின்றன. இதிஹாஸங்களில் அடிக்கடி சொல்லப்படுகின்ற இராஜசூயம், அச்வமேதம் முதலிய யாகங்களின் விவரணங்களும், பிதுர் கிருத்தியங்களான ஔபாஸனம் அக்னிஹோத்திரம் முதலிய விஷயங்களும் கூறப்பட்டிருக்கின்றன. அதன் பெயர் குறிக்கிறபடி இந்த யஜுஸ் ஸம்ஹிதையானது யாகங்களின் விஷயங்களைப் பற்றியது. யாகத்தை நடத்துகிறவனான அத்வரியுவுடைய தர்மங்களைப்பற்றிச் சொல்லியிருக்கிறபடியால், அது முக்கியமாய் அத்வரியுவுக்கு (யஜமானனுக்கு) உரித்தானது.

சாமவேதஸம்ஹிதையானது 400 ருக்குக்களடங்கிய 32 கண்டங்களாகப் பிரிக்கப்பட்டு 15 புத்தகங்களாக வகுக்கப்பட்டிருக்கின்றது. இந்த ருக்குக்களுள் அனேகம் ருக்வேதத்திலும் வருகின்றன. 75 ருக்மந்திரங்கள்மாத்திரம் இந்தச் சாமசம்ஹிதைக்குத் தனிமையில் உரியன. சாமவேதமானது கானத்தைப் பற்றியது.

சோமயாகத்தில் சோமாஹுதி பண்ணுங்கால் உத்காதாவால் கானஞ் செய்யப்படுகிறது.*

அதர்வவேதஸம்ஹிதை 731 ருக்குக்களடங்கிய 20 கண்டங்களாகப்பிரிக்கப்பட்டிருக்கிறது. அதர்வணவம்சத்தார்களுக்கும், அங்கிரஸ் வம்சத்தார்களுக்கும், பிருகு வம்சத்தார்களுக்கும் இந்த ருக்குக்கள் வெளியிடப்பட்டுப் பின் பூலோகத்தில் அவர்களால் தொடுக்கப்பட்டுள்ளன. இது யாகங்களில் எல்லாக்கிரியைகளையும் மேற்பார்க்கிறவரும், ஹோதா, அத்வரியு, உத்காதா, இவர்களால் நேரிடும் பிசகுகளை நிவர்த்திக்கிறவருமான முக்கியஸ்தராகிய பிரம்மவர்ணத்திற்கேற்பட்ட முக்கியமானவேதமாகவிருக்கிறதை உத்தேசித்துச் சிலசமயங்களில் இதுபிரம்மவேதமென்றுசொல்லப்படுகிறதுபோலும். மோக்ஷசாதகமானதும் புனர்ஜன்மநிவிருத்திக்கனுகூலமானதுமான ஞானபாகத்தைப்பற்றி அதர்வவேதத்தில்விவரித்திருக்கிற காரணத்தினாலும்மேற்கண்டபெயர் அதற்கு வந்திருக்கலாம். பிரசித்தமானவுபநிஷத்துக்களில் அநேகம் அந்த வேதத்

*(குறிப்பு.) ஸாமவேதமானது (ஸாமஸம்ஹிதையானது) கிராமகேயம் (ग्रामगेयं) (பிரகிருதி) ஊகம் ऊहः) ஊஹ்யம் (ऊह्यं) ஆரண்ணிய கானம் (आरण्यगानं) என்ற நான்கு வகுப்புக்களுடையது. இந்நான்கிலும் கானத்துக்கேற்பட்ட சாமவேத முழுமையும் அடங்கியிருக்கிறது. முற்காலத்திலேயே கானங்களும் அவைகளின் ஸ்வரக்குறிப்புக்களும் வியக்தமாய் அறியப்படாமல் போய்விட்டமையால் பின்னால் ஆர்ச்சிகம் என்ற பெயருடன் பிரத்தியேகமாக அவைகள் எடுத்துச சேர்க்கப்பட்டன. அதற்கு சாயணாசாரியார் பாஷியஞ் செய்திருக்கிறார். அச்சுப் புத்தகங்களில் மந்திரங்களின் சிரசில குறிக்கப்படும் சங்கியைகள் ஸ்வரக் கிரமத்தைக் காட்டுகின்றன.

தைச் சேர்ந்தவைகள். மேலும் ஆரிய வர்ணங்களுள் மத்திய வகுப்பினராகிய வைசியர் விவசாயிகளைப்பற்றியும், அவ்வகுப்பைச் சார்ந்த ஸ்திரீகளைப்பற்றியும், தினந்தோறும் நடைபெற்றுவந்த அவர்களது பிராசீன வொழுக்கங்களைப்பற்றியும் தெரிவிக்கின்றது. ஆதலால் சரித்திரசம்பந்தமாகவும் வர்ணாசிரம சம்பிரதாயங்கள் சம்பந்தமாகவும் முக்கிய சாதனமாகவிருக்கிறது.

ருக்வேதத்திற்கு இரண்டு பிராமணங்களுள்ளன: (1) 40 அத்தியாயங்களடங்கிய ஐதரேய பிராமணமானது சோமயாகங்களைப்பற்றியும் அக்னிஹோத்திரத்தைப் பற்றியும் இராஜ பட்டாபிஷேக சம்பந்தமான கிரியைகளைப்பற்றியும் தெரிவிக்கின்றது. ஐதரேய ஆரண்ணியகம் இந்தப்பிராமணத்தைச்சேர்ந்தது. இந்த ஆரண்ணியகத்தில் ஐதரேய வுபநிஷத் திருக்கிறது. (2) சங்காயன மென்று பெயருள்ள கௌஷீதக பிராமணம் 30 அத்தியாயங்களுள்ளது. அஃது சோமயாகங்களைப் பற்றியது. அதே பெயருள்ள ஆரண்ணியகம் அதைச் சேர்ந்தது. அதில் கௌஷீதகி யுபநிஷத் திருக்கிறது. தவிரவும் 8 சிறு உபநிஷத்துக்களும் அதிற் சேர்க்கப் பட்டிருக்கின்றன.

கிருஷ்ண யஜுர்வேதத்தில் வசனநடையாகவும் சம்ஹிதையாகவும் கலந்து கூறப்பட்டிருப்பதால் இரண்டு சாகைக்காரர்களும் அங்கீகரிக்கக்கூடிய பிராமணங்கள் இன்ன இன்னவென்பது பிரத்தியேகமாக வகுக்கப்பட வில்லை. ஆனால் வேறொரு சாகைக்காரர் இவைகளை மூன்று அத்தியாயங்களாக வகுத்துத் தைத்திரீய பிராமணமாகப் பிரித்திருக்கிறார்கள். அவைகளில் தைத்திரீய உபநிஷத்து அந்தர்கத

மாயுள்ள தைத்தரீய ஆரண்யகம் அடங்கியிருக்கிறது. கடம், சுவேதாசுவதரம், 31 சாமான்னிய உபநிஷத்துகளும் கிருஷ்ண யஜுர் வேதத்தைச்சேர்ந்தவைகள். சுக்கில யஜுர் வேதத்தில் 100 அத்தியாயங்களுள்ள, சதபத பிராமண மிருக்கிறது. அதன் ஆரண்யகத்தில் ,வாஜஸனேயமென்று சொல்லப்பட்ட பிரஹதாரண்ணியகோபநிஷத் தடங்கி யிருக்கிறது. இந்த வேதத்தின் கடைசி அத்தியாயத்தில் ஈசோபநிஷத்தும், 17 சாமான்னிய உபநிஷத்துக்களுமுள்ளன.

சாமவேதத்தில் பிரசித்தமான மூன்று பிராமணங்களுள்ள கேநோபநிஷத்து அந்தர்கதமாயுள்ள தலவகாரமென்பதொன்று, 25 புத்தகங்களடங்கிய பஞ்சகவிம்ச பிராமணம், ஒன்று, சாந்தோக்கிய உபநிஷத்தும் 14 சாமானனிய உபநிஷத்துக்களும் அடங்கிய சாந்தோக்கிய பிராமணம் ஒன்று.

அதர்வ வேதத்தில் இரண்டு புத்தகங்க ளடங்கிய கோபாத பிராமண மிருக்கிறது. அனேக வுபநிஷத்துக்கள் இந்த வேதத்தைச் சேர்ந்ததாகச்சில அனுக்கிரமணிகைகளிற் சொல்லப்பட்டிருக்கின்றது. பிரசித்தமான 12 உபநிஷத்துக்களில் மாண்டூக்கிய, முண்டக, பிரச்ன என்ற மூன்று வுபநிஷத்துக்களும் இந்த வேதத்தைச் சார்ந்தவைகள். முக்திகோபநிஷத்தில் கண்டிருக்கிற விவரத்தில் முப்பத்தொரு சிறு உபநிஷத்துக்கள் இந்த வேதத்தைச் சேர்ந்தனவாகக் கூறப்பட்டிருக்கின்றன.

பிரசித்தமான 12உபநிஷத்துக்களாவன:—ஐதரேய, கௌஷீதகி, தைத்திரீய, கட, சுவேதாசுவதர, பிரகதாரண்ணியக, ஈச, கேன, சாந்தோக்கிய, மாண்டூக்கிய,

முண்டக, பிரசின என்பனவாம். முக்தி கோப நிஷத்தில் 108 உபநிஷத்துக்களின் விவரத்தைப் பார்க்கலாம்.

மேற்கண்ட சுருதிகளின் ஆதாரத்தின்மேல் வைதிக தருமம் (வேதசமயம்) ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. தற்காலத்தில் வேதத்தின் ரகசியமான அருத்தத்தை அறிய வேண்டியதற்குச் சாதனமான குப்தவித்தை மறைந்து போய் விட்டமையால் வேதங்களைப் பற்றி விபரீதமான ஆக்ஷேபங்கள் தொடுக்கப் படுகின்றன. வேதங்களோ, பிரபஞ்ச சம்பந்தமான சக்திகளை வசப்படுத்தும் பிரயோக கிருத்யமான முறைகளை யுக்தியாகக் கற்பிக்கின்றன. அந்த முறையே இந்த ஜகத்துக் காதாரமாயுள்ள சர்வ சக்திகளையும் மனிதன் வசீகரித்து நியோகித்து நடத்துகிற முறையேயாம். யதார்த்தமான வேதவித்து ஒருவன் பிரபஞ்சத்தையாளலாம்; பிரபஞ்சத்தின் எல்லாச் சக்திகளும் அவனது ஏவலுக்குள்ளாகும்.

இக்காலத்தவர்கள் யோகம், அந்தர்முக ஞானம், இவைகளை உணராதவர்களாக இருக்க, வேதங்களிலுள்ள பிரகரணங்கள் தங்களுக்குப் புலப்படாத காரணத்தினால், உளறல், பேத்தல், பிதற்றல், என்றும், அறிவற்ற பூர்விகர்களின் பழைய சொற்களென்றும் அவசரமாய்த் தீர்மானிப்பது யுக்தமன்று. கற்பவர்கள் எந்தப்பிரகரணங்களாவது தங்கள் புத்திக்கு விரோதமாயிருப்பனபோலத் தோன்றினால் உடனே முடிவான ஒரு சித்தாந்தம் செய்து விடக்கூடாது. ஏனெனில் தங்களுக்கொன்றும் தோன்றாத பிரகரணங்களில், கூர்மையான புத்தியுள்ள அநேக மேதாவிகளுக்கு எவ்வளவோ புஷ்டியான ஞானம் தோன்றியிருக்கிறதென்பதை அவர்கள் மறக்கக் கூடாது. ஆகவே தங்களுக்குவயது முதிர முதிரப்பரிசுத்தமான ஒழுக்கவழியில் பயிற்சியுண்டாகி ஞானோதயமுண்டாகும் வரையில் அவர்கள் பொறுத்திருக்க வேண்டும்.

வேதங்கள் காயத்திரியில் அடங்கியன. காயத்திரி பிரணவத்தில் அடங்கியது. பிரணவமோ பரப்பிரம்மத்தின் விகாசம். இவ்வபிப்பிராயம் வேதங்களிலேயே அடிக்கடி கூறப்படுகிறது. ஸம்ஸ்கிருத இலக்கியங்களிலும் பலவிடங்களில் வருகிறது. இந்தக் குப்தவிஷயத்தின் தத்துவம் வெகுகாலம் படிப்பதாலும் மனனத்தினாலுந்தான் தெரியலாகும்.

சுருதிக்குப்பின் ஸ்மிருதி பிரமாணம். ஆரிய ஜாதியையும், வருணம், குலம், ஆசாரம், இவைகளையும் பற்றியவிவஸ்தைகளை ஸ்மிருதிகள் தெரிவிக்கின்றன. அவைகள் வியவகாரத்தைப்பற்றிய நூல்களுமாம். அந்த ஸ்மிருதிகள் பலவாக உள்ளன.* அவைகளில் நான்கு பிரதானமானவை. இவை நான்குயுகங்களுக்கும் தனித்தனியே சம்பந்தப்பட்டவைகள். சத்தியயுகத்திற்கு மனுஸ்மிருதியும், திரேதாயுகத்திற்கு யாக்ஞயவல்கிய ஸ்மிருதியும், துவாபரத்திற்கு சங்கலிகிதமும், கலியுகத்திற்கு பாராசரீயமும் முறையே பிரமாணங்களாம்.

(இதற்காதாரம் அடியிற்கண்ட சுலோகம்.)

க்ருதே து மானவா தர்மா:
த்ரேதாயாம் யாஜ்ஞவல்க்யஜா: |
த்வாபரே சாங்கலிகிதா:
கலௌ பாராசரா: ஸ்ம்ருதா: |

வேதங்களிற் போலவே ஸ்மிருதிகளிலும் காலரீதிகளுக்கேற்ப ருஷிகள் அவசியமான அதிகாரத்தைவகித்தவர்களாய் யுக்தானுஸாரமாய்ப்புதியவிதிகளையேற்படுத்தியும் பழையவிதிகளில் சிலவற்றைப் பொருத்தமானபடி

* வியவகாரமயூகம், யாக்ஞவல்கிய ஸ்மிருதி இவைகளுக்கு மண்டலீகர் எழுதிய இங்கிலமொழி பெயர்ப்பின் முகவுரையில் காண்க.

இலக்ஷம் சுலோகங்களுள்ள தருமசாஸ்திரம் செய்தாரென்று நாரதஸ்மிருதியில் சொல்லியிருக்கிறது. இவைகளை நாரதர், 12000 சுலோகங்களாகவும், பின்பு மார்க்கண்டேயர் அவைகளையே, 8000 சுலோகங்களாகவும் பின் பிருகு புத்திரராகிய சுமதியென்பவர், 4000 சுலோகங்களாகவும் சுருக்கி எழுதினார்கள். மானவதருமசாஸ்திரம் இப்பொழுது 2685 சுலோகங்களடங்கிய 12 அத்தியாயங்களாக அமைக்கப்பட்டிருக்கிறது. மனுவானவர் பிரபஞ்சோற்பத்தியைப்பற்றி யுரைத்துத் தான் வெளியிட்டவாறு தருமசாஸ்திரத்தைத் திரும்பக் கூறும்படி பிருகுவை வேண்டுகிறார். அவ்வாறே பிருகுவும் விவரம்சொல்ல வாரம்பிக்கிறார். ஒன்றினபின் ஒன்றாய் அடியிற்கண்ட விஷயத்தைப்பற்றிச் சொல்லுகிறார்.

2 வது அத்தியாயம்—பிரம்மசரிய தருமம்.
3 வது . ........ .கிரகஸ்த தருமம்.
4 வது . ............ஸ்நாதக தருமம்.
5 வது .. .ஆகாரம், அதன் சுத்தம், ஸ்திரீகளின் தருமம்.
6 வது ...... . .......வானப்பிரஸ்தன, சந்நியாசி, இவர்களினாச்சிரமங்களைப் பற்றியது.
7 வது................ இராஜநீதியைப்பற்றியது.
8 வது...... ............வியாபவிவகாரங்களைப் பற்றியது.
9 வது...................ஸ்திரீ புமான்க ளநுசரிக்க வேண்டியசாசுவதவிதிகளையும், ஒருவருக்குப்பின் ஒருவர் அர்த்தத்தை யடைய வேண்டிய முறைகளையும்

குற்றங்களையும் அவைகளின் தண்டனையும் சில ராஜநீதி நெறிகளையும் பற்றியது.

10 வது ..... நான்கு வர்ணத்தாருக்கும் ஆபத் காலங்களில் அநுஷ்டிக்க வேண்டிய தருமங்களைப் பற்றியது.

11 வது ............. பிராயச்சித்த விதிகளைப் பற்றியது.

12 வது ... ஜீவாத்மாவையும் சகலத்திற்கும் ஆதாரமான ஆத்மாவை அறிவதினால் பரமானந்தம (சாயுஜ்ஜியம்) கிடைக்குமென்பதையும் பற்றியது.

என்று விஸ்தாரமாய்க் கூறியிருக்கிறார்.

1010 ஸ்லோகங்களடங்கிய மூன்று (3) அத்யாயங்களாக யாக்ஞவல்கிய ஸ்மிருதி பகுக்கப்பட்டிருக்கிறது. அவைகள் ஆசாரம், வியவகாரம், பிராயச்சித்தம் இவைகளைப்பற்றியும் சொல்லுகின்றன. முதலாவதத்தியாயத்தில், வர்ணாச்சிரம தருமங்கள், புசிக்கக்கூடிய வஸ்துக்கள், தானம், பலிகள், கிரியைகள், இராஜதர்மங்கள், இவைகளைப்பற்றி விரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றன. இரண்டாவது அத்தியாயத்தில், வியவகாரம், நியாயஸ்தலங்களில் நீதிசெலுத்தும் முறை, குற்றங்கள், அவைகளுக்கேற்பட்ட தண்டனைகள், இவைகளைப்பற்றிய விதிகள் சொல்லப்படுகின்றன. மூன்றாவதத்தியாயத்தில், பிராயச்சித்தங்கள், ஆபத்காலத்தில் அநுஷ்டிக்கப்படவேண்டிய தருமங்கள், வானப்பிரஸ்தன், சந்நியாசி, இவர்களின்

ஒழுக்கங்கள், சரீரதருமங்கள் இவைகளைப்பற்றி விவரிக்கப்பட்டிருக்கின்றன. கடைசியாக, ஜீவான்மா, பரமாத்துமா இவைகளைப்பற்றியும், முக்திமார்க்கங்கள் யோகம் சித்தி பரகாயப்பிரவேசம், பின்னும் சில்லரைப்பிராயச்சித்தங்கள் இவைகளைப்பற்றியும் விரிவாய் விசாரிக்கப்பட்டிருக்கிறது.

ஸ்மிருதிக்குப்பின் அடுத்த பிரமாணம் புராணங்களாம். புராணங்களையும், இதிஹாஸங்களையும் சேர்த்துச் சிலசமயங்களில், *(பஞ்சமோ வேத:) ஐந்தாவது வேதமாகச் சொல்லுகிறார்கள். சாந்தோக்யோபநிஷத்தில் 7வது அத்தியாயம், I வது பிரபாடகம், 2 வது மந்திரத்தில், சனத்குமாரிடம் தான் கற்ற விஷயங்களை நாரதர் சொல்லுகிற காலத்தில், புராண இதிஹாஸங்களை, ஐந்தாவதாகப் பிரஸ்தாபிக்கிறார். அதற்கு ஸ்ரீமத்சங்கராசாரியர், ஐந்து, அதாவது ஐந்தாவது வேதமென்று வியாக்கியானம் செய்திருக்கிறார்.

† ருக்யஜுஸ்ஸாமாதர்வாக்யா
வேதாஸ்சத்வார உத்த்ருதா: |
இதிஹாஸ புராணம் ச
பஞ்சமோ வேத உச்யதே ||

(இ-ள்) வியாசர் நான்கு வேதங்களையும் திரும்ப அடைந்து அவைகளுக்கு ருக், யஜுர், ஸாமம், அதர்வம் என்ற தனித்தனிப் பெயரிட்டு, இதிஹாஸ புராணங்களை ஐந்தாவது வேதமாக அமைத்தார். தேவீபாகவதத்தில் 1 வது ஸ்கந்தம், 3 வது அத்தியாயம், 18 வது சுலோகத்திலும் இதே தாற்பரியம் வெளியாகிறது.

* சாந்தோக்யம். 7. i. 2.

† பாகவதம், 1 வது ஸ்கந்தம், 4 வது அத்தியாயம், 20 வது சுலோகம்.

* [illegible] கரோதி [illegible]
புராணாநி யதா₂விதி ।
த்₃வாபரே த்₃வாபரே விஷ்ணு:
வ்யாஸரூபேண ஸர்வதா₃ ॥

(இ-ள்) ஒவ்வொரு த்வாபரயுகத்திலும் விஷ்ணுவானவர் வியாஸமூர்த்தியாக தருமபரிபாலனத்தின் பொருட்டுப் பதினெட்டுப் புராணங்களைச் செய்கிறார்.

ஆறு அங்கங்களைப்போல புராணம் முதலானவைகளும் வேதார்த்தத்தைப் போதிக்கக்கூடிய சாதனங்களாகையால் அவைகள் கற்க யோக்கியமானவைகளென்று மத்வாசாரியர் சொல்லுகிறார். யாஞ்ஞவல்கிய மகரிஷியும் சொல்லியிருக்கிறார்.

† புராண ந்யாய மீமாம்ஸா
த₄ர்மஶாஸ்த்ராங்க₃ மிஶ்ரிதா: ॥
வேதா₃: ஸ்தா₂நாநி வித்₃யாநாம்
த₄ர்மஸ்ய ச சதுர்த₃ஶ ।
இதிஹாஸ புராணாப்₄யாம்
வேத₃ம் ஸமுபப்₃ருஂஹயேத் ।

(இ-ள்) வேதங்கள், அங்கங்களுடன் புராணங்கள், நியாயம், மீமாம்ஸை, தருமசாஸ்திரம், வேதாங்கங்கள் ஆக பதினான்கும் ஞானத்துக்கும், தருமத்துக்கும் ஆதாரமானவைகள். புராண இதிஹாஸங்களுடைய உதவியைக்கொண்டு வேதார்த்தங்களை விவரிக்க வேண்டும்.

* தேவீபாகவதம், 1 வது ஸ்கந்தம், 3வது அத்தியாயம், 18வது சுலோகம்.

† 1 வது அத்தியாயம், 1 வது, 3 வது சுலோகம்.

முக்கிய புராணங்கள் 18; உபபுராணங்கள் 18 உள்ளன. 18 முக்கிய புராணங்களாவன:—

| | |
|---|---|
| (1) பிரம்ஹ | (10) பிரம்ம கைவர்த்த |
| (2) பத்ம | (11) லிங்க |
| (3) விஷ்ணு | (12) வராஹ |
| (4) சிவ | (13) ஸ்காந்த |
| (5) பாகவத | (14) வாமன |
| (6) நாரத | (15) கூர்ம |
| (7) மார்க்கண்டேய | (16) மத்ஸ்ய |
| (8) அக்கினி | (17) சுபர்ண (அல்லது) கருட |
| (9) பவிஷ்யத் | (18) பிரம்மாண்ட |

18 உபபுராணங்களாவன:—

| | |
|---|---|
| (1) ஸநத்குமார | (10) கல்கி |
| (2) நரசிம்ம | (11) சாம்ப |
| (3) பிரஹ்ந்நாரதீய | (12) நந்தி |
| (4) சிவரஹஸ்ய | (13) சூரிய |
| (5) துர்வாஸஸ் | (14) பராசர |
| (6) கபில | (15) வஸிஷ்ட |
| (7) வாமன | (16) தேவிபாகவத |
| (8) பார்க்கவ | (17) கணேச |
| (9) வாருண | (18) ஹம்ஸ |

வைஷ்ணவ பாகவதம், தேவிபாகவதம் என்று முற்கூறிய 2 பாகவதங்களில், எது புராணம்? எது உபபுராணம்? என்ற விஷயத்தைப்பற்றி விவாதமிருந்து கொண்டேயிருக்கிறது. அது இன்னும் முடிவு பெற வில்லை. ஆனால், இரண்டும் உயர்ந்தவைகளாகவும் அறிவைப் போதிக்கக்கூடியவைகளாகவு மிருக்கின்றன. தேவீ பாகவதமோ சாஸ்திரம், தத்துவ ஆராய்ச்சி இவை

களில் இச்சையுள்ளவர்களுக்கு முக்கியமாக வுபயோகப் படக்கூடியதாகவும், வைஷ்ணவபாகவதம் பக்திமார்க்கத்தில் இச்சையுள்ளவர்களுக்கு அநுகூலமான கிரந்தமாகவுமிருக்கின்றன.

புராணங்கள் புராதனசரித்திரத்தைக் கூறுகின்றன. அந்தச்சரித்திரத்தின் காலத்தின் நிலைமை முதலிய சுபாவங்களுக்கும் இக்கால நிலைமை முதலிய சுபாவங்களுக்கும் வித்தியாசமிருக்கிறது. இந்தப்பிரபஞ்சத்தில் ஸ்தூல திருஷ்டிக்கு வியக்தமில்லாத பிரதேசங்களைப்பற்றி அவைகள் விவரிக்கின்றன. ஆகவே புராணங்களின் தாற்பரியங்களை இக்காலத்திய பிராகிருத சாஸ்திரத்தைப் போல் மதிக்கக்கூடாது.

புராணத்தில் சொல்லியிருக்கிற பிரபஞ்சவரலாறுகளையும் அதின் பூர்வசரித்திரத்தையும் சூக்ஷ்மமான யந்திரங்களின் உதவி எவ்வளவு இருந்தாலும், அந்த உதவியைக் கொண்டு நம்முடைய ஸ்தூலதிருஷ்டியினால் நாம் பார்த்துத்தெரிந்துகொள்ளுவதைக்காட்டிலும்யோகசித்திகள் கைகூடுங்காலத்தில் அவைகளெல்லாம் மிகவும் சரியாய்ச் சொல்லப்பட்டிருக்கிறதென்று நம் முடைய அநுபவத்துக்கு வரலாம். விஷ்ணுபுராணத்திலும், மற்றபுராணங்களிலும் புராணத்துக்கு இன்னஇன்ன குறிப்பான லக்ஷணங்கள் இருக்கவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அவையாவன:—

ஸர்க்கஶ்ச ப்ரதிஸர்க்கஶ்ச
வம்ஶோ மந்வந்தராணி ச ॥
வம்ஶாநுசரிதஞ்சைவ
புராணம் பஞ்சலக்ஷணம் ॥

(இ-ள்) ஸிருஷ்டி, உபஸிருஷ்டி, வம்சாவளி, மன்வந்தரங்கள், வம்சசரித்திரங்கள் ஆக இவைகள் புராணத்தினுடைய பஞ்சலக்ஷணங்களாம். நாம் முற்கூறியவாறு, அந்தந்தக்காலத்தில் புராணங்களைச்சேர்த்து வெளியிடுகின்றவர் வியாசர். இந்த யுகத்திற்கு அப்படி வெளியிட்டிருக்கிறவர் பராசரபுத்திரராகிய கிருஷ்ண த்வைபாயனர்.

மூன்றாவது வேதத்தின் மற்றொருபாகம் இதிஹாசஸம். அதாவது இராமாயணம், மஹாபாரதம் என்ற இரண்டு பெரிய காவியங்களே. அவைகளைப்பற்றி எல்லோருக்கும் பிரசித்தமாய்த் தெரிந்திருக்கின்றமையால் விவரமாக இப்புஸ்தகத்தில் எழுதவேண்டியதில்லை. இராமாயண காவியத்தை வால்மீகி செய்தார். இக்ஷ்வாகுவினிடமிருந்துண்டான சூரிய வம்சத்தைப்பற்றிய சரிதை இது. அந்த வம்சத்தில், விஷ்ணுவின அவதாரமாகிய இராமசந்திரமூர்த்தியும், அவருடைய மூன்று சகோதரர்களும், உதித்தனர். அதில், அவர்களின் பிறப்பு, வித்தியாப்பியாசம், விவாகங்களும், இராமசந்திர மூர்த்தி நகரத்தைவிட்டுச்சென்றதும், அவரது பத்தினியான சீதையின் அபகரணமும், அவளைத்திரும்பப்பெற்றதும், இராக்ஷஸனாகிய இராவணன் சம்ஹாரமும். இராமசந்திரனுடைய இராஜ்யதந்திரமும், விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. திரேதாயுகத்தின் முடிவில் இந்துதேசத்து ஜனங்கள் இருந்தநிலைமையைப் பிரத்தியக்ஷமாய்க்காட்டுவதுபோல் அது வியக்தமாய்க்கூறுகின்றது. இராமசந்திரமூர்த்தியையும் அவர் சகோதரர்களையும்பற்றிச்சொல்லியிருப்பதானது சகோதரர்கள் வாஞ்சையுடனிருப்பதற்கும்பரஸ்பர உபகாரிகளாக நடந்துகொள்வதற்கும் ஒரு உதாரணமாக இருக்கிறது. அதை அநுசரிப்பதால் ஐசுவரிய விருத்தியும் க்ஷேமமுமுண்டாகும். அதுவே ஆரியதர்மத்தைப்பற்றிய ஓர் உபதேசமாகவிளங்கி அந்தத் தர்மத்தில் உற்சாகத்தையும் உண்டுபண்ணக் கூடியதாயிருக்கிறது. அல்லாமலும் ஆரிய அரசர்களுக்கெல்லாம் ராஜதந்திரத்தைக்கற்பிக்கக் கூடியதாகவுமிருக்கிறது. சீதையின் சீலத்தைப்பற்றிச் சொல்லவேண்டியது அநாவசியமென்று தோன்றுகிறது. ஏனெனில், அம்மாதரசி பதிவிரதாதரு

மத்திற்கும், இலக்கியங்களில் விஸ்தாரமாய்ச் சொல்லப்படு கிற ஸ்திரீகளின் மற்றை நற்குணங்களுக்கும் இருப்பிட மாகவே எல்லோராலும் எக்காலத்திலும் கொண்டாடப் படுகிறாள்.

மகாபாரதம் கலியுக ஆரம்பத்தில் வியாசரால் சேர்த்து வெளியிடப்பட்டிருக்கிறது. ஆனல் மகாபாரதத்திற் குப் பல பாடபேதங்களிருக்கின்றன.

மகாபாரதத்தின் கதையானது இராமாயணக்கதை யைவிட நவீனமாகவும், அதிக விருத்தியுடையதாகவு மிருக்கிறது. சந்திரவம்சத்தில் பிறந்த ஒரு குடும்பத்தினு டைய சஞ்சலமான வாழ்க்கைகளையும், அந்தக் குடும்பத்தில் ஜனித்தவர்கள் பொறாமையாலும் பகையாலும் தங்களுக் குள் சண்டையிட்டுக்கொண்டு அழிந்தார்களென்பதையும் பற்றிச் சொல்லுகிறது. இச்சரித்திரத்தில் மனோகரமில்லாத இந்தவிஷயம் சாமான்யமாக வெளியிடப்பட்டிருந்தபோதி லும் பிண்டவர்களுக்கு மத்தியில் சரித்திரம் முழுமைக் கும் நாயகனாக அவதாரபுருஷனாகிய ஸ்ரீ கிருஷ்ணபக வான் கம்பீரமாய் விளங்குகிறார். பாண்டவர்கள நியாய மானகக்ஷியில் பிரவிர்த்தித்தவர்களாகையால் தங்கள் பகைவரான கௌரவர்களை வென்றார்கள். கௌரவபக்ஷ த்தில் அநீதியான இராஜ்ஜியபரிபாலனத்திற் கனுகூலர் களும், சௌரிய முள்ளவர்களும், ஆனல் சாபக்ரஸ்தர் களுமான பீஷ்மர், துரோணர், கர்ணன் முதலியவர்க ளிருந்தார்கள். இச்சரித்திரத்தின் வரலாறு கலியுகத்தின் ஆரம்பத்துக்கு அனுகுணமாயிருக்கின்றது. அக்காலத் தில் புண்ணியபாபங்களுக்கு அனேகமாய்ச் சபலமுள்ள பிரவிருத்தியுண்டாவது மன்றியில், தர்மங்களையும் அறிய முடியாத பலசுபாவங்களையுடைய கருமவிதியையும் மனி

தர்கள் சரியாய்த் தெரிந்துகொள்ளமுடியாமல் மயங்கு கிறார்கள். மகாதீரர்களும் விவேகிகளுமான க்ஷத்திரியர் களுடைய நாசமானது இந்தியாதேசத்தை அந்நியர்கள் பின் ஆக்கிரமிக்கப்போகிறார்கள் என்பதையும், துக்ககர மான இச்சரித்திரத்தின் அந்தியபாகமானது இந்த ஆர் யாவர்த்தத்துக்குப்பிறகு சம்பவிக்கப்போகிற துர்ப்பாக்கி யத்தையும் சூசிப்பிக்கின்றன. முக்கியகதையின் மத்தியில் ஆங்காங்கு தர்மத்தைப்பற்றிப் பீஷ்மருடைய சாசுவத பிரயோசனமுள்ள உபந்நியாசங்களும், ஆரியகிரந்தங் களுக்குள் சிரோரத்தினமாய்விளங்கும் பகவத்கீதைமுத லிய உபதேசங்களும், உபகதைகளும் அடிக்கடி வருகின் றன. பாரதம் முழுமையும் சரித்திரம், தருமம், மதம் இவைகளைப்பற்றிய வசனங்கள் நிறைந்த கலாநிதியாக இருக்கிறது. அதற்கு மேலான கிரந்தம் உலகத்திலில்லை யென்பதுமட்டுமென்று; அதற்குச் சமானமானதுமில்லை.

## சநாதனதருமத்திலுள்ள பிராகிருதசாஸ்திரமும் தத்துவசாஸ்திரமும்.

பூர்வீக ஆரியர்களின் பிராகிருத சாஸ்திரம் வேதத் தின் ஆறு அங்கங்களாகவகுக்கப்பட்டது. அதில் தத்துவ சாஸ்திரம் ஆறு தர்சனங்கள், அதாவது, தாத்பரியங் கள் அல்லது முறைகளாய் அமைந்தன. அவைகளெல் லாம் அநித்தியமானவைகளைப் பிரித்து நித்தியமான ஒரு வஸ்துவைத் தெரிவிக்கிறதற்காக ஒரே கருத்துள்ளவை களாகவும்ஒரேஞானத்தை அறிவிக்கிறவைகளாகவுமஏற் பட்டவைகளே. எல்லாச்சாஸ்திரங்களின் முடிவு ஒன் றென்று சுவானுபூதியாலறிந்த ரிஷிகளுக்குப் பிராகிருத சாஸ்திரமென்றும், தத்துவமென்றும், சமயநெறியென்றும்

பேதங்கிடையாது. எல்லாம் வேதத்தையே ஆதாரமா யுடையன. பிராகிருதசாஸ்திரங்கள் வேதத்தின் அங்கங் களாயின; தத்துவ சாஸ்திரங்கள் வேதாந்தமாயின. இவைகளெல்லாம் மொத்தமாய்க் கீழானவித்தை அபர வித்தை என்றும், அபின்னமானதும் மேலானதுமான ஒரே வஸ்துவைப்பற்றிய பரவித்தை என்றும் சொல்லப் படுகின்றன. ஈசுவரனால் வெளியிடப்பட்டவேதங்கூட குப்த மாயிருந்து வெளிப்பட்டதின் சிறிதம் அபரவித்தையில் சேர்க்கப்பட்டிருக்கிறது. மேலான பரவித்தை என்ன வெனில், ஆத்மவித்தையே. தன்னைத்தான அறிதலென் பதுதான். முண்டகோபநிஷத்து அடியில் வருமாறு கூறு கிறது. *

*𑌦𑍍𑌵𑍇 𑌵𑌿𑌦𑍍𑌯𑍇 𑌵𑍇𑌦𑌿𑌤𑌵𑍍𑌯𑍇 𑌇𑌤𑌿 𑌹 𑌸𑍍𑌮 𑌯𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍋
𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌪𑌰𑌾 𑌚𑍈𑌵𑌾𑌪𑌰𑌾 𑌚 । 𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌰𑌾 𑌋
𑌗𑍍𑌵𑍇𑌦𑍋 𑌯𑌜𑍁𑌰𑍍𑌵𑍇𑌦𑌃 𑌸𑌾𑌮𑌵𑍇𑌦𑍋𑌽𑌥𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑌃
𑌶𑌿𑌕𑍍𑌷𑌾 𑌕𑌲𑍍𑌪𑍋 𑌵𑍍𑌯𑌾𑌕𑌰𑌣𑌂 𑌨𑌿𑌰𑍁𑌕𑍍𑌤𑌂 𑌛𑌨𑍍𑌦𑍋 𑌜𑍍𑌯𑍋
𑌤𑌿𑌷𑌮𑌿𑌤𑌿 ॥ 𑌅𑌥 𑌪𑌰𑌾 𑌯𑌯𑌾 𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌮𑌧𑌿𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 ॥

(இ-ள்) பர, அபர, வித்தை யென்ற இரண்டுவித்தைகள் அறி யத்தக்கவைகளென்று பிரமவித்துக்கள் சொல்லுகிறார்கள். அபர வித்தையாவது: (1) ருக்வேதம், (2) யஜுர்வேதம், (3) சாமவேதம் (4) அதர்வவேதம், (5) அத்தியனமுறை(சிக்ஷா அல்லது ஸ்வரமுறை) (6) கிரியாமுறை (கல்பம்),(7) வியாகரணம், (8) நிகண்டு (நிருக்தம்,) (9) பதயமுறை(சந்தஸ்),(10) ஜோதிஷம். பரவித்தையாவது அக்ஷர மானவஸ்துவை(நாசரஹிதமான பரம்பொருளை) அடையும் மார்க்கம்.

மேற்குறித்த 6 அங்கங்கள் 6 வகுப்புக்களாகப் பிரிக்கப்பட்டு விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளைப்பற்றிச் சூத்திரங்கள் பாஷ்யங்களுடன் கூறப்

* முண்டகோபநிஷத்து. I. i. 4. 5.

பட்டிருக்கின்றன. சூத்திரம் என்றவார்த்தைக்கு "நூல் என்பது பொருள். அதாவது, நுட்பமான வார்த்தைகள் அமைந்த குறள் வாசகமாம். கல்வியானது கேள்வி மூலமாய்ப் பயின்று வருங்கால் இம்மாதிரி சூத்திர ரூபமான உபதேசமானது மிக வுபயோகமுள்ளதென்று நாம் எளிதில் அறிந்துகொள்ளலாம். நெடுங்காலமாய்க் கைதவறிப் போன விஸ்தாரமான கிரந்தங்களிலுள்ள உபதேசங்கள் சுருக்கமாய்ச் சூத்திர ரூபமாக அமைக்கப்பட் டிருக்க வேண்டுமென்பது தெரியவருகிறது. (நாம் "அறுவைத் துன்னத்து வருகடலைப் புகட்டிக் குறுகத்தரித்த குறள்" என்று சொல்லுவதுபோல) இந்த சுருக்கமான சூத்திர வாசகங்களில் ஆழ்ந்த தாதபரியமுள்ள சூட்சும உபதேசங்களின் சாரம் அடங்கியிருக்கிறது. சூத்திரங்களுக்கு ஆஸ்பதமான கிரந்தங்கள் மறைந்து போயினபடியால் சூத்திரங்கள் ஆசாரியரால் விஸ்தரித்து வியாக்கியானஞ் செய்யப்படவேண்டியது அவசியமாயிற்று. விஸ்தாரமாக ஆகவே தொன்றுதொட்டு வழங்கிவரும் வியாக்கியானங்களும், அந்தந்தப் பாஷியக்காரர்களுடைய அபிப்பிராயங்களும் அடங்கிய விஸ்தாரமான பாஷியகிரந்தங்கள் ஏற்பட்டன.

ஆறு அங்கங்களாவன:— (1) சிக்ஷா, அத்தியயன முறை, அதாவது ஸ்வரத்தின்ஞானம்; அதில் உச்சாரணம், மாத்திரை இவைகளைப்பற்றி விஸ்தாரமாகச் சொல்லப்படுகிறது. வேதவாக்கியங்கள் மாறுதலடையாமலிருக்கும் வண்ணம் ருக்குக்கள் பதபாடமென்றும், கிரமபாடமென்றும், இன்னும் அதிகசிரமத்துடன்தெரிந்துகொள்ளவேண்டிய முறைகளாகவும் சேர்த்து ஒழுங்குபடுத்தப்பட்டிருக்கின்றன. பதபாடமென்பது ஒவ்வொரு வார்த்

தையையும் தனித்து அதனுடைய ஸ்வரத்துடன் உச்சரித்தலாகும். கிரமபாடமென்பது இரண்டு வார்த்தைகளை சேர்த்து உச்சரித்தலாம்.

(2) கல்பம். கிரியை முறை: அதாவது அக்கினிஸம்பந்தமான கிரியைகளைச் செய்யும் முறையைச் சொல்லும் சூத்திரங்கள் இதைச் சேர்ந்தவைகள். தவிரவும் யாகசாலையை நிர்மிக்கவேண்டியதற்காக க்ஷேத்திரகணித அளவு முறைகளை விஸ்தாரமாய்க் கூறுகிற சுல்வ சூத்திரங்களும் இவைகளுக் குதவியானவைகளே. இந்தச் சாஸ்திரத் திற்கு ஜாமிதி (அதாவது க்ஷேத்திரகணிதத்தின் நல்ல பிரக்ஞை), அத்தியாவசியம். ஆனதுபற்றி அவைகளில் க்ஷேத்திர கணிதசாஸ்திரம் கற்பிக்கப்பட்டிருக்கிறது. இந்த "சுல்வ"சூத்திரங்களில், மேனாட்டார் இக்காலத்தில் "யூக்ளிட்" என்று வழங்குகிற க்ஷேத்திர கணிதம் என்னும் நூலின் I வது பாகம் 47 வது சூத்திரவிதி யானது முதலில் விவரிக்கப்பட்டிருக்கிறது. இது நிற்க. கிருககிருத்தியங்களுக் குச்சம்பந்தமான "கிருஹ்ய" சூத்திரங்களும், வழக்கங்கள் விவகாரங்கள் இவைகளைப் பற்றிய தரும சூத்திரங்களும் மேற்படி கல்பத்தி லடங்கி யிருக்கின்றன.

(3) வியாகரணம், அதாவது இலக்கணம்: இதில் "பாணினி" என்பவர் பிரசித்தமான சிரேஷ்ட கிரந்தகர்த்தா. அவர் தமக்கு முன்னிருந்த விஷயங்களை யெல்லாம் சங்கிரகித்து எழுதியவராகவும பின்வருவோர்களுக்கெல்லாம் மேலான சூத்திர கர்த்தாவாகவு மிருக்கிறார்.

(4) நிருக்தம். அதாவதுசொல்லின் உற்பத்தி முதலியவைகளின் இலக்கணம்: "பாணினி" வியாகரணத்துக் கெப்படியோ, அப்படி இந்தச் சாஸ்திரத்திற்கு யாஸ்கர்

முக்கிய கர்த்தா. இவர் பூர்வீக நூல் ஒன்றை ஆதாரமாக வைத்துக்கொண்டு ஒரு பெரிய பாஷ்யம் செய்திருக்கிறார்.

(5) சந்தஸ், யாப்பிலக்கணம்: வேத சம்பந்தமும் அத்தியாவசியமுமான முக்கிய சாஸ்திர மிது. இதில் கடைசியாகவிருந்த பிங்களர் எல்லாராலும் அங்கீகரிக்கப்படுகின்ற கிரந்தகர்த்தா.

(6) சோதிடம், அதாவது ககோள சாஸ்திரமும் பலசாஸ்திரமும் அடங்கியது: வானத்திலுள்ள கிரகம் முதலியவைகளின் சஞ்சாரத்தைப் பற்றியும், மனிதர்களுடைய விஷயங்களில் அவைகள் கொடுக்கும் பலனைப்பற்றியும் சொல்லுகின்றன.

ஆறு தர்சனங்களையும் நன்றாய் அறிய வேண்டுமானால் அவைகளைச்சேர்த்து ஒன்றுக்கொன்றிருக்கிற சம்பந்தத்தை ஆராய்ந்துபார்க்கவேண்டும். ஒன்றுக்கொன்று நேர் விரோதமான நோக்க முடையவைகளாய்ப் பார்க்கக் கூடாது. ஏனெனில், அவைகளெல்லாம் ஏகோபித்து ஓரே தத்துவ ஆராய்ச்சிக்குச் சாதனமாக இருக்கின்றன. அவைகள் இவ்விரண்டாக அமைக்கப்பட்டிருக்கின்றன. நியாயம் வைசெஷிகமென்றும், ஸாங்கியம் யோகமென்றும், மீமாம்சை வேதாந்த மென்றும் அமைக்கப்பட்டுள்ளன.

மதுசூதன ஸரஸ்வதியானவர் தாம் செய்திருக்கிற பிரஸ்தானபேதமென்ற கிரந்தத்தில், ஆறுதர்சனங்களின் தாற்பரியங்களைச் சங்கிரகமாகச் சொல்லி அவைகளெல்லாம் ஓரே முடிவையுடையனவென்று வற்புறுத்திச்சொல்லியிருக்கிறார். "யதார்த்தத்தில் இவ்வண்ணம் பலதர்சனங்களைக்கூறுகின்ற முனிவரெல்லோரும் இரண்டற்ற ஒரு பரமபுருஷன் உண்டென்று ஸ்தாபிக்கிறவிஷயத்தில் ஓரே

தாத்பரியமாயிருக்கிறார்கள். அவர்களெல்லோரும் சர்வக்ஞர்களாக விருக்கிறதினாலே அவர்கள் தவறார்கள். இந்தப்பேத அபிப்பிராயங்கள் ஏற்படுவதற்குக்காரணம் நாஸ்திகவாதங்கள் உண்டாகாமல் தடுக்கும்பொருட்டேயாம். தவிரவும் ஜனங்கள் பிரவிருத்திமார்க்கத்தில் நோக்கமுள்ளவர்களாய் உலகவிஷயங்களிலேயே பற்றுள்ளவர்களாயிருக்கிறதினால் பரமபுருஷார்த்தத்தைச் சீக்கிரத்தில் தெரிந்துகொள்ள அசக்தர்களாக விருப்பார்களென்று சந்தேகித்து வெவ்வேறான தர்சனங்களை ஏற்படுத்தியிருக்கிறார்கள்." *

சுருதி கூறுவதாவது—

கவாமநேகவர்ணானாம்
க்ஷீரஸ்யாப்யேகவர்ணதா †
க்ஷீரவத்பஶ்யதே ஜ்ஞானம்
லிங்கினஸ்து கவாம் யதா ॥




(இ-ள்) பசுக்கள் நிறவித்தியாசம் இருந்தாலும் ஒரேநிறமான பாலையே கொடுக்கின்றன. அவ்விதம் அறிவைப் பாலாகவும், அறிவு நூல்களைப் பசுக்களாகவும், நினைப்பாயாக. இக்கருத்தினையே நாலடியாரில்—

வெண்பா.

"ஆவே றுருவின வாயினு மாபயந்த
பால்வே றுருவின வல்லவாம்—பால்போ
லொருதன்மைத் தாகு மறநெறி யாபோ
லுருவு பலகொள லீங்கு" என்றார். 12-ம் அதி. 8.

ஒவ்வொரு தர்சனத்திற்கும் ஒரு ரிஷி ஆசாரியராக ஏற்படுகிறார். அர்த்தபுருஷ்டியுள்ள சிறு வாசகங்களாக,

---

*மாக்ஸ்முல்லருடைய ஆறுகோட்பாடுகள், பக்கம் 107, 108.

†அமிருதபிந்து அல்லது பிரமபிந்து உபநிஷத்தில் 19 வது மந்திரம்.

அதாவது, சூத்திரரூபமாக அவ்வவ தர்சனத்தின் தாத்பரியங்களை யமைத்தும், அவைகளுக்குப் பிரமாண வியாக்கியான மென்று அங்கீகரிக்கப்பட்டிருக்கும் பாஷியங்களையும் ரிஷிகள் செய்திருக்கிறார்கள்.

இந்தச் சூத்திரங்களும் பாஷியங்களும் தர்சனங்களுக் காதாரமானவைகள். அவைகள் ஒரே கருத்தை யுடையன, அதாவது, ஒன்று மனிதர்களின் துக்கநிவர்த்தி யின்முறை; அது எல்லாவற்றிலும் ஒன்றுதான்: மற்றொன்று பந்தமாகிற அக்ஞான நிவிருத்தியும், அதினால் உண்டாகும் சுக சாயுஜ்யப் பிராப்தியுமாம். நியாயமதத்தில் எதை மித்தியாஞானமென்று சொல்லுகிறார்களோ, சாங்கியத்தில் அவிவேகம் (நித்தியாநித்தியவஸ்துவை பகுத்தறியும் அறிவின்மை) என்னும் எதைச் சொல்லுகிறார்களோ, அதனையே வேதாந்தத்தில் அவித்தை என்று கூறுகிறார்கள். ஒவ்வொரு ஞானசாஸ்திரத்திலும் ஞானத்தினால் அவித்தையை நிவர்த்தி செய்வதுதான் உத்தேசமாயிருக்கிறது. அதன்மூலமாய் ஆநந்தப்பிராப்தி உண்டாகிறது. இந்த ஆநந்தம் ஆத்மஸ்வரூபமாயிருக்கிறது. அதனால் ஆநந்தத்தை யடைகிறதென்ற வாசகமானது யுக்தமாய்ப் பொருந்தாது. ஆநந்தமே ஆத்மா; துக்கத்துக்குக் காரணமான மித்தியாஞானம் நிவிருத்தியாகவே ஆநந்தம் அனுபவிக்கப்படுகிறது. இக்காரணம்பற்றி நியாயசாஸ்திரம் தன்னுடைய முடிவை அபவர்க்கம், அதாவது விடுதலை அல்லது மீக்ஷி என்று சொல்லுகிறது. எல்லோரும் அங்கீகரிக்கும் புருஷார்த்தம், முக்தி அல்லது மோக்ஷம் என்பதேயாம்.

நியாயசாஸ்திரம், அதாவது தர்க்கசாஸ்திரத்துக்கு, ரிஷி கௌதமர். அவருடைய சூத்திரங்கள் ஐந்து வகுப்புடையன. அவைகளுக்குப் பாஷியம் வாத்ஸ்யாயனர் செய்திருக்கிறார்.

அந்த சாஸ்திர ஞானத்தை 16 பதார்த்தங்களா அல்லது விஷயங்களாக வகுத்து அவைகளை விவரித்தும் லட்சணங்களை யுரைத்தும பரிசீலனைசெய்து மிருக்கிறார். பிரமாணம், அதாவது அளவு, அதாவது சிரு பணம்: இதைப்பற்றி முதல் முதல் சொல்லுகிறார்.

(1) பிரத்தியக்ஷம் (புலனறிவு),

(2) அநுமானம் (கருதல், ஊகம்),

(3) உபமானம் (ஒப்பு, உவமை, சாமான்னிய தருமம்)

(4) சபதப்பிரமாணம (ஆப்தவாக்கியம்),

இந்தச் சாதனங்களால் பிரமேயம் (அறிய வேண்டியவைகள்) சித்திக்கிறது. பின் மற்ற நான்கு பதார்த்தங்களையும் ஒன்றன்பின் ஒன்றாய் விவகரித்த பிறகு, பராமரிச வாக்கியம், யுக்தி, அதை ஸ்தாபிக்கும் முறை, சித்தாந்தம் இவைகளின் லக்ஷணங்களைச் சொல்லியும், பலவாறான துஷ்ட ஏதுக்கள் அல்லது விதண்டவாதங்களைப் பற்றியும் விவரிக்கிறார். சத்தியமான அறிவினால மித்தியா ஞானம் விலக, மனிதன் பந்தவிருத்தியையடைகின்றான்.

வைசேஷிகம், அதன் வார்யார்த்தப்படி விசேஷணங்களைப்பற்றிய நூல். இதற்கு ரிஷி கணாதர்; பாஷியக்காரர் பிரசஸ்தபாதர். கணாதர் ஆறு பதார்த்தங்களாகப் (பிரமாணங்களாக) பேரிடக்கூடிய எல்லாவஸ்துக்களையும் வகுத்திருக்கிறார். அவைகளாவன :—(1) திரவியம், (2) குணம், (3) கருமம், (4) சாமான்னியம், (இனத்தின் பொதுதருமம்,) (5) விசேஷம், (ஒரு வஸ்துவின் தனிமையான தருமம்,) (6) ஸமவாயம், (பதார்த்தசம்பந்தம் அதாவது நீங்கிழமை). இந்த மதஸ்தர்களில் பிந்தியவர்கள்

அபாவமென்றதை 7 வது பதார்த்தமாகச் சொல்லி யிருக்கிறார்கள். வஸ்துக்களை ஒன்பது உட்பிரிவுகளாக வகுத்திருக்கிறார்:

பஞ்சபூதங்கள் I, காலம் I, திக்கு I, (இடைவெளி) ஆத்துமா I, மனம் I. ஆத்துமாவின் சமஷ்டிரூபம் ஈசுவரன்; விபஷ்டிரூபம் ஜீவாத்மா. பூதங்களுள், ஆகாசமானது காலதேச வரம்பற்றது. மற்றைப் பூதங்களான பிருதுவி, அப்பு, தேஜஸ், வாயு, இவைகள் அணுமயமானவைகள். மேற்கூறிய ஒவ்வொரு பூதத்தின் அணு (அபஞ்சீகிருத அணு) நித்தியமானது; ஸ்திரமானது. ஆனால் ஒவ்வொரு பூதத்தின் அணுத்திரளே (பஞ்சீகிருதமானவைகள்) பூமியென்றும், ஜலமென்றும், தேஜஸ் என்றும், வாயுவென்றும் மாறுகின்றன. இவைகள் அநித்தியமானவைகள். சிருஷ்டி என்றால் அணுக்களின் யோகம்; பிரளயம் என்றால் அவைகளின் வியோகம்.

சாங்கியம், அதாவது எண்ணிக்கை சம்பந்தமான சாஸ்திரம்: பூர்வத்தில் கபிலர் இதன் சூத்திர கர்த்தாவெனச் சொல்லப்படுகிறார். ஆனால் இக்காலத்தில் நடைபெறுகின்ற சூத்திரங்கள் அவர் சொன்ன முறையாகவல்லவென்று மதிக்கப்படுகின்றன. அநிருத்தர், விக்ஞானபிக்ஷு என்ற இருவருடைய பிரபலமான சாஸ்திரங்கள் இருக்கின்றன. வேதாந்தி மஹாதேவருரைத்த வேறொரு பாஷ்யமு மிருக்கிறது. சாங்கியத்திற்கு ஈசுவர கிருஷ்ண என்பவரால் செய்யப்பட்ட சாங்கிய காரிகை என்ற ஒரு புராதன வழிநூல் உண்டு. அதற்குக் கௌடபாதர் பாஷ்யம் செய்திருக்கிறார். பிற்பட்டு வாசஸ்பதி மிஸ்ரர் சாங்கிய தத்துவகௌமுதியென்று ஒரு டீகா செய்திருக்கிறார். தத்,

துவசமாச சூத்திரமென்று சாங்கியசாஸ்திரத்திற்கு வேறொரு மூலக்கிரந்தம் அதிக பிரமாணமுள்ளதாகவிருக்கிறதென்றும், அது கபிலரால் செய்யப்பட்டதாக இக்காலத்திற் சொல்லப்படும் சூத்திரங்களைக் காட்டிலும் புராதனமானதென்றும் அதற்குப் பலவியாக்கியானங்களெழுதப் பட்டிருக்கின்றனவென்றும் விக்ஞான பிக்ஷுவால் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸாங்கியம் முக்கியமாய்ச் சிருஷ்டிக்கிரமம் எத்தன்மை என்றதைப்பற்றியது. சாங்கிய மதம், நிரீசுவரமதமாக (கடவுள் நாஸ்தியென்று சொல்லுகிற மதமாக) அடிக்கடி சொல்லப்படுகிறது. ஆனால் அந்த மதத்தின் கோட்பாடுகளில் ஈசுவரனில்லையென்ற பிரஸ்தாபமில்லை. பிரத்தியக்ஷம், அனுமான பிரமாணத்திற்கு மேலாகச் சாப்தப் பிரமாணமாகிய சுருதியே மேலான பிரமாணமென்று சொல்லப்படுகிறபடியால் நாஸ்திக வொழுக்கம் அந்த மதத்தின் கொள்கையில்லையென்பதை நிரூபிக்க அதுவே முக்கிய அத்தாக்ஷியாகும். கபிலர் சிருஷ்டிக்கிரமத்தைப்பற்றிச் சொல்லவந்தாரேயன்றி, அதன் மூலகாரணத்தைப்பற்றிச் சொல்ல வந்தவரல்லர். நாம் பார்க்கும் எல்லா வஸ்துக்களும் இரண்டு மூலங்களிலமையும் (புருஷன், பிரகிருதியென்ற மிதுனத்திலமையும்). புருஷன் சுக துக்கம், ஜநந மரணம் முதலிய வேறுபாடுகளினால் அநேகமாகத் தோன்றுகிறான். ஆனால் புருஷர்களெல்லாம் ஒரே முக்கியப் பான்மையுடையவர்கள். புருஷன் என்றால், அவர்களின் ஸமஷ்டி. பிரபஞ்சத்தின் ஜீவாம்சமாகவிருக்கிறான். பிரகிருதி யென்றால், பிரபஞ்சத்தின் ஜடாம்சம். அதில் 23 வஸ்து பேதமுண்டு. அவைகளில் 7 பிரகிருதியின் அம்சம்; 16 விகாரங்கள் (மாறுதல்கள்)

புருஷனுக் கெதிரிடையான பிரகிருதிக்கு அவ்வியக்த மென்று பெயர். எல்லாவற்றிற்கும் அது காரணமாயும், அது வேறொன்றுக்கும் காரியமில்லாமலும் பரோக்ஷமாகவுமிருக்கிறது. இதினின்றும் புருஷனுடைய சம்யோகத்தினாலே அடியிற்கண்டவைகள் ஒன்றன்பின் ஒன்ருக வுற்பத்தியாகின்றன: (1) மஹத் (புத்தி அல்லது விக்ஞானம்), (2) அகங்காரம் (அதாவது வேற்றுமைப் படுத்தும் தத்துவம்), (3) ஐந்து தன்மாத்திரைகள். இவைகளினின்றுதான் பஞ்சேந்திரியங்களுண்டாகின்றன. பின்பு 16 விகாரங்கள். அவைகளாவன:— 5 ஞானேந்திரியங்களும், 5 கருமேந்திரியங்களும், இந்திரியங்களின் ஏகீபாவமாகிய மனதொன்றும், ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம், பிருதிவி என்ற ஐந்து மகா பூதங்களுமாம். பிரபஞ்ச சிருஷ்டி சம்பந்தமான தத்துவங்களை விவரித்த பிறகு, தமஸ், ரஜஸ், ஸத்துவம் என்ற முக்குணங்களைப் பற்றி அது பிரஸ்தாபிக்கிறது. மூன்று குணங்களும், சம நிலையில் நிற்கும்போது யாதொரு சலனமுமில்லை; சிருஷ்டி சம்பவமுமில்லை. அந்நிலையினின்று வழுவுங்காலத்தில் சிருஷ்டி அல்லது சஞ்சாரமேற்படுகிறது. பின்புசஞ்சாரத்தைப்பற்றியும், பிரதி சஞ்சார (பிரளய) த்தைப்பற்றியும், புத்தி, மனம், ஞானேந்திரியங்கள் - இவைகளுக்கு, முறையே, ஆத்தியாத்மம், அதிபூதம், அதிதைவதம் இவைகளின் சம்பந்தத்தைப்பற்றியும் விவரிக்கிறது. பின்பு பல சலன வேற்றுமைகளைப்பற்றியும், வஸ்துக்களைப்பற்றியும், அவைகளின் தருமங்களைப்பற்றியும் விரிவாய்ச் சொல்லியிருக்கிறது. அவைகளெல்லாம் இந்த மத சம்பந்தப்பட்ட கிரந்தங்களை வாசித்தால் தெரியவரும். கடைசியாய்ப் பந்

தம், மோக்ஷம், பிரமாணம், துக்கம் இவைகளுடைய மும்மூன்று விதமான பாகுபாடுகளைச் சொல்லி இந்தச் சாங்கியம் முடிகிறது.

## யோகசாஸ்திரம்:

அதாவது, பிரயத்தனரூபமாய் ஈசுவர சாயுஜ்யத்தையடையும் மார்க்கத்தைப்பற்றியது. இதற்குச்சூத்திர கர்த்தா பதஞ்சலி மகாரிஷி; பாஷிய கர்த்தா வியாசர். சாங்கிய தத்துவங்களை ஒப்புக்கொண்டு அவைகளுடன் ஜீவனைப்பந்தத்திலிருந்துவிடுவிக்கிறயோகாப்பியாசத்தை அனுசரிப்பதில் * ஈசுவரப்பிரணிதான (அதாவது சரணாகதி)த்தையும் ஒரு சாதனமாக ஒப்புக்கொண்டு நடைபெறுகிறபடியால் இந்தமதத்தைச் சிலசமயங்களில் ஸேசுவரசாங்கியமென்றுஞ் சொல்லுவார்கள். துக்கம், கருமம் ஆசை இவைகளால் பாதிக்கப்படாதவனும், காலாதீதனுமான ஒரு பிரதான புருஷன் உண்டென்று பதஞ்சலி சொல்லுகிறார். (தஸ்ய வாசக: ப்ரணவ:) அதன் வாசகம் பிரணவம். யோகசூத்திரங்கள் 198. அவை நான்கு பாதங்களாகவகுக்கபபட்டிருக்கிறன. அவைகளின்முக்கிய தாத்பரியமாவது சஞ்சலமுள்ள சித்தவிருத்தியைத்தடுத்து அதன்மூலமாய் மனம் சமாதான நிலையை (சமாதியை) யடைந்து அதன்வழியாய்க்கடைசியாய்ப்பிரகிருதி சம்பந்தத்திலிருந்து புருஷனை வேறுபடுத்தலாம், அதாவதுகைவல்லியத்தை அடைதலாம். அந்த நான்கு பாதங்களில் ஒன்றில்விபூதி (சித்தி) களைப்பற்றி விஸ்தாரமாய்ச்சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனால் சித்திகள் சமாதியடைகிறதற்கு விருத்தங்களாகவிருக்கின்றன வென்றும், ஆதலால் அவைகளை அபேட்சிப்பது அயுக்தமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

---

* சூத்திராணி i, 23.

மீதமான இரண்டு மதங்களும் சேர்ந்து மீமாம்ஸா சாஸ்திரமென்று சொல்லப்படுகின்றன. ஏனெனில், அவ்விரண்டும் வேதவாக்கியார்த்த நிரூபண சம்பந்தமான விதிகளைப்பற்றி முக்கியமாய்ப் பிரவிருத்திக்கின்றன ஆனால் வழக்கமாகப் பூர்வ மீமாம்ஸைக்குத்தான் மீமாம்ஸை யென்ற பெயர் வழங்குகிறது. உத்தரமீமாம்ஸையானது வேதாந்த சாஸ்திரமென்று வழக்கமாய்ச் சொல்லப்படுகிறது.

பூர்வ (பிராசீன) மீமாம்ஸைக்கு ஜைமினி சூத்திர கர்த்தா; சபரர் பாஷியக்காரர். அது எக்ஞங்கள், ஹவ்ய கவ்வியங்கள் முதலிய கிருத்தியங்களடங்கிய வேதத்தின் கருமகாண்டத்தைப்பற்றிப் பிரவிருத்திக்கிறது. உத்தர காண்டமோ (பிற்பட்ட மீமாம்ஸையோ) வேதத்தின் பிரஹ்மஞ்ஞான காண்டத்தைப் பற்றியது. பூர்வ மீமாம்ஸை 12 அத்தியாயங்களாக வகுக்கப்பட்டு விவரமாய்க் கர்மகாண்டத்தைப்பற்றிச்சொல்லுகிறது. பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், அர்த்தாபத்தி (உள்ளுறை பொருட்குறிப்பு), சாப்தம் ஆகிய ஐந்து பிரமாணங்களை யங்கீகரித்து அவைகளைப்பற்றி விசாரிக்கப்படுகிறது. இந்தச் சாஸ்திரத்தில், வேதந்தான் பிரமாண மென்றும், அது அபௌருஷமென்றும், விசாரணை பூர்வமாய் ஜைமினி சித்தாந்தம் செய்கிறார்.

உத்தர மீமாம்ஸையாகிய வேதாந்த தர்சனமானது தற்காலத்தில் மதத்திரயங்களாக இந்தியா தேசமுழுவதும் பிரசித்தி அடைந்திருக்கிறது. அதன் சூத்திரங்களுக்குப் பிரம்மசூத்திரமென்று பெயர். அவைகளின்கர்த்தா பாதராயணரென்ற பெயருள்ள வியாஸர். வேதாந்த

சாஸ்திரம் மதத்திரயங்களாக வழங்குகிறது. (1) அத்துவைதம்(இரண்டற்றது என்பது அருத்தம்), இதற்குச் சங்கரர் பாஷியகர்த்தா; (2)விசிஷ்டாத்துவைதம்(விசேஷணத்துடன் கூடிய இரண்டற்றதென்பது பொருள்), இதற்கு இராமாநுஜர் பாஷ்யகர்த்தா; (3) துவைதம் (இரண்டுள்ளது என்பது அருத்தம்), இதற்கு மத்துவர் பாஷியம் செய்திருக்கிறார். மேலும் இந்தவேதாந்த சாஸ்திரத்தைக் கற்கிறவர்கள் பிரஸ்தானத்திரயமென்ற பகவத்கீதை, உபநிஷத்துக்கள், சூத்திரங்கள் இவைகளை ஒன்றனபின்னொன்றாய்ப் படிக்கவேண்டியதை உத்தேசித்து, முன்பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிற பாஷியக்காரர்கள் அல்லது அவர்களின் பூர்வ சிஷ்யர்கள், இவைகளில் ஒவ்வொன்றிற்கும் வியாக்கியானம் செய்திருக்கிறார்கள். பகவத்கீதையானதுஉலகநடைக்குரியதத்துவமுறைகளின் பிரயோகத்தைச் சொல்லுகிறது. உபநிஷத்துக்களில் விக்ஞானத்தாலறியக்கூடிய தத்துவங்களும் விக்ஞானப்பயிற்சியும் சொல்லப்படுகின்றன. சூத்திரங்களோவென்றால் தியானத்திற்குச் சாதனமாகவேண்டி விதைதுக்கள்போல் அர்த்த புஷ்டியுள்ள சிறு வாக்கியங்களாக அமைக்கப்பட்டுள்ளன. அவைகளின் ஆழ்ந்த பாவங்கள் சமாதிநிலையில் அறியக்கூடியவைகள். இக்காரணம்பற்றிச் சாதன சதுஷ்டய சம்பன்னரல்லாதவர்கள் வேதாந்த சாஸ்திரத்தைக் கற்க அநர்ஹர்களாயிருக்கிறார்கள். (1) வைராக்கியம், (2) விவேகம், (3) ஷட்சம்பத்தி, (4)முமுக்ஷுத்துவம் இவைகளை யுடையவனே வேதாந்த சாஸ்திரத்தையறியப் பாத்தியஸ்தனாகிறான்.

துவைத மதத்தின் சித்தாந்தமாவது, ஜீவாத்மா வேறு பரமாத்மா வேறு என்பதாம். விஷ்ணுவானவர்

பரம்பதி என்பதும், ஏற்கனவேயிருக்கிற பிரகிருதியைக் கொண்டு பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தாரென்பதும் அதின் சொல்லப்யாம். விஷ்ணு நிமித்தகாரணம், பிரகிருதி உபாதான காரணம்; எப்படியென்றால், தங்கக்காப்புக்குத் தட்டான் நிமித்தகாரணமும், தங்கம் உபாதான காரணமுமாயிருப்பதுபோலாகும். விஷ்ணு, பிரகிருதி, ஜீவன், இம்மூன்றிற்கும் ஆதியந்தமில்லை; ஆனால் பிரகிருதியும், ஜீவனும் விஷ்ணுவுக்குக் கீழானவைகளாக அவனரயே ஆதாரமாகவுடையன. விஷ்ணு சத்தாகவும் (உண்மையான பொருள்), சித்தாகவும் (அறிவாகவும்), அநந்தமாகவும் (முடிவற்றதாகவும்) இருக்கிறார். புருஷனுக்கூடப் பிரகிருதியுடன் சம்பந்தித்துச் சர்வ வியாபியாக நியந்தாவாகிறார்.

அதன்பிறகு சாங்கிய முறையில் சொல்லியிருக்கிற பிரகாரம (1) மஹத்து, (2) அகங்காரம், (3) தன்மாத்திரைகள், (4) இந்திரியங்கள் என்கிற பரம்பரையாய் ஜகத் சிருஷ்டி உண்டாகிறதுமன்றி, அதற்குப்பிறகு தேவதைகளும், * ஐந்து பிரகாரமாக அவித்தையும் உண்டாகின்றன.

மகத்து முதல் அவித்தை மீறாக ஆறும், பிரகிருதி சர்க்கம்; அதாவது பிரகிருதி சிருஷ்டி என்று பொதுப்படச் சொல்லப்படுகிறது. இவைகளுக்குப் பிற்பட்டு (1) தா[illegible] வர்க்கமும் க்ஷத்திரவர்க்கமும், (2) ஜீவராசிகள், (3) மனுஷ்யவர்க்கம், இவைகள் வைகிருதசர்க்கம்; அதாவது உருப்போடமைந்த சிருஷ்டி. மேற்கண்டஒன்பது சிருஷ்

* அவித்தையின் ஐந்து பிரகாரமாவது அவித்தை, அஸ்மிதை, இராகம், த்வேஷம், அபிநிவேசம்.

டிகளுக்கு நியந்தாவாகவிருக்கிற விஷ்ணுவின் வியக்தி அம்சங்கள் பத்தாவது சிருஷ்டியாக வழங்குகின்றன. ஜீவன் சித்ரூபி; ஆனால் விஷ்ணுவைவிட வேறாகவிருக்கிறான். ஒரு ஜீவனுக்கும் மற்றொரு ஜீவனுக்கும் பேதமுண்டு. ஜீவன் மோக்ஷ சாம்பிராஜ்யத்தையடைகிறதென்றால் முடிவற்ற போகத்தை யனுபவிக்கிறதுதான். இது நான்குவிதம். அவன் அவன் யோக்கியதாம்சத்திற்குத் தக்கபடி நான்கிலொன்றான பதவியை யடைகிறான்.

அந்த நான்கு பதவிகளாவன:—(1) சாரூப்பியம் (திவ்வியரூபத்தையடைதல்), (2) சாலோக்கியம் (தெய்வசான்னித்தியமடைதல்), (3) சான்னித்தியம் (தெய்வசமீபமடைதல்), (4) சாயுஜ்யம் (தெய்வஐக்கியமடைதல்). இந்த ஐக்கியமானது ஏகீபாவமன்று; தன்மயமாகிறதுமன்று.

விசிஷ்டாத்துவைதமதத்தார்கள் ஈசுவரன், ஜீவன் இவர்களின் பிரதக்பாவமுள்ளவர்களாயும், ஈசுவரனுடன் ஐக்கியத்தை (சாயுஜ்யத்தை) அடைய அனுராகமுள்ளவர்களாயுமிருக்கிறார்கள். ஆதலால் ஆராதனை, பக்தி இவைகளுக்குப் பிரதீகத்தை வேண்டிச் சகுணப்பிரம்ம உபாஸகர்களாக விருக்கிறார்கள். பிரஹ்மன் ஏகமாகவும், சத்தியமாகவுமிருக்கிறான்; தன்னில் அபின்னமான குணங்களுடையவன். பிரஹ்மனிடமிருந்து பிரத்தியக்ஆத்மாவென்ற சங்கருஷண மூர்த்தியும், இவரிடமிருந்து மனமென்ற பிரத்தியும்ந மூர்த்தியும், இவரிடமிருந்து நானென்ற அநிருத்த மூர்த்தியும் உற்பவிக்கின்றார்கள். இந்த வேறுபட்டுப்பிரிந்த மூர்த்திகள் சிருஷ்டிகாலத்தில் வியக்தமாகின்றார்கள்; பிரளயகாலத்தில் பிரஹ்மனிடத்தில் லயமாகின்றார்கள். அப்பொழுது பிரஹ்மன் காரணாவஸ்தையையடைகிறான்; ஜீவனும், பிரகிருதியும் அதில் அவ்

வியக்தமாக அந்தர்க்கதமாகின்றன. பிரஹ்மன் பூஜார்கன்; ஜீவன் பிரஹ்மத்தின் ஆச்ரிதன். ஜீவன் பிரஹ்மனல்லன், ஆனால் பிரஹ்மத்தின் அம்சன். இவ்விரண்டிற்கும் வேற்றுமை உண்டென்பதும், ஆனால் ஸாயுஜ்யம் வேண்டுமென்பதும் அறிவுறுத்தப்படுகிறது.

அத்துவைத வேதாந்தத்தின்பரமசித்தாந்தமென்னவெனில்— தத்துவமஸி ("தத்வமஸி") அதாவது "நீ அதுவாகிறாய்" என்ற மகாவாக்கியத்தின்முடிவாம். பிரஹ்மம் நிர்க்குணவஸ்து, குணரஹிதம், சத்தியம்; மற்றவையெல்லாம் மித்தியை. ஜீவாத்மா, பரமாத்மா என்ற இரண்டும் ஒன்றே; இரண்டிற்கும் பேதமில்லை. பேதபுத்திக்கு அவித்தை (அறியாமை) காரணம். அவித்தை நீங்க, ஜீவாத்மா தன் சுபாவத்தையறிந்து பந்தநிவிருத்தியடைகிறான். சிரசினின்று சிகையின்உற்பத்திபோலபிரஹ்மத்தினின்று பிரபஞ்சமுற்பத்தியாகிறது. அது மாயையின் காரியம். காரணமும் காரியமும் ஒன்றேயாம்; அபேதமானவை. தந்துக்களின் சமூகம் வஸ்திரமாவதுபோலவும், ஓதப்புரோதமான (குறுக்கு நெடுக்கான) தந்துக்களின்றி வஸ்திரமில்லாததுபோலவும், காரணகாரிய சம்பந்தமாம். வஸ்துவை நிழல் ஆச்ரியத்திருத்தல் போல ஒருவிதமான சத்தை (பிராதிபாஸிக சத்தியத்தை) பிரபஞ்சம் ஆச்ரியத்துக்கொண்டிருக்கிறது. இதனால் பலவித சேஷ்டைக்கு முக்கியமாய் ஆஸ்பதமுண்டாகிறது. ஆகவே விவகாரபிரபஞ்ச ஞானமென்ற அபரவித்தையும், பாரமார்த்திகஞானமென்ற பரவித்தையுமாக இரண்டுவித வித்தை ஏற்படுகிறது. பாரமார்த்திகத்தில் வஸ்து ஒன்றுதான் என்று ஸ்தாபித்து, மாயாசபளிதமான ஆத்மா விவகாரதசையில் என்னென்ன பந்தங்களுக்கு உட்பட்டிருக்கிறதென்றும்,

நான், நீ, என்ற வேற்றுமைக்குக்காரணமான ஸ்தூல சூக்ஷ்மகாரணஉபாதிகளுக்கு ஆத்மா எப்படிவசப்படுகிறா னென்றும், அந்தந்த உபாதிக்குரிய பிரக்ஞா அவஸ்தைகளெப்படி ஏற்படுகின்றனவென்றும், அத்துவைத வேதாந்தம் விவரிக்கிறது. ஆத்மா உபாதிகளோடுகூடி உபாதிகளையே தானென்று ஏகீபாவப்படுத்துங் காலத்தில் அவன் பத்தனாகிறான். உபாதியைநீக்கித் தன்னைத்தானாக வறிந்துகொள்ளும்போது முக்தனாகிறான். இந்தப்பாரமார்த்திக ஆத்மஞானத்தின் பயிற்சிக்கு அநதிகாரிகளாயிருக்கிறவர்களுக்குக் கர்மானுஷ்டானம் யுக்தமாயும் அவசியமாயுமிருக்கிறது. ஆத்துமாவினிடத்திலேயே திருப்தியுள்ள ஆத்மாரூடர்களுக்கு ஞானம் சாதனமாம். அவர்களுக்குப் பிரஹ்மம் கடைப்பிடி.

இதனால் ஞானி கருமம் செய்யவேண்டியவனல்லன என்பது ஏற்படமாட்டாது. ஆனால் அவனே கருமத்தின் தத்துவத்தையறிந்தவனாகவு மிருக்கிறான். கருமத்தைச் செய்கிறதற்கிருக்கும் காரணம் அவனுக்குத்தான் தெரியும். பகவத்கீதையில் பார்க்க:

தஸ்மாதஸக்த: ஸததம்
கார்யம் கர்ம ஸமாசர ||
அஸக்தோ ஹ்யாசரந் கர்ம,
பரமாப்நோதி பூருஷ: ||

(இ-ள்) ஆகையினாலே கர்மபலனில் ஆசையைவிட்டு எப்பொழுதும் செய்யவேண்டிய கருமத்தை நன்றாய்ச் செய். ஏனெனில் அப்படிச் செய்கிற புருஷனானவன் உத்தமமானதை (மோக்ஷத்தை) அடைகிறான்.

* பகவத்கீதை III-வது அத்: 19-வது சுலோகம்.

வியக்தமாக அந்தர்க்கதமாகின்றன. பிரஹ்மன் பூஜார்கன்; ஜீவன் பிரஹ்மத்தின் ஆச்ரிதன். ஜீவன் பிரஹ்மனல்லன், ஆனால் பிரஹ்மத்தின் அம்சன். இவ்விரண்டிற்கும் வேற்றுமை உண்டென்பதும், ஆனால் ஸாயுஜ்யம் வேண்டுமென்பதும் அறிவுறுத்தப்படுகிறது.

அத்துவைத வேதாந்தத்தின்பரமசித்தாந்தமென்னவெனில்— தத்துவமஸி ("தத்வமஸி") அதாவது "நீ அதுவாகிறாய்" என்றமகாவாக்கியத்தின்முடிவாம். பிரஹ்மம் நிர்க்குணவஸ்து, குணரஹிதம், சத்தியம்; மற்றவையெல்லாம் மித்தியை. ஜீவாத்மா, பரமாத்மா என்ற இரண்டும் ஒன்றே; இரண்டிற்கும் பேதமில்லை. பேதபுத்திக்கு அவித்தை (அறியாமை) காரணம். அவித்தை நீங்க, ஜீவாத்மா தன் சுபாவத்தையறிந்து பந்தநிவிருத்தியடைகிறான். சிரசினின்று சிகையின்உற்பத்திபோலபிரஹ்மத்தினின்று பிரபஞ்சமுற்பத்தியாகிறது. அது மாயையின் காரியம். காரணமும் காரியமும் ஒன்றேயாம்; அபேதமானவை. தந்துக்களின் சமூகம் வஸ்திரமாவதுபோலவும், ஓதப்புரோதமான (குறுக்கு நெடுக்கான) தந்துக்களின்றி வஸ்திரமில்லாததுபோலவும், காரணகாரிய சம்பந்தமாம். வஸ்துவை நிழல் ஆச்ரியத்திருத்தல் போல ஒருவிதமான சத்தை (பிராதிபாஸிக சத்தியத்தை) பிரபஞ்சம் ஆச்ரியத்துக்கொண்டிருக்கிறது. இதனால் பலவித சேஷ்டைக்கு முக்கியமாய் ஆஸ்பதமுண்டாகிறது. ஆகவே விவகாரபிரபஞ்ச ஞானமென்ற அபரவித்தையும், பாரமார்த்திகஞானமென்ற பரவித்தையுமாக இரண்டுவித வித்தை ஏற்படுகிறது. பாரமார்த்திகத்தில் வஸ்து ஒன்றுதான் என்று ஸ்தாபித்து, மாயாசபளிதமான ஆத்மா விவகாரதசையில் என்னென்ன பந்தங்களுக்கு உட்பட்டிருக்கிறானென்றும்,

ன், நீ, என்ற வேற்றுமைக்குக்காரணமான ஸ்தூல சூக்ஷ்மகாரணஉபாதிகளுக்கு ஆத்மா எப்படிவசப்படுகிறு ரென்றும், அந்தந்த உபாதிக்குரிய பிரக்ஞா அவஸ்தைகளெப்படி ஏற்படுகின்றன வென்றும், அத்துவைத வேதாந்தம் விவரிக்கிறது. ஆத்மா உபாதிகளோடுகூடி உபாதிகளையே தானென்று ஏகீபாவப்படுத்துங் காலத்தில் அவன் பத்தனாகிறான். உபாதியைநீக்கித் தன்னைத்தானாக அறிந்துகொள்ளும்போது முத்தனாகிறான். இந்தப்பாரமார்த்திக ஆத்மஞானத்தின் பயிற்சிக்கு அநதிகாரிகளாயிருக்கிறவர்களுக்குக் கர்மானுஷ்டானம் யுக்தமாயும் அவசியமாயுமிருக்கிறது. ஆத்துமாவினிடத்திலேயே திருப்தியுள்ள ஆத்மாரூடர்களுக்கு ஞானம் சாதனமாம். அவர்களுக்குப் பிரஹ்மம் கடைப்பிடி.

இதனால் ஞானி கருமம் செய்யவேண்டியவனல்லன் என்பது ஏற்படமாட்டாது. ஆனால் அவனே கருமத்தின் தத்துவத்தையறிந்தவனாகவு மிருக்கிறான். கருமத்தைச் செய்கிறதற்கிருக்கும் காரணம் அவனுக்குத்தான் தெரியும். பகவத்கீதையில் பார்க்க:

* தஸ்மாத³ஸக்த: ஸததம்
கார்யம் கர்ம ஸமாசர ||
அஸக்தோ ஹ்யாசரன் கர்ம,
•• பரமாப்நோதி பூருஷ: ||

(இ-ள்) ஆகையினாலே கர்மபலனில் ஆசையைவிட்டு எப்பொழுதும் செய்யவேண்டிய கருமத்தை நன்றாய்ச செய். ஏனெனில் அப்படிச செய்கிற புருஷனானவன் உத்தமமானதை (மோக்ஷத்தை) அடைகிறான்.

* பகவத்கீதை III-வது அத: 19-வது சுலோகம்.

𑌸𑌕𑍍𑌤𑌾𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂𑌸𑍋,
𑌯𑌥𑌾 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ||
𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑌥𑌾𑌸𑌕𑍍𑌤𑌶𑍍,
𑌚𑌿𑌕𑍀𑌰𑍍𑌷𑍁𑌰𑍍𑌲𑍋𑌕𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌮𑍍 ||

ஓ! பரதவம்சத்திற் பிறந்தவனே! ஆத்மஞான மில்லாதவர்கள் கருமத்தைப், பலாபேக்ஷையுள்ளவர்கள் எப்படிச் செய்கிறார்களோ, அப்படியே ஆத்மஞான முள்ளவனும் தனக்குப் பலனை இச்சிக்காமல் ஜனங்களுடைய பிரயோஜனத்தை யுத்தேசித்துக் கருமத்தைச் செய்யவேண்டியது.

அவ்வாறே ஸ்ரீ சங்கராசாரியாரவர்களும் சொல்லுகிறார்கள். † "பகவானே! நான் இடைவிடாமல் கருமங்களைச் செய்யாமற்போவேனேயாகில் மற்றையோர்களும் அவ்வாறே செய்யாமற் போவார்கள்."

ருஷிகள், ஜீவராசிகள், மனுஷ்யன், தேவர்கள், ஈசுவரன் இவர்கள் ஒவ்வொருவருக்கும் தான் செய்ய வேண்டிய கட்டமைகளை நன்றாயறிந்தவனாய், சுயநயவிருப்பமில்லாதவனாய், பலாபேக்ஷையற்றவனாய், மற்றையோர்களைவிட ஞானியானவன் கருமங்களை நன்றாய்ச் செய்கிறான். அவன் நிஷ்காமனாய்க் கருமங்களைச் செய்கிறதினால் கருமபந்தத்திற்கு உட்படான்.

ஆறு தர்சனங்களும் ஓரே உத்தேசத்தின் பல (பாகங்கள்) அம்சங்களாயிருக்கின்றன வென்பது இதனால் வெளியாகலாம். நியாய வைசேஷிக மதங்களினால்

---

பகவத்கீதை III-வது அ-ம். 20 வது சுலோகம்.

† இந்த வாக்கியத்தை, மாக்ஸிமுல்லர் (Max Müller) என்ற ஆங்கிலேய வித்துவான் 6-தர்சனங்களடங்கிய புஸ்தகத்தின் 217 வது பக்கத்தில் சொல்லியிருக்கின்றார்கள்.

னவன் தன் (மேதை) விவேகத்தை யுக்தமாக உபயோகிக்கவும், வாதங்களில் அமையும் குற்றங்களை ஆராயவும், இப் பிரபஞ்சத்தின் அமைப்பை (ஆரம்பவாத விஷயத்தை) அறியவும் கூடும். சாங்கியத்தினால் ஒன்றன்பின் ஒன்றாக அமைகிற சிருஷ்டி வேறுபாட்டை அடைகிறான். யோகசாஸ்திரத்தினால் தான்மேன்மைபெறவேண்டிய முறையைத் தெரிந்துகொள்ளுகிறான். பூர்வமீமாம்சையில் வியக்த (ஸ்தூலப்பிரபஞ்ச) த்தினுடைய பிரயோஜனார்த்தமாக சூக்ஷ்மப் பிரபஞ்சத்தை (தேவதைகளின் அனுக்கிரகங்களை) விநியோகிக்கும் முறையானது கற்பிக்கப்படுகிறது. வேதாந்த மார்க்கத்தின் மூன்று மதங்களினால் (துவைதம், விசிஷ்டாத்துவைதம், அத்துவைதம் என்கிற கிரமமாக) பிரஹ்மன் வேறு, தான் வேறு என்கிற பாவம் முதலிலும், பிறகு தான் பிரஹ்மத்தின் அம்சமாய் அதனுடன் சாயுஜ்யத்தை யடையக்கூடும் என்கிற பாவமும், கடைசியாய்த் தானும் பிரஹ்மமும் எப்பொழுதும் ஒன்றேயென்ற பாவமும் அவித்தையினால் மூடப்பட்டுத் தானாகிய பிரமத்தைத் தான் அறியவில்லை யென்ற பாவமும் போதிக்கப்படுகின்றன.

மேலும் ஆரியமதத்தின் ஏராளமான கிரந்தங்களைச் சமரசப்படுத்தி ஏகீபாவமாகப் பார்க்கும்பக்ஷத்தில் வைதிகமதத்தின் அபிப்பிராயங்களின் அவாந்தர வித்தியாஸங்கள் ஜீவன் மேலானபதவியை யடைவதற்காக ஏற்பட்ட மார்க்கத்தின் படிகளாக விருக்கின்றனவாம். வேதத்தின் ஸ்தூலார்த்தமும் (சப்தார்த்தமும்), அதனால் ஏற்படும் நித்திய கர்மானுஷ்டான நியமங்களும் ஆரியனுடைய சித்தத்தைச் சுத்திசெய்தும், காமம், இராகம், துவேஷம்

முதலியவைகளை நிக்கிரகம் பண்ணியும் மேன்பாடுற்ற அநுராகத்தை யுண்டுபண்ணுகின்றன. அமிருத பிந்தூபநிஷத்தில் அடியில் வருமாறு கூறியிருக்கிறது:

𑌮𑌨𑍋 𑌹𑌿 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂,
𑌶𑍁𑌦𑍍𑌧𑌞𑍍𑌚𑌾𑌶𑍁𑌦𑍍𑌧𑌮𑍇𑌵 𑌚 ॥
𑌅𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌕𑌾𑌮 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌂,
𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌕𑌾𑌮 𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌂 ॥

(இ-ள்) சுத்தம் அசுத்த மென்று மனமும் இருவகையாய்ப் பிரிகிறது. காமத்தாலேவப்பட்டது அசுத்தமென்றும, காமமற்றது சுத்தமென்றும் சொல்லப்படுகிறது.

காமத்தோடு சேர்ந்த மனம் (அசுத்த மனம்) வைதிகவிதிகளை யனுசரித்து நடப்பதினால் காலக்கிரமமாய்ச் சுத்தியாகிறது. அவ்விதம் மலம் நீங்கிய மனம் வேதங்களின் அப்பியாசத்தினால் பின்பு வரவர அதிக யோக்கியதை அடைந்து மேன்மேலும் பழகி அபிவிர்த்தியாய்த் தத்துவ ஆராய்ச்சிக்குத் தகுந்த யோக்கியதையைப் பெறுகிறது. இவ்வாறு பல விஷயங்களை யுணர்ந்து ஆராய்ந்துபழகிய ஒரு மனிதனுக்கு வேதத்தின் ஆழ்ந்தகுப்தமான அருத்தங்கள் வெளியாகும். அவன் மேதையானது அவைகளையறிந்து விநியோகிக்கச் சக்தியுடையதாக ஆகிறது. இவைகளை யெல்லாம் படிப்பதின் உத்தேசம் யாதெனில், சுத்தமான விவேகம் அதாவது புத்திக்கு ஸம்ஸ்காரம் உண்டாவதற்காகத்தான். எப்படிப் புலன்கள் விருத்தியாகாமல் மனம் விரிவாகிறதில்லையோ, அவ்விதமாகவே மனம்விகசிக்காமல் புத்திக்கு விகாசம் நேராது. இத்தன்மையை யடைந்தபிறகு தர்சனங்களைக் கற்க யோக்கியனாகிறான். அவைகளைக் கற்பதினால் அவன் புத்திக்கு விகா

உண்டாகிப் பேதங்களையுடைய பிரபஞ்சத்தின் பல பொருள்களில் ஏகமாகிய வஸ்து அவனுக்குத் தோன்றுகிறது. பிறகு எல்லாப் பொருள்களும் அந்த ஒரு வஸ்துதான் என்கிற அநுபோகம் அவனுக்கு வருகிறது. அந்த அநுபோகத்தினால் பிறரைத் துவேஷித்தல், அவமதித்தல் என்கிற பாவங்கள் நீங்கிப்போய் எல்லாரிடத்திலும் அன்பும் கருணையும் பாராட்டுகிறான். இவ்விதமாக ஒரே வஸ்துவைப் பார்க்கும் பரிபக்குவத்தையடைந்த புத்திமானுக்கு வேதத்தின் பரமமுடிவாகிய தத்துவஞானம் உதயமாகிறது. நிர்மலமானகாருண்யத்தோடுகூடிய புத்திக்குத்தான் வேதாந்தசாஸ்திரம் விசதமாகும். அப்பொழுதுதான் மனிதன் புருஷார்த்தத்தை அடைய அருகனாகிறான்; பரவித்தையைப் பெறுகிறான்; ஆத்துமஸாக்ஷாத்காரமாகிறது. மேற்கண்ட ரீதியாய் ஆரிய சமயமாகிய சநாதன தருமமானது யுக்திக்கொத்ததாகவும், முன்பின் விரோதமன்றியிலும், எல்லாவிஷயங்களும் பூரணமாக நிறைவுற்றதாகவு மிருப்பது நன்கு விளங்கும்.

# முதலாவது பாகம்.

## I வது அதிகாரம்.

---

## வஸ்து ஒன்றென்பது.

*"ஏகமேவாத்விதீயம்"||

(இ-ள்) ஒன்றே, இரண்டல்ல. இவ்விதம் சுருதிகள் முறையிடு கின்றன.

(1) அனந்தமாயும், பூர்ணமாயும், நித்தியமாயும், விகாரமற்றதாயும், யாவுமாயும், குணங்கள் தாமில்லாத தாயும், நாமரூபாதீதமாயும் இருக்கிற நிர்க்குணப் பிரஹ்ம வஸ்து அதுவே.

¶ நாஸதாஸீந்நோ ஸதாஸீத்||
ஆநீதவாதம் ஸ்வதயா ததேகம்,
தஸ்மாத்தாந்யந்ந பர: கிஞ்சநாஸ||

(இ-ள்) அப்பொழுது (பிரளயகாலத்தில்) சத்துமில்லை, அசத்து மில்லை; அதுதான் சுயமாகவே சலித்தது; அதன்றி வேறொன் றில்லை.

(2) அஃது எல்லாமுடைத்தா யிருத்தலால் இன்னது என்ற விசேஷணம் அதன்பால் ஏற்கத்தக்கதன்று; அஃது எல்லாமாயிருக்கின்றது. ஆகவே இஃதொன்று என்று லக்ஷயிக்கக்கூடியதன்று. அது சத்துத்தான் என்று சொன்னால் அசத்துக்கு இடமின்றிப் போய்விடும். ஆனால் அதினின்று சத்துத்தோன்றும்; அசத்தும் அதில் அமைவுறும்.

---

* (சாந்தோ-த். 6. 2. 1.)

¶ ருக்வேதம் X. cxxix. I. 2.

* யதாऽதமஸ்தந்ந திவா ந ராத்ரி:,
ந ஸந்ந சாஸச்சிவ ஏவ கேவல:||

(இ-ள்) அப்பொழுது தமஸு இல்லை. பகலில்லை. இரவு இல்லை. சத்து இல்லை. அசத்து இல்லை. ஆனால் கேவலம் சிவமே. அதே உபநிஷத் மறுபடியும் சொல்லுகிறது:

† த்வே அக்ஷரே ப்ரஹ்மபரே,
த்வநந்தே வித்யாவித்யே,
நிஹிதே யத்ர கூடே|
அஸ்தி இதி||

(இ-ள்) அந்த அக்ஷரபரபிரம்மத்தில், வித்தை, அவித்தை இரண்டுமே மறைந்திருக்கின்றன.

(இ-ள்) அது இருக்கிறது என்று மாத்திரம் சொல்லக்கூடும்.

பரம ரகஸ்யமான பிரணவமே சங்கியை நாமம் இவைகளுக் கதீதமான தத்பதார்த்தத்தைப் போதிக்கிறது. நசிகேதஸ் இயமனை நோக்கிப் பரமரகசியத்தை வெளியிடும்படியாய் மன்றாடிக் கேட்க, யமதருமராஜனும் அந்த ரகசியத்தைப்பெற நசிகேதஸ் அருகனென்றுஒப்புக் கொண்டவுடன், நசிகேதஸ் அடியில்வருமாறுபிரார்த்திக்கிறார்:

§ அந்யத்ர தர்மாதந்யத்ராதர்மாத்,
அந்யத்ராஸ்மாத் க்ருதாக்ருதாத்||
அந்யத்ர பூதாச்ச பவ்யாச்ச,
யத்தத் பச்யஸி தத்வத||

---

* சுவேதாசுவதரோபநிஷத். 4. 8.

† சுவேதா-த். 5. 1.

§ கடஉப-த். 2. 6. 12.

(இ-ள்) தருமத்தைவிட வேறானதும், அதருமத்தைவிட வேறானதும், கிருத (ஸுக்ருத) அகிருதத்தைவிடவேறானதும், பூதபவிஷியஙகளைவிட வேறானதுமான எதைத் தாங்கள் அறிவீர்களோ அதை வெளியிடுங்கள்.

அதற்கு யமராஜன் உத்தரம் சொல்லுகிறார்:

ஸர்வே வேதா யத்பதமாமனந்தி தபாம்ஸி,
ஸர்வாணி ச யத்வதந்தி॥
யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி,
தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவீமி॥
ஓம். ஏதத்த்யேதத் ஹ்யேவாக்ஷரம்,
ப்ரஹ்ம ஏதத்த்யேவாக்ஷரம் பரம்॥

(இ-ள்) எதை வேதங்கள் சொல்லுகின்றனவோ, எதை தபஸுகள் முறையிடுகின்றனவோ, எதை இச்சிக்கிறவர்கள பிரஹ்மசரியத்தை அனுஷ்டிக்கிறார்களோ, அந்தப்பதத்தைச சுருக்கமாய்ச் சொல்லுகிறேன். அதுதான் "ஓம்," அந்தப்பதமே பிரஹ்மம், அதுவே பரமாகவிருக்கிறது.

வெளிப்படாததும் ஆனால் எப்பொழுதும் உள்ளதுமான இந்த ஏகவஸ்து உண்டென்பது ஜகத், அண்டங்கள், புவனங்கள், ஜீவன்கள் இவைகளின் ஸித்தியினாலேயே ஊகிக்கப்படுகிறது. அஃதுண்டென்பதை எல்லாச் சமயங்களும் ஒப்புக்கொள்ளுகின்றன. எல்லாச் சாஸ்திரங்களும், வித்தைகளும் இன்றியமையாத மூலகாரணமாக அதை ஒப்புக்கொள்ளுகின்றன. பலவாறான முடிவில்லா விவாதங்களும், தர்க்கங்களும் அதன் தன்மையைப்பற்றியேயல்லாது, அஃதுண்டா இல்லையாவென்கிறஅம்சத்தைப் பற்றியன்று. அதை உணர்த்தப் பல நாமங்களுள்ளனவாயினும் அதற்குப் பெயர் ஏற்படவில்லை. ஆனால் எல்லாம் அதற்குப் பொருந்தும். அஃது எல்லாமென்றும், சூன்னியமென்றும், பூர்ணமென்றும், வெட்டவெளியென்றும், சலன

நிறைவென்றும், பர உபசாந்தியென்றும், சத்தியமென்றும், ஏகரஸமென்றும் இப்படிப்பட்ட பல நாமங்களால் வழங்கி வரப்படுகின்றது. இவையெல்லாம் உண்மையை உணர்த்தும். ஆனால் ஒரு பதமும் உள்ளபடி அதை முற்றிலும் உணர்த்தாது. முனிவர்கள் வாக்காகிய “நேதி, நேதி,” இஃதன்று, இஃதன்று என்ற சித்தாந்தமே அதற்கமையும்.

தத்பதார்த்தமான வஸ்து உண்மையில் நமக்கு மகா சமீபத்திலும், நம்முடன் மிக நெருங்கியுமிருக்க அதைச் சொல்லால் நிர்ணயிக்கமுயன்றால், அது வெகுதூரத்திலுள்ளதும் துலக்கமற்ற மனமுமான மறைபொருள் போலாய் விடுகின்றது. அது மிகவும் நம்முடன் நெருங்கியிருக்கிறதென்று சொன்னால் போதாது. நெருக்கத்தைக் காட்டிலும் சமீபித்ததாகின்றது. அது நம்முடைய தன்மையேயன்றி வேறன்று. அதைப்பற்றி ஒருநால் மிகவும் தெளிவாய் விவரிக்கிற சொல் பரமாத்மா என்னும் வாசகம்தான்.

*“அயமாத்மா ப்ரஹ்ம”

(இ-ள்) இந்த ஆத்மா பிரஹ்மன்.

இவ்விதமா யிந்தச் சித்தாந்தம் அடிக்கடி பலரூபங்களாக யாருமுணரும்படி கூறப்படுகின்றது. மண், பொன், இரும்பு, இவைகளின் காரியங்களான பணிகள் பல நாமங்களால் •விவகரிக்கப்பட்டபோதிலும், ஒரு களிமண் பாண்டத்தின் காரணமானது களிமண் என்று தெரிந்த மாத்திரத்தில் எல்லா மட்பாண்டங்களின் காரணம் களிமண்ணென்று எப்படி அறிவு வருமோ, ஒரு பொன்னணியின் காரணமானபொன் தெரிந்தமாத்திரத்தில்எல்லாப் பொன்

---

மாண்டூ-த். 2.

சாந்தோக்கியோபநிஷத். VI. I. 4. 5. 6.

னணிகளின் காரணம் பொன்னென்று எப்படி அறிவு வருமோ, ஒரு இரும்பாயுதத்தின் காரணமான இரும்பு தெரிந்தமாத்திரத்தில் எல்லா இருப்பாயுதங்களின் காரணம் இரும்பென்று எப்படி அறிவுவருமோ, அவ்வாறே, ஒரு பிரத்தியக் ஆத்மாவைத் தெரிந்தமாத்திரத்தில் பரமாத்மாவின் அறிவு வரும். அதையறியவும் எல்லாமறிவோம். "பொன்னை மறைத்தது பொன்னணி பூஷணம்" என்பது (திருமந்திரம்). மறுபடியும் சாந்தோக்யோபநிஷத்தில் சொல்லியபடி,

*"𑌸𑌰𑍍𑌵𑌂 𑌖𑌲𑍍𑌵𑌿𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮"

(இ-ள்) இஃதெல்லாம் நிச்சயமாகப் பிரமமே.

"இஃது" என்ற பதம் பிரபஞ்சத்தைச் சுட்டுகின்ற பரிபாஷை. "தஜ்ஜலாநிதி" (இ-ள்) அது பிரம்மத்தினின்று உற்பத்தியாய், அதில் லயமாய், அதனால் தரிக்கப் படுகிறது. ஆகவே அது பிரஹ்மமே. இந்திரிய கோசரமானவெல்லாம் அந்தப் பரிபூர்ணத்தினின்று உற்பவிக்கின்றன. அந்தப் பரம்பொருளின் சாயைபோலாகின்றன. ஆயினும் சாந்தோக்கியோபநிஷத்தில் சொல்லியபடி அதையறிய அதிகதூரம் போவானேன்.

†"𑌏𑌷 𑌮 𑌆𑌤𑍍𑌮𑌾𑌽𑌨𑍍𑌤𑌰𑍍𑌹𑍃𑌦𑌯 𑌏𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮"

(இ-ள்) இந்த என்னுடைய ஹிருதயத்திலிருக்கிற ஆத்மா இந்தப் பிரம்மமே.

இளமைப் பருவத்திலிருக்கிற ஒருவன் இந்த மகாதத்துவத்தை ஞானதிருஷ்டியாலறியவாவது அதைச் சொன்னவுடன் பகுத்தறிவுள்ள மனத்தில் உண்டாகும் பல சந்தேகங்களை நிவர்த்திசெய்து கொள்ளவாவது முயல வேண்டியது அவசியமில்லை. இந்தத் தத்துவத்தை எல்லா விவேகிகளும் ஏதோ ஒருவிதமாக அங்கீகரித்திருக்கிறார்களென்றும், எந்த வாஸ்தவமான ஞானத்துக்கும் அதுவே

---

* சாந்தோக்யம் III. XIV. 4.

† சாந்தோக்யம் III. XIV. 1.

பரம ஆதாரமென்றும், பின்பு சூக்ஷ்மமாய்ப் படித்தால் அது தனக்கே தெரியுமென்றும் அறிந்துகொண்டால் அதுவே போதுமானது. எல்லாருக்குமில்லாமற் போனாலும் அநேகர்கள் சம்மந்தப்பட்டமட்டில் மனம் சாந்தி யடைவதற்கும் அனைவர்களிடத்திலும் கருணை பாராட்டி நடப்பதற்கும் உதவியாக எல்லாம் ஒரு வஸ்துதானென்று உணர்வதற்கு முயற்சித்தால் அதுவே தற்காலத்தில் போதுமானது. அது சர்வ பூதத்தின் ஹிருதயமாக விருக்கிறது. தன்னிடத்திலும் மற்றெல்லாரிடமும் சமமாகவே யிருக்கிறது. யுக்திமூலமாய்ப் பரிசீலனைசெய்து அறியும் முன்னமே இதை ஒவ்வொருவரும் தன் உணர்ச்சியாலேயே அறியலாம்.

இந்த வித்தையைத்தான் மேலான ஞானமென்ற பரவித்தையென்று சொல்லுகிறார்கள். பரிசுத்தமான மனம், பக்தி, தியாகம், ஞானம், இவைகளால் இது அடையத் தக்கது. கடோபநிஷத்தில் I. 2. 24. மந்திரத்தில், எந்த உபாயத்தால் ஆத்மாவை யடையலா மென்று அடியில் வருமாறு சொல்லியிருக்கிறது:

"*நாவிரதோ து³ஶ்சரிதா |
நாஶாந்தோ நாஸமாஹித꞉ ||
நாஶாந்தமாநஸோவாபி |
ப்ரஜ்ஞாநேநைநமாப்நுயாத் ||"

(இ-ள்) பாப கருமங்களினின்றும் ஒழிவடையாதவன் இந்த ஆத்மாவையடைய மாட்டான். இந்திரியங்களின் சாஞ்சல்யத்தினின்றும் ஒழிவடையாதவன் ஆத்மாவை யடையமாட்டான். பல விஷயங்களில் பரவும் சித்தமுள்ளவன் ஆத்மாவை யடையமாட்டான். சமாதானமுள்ள மனமில்லாதவனும் ஆத்மாவையடைய மாட்டான். பிரஞ்ஞானத்தினால் ஆத்மாவை அடைவான்.

* கடோபநிஷத I. ii. 24.

*“𑌨𑌾𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌬𑌲𑌹𑍀𑌨𑍇𑌨 𑌲𑌭𑍍𑌯𑍋 ।
𑌨 𑌚 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌤𑍍𑌤𑌪𑌸𑍋 𑌵𑌾𑌪𑍍𑌯𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌤𑍍 ॥
𑌏𑌤𑍈𑌰𑍁𑌪𑌾𑌯𑍈𑌰𑍍𑌯𑌤𑌤𑍇 𑌯𑌸𑍍𑌤𑍁 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂 ॥
𑌤𑌸𑍍𑌯𑍈𑌷 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌶𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌧𑌾𑌮 ॥”

(இ-ள்) இந்த ஆத்மாவானது பலமற்றவனுக்காவது முயற்சியில் கவனமில்லாதவனுக்காவது தவத்தினடையாளங்களற்றவனுக்காவது அனுபவத்துக்கு வராது. இந்தச் சாதனங்களோடு முயலுகிற ஞானியின் ஆத்மாதான் பிரமபதவியை அடைகிறது.

இதுதான் பரமசாந்தி, இதுதான் பிரஹ்ம நிர்வாண பதமாம்.

†“𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌮𑍍 ।
𑌋𑌷𑌯𑌃 𑌕𑍍𑌷𑍀𑌣𑌕𑌲𑍍𑌮𑌷𑌾𑌃 ॥
𑌛𑌿𑌨𑍍𑌨𑌦𑍍𑌵𑍈𑌧𑌾 𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌹𑌿𑌤𑍇 𑌰𑌤𑌾𑌃 ॥

(இ-ள்) பாபங்களையும் சம்சயத்தையும் அஞ்ஞானத்தையும் நிவர்த்தித்துக் கொண்டவர்களும், இந்திரியங்கள், மனம், இவைகளைச் சுவாதீனத்தில் வைத்துக்கொண்டிருப்பவர்களும், சகல பிராணிகளிடத்திலும் செந்தண்மையுள்ள ஒழுக்கமுள்ளவர்களுமான ஞானிகளே பிரஹ்ம நிர்வாணத்தை யடைகிறார்கள்.

அப்படிப்பட்ட ஞானியானவன் “𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑍃𑌚𑍍𑌛𑌤𑌿” “சாந்தியையடைகிறான்” என்று கீதையில், 5 வது அத்தியாயம், 29 வது சுலோகத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் சொல்லியிருக்கிறார்.

¶“𑌏𑌤𑌦𑍍𑌵𑍈 𑌸𑌤𑍍𑌯𑌕𑌾𑌮 𑌪𑌰𑌂 ।
𑌚𑌾𑌪𑌰𑌞𑍍𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌯𑌦𑍋𑌙𑍍𑌕𑌾𑌰𑌃 ॥”

---

* முண்டகோ-த். iii. ii. 4.
† பகவத்கீதை. 5-வது அ-ம். 25-வது சு-ம்.
¶ பிரச்ன உப-த். V. 2.

(இ-ள்) ஓ சத்தியகாமரே! இந்த ஓம்காரம் பர அபர பிரஹ்மமே.

இதே விஷயமாய்ப் பிரஹதாரண்ணிய கோபநிஷத்து:

*"த்வே வாவ ப்ரஹ்மணோ ரூபே |
மூர்த்தஞ்சைவாமூர்த்தஞ்ச மர்த்யஞ்சாம்ருதஞ்ச |
ஸ்திதஞ்ச யச்ச ஸச்ச த்யச்ச ||

(இ-ள்) மூர்த்தமென்றும் அமூர்த்தமென்றும், க்ஷரமென்றும் அக்ஷரமென்றும், அநித்திய மென்றும், (சங்கராசாரியாரவர்கள் வியாக்கியானப்படி) அகண்டமென்றும், பரிச்சன்னமென்றும ஸ்திதியை யுடையதென்றும் ஸ்திதி என்னும் நிலைமைக்கு அதீதமென்றும் பிரஹ்மரூபம் இருவகையானது. இந்த இரண்டாவதும் அபரமானதும், மூர்த்தமானதும், க்ஷரமானதும், பரிச்சன்னமானதும், ஸ்திதியையுடையதுமான பிரஹ்மம் வேறன்று. அந்த அகண்டபரப்பிரஹ்மமே, உபாதிக்குட்பட்டு வியக்தமாகிறது. (அதே பரிணமிக்கிறது. அதுவே சகுணமாகிறது.)

முன் பிரஸ்தாபித்திருக்கின்ற ருக்வேத மந்திரத்தில் அடியில்வரும் வசனமிருக்கிறது:

†"தபஸஸ்தன்மஹினாஜாயதைகம்"

(இ-ள்) மகத்தான தபஸினால ஒன்று உண்டானது.

அதைப்பற்றியே வேறு மந்திரம அடியில வருமாறு:

‖"வி யஸ்தஸ்தம்ப ஷளிமா ரஜாம்ஸ்யஜஸ்ய |
ரூபே கிமபி ஸ்விதேகம் ||

(இ-ள்) இந்த 6 புவனங்களையும் பிறப்பில்லா பிரதிஷ்டித்த அந்த ஒன்று யாது?

அதற்குப்பெயர். (ஏகம்) அந்த (ஏகம்) ஏகம் உற்பத்தியாலய மாகின்ற தத்பதார்த்தமான வாக்கியப்

---

* பிரஹதாரண்ணிய-த். ii—iii—1.

† ருக்வேதம் X. 129. 1. 2.

‖ ருக்வேதம் i. 144. 6.

பொருளான வஸ்து. எண்ணிக்கைக் கடங்கியதன்று. எல்லாவற்றிற்கு மதீதமாகையால் ஏகமுமன்று; அனேகமுமன்று.

மனு இந்த (ஸ்ருஷ்டி)ஏகமுற்பத்தியைக் கம்பீரமான சுலோகங்களாற் சொல்லியிருக்கிறார்.

*"ஆஸீதிதம் தமோபூதம் |
அப்ரஜ்ஞாதமலக்ஷணம் ||
அப்ரதர்க்யமவிஜ்ஞேயம் |
ப்ரஸுப்தமிவ ஸர்வத: || (ரு)
தத: ஸ்வயம்பூர்பகவா |
னவ்யக்தோ வ்யஞ்ஜயந்நிதம் ||
மஹாபூதாதி வ்ருத்தௌஜா: |
ப்ராதுராஸீத்தமோநுத: || (சா)
யோऽஸாவதீந்த்ரியக்ராஹ்ய: |
ஸூக்ஷ்மோऽவ்யக்த: ஸநாதந: ||
ஸர்வபூதமயோऽசிந்த்ய: |
ஸ ஏவ ஸ்வயமுத்பபௌ || (எ)
"யத்தத்காரணமவ்யக்தம் |
நித்யம் ஸதஸதாத்மகம் ||
தத்விஸ்ருஷ்ட: ஸ புருஷோ |
லோகே ப்ரஹ்மேதி கீர்த்யதே ||"

(இ-ள்) (5) இது தமஸால் மூடப்பட்டதாய், அறிவுக்கெட்டாததாய், இலக்ஷணமற்றதாய் விவேகத்திற் ககோசரமானதாய், சுஷுப்தியிற்போல் எவ்விதப் பிரஞ்ஞையற்றதாயு மிருந்தது.

6. பிறகு சுயம்பூ பகவான் அவ்வியக்தனாயிருந்து, மஹா பூதங்கள் முதலியதாகிய இதை (பிரபஞ்சத்தை)

* மனுஸ்ம்ருதி. I-வது அம். (5-6-7-11) வது சு-ள்.

வியக்தமாகும்படிசெய்து, பலவாருகி தமஸை விலக்கித் தோன்றினர்.

7. புலனறிவுக்கு அதீதமான ஞானத்தா லறியத் தக்கவரும், சூக்ஷ்மமானவரும், அவ்வியக்தமானவரும், புராதனரும், சர்வ பூதமயமானவரும், அசிந்தியருமான அவரே பிரகாசித்தார் (உற்பத்தியானர்).

(II.) எது மூலகாரணவஸ்துவோ, எது அவ்வியக்தமோ, நித்தியமோ, சத்தாகவும் அசத்தாகவுமிருக்கின்றதோ, அதுவே கீர்த்திபெற்ற பிரஹ்மணுகிய புருஷனைச் சிருஷ்டித்தது.

"இஃது" என்ற பதமானது பிரபஞ்சத்தைக் குறிக்கிறது. ஆனல், இவ்விடத்தில் தமஸினல் மூடப்பட்டமையால் அவ்வியக்தமான மூலப்பிரகிருதி என்று பொருள் படும் சுவயம்புவானவர் வெளிப்படவே இது வியக்தமாகிறது. அவ்விரண்டின் உற்பவம் ஏககாலத்திலேயேயாம். ஏனெனில், இதை (பிரகிருதியை) ஆவரணமாகத் தரித்தாலன்றி அவர் (சுவயம்பூ), உற்பவிக்கார். இவர் (சுயம்பூ) பிரகாசம்பெற்று இவரை அந்தர்யாமியாகக் கொண்டாலன்றி இஃது உற்பவிக்காது. ஒன்றேயாகிய இந்த மிதுனச் சுபாவத்தில் சத் அசத்தாகவும், ஆத்மா அனுத்மாவாகவும், புருஷன் பிரகிருதியாகவும், எப்பொழுதுமுள்ளதாயும் தோற்றலும் மறைதலுமுள்ளதாயும், இந்த எல்லாவற்றிற்கும் காரணமா யிருக்கிறது.

*"தமேவ ஹாந்தமநுஹாதி ஸர்வம் |
தஸ்ய ஹாஸா ஸர்வமிதம் விஹாதி ||"

(இ-ள்) அவர் பிரகாசிக்கவே, எல்லாம் பிரகாசிக்கின்றன. அவருடைய பிரபையினல் எல்லாம் பிரகாசிக்கின்றன.

---

* கடோபநிஷத். 2. 5. 15.

அவரைச் சகுணப்பிரஹ்மமென் றறிகின்றோம். சுபாவத்தில், சத்து (சுத்தஸ்வரூபம்) என்றும், சித்து (சுத்த அறிவு) என்றும், ஆனந்தம் (சுத்த சுகம்) என்றும், சொல்லப் பட்டிருக்கிறார். அக்ஷரனென்று மவருக்குப் பெயர். (அதாவது நாசரஹிதர்.) பிரகிருதியென்ற போர்வையை யவர்மேல் போத்தியிருக்கிறது. அவர் ஆத்மாவுக்கு அந்தர் யாமியாகவும் அமிருதத்துவ முள்ளவராகவும், பூமி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாசம், புவனங்கள் எல்லாவற்றிலும் (தேவர்கள், மஹா பூதங்கள், எல்லா ஜீவராசிகளின், சரீரங்களிலும்) இருந்து கொண்டு நீக்கமற்று எங்கும் வியாபித்த நியந்தாவாக விருக்கின்றார்.

பிரகதாரண்ணிய கோபநிஷத்தில் அடியில்வருமாறு சொல்லியிருக்கிறது:

*"𑌅𑌦𑍃𑌷𑍍𑌟𑍋 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾𑌽𑌶𑍍𑌰𑍁𑌤𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑌾𑌽𑌮𑌤𑍋 𑌮𑌨𑍍𑌤𑌾 |
𑌅𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑍋 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌾 𑌨𑌾𑌨𑍍𑌯𑍋𑌽𑌤𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾 |
𑌨𑌾𑌨𑍍𑌯𑍋𑌽𑌤𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌶𑍍𑌰𑍋𑌤𑌾 𑌨𑌾𑌨𑍍𑌯𑍋𑌽𑌤𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌮𑌨𑍍𑌤𑌾 |
𑌨𑌾𑌨𑍍𑌯𑍋𑌽𑌤𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑍈𑌷 𑌤 |
𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑌾𑌮𑍍𑌯𑌮𑍃𑌤𑍋𑌽𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌦𑌾𑌰𑍍𑌤𑌂 ||"

(இ-ள்) பார்க்கப்படாமல் பார்க்கிறான, கேட்கப்படாமல் கேட்கிறான்; நினைக்கப்படாமல் நினைக்கிறான்; அறியப்படாமல் அறிகிறான். அவனன்றிப் பார்க்கிறவன் வேறொருவனுமில்லை; அவனன்றிக் கேட்கிறவன் வேறொருவனுமில்லை; அவனன்றி நினைக்கிறவன் வேறொருவனுமில்லை. அவனன்றி அறிகிறவனும் வேறொரு வனுமில்லை; அவனே ஆத்மா; அவனே அந்தர்யாமீ; அவனே அமிருதஸ்வரூபி. அவனைவிட மற்றதென்பது அழியும்.

---

* பிரகதா-த். 3. 7. 8.

(இ-ள) அவன் சகலப் பிராணிகளுடைய ஹிருதயத்திலிருந்து கொண்டு ஏவுகிறவனு யிருக்கிறான். இந்த பாவம்தான் தெளிவாய் மனத்தால் கிரகிக்கத்தக்கது. உபாதிசபளிதமான பிரம்மமே அஹமென்ற பாவத்துடன் கூடிய அனுத் மாவினின்று வேறான ஆத்மாவாகவும், பிரகிருதியினின்று வேறான புருஷனுகவும், எங்கும் எப்பொழுதும் "நான் நான்" என்று சொல்லப்படுகின்றவனுகவும், அவ்வியக்தமாயிருக்குங் காலத்தில் நிர்க்குண மூர்த்தியுடன் அபேதமாகவும், வியக்தமாகும் காலத்தில் குணசகிதமாய் எப்பொழுதும் மூலப்பிரகிருதியுடன் சம்பந்தித்தவனுகவு மிருக்கிறான்.

சநாதனதருமத்தில் பெரும்பாலும் வழங்கி வருகின்ற ஸம்ஜ்ஞா (குறிப்பு) பாஷையில் சொல்லுகிறதா யிருந்தால் ஈசுவரனை, சிகரத்தை மேல்நோக்கியுள்ள அடியிற்கண்டபடி, திரிகோணஸ்வரூபமாக வரையலாம். அதில் சத்து, சித்து, ஆனந்த மென்ற அவருடைய மூன்று பாவங்களையும் அடியில் வரைந்தபடி சங்கேதமாய்க் காட்டலாம்.




மூக்கியமாய்த்தலைகீழாயுள்ள வேறொருதிரிகோணத்துடன் பின்னிப்பார்க்கும் பக்ஷத்தில் இந்தப்பாவத்தைக் கண்டறியலாம். இவ்விதம் பின்னியிருக்கின்ற இருதிரிகோணங்கள் பல தேவாலயங்களில் வரைந்திருக்கிறதைப் பார்க்கலாம், இதைப்பற்றிப் பின்பு வெளியிடப்படும்.

நித்திய ஞாதா புருஷன், ஆத்மா, அஹந்தத்துவம் என்ற இந்தப் பாவத்தைப்பற்றித் திடமான ஞானம்வந்த

* பகவத்கீதை. 10-வது அ-ம். 20-வது சு-ம்.

பின், நித்தியஞேயமான மூலப்பிரகிருதி, அநாத்மா, ஜடவஸ்து ஆகிய இவைகளைப்பற்றித் தெரிந்துகொள்ள விசாரிப்போம்.

மனுஸ்மிருதியிலிருந்து முன்னாம் உதாகரித்திருக்கிறபடி அந்த மூலப் பிரகிருதியானது அதன் அவ்வியக்த நிலைமையில் வேறுபாடற்றும் அறிவுக் ககோசரமாகவு மிருக்கிறது. ஆகையால் ரூபமற்றதாயும் ஆனால் எல்லா ரூபங்களுக்கும் ஆதாரமாயும், ஸ்பரிசயோக்கிய மற்றதாயும் ஆனால் ஸ்பரிசயோக்கிய வஸ்துக்களுக்கு ஆஸ்பதமாயுமுள்ள ஆகாசமானது இதற்கு அடிக்கடி உபமானமாகச் சொல்லப்படுகிறது. இது சுபாவத்தில் பகுபாடுத் தன்மை யுள்ளது. அதாகிய நித்தியஞாதா பகுபாடுத் தன்மை யற்றது. இது பலவாறாக விரியக்கூடியது. அஃது (அவர்) ஏகீபாவத்தன்மையுடைய(வர்)து. அவர் பிதா பிராணதாதா. இது (இவள்) மாதா. போஷகீ, கரு அமைக்கப்படும் கர்ப்பாசயம்.

*𑌮𑌮 𑌯𑍋𑌨𑌿𑌰𑍍𑌮𑌹𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 |
𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌗𑌰𑍍𑌭𑌂 𑌦𑌧𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ||

(இ-ள்) மஹத்தாகிய பிரஹ்மமானது என்னுடைய கர்ப்பத்தை வகிக்கக்கூடிய ஸ்தானம். அதில் வித்தை நான் வைக்கிறேன். சங்கராசாரியாரவர்களுடைய பாஷ்யப்படிக்கு கர்ப்பமென்றால் திரிகுணாத்மகமான பிரகிருதியென்று பொருள்படும்.

இப்பொழுது முக்குணங்களைப் பற்றிச் சற்று விசாரிப்போம். அவ்விசாரணையானது பிரகிருதி இயல்பைப் பற்றித் தெளிவான ஞான மேற்படவேண்டியது அவசியமாயிருக்கிறது. வழக்கமாய்ப் பாஷாமொழிபெயர்ப்பில் மேற்குறித்த குணங்களைப் பிரகிருதியினின்று வேறுபடுத்

---

பகவத்கீதை. 14-வது அ-ம். 3-வது சு-ம்.

திப் பிரகிருதியைச் சார்ந்த பண்பென்றும் லக்ஷணங்க ளென்றும் அடிக்கடி பிரஸ்தாபிக்கப்படுகின்றன. அப்ப டியன்று. ஆனால் குணங்களே பிரகிருதி. பிரகிருதிக்குக் காரணம் குணமே, குணங்களன்றிப் பிரகிருதியின் பாவ மாம் பிரகிருதியென்ற மாத்திரத்தில் அங்கே அணுவுக் கணுவாயும், மஹத்துக்கு மஹத்தாயும், அபின்னமா யவைகளிருக்கின்றன. இவைகள் சமநிலையாய்ச் சமநிறை வாயிருக்குங்காலத்தில் பிரளயமாம். அதாவது மஹா சுஷுப்தி (சலனமற்ற ஓய்ந்த நிலைமை) சம்பவிக்கிறது. அத்தன்மையில் பிரகிருதிக்குப் பிரதான மென்ற பெயர் வழங்குகிறது. இந்தக் குணங்களாவன:—(தமஸ்) தமஸ் (ரஜஸ்)ரஜஸ், (ஸத்வம்)சத்துவம். தமஸ் என்றதற்கு ஒரு அம்சம் மேலிட்டிருப்பதை யுத்தேசித்து அந்தகாரமென றும் துஷ்யமென்றும் பிரதி பதங்கள் உபயோகிக்கப் படு கின்றன. அதையே பிராகிருத சாஸ்திரங்களில் (அசே ஷ்டனம், ஆலஸ்யம் (inertia) என்று சொல்லப்படுகிறது. அதுவே பிரதி பந்தமாகவும் (resistance) பதார்த்தங் களின் ஸ்தாயீ பாவமாகவும் (stability) இருக்கிறது. பதார்த்த மெல்லாம் மூலத்தில் எப்பொழுதும் ஒன்றுக் கொன்று எதிர்ப்பு சுவபாவ முள்ளதாம். இஷ் சுபாவத்தி னாலேதான் பதார்த்தத்திற்கு வெவ்வேறான சுவரூபத் தை வகிக்க யோக்கியதை ஏற்படுகிறது. ரஜோகுணமென் றால் சலனம். ஒவ்வொரு வஸ்துவும் தன்நிலைமையைவிட்டு மாறுந்தன்மை இந்தரஜோகுணத்தா லேற்படுகிறது. ஒவ் வொருவஸ்துவிலும் சுதாவாக விருக்கின்ற மாறக்கூடிய தன்மை இதுவே. சத்துவமென்றால் மாத்திரைக்குள் ளடங்கிய கம்பனம், அதாவது ஒவ்வொரு வஸ்துவும் ஒரேகால அளவில் முன்னும் பின்னுமாக வியங்கும் சக்தி. அதை (rhythm) என்றும் (vibration) என்றும் ஆங்கில

பாஷையில் சொல்லப்படுகிறது. ஆகவே ஒவ்வொரு பதார்
த்தத்திற்கும் எதிர்ப்பு, அசைவு, மாத்திரைக் குட்பட்ட
கம்பனம் இவைகள் ஏற்படுகின்றன. இவை மூன்றின்
சமநிலையும் சமமுறையும், ஈசுவரனுடைய சங்கல்ப மாகிய
உச்சுவாஸத்தினாலே பேதிக்கப்படுங் காலத்தில் இம் மூன்
றுகுணங்களும் வெளியாகின்றன. தமஸ் என்பது பதார்
த்தங்களின் எதிர்ப்பாகிய ஆலஸ்யமாய் விளங்குன்றது.
ரஜஸ் என்றதானது பதார்த்தத்தின் ஒவ்வொரு அணு
வையும் தீவ்ரமான சலனத்திற் குட்படுத்தி ஒரு கலக்கம்
அல்லது குழப்பத்தை உண்டுபண்ணுகிறது. சத்துவம்
அந்த ஒவ்வொரு வஸ்துவின் சலனத்திற்கும் வரம்பை
யேற்படுத்திக் கால அளவுக் குட்பட்ட சலனமுள்ள
அணுக்களாக வகுத்து அவைகளை ஒன்றோடொன்று நிய
தமான சம்பந்தங்களால் சேரும்படியான சொரூபத்தை
யுண்டு பண்ணுகிறது. பதார்த்தங்களிற் றோன்றுமெல்லா
தருமங்களும் அல்லது லக்ஷணங்களும், இந்த மூன்று
குணங்களுக்கும் ஒன்றோடொன்று சேரும் சேஷ்டையா
லுண்டாகின்றன. ஷை குணங்கள் வெவ்வேறு மாதிரியா
கப் பலவித சம்பர்க்கத்தால் ஜகத்திலுள்ள வித்தியாச
மான அளவிறந்த விகற்பங்களை யுண்டாக்கு கின்றன.
எண்ணற்ற அணுத்திரள் காரியமாகிய ஒரு பதார்த்தத்
தில் தமோகுணம் தலைப்படும் பக்ஷத்தில் உறுதிப்பாடும்
ஸ்திரமாயிருத்தல் என்ற தன்மையும் உண்டாகின்றன.
உதாரணமாக-கற்கள் முதலிய சுயமாய் நகரக்கூடாத
ஜடபதார்த்தங்களைப் பார்க்கலாம். ரஜோகுணமானது
ஒரு பதார்த்தத்தில் மேலிட்டால் அந்தவஸ்துவின் ஒழுங்
கற்ற பரபரப்பான சலனமும், அமைவற்ற சாஞ்சல்லிய
மிகுதியு மேற்படுகிறது. சத்துவகுணம் மேலிட்டால் ஒற்று
மையான இசைபொருந்திய அளவிற்குட்பட்ட சலனமும்

ஒழுங்குள்ள நடைபெறும் நேர்மையும் உண்டாகின்றன. எவ்வித அசைவற்ற கற்பாறையில்கூட பரம அணுக்கள் ரஜஸ் ஸத்துவமென்ற குணங்க ளிருக்கின்றமையால் இடைவிடாமல் வரம்புக்குட்பட்டதாய் இசைக்குநேராய்ச் சலிக்கின்றன. அதிக பரபரப்புள்ள சஞ்சலமான பிராணி யினிடத்திலுங்கூட அதில் அமைந்திருக்கின்ற அணுக் கள் தமஸ், ஸத்துவ மென்ற இரண்டு (2) குணங்களிருக் கின்றமையால் இருப்புக்குக் காரணமாகிய ஆலஸ்யமும், வரம்பமைந்திசைந்த சலனத்தையு முடைத்தா யிருக்கின் றன. இசைந்த மனச்சமாதான முள்ள மனிதன் சரீரத் திலுங் கூட தமஸ் ரஜஸ்கள் இருப்பதால்அணுக்களிருப் புக்குக் காரணமாகிய ஆலஸ்யத்தையும், சலனத்தையும், பொருந்தியவைகளா யிருக்கின்றன.

சத்து, சித்து, ஆனந்தமென்ற மூன்று பாவங்க ளமைந்த ஈசுவரனை ஊர்த்துவஜ்வாலை போல சிகரத்தை மேலாகவுள்ள திரிகோண ஸ்வரூபமாக முன்வரைந்திருக் கிறோ மல்லவா, அதுபோல மூன்று பாவங்களமைந்த மூலப் பிரகிருதியைத் திரிகோணமாக அடியில் சங்கேத மாய்க் காட்டுவோம். ஆனால் ஜலத்தின் தாரைபோல கீழ் நோக்கி அமையும்.




மேற்கண்ட ஊர்த்துவமுக அதோமுகமான இரண்டு திரிகோணங்களின் பின்னலால் தேவாலயங்களில் காணு கிறபடி ஈசுவரனும், அவருடைய பிரபஞ்சமும், அடியில்

வருமாறு வரைந்திருக்கிறது. மத்தியில் ஏகமாயிருக்கிற ஒருவஸ்துவுக்குப் பிரதீகமாக ஒருபுள்ளி அதாவது குத்துப்போடப்பட் டிருக்கிறது. இவையெல்லாம் கூடிய முழுரூபமும் பரபிரஹ்மம். பிரபஞ்ச மிரண்டையும் குறித்துக் காட்டுகின்ற ஏழு தத்துவங்களின் பிரதீகமாக அமைகிறது.



இவ்விதமாக மனு ஸ்மிருதியில் முன் சொல்லியபடி மிதுனத்தின் இரண்டாவது அங்கசிருஷ்டிக்குக் காரணமாயேற்படுகிறது.

ஈசுவரனுடைய ஓஜஸ்ஸாகிய சக்தியை (பிரபஞ்சத்தை) வியஷ்டிப்படுத்தும் தேஜஸ்ஸை, மாயை யென்று ஸ்மிருதி சொல்லுகிறது; மாயை ஈசுவரனின்று அபின்னமானது. அவ்விரண்டின் சம்பந்தமானது, சந்திரனும் அதன் கிரணங்களும் எப்படி அபின்னமோ, அக்கினியும் அதன் தகனசக்தியுமெப்படி யபின்னமோ, அவ்விதமாகவே யிருக்கிறது.

தேவீபாகவதம். 6 வது ஸ்கந்தம் 15 வது அத்தியாயம் 49 வது சுலோகத்திற்கு நீலகண்டர் மேற்கூறியவாறு வியாக்கியானஞ் செய்திருக்கிறார்.

"தஸ்யைவைஶ்வர்யஸ்ய ஶக்த்யா ।
ஸ்ரஜாமி ஸகலம் ஜகத் ॥
ஸ ஶக்தி விஶ்வ ஸாத்தா ।
தஸ்யாஹம் ப்ரக்ருதிஃ ஶிவா ॥

---

தேவிபாகவதம் V. 16. 36.

(இ-ள்.) சைதந்நியனே பரம புருஷனின் இச்சாசக்தியாக நானிருக்கிறேன், சகல ஜகத்தையும் சிருஷ்டிக்கிறேன், விசுவாத்மாவாகிய அவர் என்னைப் பார்க்கிறார். நான் அவருடைய காருண்ணிய அம்சமாக விருக்கிறேன்.

மேற் கூறிய சுலோகத்திற்குப் பாஷ்யம் செய்திருக்கிற நீலகண்டர் அடியில் வரும் சிவ சூத்திர மொன்றை ஆதாரமாக உதாகரிக்கிறார்.

* இச்சாசக்திருமா குமாரீ ||

(இ-ள்.) இச்சாசக்தி, உமை, குமாரி, என்று பொருள்படும்.

பரம புருஷனின்று அபின்னமா யிருக்கும் நிலைமையில் உமைக்கு மஹாவித்தை என்றும், பரமஞான மென்றும் பெயராம். பின்னமாயிருக்கும் நிலைமையில் அவளுக்கு அவித்தை யென்றும். அக்ஞானமென்றும் சொல்லப்படுகிறது. மூலப்பிரகிருதியில் உட்பிரவேசித்து, அதனுடன் அபேதமாகச் சேர்ந்திருக்கின்றமையால் மகாமாயை யென்று முக்கியமாய் அவளுடைய பெயர் வற்புறுத்திக் கூறப்படுகின்றது. மேற்கண்ட விரண்டும் அவளுடைய சுவரூபங்களா. இதற்கு அத்தியாத்ம ராமாயணத்தில் ஒரு வசன மிருக்கிறது.

† ராம மாயா த்விதா பாதி |
வித்யாவித்யேதி தே ஸதா ||

(இ-ள்.) ஓ இராம! மாயையானது வித்தை, அவித்தை யென் றிருவகையாகப் பிரகாசிக்கிறது.

பரம புருஷனின் சக்தியை மூலப்பிரகிருதியுடன் ஏகீபாவமாகச்சொல்லுகின்றமையால் அந்தமாயாசக்தி மூலப் பிரகிருதி என்றும், பிரகிருதி என்றும், அடிக்கடி வழங்கி

* தேவீபா-ம். 6 வது ஸ்கந்தம். 15 வது அ-ம். 49 சு-ம்.

† அத்தியாத்ம-ம். 3. 3. 32.

வருகிறது. இதற்கு ஆதாரம், பகவத்கீதையில் VII. 4. 5. சுலோகங்களில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் பிரகிருதியைப் பொது அபிப்பிராயப்படி அடியில் வருமாறு இலக்ஷணஞ் சொல்லி வரையறுத் திருக்கிறார்.

* 𑌭𑍂𑌮𑌿𑌰𑌾𑌪𑍋𑌽𑌨𑌲𑍋 𑌵𑌾𑌯𑍁𑌃 ।
𑌖𑌂 𑌮𑌨𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍇𑌵 𑌚 ॥
𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰 𑌇𑌤𑍀𑌯𑌂 𑌮𑍇 ।
𑌭𑌿𑌨𑍍𑌨𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌰𑌷𑍍𑌟𑌧𑌾 ॥
𑌅𑌪𑌰𑍇𑌯𑌮𑍍 ॥

(இ-ள்.) என்னுடைய பிரகிருதியே, (மாயாசக்தியே பூமி, ஜலம், அக்கினி, காற்று, ஆகாயம், மனம், புத்தி, அகங்காரம், இப்படி எட்டுவிதமாய்ப் பிரிந்திருக்கிறது.

இந்தப் பிரகிருதி தாழ்ந்தது. அதாவது, (நிகிருஷ்டமானது). பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் வேறு மேலான பிரகிருதியைப்பற்றிச் சொல்லுகிறார்.

𑌅𑌨𑍍𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑍇 𑌪𑌰𑌾𑌮𑍍 ॥
𑌜𑍀𑌵𑌭𑍂𑌤𑌾𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 ।
𑌯𑌯𑍇𑌦𑌂 𑌧𑌾𑌰𑍍𑌯𑌤𑍇 𑌜𑌗𑌤𑍍 ॥

(இ-ள்.) ஓ புஜபலமுள்ளவனே, இதைப்பார்க்கிலும் வேறானதும், எந்தப்பிரகிருதியினாலே இந்தப் பிரபஞ்சமானது தரிக்கப்பட்டிருக்கின்றதோ, அந்த ஜீவஸ்வரூபமானதும், அதாவது பிராணனைத் தரிக்கிறதற்கு ஹேதுவானதும் என்னுடைய அம்ச பூதமுமான அந்தப் பிரகிருதியை மேலானது (சிரேஷ்டம்) என்று அறி.

பகவத்கீதை 9-வது அத்தியாயம் 13-வது சுலோகத்தில் இந்த மேலான பிரகிருதியை தேவி பிரகிருதியெனவும், பிரபஞ்சத்தைத் தாங்குகின்ற தம்முடைய யோக மாயையெனவும், ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லுகிறார். தவிரவும்,

* பகவத்கீதை. VII. 4. 5.

சுவேதாசுவதரோபநிஷத்தில் IV. 10 மந்திரத்தில் அடியில் வருமாறு ஆதாரமிருக்கிறது.

𑌮𑌾𑌯𑌾𑌂𑌤𑍁 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑍍
𑌮𑌾𑌯𑌿𑌨𑌂𑌤𑍁 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍

(இ-ள்.) மாயை பிரகிருதியென் றறியத்தக்கது. மாயையை யுடையவர் மகேசுவரர்.

தேவி பாகவதத்தில் III. iii. 51. 61. சுலோகங்களில் மாயாமயமான பிரபஞ்சத்தின் பிரகிருதி பக்ஷத்தின இயல்பைப்பற்றிச் சில அழகான வர்ணனைகள் அமைந்துள்ளன.

𑌏𑌷𑌾 𑌭𑌗𑌵𑌤𑍀 𑌦𑍇𑌵𑍀
𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌹𑌿 𑌨𑌃
𑌮𑌹𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌮𑌹𑌾𑌮𑌾𑌯𑌾
𑌪𑍂𑌰𑍍𑌣𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌰𑌵𑍍𑌯𑌯𑌾 ।

. . . . .....

[illegible]
𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌿𑌣𑍀
𑌵𑍇𑌦𑌗𑌰𑍍𑌭𑌾 𑌵𑌿𑌶𑌾𑌲𑌾𑌕𑍍𑌷𑍀
𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌮𑌖𑌿𑌲𑍇𑌶𑍍𑌵𑌰𑍀

𑌏𑌷𑌾 𑌸𑌂𑌹𑍃𑌤𑍍𑌯 𑌸𑌕𑌲𑌂
𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 𑌕𑍍𑌰𑍀𑌡𑌤𑌿 𑌸𑌂𑌕𑍍𑌷𑌯𑍇
𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌜𑍀𑌵𑌾𑌨𑌾𑌂
𑌸𑍍𑌵𑌶𑌰𑍀𑌰𑍇 𑌨𑌿𑌵𑍇𑌶𑍍𑌯 𑌚 ॥

..... ..... ..... .....

𑌮𑍂𑌲𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌰𑍇𑌵𑍈𑌷𑌾
𑌸𑌦𑌾 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑌂𑌗𑌤𑌾 ॥
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑍍𑌡𑌂 𑌦𑌰𑍍𑌶𑌯𑌤𑍍𑌯𑍇𑌷𑌾
𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌵𑍈 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍇 ॥

* சுவேதா-த். IV. 10.

ததேஷா காரணம் ஸர்வா
மாயா ஸர்வேச்வரீ சிவா॥

(இ-ள்.) அந்த தேவி சகலவற்றிற்கும் காரணமான பகவதியாகவும், மகாவித்தை, மகாமாயை, பூர்ண, நாசமற்ற பிரகிருதி, இவைகளாகவு மிருக்கிறாள். பரமாத்மாவின் இச்சா சக்தியாகவும் நித்தியம் அநித்தியமான யாவற்றின் காமஸ்வரூபியாகவும் அவளிருக்கிறாள்.

அவளுடைய கர்ப்பத்தில் வேதமிருக்கிறது. விசாலமான கண்களையுடையவள். சகலத்திற்கும் ஆதி ஈசுவரியாகவு மிருக்கிறாள். பிரளயகாலத்தில் சகல பிரபஞ்சத்தையும், சம்ஹாரஞ்செய்து அவள் விளையாடுகிறாள். தன் சரீரத்தின்கண் சகல ஜீவர்களுடைய சூக்ஷமாம்சங்களான லிங்கங்கள் பிரவேசிக்கின்றன.

அவளே மூலப்பிரகிருதி. எப்பொழுதும், புருஷனுடனே இருக்கிறாள். பிரம்மாண்டங்களை அவள் சிருஷ்டித்து பரமாத்மாவுக்குக் காட்டுகிறாள்.

இவற்றிற்கெல்லாம் அவள் காரணமாகவும், இவைகளெல்லாமாயும், மாயையாயும், சர்வேசுவரியாயும், மங்களரூபிணியாயு மிருக்கிறாள்.

இந்த மாயை முன்சொன்ன சகுணமூர்த்தியாகிய ஈசுவரனின்று அபின்னமானது.

இதற்காதாரம் ஷ்டி தேவீபாகவதத்தில் VI, XXXI, 48, 49 - வது சுலோகங்களைப் பார்க்க.

ஸா ச மாயா பரா தத்வ
ஸம்வித்ரூபேத்யஸ்தி ஸர்வதா॥
ததா மாயா விசிஷ்டாம் தாம்
ஸம்விதம் பரமேச்வரீம்॥
மாயேச்வரீம் பகவதீம்

ஸஹ்ஷா நந் ரமேணி ।
யாயெசு ॥ ... ...

(இ-ள்.) அந்த மாயையானவள் பரதத்துவ மூர்த்தியில் எப்பொழுதும் சான்னித்தியமாக விருக்கிறாள். அவருக்கு அதீனமாக இருந்துகொண்டு, அவரால் ஏவப்பட்டவளாய் ஜீவர்களை சஞ்சரிக்கும்படி செய்கிறாள். ஆதலால், சத், சித், ஆனந்த ரூபியானவளும் மாயா ஈசுவரியாயும், பகவதியாயுமிருக்கிற அந்த பரமேசுவரியைத் தியானம் பண்ணவேண்டியது.

ஈசுவரனுடைய மாயாசக்தியாக விருக்கின்றமையால் ஈசுவரியைப் பந்தத்திற்குக் காரணமாயும், மோக்ஷத்திற்கு மார்க்கமாயும் அறியவேண்டியது. அவித்தையாகவிருந்து கொண்டு ஜீவகோடிகளை பாசத்திற் குட்படுத்துகிறாள். வித்தையாக விருந்துகொண்டு ஈசுவரனிடத்தில் சேர்ப்பிக்கிறாள். தான் ஈசுவரனிடத்தில் மறையவே ஆத்மாவானவன் தன்னைத்தா னறிகிறான். பந்தத்திலிருந்து விடுபடுகிறான்.

இதற்காதாரம் தேவீபாகவதம்; 1 வது ஸ்கந்தம், 18-வது அத்தியாயம், 42, 43, 44 - வது சுலோகங்களைப் பார்க்க.

* ஹெஷவாஷிஸா ஸாஸாமெர
வத்தூஶா நா ஷுவத்தூமெதெ ॥
சுவிஷெயாம ஃஹாஹாம
விஷாவ தநிவத்தூநம் ॥
விஷாவிஷெவ விஜெஜுயெ
ஸவமெஷெவ விவக்ஷமெணெ ॥
விநாஶதவாஹி ஷாயாயா
ஜாயதெவ கயாஸ்வம் ॥

* தேவீபா-ம். 1-வது ஸ்க-ம். 18-வது. அ-ம். 42, 43, 44-வது சு-ள்.

அவித்³யயா வினாத³யஸ
ஸம்ஸார வித்³யயா விமுச்யதே॥

(இ-ள்.) பேதபுத்தியானது ஜீவனைச சம்சாரத்தில் மூட்டுகிறது. இதற்கு அவித்தை காரணம். ஓ சிரேஷ்டமானவனே! வித்தையானது அதினின்று நிவிருத்திப்பது. அறிஞர்கள், வித்தை, அவித்தை இரண்டையு மறிவார்கள். வெயிலில்லாமற்போனால் நிழலின் அருமை தெரியாது. அவ்வாறே அவித்தையின்றி வித்தை தெரியமாட்டாது.

இன்னும் ஆதாரவாக்கியம்:

* ப்ரவ்ருத்திமார்க³ நிரதா
அவித்³யாவஸ வர்த்தின꞉।
நிவ்ருத்திமார்க³ நிரதா
வேதா³ந்தார்த² விசாரகா꞉॥

(இ-ள்.) பிரவிருத்தி மார்க்கத்திலிருப்பவர்கள் அவித்தியாதீனர்கள். நிவிருத்தி மார்க்கத்திலிருப்பவர்களோ வேதாந்த விசாரணை செய்பவர்கள்.

ஜீவன் பிரவிருத்திக்கும் காலத்தில் பிரகிருதியை நோக்கினவனாய் அதின் முகத்தையே பார்த்துக்கொண்டு நடைபெறுகிறான். மாயை அவித்தையாக மூடிக்கொள்ளுகிறாள். பிரகிருதியைவிட்டுப் புறங்காட்டி ஜீவன் ஈசுவரனை நோக்குங்காலத்தில் அவளும் ஜீவனுடன் திரும்பி வித்தியாசுவரூபிணியாகிறாள். அவன் பந்தத்திலிருந்து விடுபடுகிறான். தேவீபாகவதம், 6-வது ஸ்கந்தம், 47, 48-வது சுலோகங்களுக்கு வியாக்கியானஞ் செய்யுங்கால் "நீலகண்டர்" சைவாகமத்திலிருந்து அடியிற்கண்ட வசனத்தை ஆதாரமாகக் கொள்ளுகிறார்.

அந்தர்முகா ஸக்திரேவ வித்³யா"॥

(இ-ள்.) அந்தர்முகமாயுள்ள சக்தி வித்தையாம்.

---

* அத்தியா-ம், 3-வது அ-ம். 32-வது சு-ம்.

ஜீவஞானவன் பின்பு மாயையின் சக்தியையும், தேவீ ஸ்வபாவத்தையும், பரவஸ்துவுடன் அபேதமாயிருத்தலையும், ஸாக்ஷாத்கரிக்கிறான். ஈசுவரனையும், மாயையும் ஒன்றாக அறிந்து, அடியில் வருமாறு ஸ்தோத்திரம் செய்கிறான்:

* 𑌅𑌨𑌨𑍍𑌤𑌕𑍋𑌟𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑍍𑌡
𑌨𑌾𑌯𑌿𑌕𑍇 𑌤𑍇 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃।
𑌨𑌮𑌃𑌕𑍂𑌟𑌸𑍍𑌥 𑌰𑍂𑌪𑌾𑌯𑍈
𑌚𑌿𑌦𑍍𑌰𑍂𑌪𑌾𑌯𑍈 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃॥
𑌨𑌮𑍋 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤 𑌵𑍇𑌦𑍍𑌯𑌾𑌯𑍈
𑌭𑍁𑌵𑌨𑍇𑌶𑍍𑌯𑍈 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃॥
𑌨𑍇𑌤𑌿 𑌨𑍇𑌤𑍀𑌤𑌿 𑌵𑌾𑌕𑍍𑌯𑍈𑌰𑍍𑌯𑌾
𑌬𑍋𑌧𑍍𑌯𑌤𑍇 𑌸𑌕𑌲𑌾𑌗𑌮𑍈𑌃॥
𑌤𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌰𑌣𑌾𑌂 𑌦𑍇𑌵𑍀𑌂
𑌸𑌰𑍍𑌵𑌭𑌾𑌵𑍇𑌨 𑌸𑌨𑍍𑌨𑌤𑌾𑌃॥

(இ-ள்.) அனந்தகோடி பிரம்ஹாண்டங்களின் நாயகியே போற்றி, கூடஸ்தரூபியே போற்றி, சித்ரூபியே போற்றி, வேதாந்தங்களால் அறியக்கூடிய பொருளே போற்றி, புவனேசுவரியே போற்றி, "நேதி நேதி" என்றவாக்கியங்களாலும், சகலஆகமங்களாலும், அறியக்கூடியபொருளே போற்றி, தேவீர் சகலத்திற்கும் காரணமானவளே போற்றி, ஜகன்மாதாவே போற்றி.

சம்சாரஸாகரமாகிய யெண்ணிறந்த பிரம்ஹாண்டங்களைத், தன்னுடைய மாயா சக்தியால் ஈசுவரன் ஆக்குகிறார்; காப்பாற்றுகிறார்; அழிக்கிறார்.

அவர் பல சிருஷ்டி செய்கிறார். இதற்கு ஆதாரம்:

† 𑌤𑌦𑍈𑌕𑍍𑌷𑌤 𑌬𑌹𑍁 𑌸𑍍𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑍇𑌯

(இ-ள்.) அது இச்சித்தது, நான் பலவாறாக ஜனிக்குக.

---

* தேவீபா-ம். 7 வது ஸ்க-ம். 28 வது அ-ம். 31, 32 வது சு-ள்.
† சாந்தோ-த். 6 வது பிரபா-ம். 2 வது கண்டம். 3 வது ம-ம்.

பிறகு பல பெயர்கள் அவருக்கு வருகின்றன.

*ஏகம் ஸத்விப்ரா பஹுதா வதந்தி॥

(இ-ள்.) அஃது ஒன்றே; அதனை அறிஞர்கள் பல நாமங்களால் சுட்டிச்சொல்லுகிறார்கள்.

பலநாமங்களிருந்தாலும், ஈசுவரன், ஒன்றே; நாம் இப்பொழுது தெரிந்துகொண்டவாறு சுருதியும், ஸ்மிருதியும் அவ்வாறே அறிவுறுத்துகின்றது. சாதாரணமான நூல்களும், அதையே சொல்லுகின்றன. அடியில்வரும் சுலோகம் உதாரணமாகக்கூறப்படுகிறது:

† ஸ்ருஷ்டி ஸ்தித்யந்தகரணீ
ப்ரஹ்ம விஷ்ணு சிவாத்மிகாம்॥
ஸ ஸம்ஜ்ஞாம் யாதி பகவாந்
ஏக ஏவ ஜநார்த்தந:॥

(இ-ள்.) ஜனார்த்தனனாகிய ஒரேகடவுளே சிருஷ்டிக்கிறதால் பிரஹ்மாவென்றும், காப்பதினால் விஷ்ணுவென்றும், சம்ஹாரிப்பதால் சிவனென்றும் நாமத்தைப பெறுகிறார்.

மேற்கண்டவிஷயங்களைச் சுருக்கமாய்ச் சொல்லுகிறதாவது. அடியிற்கண்ட விஷயங்களைக் கவனிக்க வேண்டியது:

சிருஷ்டிக்கு முன் (வியக்திபாவத்துக்கு)

(1) பூர்ணமாய், எல்லாமாய், பரமாத்மாவாய், நிர்க்குணமாயிருக்கிற பிரஹ்மன், ஒன்றேயுள்ளது.

சிருஷ்டிக்குப் பின்.

(2) ஏகமாகவும், ஈசுவரனாகவும், பிரத்தியகாத்மாவாகவும், அகம்பிரத்தியியாகவும், சத்தாகவுமுள்ள ஸகுணமூர்த்தி.

---

* ருக்வேதம் I. 114 வது. 46 வது மந்-ம்.
† விஷ்ணுபுரா-ம். I வது, 2 வது அ-ள். 62 வது சு-ம்.

(3) மூலப்பிரகிருதி, அநாத்மா, விஷயரூபி, அசத்தாகவுமுள்ளது.

(4) மாயையாகவும், சக்தியாகவும், ஈசுவரனுடைய இச்சையாகவுமுள்ளது.

(5) ஈசுவரனுடைய மாயாசக்தியால் மூலப்பிரகிருதியின் காரியமாகிய ஜீவகோடிகளானபல.

மேற்குறித்த ஐந்து தத்துவங்களின் வியக்தமான இலக்ஷணத்தைப்பற்றியும், அவைகளின் பரஸ்பரசம்பந்தங்களைப்பற்றியும், ஆறுதர்சனங்களிலும், அவைகளின் உட்பிரிவுகளிலும், இப்பொழுது நடைபெறுகின்றபடி பலவிதவாதமும் அபிப்பிராய பேதமும் இருக்கின்றது. ஆனால் பெயர் வித்தியாசங்களிருந்தாலும், தர்சனங்களெல்லாம் மேற்படி ஐந்து தத்துவங்களுண்டென்று ஒப்புக்கொள்ளுகின்றன.

அந்தந்த தர்சனாசாரியார், மேற்படி தத்துவங்களுடைய சம்மதங்களின் ஒருபாவத்தை வற்புறுத்திச்சொல்லுகின்றமையால் இப்படி வித்தியாசமான வபிப்பிராயங்களுண்டாகின்றனவென்று தர்சனங்களை ஆழ்ந்து வாசிப்பவர்கள் ஒவ்வொருவருக்கும் புலப்படும். 6 தர்சனங்களெல்லாவற்றையும் உள்ளபடி உணர்ந்தால் பல கரணங்களுள்ள ஒரு சரீரமொக்க ஏற்படும்.

முதலாவது அதிகாரம்

முற்றுப்பெற்றது.

## முதலாவது பாகம்.

### 2=வது அத்தியாயம்.

### பல. (The Many.)

* 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌦𑍍𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃
𑌪𑍍𑌰𑌭𑌵𑌨𑍍𑌤𑍍𑌯𑌹𑌰𑌾𑌗𑌮𑍇॥
𑌰𑌾𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌗𑌮𑍇 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌨𑍍𑌤𑍇
𑌤𑌤𑍍𑌰𑍈𑌵𑌾𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑌂𑌜𑍍𑌞𑌕𑍇॥
𑌭𑍂𑌤𑌗𑍍𑌰𑌾𑌮𑌃 𑌸 𑌏𑌵𑌾𑌯𑌂
𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌤𑍇॥
𑌰𑌾𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌗𑌮𑍇𑌽𑌵𑌶𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥
𑌪𑍍𑌰𑌭𑌵𑌤𑍍𑌯𑌹𑌰𑌾𑌗𑌮𑍇॥
𑌪𑌰𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍁 𑌭𑌾𑌵𑍋𑌽𑌨𑍍𑌯𑍋𑌽𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋
𑌽𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌸𑌨𑌾𑌤𑌨𑌃॥
𑌯𑌃 𑌸 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁
𑌨𑌶𑍍𑌯𑌤𑍍𑌸𑍁 𑌨 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿॥
𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋𑌽𑌕𑍍𑌷𑌰 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤
𑌸𑍍𑌤𑌮𑌾𑌹𑍁𑌃 𑌪𑌰𑌮𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍॥

(இ-ள்.) பிரஹ்மாவினுடைய பகலாரம்பத்தில் மறைந்திருக்கின்ற சூக்ஷ்மப் பிரகிருதியினிடமிருந்து விளங்குகின்ற ஸ்தூலப் பிரபஞ்சங்கள் உண்டாகின்றன. இரவு வரும்பொழுது அந்தப்பிரகிருதியினிடத்திலேயே இந்த ஸ்தூலப்பிரபஞ்சங்கள், ஒடுங்குகின்றன.

---

* பகவத்கீதை. 8 வது அ-ம். 18 முதல் 21 வரை.

ஓ பார்த்தா! பூதக் கூட்டமானது பராதீனமாய் (பிரஹ்மாவினுடைய) பகலாரம்பத்திலுண்டாகி, இராவாரம்பத்திலொடுங்குகின்றது. அந்தப் பூதக்கூட்டம் பிறந்து பிறந்து ஒடுங்குகின்றது.

எதானது அவ்யக்தத்தை (பிரகிருதியை)க் காட்டிலும் மேலானதாயும், உத்தமமாயும் காணப்படாததாயும், அநாதியாயுமிருக்கின்றதோ, அந்த வஸ்துவானது (பிரஹ்மமானது) ஸகலபூதங்களும் நாசமடைகிறபோழுது நாசமடைகிறதில்லை.

காணப்படாதவனென்றும், நாசரஹிதனென்றும், பரமபுருஷார்த்தமானவனென்றும் அவனை (வேதங்கள்) சொல்லுகின்றன.

இப்போது சொற்ப ச்லோகங்களில் ஒன்றினின்று பலவற்றின் உற்பத்தியைச் சொல்லியிருக்கிறது.

சிருஷ்டியின் பகலாரம்பத்தில் மூலப் பிரகிருதியினின்று மனுஸ்மிருதியிற் சொல்லியபடி "இது" ஆகிய இருட்டினின்று எல்லா ஜீவன்களும் வருகின்றன. பகல் முடிய இரவென்ற பிரளயம் வர, வெவ்வேறான ஜீவராசிகள் மறுபடியும் மூலப் பிரகிருதியில் லயமடைகின்றன. திரும்பத்திரும்ப இவ்விதம் நடைபெறுகிறது. ஜகதுற்பத்தி, லயம், உற்பத்தி, லயம், என்ற பிரகாரம் முடிவற்றது. இந்த மூலப்பிரகிருதிக்கு அன்னியதாக இதற்குப் புறம்பாக அவ்வியக்தமாகிய சகுணமூர்த்தி ஒன்றுண்டு. அவரே ஈசுவரன். சத்தியமான அழிவற்ற பிரபு அவர்.

* . . யதா பூதப்ருதக்பாவ
மேகஸ்தமநுபஶ்யதி ।
தத ஏவ ச விஸ்தாரம்
o ... ... .. ...॥

(இ-ள்.) பிரபஞ்சத்தின் வேற்றுமையையுடைய நாநாவிதமான பேதங்களை ஒரேவஸ்துவில் லயித்திருக்கிறதாகவும், அதினின்று விரிகிறதாகவும், பார்க்கிறான்.

---

பகவத்கீதை. 13 வது அ-ம். 30 வது ச-ம.

இந்தச் சிருஷ்டிக்கிரமத்தைப்பற்றிநாம்விசாரிப்போம். சூன்னியத்தினின்று ஜகத்சிருஷ்டி உண்டென்பது அசாஸ்திரீயம். இந்த சநாதனதருமத்தின் கொள்கையுமன்று. பரமேசுவரன் எல்லா ஜீவர்களைத் தன்னினின்று சிருஷ்டிக்கிறான்.

அதற்காதாரம் முண்டகோபநிஷத்தில் அடியில் வரும் மந்திரங்களைப் பார்க்க:

* 𑌯𑌥𑍋𑌰𑍍𑌣𑌨𑌾𑌭𑌿𑌃 𑌸𑍃𑌜𑌤𑍇 𑌗𑍃𑌹𑍍𑌣𑌤𑍇 𑌚
𑌯𑌥𑌾 𑌸𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌤𑍍 𑌕𑍇𑌶𑌲𑍋𑌮𑌾𑌨𑌿
𑌤𑌥𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍 𑌸𑌂𑌭𑌵𑌤𑍀𑌹 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑍍॥

(இ-ள்.) எப்படிச சிலந்திப் பூச்சியானது, நூல்களைத் தன்னிடமிருந்து உண்டுபண்ணிப் பின்பு கிரகிக்கின்றதோ, எப்படிப் பூமியில் விருக்ஷம், செடி, கொடி, முதலியவைகள் உண்டாகின்றனவோ, ஜீவிக்கிற மனிதனிடமிருந்து தலைமயிர்கள் எப்படி உண்டாகின்றனவோ, அப்படியே, நாசரகிதமான பரமாத்மாவினின்று இந்தப் பிரபஞ்சமுண்டாகின்றது.

† 𑌯𑌥𑌾 𑌸𑍁𑌦𑍀𑌪𑍍𑌤𑌾𑌤𑍍 𑌪𑌾𑌵𑌕𑌾𑌦𑍍𑌵𑌿𑌸𑍍𑌫𑍁𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌃
𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌨𑍍𑌤𑍇 𑌸𑌰𑍂𑌪𑌾𑌃।
𑌤𑌥𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌃 𑌸𑍋𑌮𑍍𑌯 𑌭𑌾𑌵𑌾𑌃
𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑌤𑍍𑌰 𑌚𑍈𑌵𑌾𑌪𑌿𑌯𑌨𑍍𑌤𑌿॥
𑌏𑌤𑌸𑍍𑌮𑌾𑌜𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑍋
𑌮𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌚।
𑌖𑌂 𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑌾𑌪𑌃
𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 𑌧𑌾𑌰𑌿𑌣𑍀।
𑌦𑍂𑌰𑌾𑌤𑍍𑌸𑍁𑌦𑍂𑌰𑍇 𑌤𑌦𑌿𑌹𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑍇 𑌚
𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌸𑍍𑌵𑌿𑌹𑍈𑌵 𑌨𑌿𑌹𑌿𑌤𑌂 𑌗𑍁𑌹𑌾𑌯𑌾𑌮𑍍॥

* முண்டகோபநிஷத். I. I. 7.
† முண்டகோபநிஷத். 2. I. I; 3. 7.

(இ-ள.) எப்படி நன்றாக ஜ்வலிக்கின்ற அக்கினியினின்றும் ஆயிரக்கணக்காய் அதற்குச் சமானமான நெருப்புப் பொறிகள் உண்டாகின்றனவோ, அப்படி, ஓ! பிரியமுள்ளவரே! பரமாத்மாவினின்றும் அனேகவிதமான ஜீவர்கள உண்டாகின்றார்கள். அதினிடமே திரும்பி மறைந்துவிடுகின்றார்கள்.

அதினின்றும் பிராணன், மனம், சகல இந்திரியங்கள் ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், எல்லாவற்றிற்கு மாதாரமான பூமி, இவைகளெல்லா முண்டாகின்றன.

அதினின்றும் தேவர்கள், சாத்தியர்கள், மனிதர்கள் உண்டாகிறார்கள்: மிருகங்கள், பக்ஷிகள், முதலியனவும் உண்டாகின்றன.

மனுஸ்மிருதியில் சிருஷ்டிக் கிரமத்தைப்பற்றி இன்னுமதிக விவரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அதிலும் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரஹ்மா தன்னிடத்தினின்றும், தன்னிடமிருந்து முன் உண்டான மகா பூதங்களினின்றும், ஜீவராசிகளைச் சிருஷ்டிக்கிறானென்று சொல்லியிருக்கிறது. இதை இப்பொழுது அறியலாம்.

(ப்ரஹ்மாண்டானி) பிரஹ்மாண்டங்கள் அநந்தமென்று நாம் கேள்விப் படுகிறோம்.

இதற்கு ஆதாரம்:

*[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

* அதர்வண (த்ரிபாத்விபூதி—திரிபாத்விபூதி) மஹாநாராயண, VI வது.

ஏவம் நாராயணாம்சேப்ய: ஸத்வதமோ
குணப்ரதாநை: ப்ரத்யேகம் ஸ்திதிஸம்ஹார
கர்த்ருபிரதிஷ்டிதாநி [illegible]
[illegible]

(இ-ள்.) இந்தப் பிரஹ்மாண்டத்தைச் சுற்றினதாய், அநேக மாதிரியான அநேக கோடி பிரம்மாண்டங்கள் தம்தம் ஆவரணங்களுடன் ஜ்வலிக்கின்றன. அவைகளில் ரஜோகுணப் பிரதானரான நாராயண மூர்த்தியின் அம்சங்களான சிருஷ்டி கர்த்தாக்கள் ஒவ்வொரு அண்டங்களிலும் அதிஷ்டான தேவதைகளாக விருக்கின்றனர். 4 முகமாகவும், 5 முகமாகவும், 6 முகமாகவும், 7 முகமாகவும், 8 முகமாகவும், அப்படியே படிப்படியாய் ஆயிரம் முகமாகவும் இந்தச் சிருஷ்டி கர்த்தாக்கள் இருக்கின்றார்கள். சத்துவ தமோ குணப் பிரதானர்களாகவும், நாராயண அமசர்களுமான விஷ்ணு, மகேசுவரனென மூர்த்திகள் அந்த அண்டங்களில் ஸ்திதி சம்ஹார கிருத்தியங்களைச் செய்கின்றவர்களாக விளங்குகின்றார்கள். விஸ்தாரமான ஜல சமூகங்களில் மச்சக்குழாங்களைப்போலும், குமிழிகள் போலும், இந்தப் பிரம்மாண்டங்கள் மிதக்கின்றன.

இங்ஙனமே தேவிபாகவதமும் கூறுகின்றது.

*ஸங்க்யா சேத்ரஜஸாமஸ்தி
விச்வாநாம் ந கதாசந
ப்ரஹ்மவிஷ்ணுசிவாதீநாம்
ததா ஸங்க்யா ந வித்யதே
ப்ரதிவிச்வேஷு ஸந்த்யேவ
ப்ரஹ்மவிஷ்ணுசிவாதய:॥

(இ-ள்.) மண்மணலை எண்ணினாலும் எண்ணலாம். புவனங்களை எண்ணவோ முடியாது. அவ்வாறே பிரஹ்மாக்களையும், விஷ்ணுக்களையும், ருத்திரர்களையும் இன்னும் மற்றோர்களையும் எண்ணவொண்ணாது. எல்லாப் புவனங்களிலும், பிரஹ்மா, விஷ்ணு, சிவன், முதலிய தேவர்களிருக்கின்றார்கள்.

---

* தேவிபா-ம். 9. 3. 7. 8 வது சு-ள்.

இதைச் சொல்லாமலே நாம் தெரிந்துகொள்ளலாம். ஏனெனில், விஷ்ணுபுராணத்திற் சொல்லியிருக்கிறபடி, ஜனார்தனனாகிய ஒரு புருஷனே சிருஷ்டிக்கும் சமயத்தில் பிரஹ்மாவாகவும், ரக்ஷிக்கும் சமயத்தில் விஷ்ணுவாகவும், சம்ஹரிக்கும் சமயத்தில் சிவனாகவும் ஆகிறார். இப்படிச் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரகிருத்தியங்கள் ஒவ்வொரு அண்டத்திலும் நடக்கவேண்டுமாதலால் ஈசுவரன் ஒவ்வொரு அண்டத்திலும், இந்த மூன்று சுவரூபியாகவாகிறார்.

நித்தியமாயும் காலதேசாதீதமாயும் இருக்கின்ற நிர்க்குணப் பிரஹ்மன் சகுணப் பிரஹ்மன் மூலப் பிரகிருதி என்ற சகலத்திற்கு மாதாரபூதமான முப்பான்மையதான அந்தப் பரவஸ்து காலம், தேசம், இவைகளில் பிரதிபிம்பித்து இந்தத் திருமூர்த்தியாக விளங்குகிறது. ஒரு பிரஹ்மாண்டத்தில் ஈசுவரனே திருமூர்த்தியாக விளங்குகிறார். ஆகவே, சத, சித், ஆனந்தமென்ற பாரதத்துவங்க ளிவ்விதமாகவே மூர்த்திகரிக்கின்றன.

பிரஹ்மா சிருஷ்டி கர்த்தா; அவருடைய சக்தி ஸரஸ்வதீ, ஞான ஸ்வரூபிணீ. அவளன்றி சிருஷ்டித் தொழில் நன்றாய் நடைபெறாது. அவரை நான்முகமுள்ளவராயும் காட்டியிருக்கிறது. நான்கு திசைகளிலுமுள்ள எல்லாவற்றைச் செய்தவராய் சூசிப்பிக்கும் வண்ணம், ஒவ்வொரு முகமும் ஒவ்வொரு திசையும் நோக்கியிருக்கிறது. அவர் ஹம்ஸவாகனர். ஹம்ஸ என்ற பதத்தை (ஸ:, அஹம்) அதாவது ஸோஹம் என்றவிதம் மாற்றினால் அவர் அகங்கார தத்துவத்துடன் சம்பந்தித்தவரென்றும், அணுக்களை அமைக்கிறவரென்றும், வகுக்கிறவரென்றும் சூசிப்பிக்கிறது.

விஷ்ணுவானவர் ஸ்திதிகர்த்தா (ரக்ஷிக்கிறவர்). பிரபஞ்சத்திற்காதாரமாயுமிருந்து தமது ஆகர்ஷண சக்தியால் ரூபங்களைக் காப்பாற்றி அதனதை தம்தம் நிலைமையிலிருக்கும்படி செய்விக்கும் தத்துவமாம். அவருடைய சக்தி லக்ஷ்மீ; எல்லாச் சம்பத்தும், எல்லாச் செல்வமும், எல்லாச் சந்தோஷமும் கொடுக்கக்கூடியதேவி. நான்கு திசைகளையும் காப்பாற்றுகிறார் என்பதற்குச் சங்கேதமாய் நான்கு கைகளை யுடையவராக எழுதப்பட்டிருக்கிறார். வேகம், நுண்ணறிவு, இவைகளின் சின்னமான கருடன், அவர் வாகனம். ஜலத்தில் பள்ளிகொண்டிருக்கிற நாராயண மூர்த்தியைப் பிரகிருதியில் வசிக்கிற சகுண மூர்த்தியாகப் பஜிக்கிறார்கள்.

சிவன் மஹாதேவன் (மஹேசுவரன்) ஸம்ஹாரமூர்த்தி, ஜீவனைச் சம்சார பந்தத்திலிருந்து விடுவிக்கிறவர். அவித்தையை நாசஞ்செய்து வித்தையைக் கொடுக்கிறவர். கடைசியில் பிரபஞ்சத்தைப் பாய்போல் சுருட்டி வீடு, அதாவது மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அருளுகின்றவரு மிவரே, அவருடைய சக்தி உமை. அவளுக்கு இச்சாசக்தியென்றும், கிரியாசக்தி என்றும், (கேனோபநிஷத். III. IV. பார்க்க) பிரஹ்மத்தை சாக்ஷாத்தாய் அறிவிக்கும் இயல்பினால் பிரஹ்மவித்தை என்றும் பெயராம். உலகத்தைத் துறந்த யோகிகளுக்குப் பூஜாருகரான மூர்த்தியாய் இருக்கின்றமையால் அவரை எப்போதும் துறவியாக வர்ணிக்கின்றார்கள். மனத்தை வசப்படுத்தி யதின் அடையாளமாக மனத்தின் சின்னமான (சில சமயங்களில் ஸ்தூலப் பிரபஞ்சத்தின் சின்னமான) விருஷபத்தை அவர் வாகனமாக வுடையவர். ஆசையை யறுத்தலின் அடையாளமாகப் புலித்தோலை உடையாய்த் தரிக்கின்றார். ஆகவே சிவ

நாமத்தின் பொருளுக்கிசைய அவர், ஆனந்த ஸ்வரூபி, சாந்தர், ஆத்மானந்தர், அசக்தர், மனஸ்பதி (மனத்திற்கு எஜமானன்).

உண்மையில் ஒன்றான ஈசுவரனே, கிரியா விசேஷங்களால் இவ்விதமாக மூர்த்திகளாகப் பிரிந்து பிரஹ்மாண்டத்திற்குப் பிராணாதாரமாக விருக்கிறார். அம்மூர்த்திகளினின்று பிரஹ்மாண்டமுண்டாகி அவர்களின் ஆதரவினால் நடைபெற்று அவர்களிடமே லயமாகின்றன. அவர்கள் கிருத்தியங்கள் வேறு. ஆனால் அவர்கள் எல்லாம் ஒன்றே.

சிருஷ்டி கர்த்தாவான பிரம்மாவானவர் முதன்முதல் ஹிரண்மய அண்டத்தில் உற்பத்தியாகித் தோன்றினவரென்றும், ஹிரண்மய அண்டமோ பிரகிருதி என்ற ஜலத்தில் பள்ளிகொண்டிருக்கிறவரிடமிருந்து உண்டான பீஜத்திலிருந்து வருகிறதென்றும் சொல்லப்படுகிறது.

இதற்குப் பிரமாணவாக்கியங்கள், மனுஸ்மிருதி, I, 8, 9=வது சுலோகங்களைப் பார்க்க.

𑌸𑍋𑌽𑌭𑌿𑌧𑍍𑌯𑌾𑌯 𑌶𑌰𑍀𑌰𑌾𑌤𑍍𑌸𑍍𑌵𑌾𑌤𑍍
𑌸𑌿𑌸𑍃𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃॥
𑌅𑌪 𑌏𑌵 𑌸𑌸𑌰𑍍𑌜𑌾𑌦𑍌
𑌤𑌾𑌸𑍁 𑌬𑍀𑌜𑌮𑌵𑌾𑌸𑍃𑌜𑌤𑍍।
𑌤𑌦𑌣𑍍𑌡𑌮𑌭𑌵𑌦𑍍𑌧𑍈𑌮𑌂
𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌂𑌶𑍁𑌸𑌮𑌪𑍍𑌰𑌭𑌮𑍍॥
𑌤𑌸𑍍𑌮𑌿𑌞𑍍𑌜𑌜𑍍𑌞𑍇 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾
𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌃॥

மனுஸ்மிருதி. I. 8. 9.

(இ-ள.) அவர் தன் சரீரத்தினின்றும், பலவிதமான பிரஜை களைச்சிருஷ்டிக்க விரும்பினவராய்த் தியானஞ்செய்தார். முதலில் ஜலத்தைச் சிருஷ்டித்தார். அதில் ஒருவிதையை வைத்தார். அது வே, ஆயிரம் கிரணங்களுள்ள சூரியனைப்போன்ற பிரபையுள்ள ஹிரண்மயமான அண்டமாக விளங்கியது. அந்த அண்டத்தில் சகல லோகத்திற்கும் பிதாமகரான பிரம்மா சுயமாக உண்டானார். இந் தச் சுலோகத்தில், ஜலம் (பிரகிருதி) அதாவது மூலப் பிரகிருதியா னது. பிராணுதாரமான பீஜத்தைப் பெறுகிறது. அது ஹிரண்ய கர்ப்பனுகிய ஹிரண்மய அண்டமாகிறது. அதில் அண்டங்களை சிருஷ்டிக்கிறதற்காகப் பிரம்மா பிறக்கிறார். அதனால் அந்தப்புவ னத்திற்குப் பிரஹ்மாண்டமென்று உரிய பெயராயிற்று. அஃதுஒவ் வொன்றும் வெளிப்பார்வையிலும் அதன் ஆகிருதி முட்டைவடிவா யும், அதன் சுழற்சிமண்டலம் அவ்வடிவாயும் இருக்கின்றமை யால், பிரம்மாவின் பீஜம், (அண்டம்) என்று சரியான கருத்து அமைந்து பெயர் பெற்றிருக்கிறது. இந்த ஹிரண்மய அண்டத் தைப்பற்றி விஷ்ணுபுராணத்தில்சொல்லுகிறதாவது:—அதின்கண், பிரம்மாவும், புவனங்களும், அடங்கியிருக்கின்றனர். அதின் வெ ளிப்புறத்தில் அடியில்வரும் 7 கவசங்கள் சூழ்ந்திருக்கின்றன. அவைகளாவன:—அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம், பூதங்களின் காரணமான அகங்காரம், மகத்து, இவைகளை யெல்லாம் மூடிக் கொண்டிருக்கும் ஒரே இயல்புள்ள மூலப்பிரகிருதி. (விஷ்ணு புரா ணம். I. ii.)

மனுவானவர், மனுஸ்மிருதியில், 1=வது அத்தியா யம், 559=வது சுலோகத்தில் விவரித்திருக்கிறபடி ஒவ் வொரு அண்டமும் இவ்விதமாக மகா பூதங்களால் சூழப் பட்டிருக்கின்றது. பிந்திய சிருஷ்டியைப்பற்றி பிருகு மகா ரிஷியைச் சொல்லும்படியாக மனு விட்டிருக்கிறார். ஷை ஹிரண்மய அண்டத்தின்கண் அநேகமாதிரியான கிரியா விசேஷங்களை ஷைபிருகு விவரிக்கிறார். இதேமாதிரியாய், (ஆனால் பூர்த்தியான விவரம்,) மகாபாரதத்திலும், விஷ் ணுபுராணுதிகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

பொதுவான முக்கியதத்துவங்களைக் கிரகித்துக் கொண்டால், இப்பொழுது போதுமானது. நுண்ணிய விவரணங்களை மதக்கிரந்தங்களினின்று படிக்கப்படிக்கப் பின் சேர்த்துக்கொள்ளலாம். அனேக பிரஹ்மாண்டங்களடங்கிய சமஷ்டிப்பிரபஞ்சத்தில் நடைபெறும் கிரியாபோக்கே, வியஷ்டியான ஒவ்வொரு பிரம்ஹாண்டத்திலும் உள்ளது.

தேவிபாகவதத்தில் உற்பத்தியின் பொது லக்ஷணத்தைப்பற்றி, அழகியதும் அறிவுறுத்துகின்றதுமான விவரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஜீவாத்மா வசிக்கின்ற கோசங்களைப்பற்றிப் பின்விசாரிக்குங்கால் அவ்விவரங்கள் அதிக உபயோகமுள்ளவைகளாக விருக்கும்.

தேவிபாகவதம், VII-வது ஸ்கந்தம், 32=வது அத்தியாயம், 22=வது முதல் 28=வரையுள்ள சுலோகங்களை ஆதாரமாகப் பார்க்க.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

சாயாமபஶ்யத்ருஷி॥
ப்ராப்தே ஸர்வமயாத்ருஷ்ட
ஸர்வகாரண காரணம்॥
த்வயா நாதாஷிலஸத்தம் ச
ஸச்சிதாநந்த விக்ரஹம்।
ஸர்வகர்ம விநிர்முக்த
இச்சாஜ்ஞாந க்ரியாமயம்।
ஹ்ரீக்ஷாரஸஜ்ஞை வர்த்யதேஸ்
ச்ருதித்வம் தஸ்யதே॥
த்வயாதாகாஶ உத்பவ:
ஶப்ததந்மாத்ர ரூபக:।
ஹவேஸ்ஸ்வஸம்பூ த்தேகோவாயவ:
தேஜோரூபாத்மகோ வஹ்நி:॥
ஜலாரஸாத்மகா வஸ்வாச
ததோ கந்தா த்மிகாயரா॥
தேஷாம் ஸமஸ்தம் ஸம்ஸ்ருதம்
யத்ப்ரஜ்ஞாம் பரிகல்ப்யதே।
ஸர்வத்ருத்தகம் தஸ்ஸம்ப்ராக்தம்
ஸம்ப்ரக்ஷ்யஸேதேஹாஸ் யசாத்தந:।
அவ்யக்தம் காரணோதேஹ:
ஸர்வாக்த: பஸ்வர்தேவஹி॥
யஷ்டிஜ்ஜ ஹ்வீஜ ரஸம்
ஷ்டிதம் ப்ரஜ்ஞோதஹ வோயத:॥
கத:ஷ்டஸ்ராலிஹஸ்தாலி
பஞ்ச காரண சாஹ்யுக:॥

தத்கார்யஸ்ய விபாகஸ்ய
ஸ்ருஷ்டௌஹோதா யசாத்ரந:।

(இ-ள.) அவர் காமம், கருமம் இவைகளுடன் கூடியும் பூர்வ அனுபவ சம்ஸ்காரத்தினுலும், காலம், கருமம், இவைகளின், பரிபக்குவத்தினுலும், தத்துவ அவிவேகத்தினுலும் தன்மாயையினுல் சிருஷ்டிக்க இச்சித்தவராயானுர்.

ஓ மலைகளின் சிரேஷ்டனே! இந்தச் சிருஷ்டிக்கு முன்னதாகப் புத்தி தத்துவமில்லை. என்னுல் சொல்லப்பட்டிருக்கிற இந்த அலௌகிகமானவும் மேலானவுமான என் ஸ்வரூபம், அவ்வியாகிருதமாகவும் (வேற்றுமையற்ற), அவ்வியக்தமாகவும் (வெளிப்படாத), மாயா சபளமாகவும் (மாயையால் மூடப்பட்ட தாகவும்) இருக்கிறது. அதைச் சர்வ காரணங்களுக்குக காரணமாகவும், பூதங்களுக்குத் தத்துவமாகவும், சத், சித், ஆனந்தம், இவைகளின் விக்கிரகமாகவும், சர்வகரும பிண்டமாகவும், இச்சை, ஞானம், கிரியை, இவைகளின் ஆசிரயமாகவும் சாஸ்திரங்களால் சொல்லப்படுகிறது. அது (ஹ்ரீம்) ஹ்ரீம் பதிர வாச்சியமாம். ஆதி தத்துவம் அதுவே.

அதனின்று சப்ததன்மாத்திரைரூபமாக ஆகாசமும்; பின், ஸ்பரிசதன்மாத்திரையான வாயுவும்; அதன்பின், ரூபதன்மாத்திரையான தேஜஸ்ஸும்; அதன்பின், ரசதன்மாத்திரையான ஜலமும்; அதன்பின், கந்ததன்மாத்திரையான பிருதிவியும் உண்டாயின.

அவைகளினின்று லிங்கம் என்று பெயருள்ள பெரிய சூத்திரம் உற்பவித்தது. அது எல்லாவற்றின் சுபாவத்தையுடையதாகச் சொல்லப்படுகிறது. அது ஆத்மாவின் சூக்ஷ்ம தேகம். அவ்வியக்தம் காரணதேகமாம். மூன்

சொன்னபடி அந்த அவ்வியக்தத்தில், ஜகத்தானது ஒரு பீஜ ரூபமாகவிருக்கிறது. அதினின்றும் லிங்கம் பவிக்கிறது. அந்த லிங்கத்தினின்றும் பஞ்சீகரணமாக ஸ்தூல பூதங்கள் உண்டாகின்றன. இவைகளின் காரியம் விராட் தேகமாம். அதுவே ஆத்மாவின் ஸ்தூல தேகமாகிறது.

சிருஷ்டிக்கிரமத்தில் முதலில் ஆகிதத்துவம், பின்பு புத்திதத்துவம், அதையே மஹத்தத்துவமென்று சொல்லுகிறார்கள். பின்பு ஒன்றன்பின் ஒன்றாக ஐந்துதத்துவங்கள் வருகின்றன. மேற்படி ஐந்து தத்துவங்களைப் பலவாறாக விவரித்திருக்கிறதில் முதலிரண்டு தத்துவங்களுடைய பெயர்கள் வித்தியாசப்படுகின்றன. சில சமயங்களில் மஹத்து அகங்கார தத்துவங்களென்றும், அல்லது ஆதி பூத மகத்துவமென்ற பெயர்கள் வழங்குகின்றன.

அதெப்படியிருந்தாலும் சரி. அண்டங்களுடைய மூலகாரணங்களான உபகரணங்கள் ஏழு வகைப்படும். அவைகள் மனுஸ்மிருதியில் யாவற்றுக்கும் காரணமாகப் பிரஸ்தாபிக்கப்படுகின்றன.

இதற்காதாரம் மனுஸ்மிருதி 1=வது அத்தியாயம், 19=வது சுலோகம்:

தேஷாமிதம் து ஸப்தாநாம்
புருஷாணாம் மஹௌஜஸாம்।
ஸூக்ஷ்மாப்யோ மூர்த்திமாத்ராப்ய:
ஸம்பவதி ... ... ...॥

(இ-ள்.) சப்த மகா புருஷர்களிடமிருந்து மூர்த்தீகரிக்கக்கூடிய சூக்ஷ்ம பாவங்கள் உண்டாகின்றன. அவைகளினின்று (இவைகள்) இப்பொழுது கண்ணுக்குப் புலப்படும் சராசரங்கள் உண்டாகின்றன.

ஒவ்வொரு பிரம்மாண்டத்திலும், சிருஷ்டிக்கிரமம் இவ்வாருகவே நடைபெறுகிறதென்பதைநாம்பார்ப்போம். விஷ்ணுபுராணத்திற் கூறியவாறு பிரதானமென்று பெயருள்ளதும், வேற்றுமையற்றதும், மூன்று குணங்களும் சமநிலைமை சமநிறை அமைந்ததாயுமுள்ள பிரகிருதியானது பிரம்மாவைச் சூழ்ந்துகொண்டிருக்கிறது. அவருடைய சக்தியானது, இந்தத் தமோபாவத்தில் ஒரு வேற்றுமையை உண்டுபண்ண ரஜோ குணம் மேலிடுகிறது. அதனுல் விரைவுள்ள சலனமுண்டாகிறது. பின்பு பிரம்மாவானவர் சுத்தப்பிரஞ்ஞை என்ற மகாபுத்தி தத்துவத்தைப் பிரகிருதியில் பிரவேசிக்கும்படி செய்கிறார். அதனுல் தத்துவகுணம் மேலிட முன்னிருந்த விரைவான சலனம் ஒழுங்காகவும் அளவுக்குட்பட்டதாகவு மாகிறது. பின்பு வேறுபடுத்தும் சுபாவமுள்ள அகங்கார தத்துவம் பிரவேசிக்கவே ஒரே ரீதியான பிரகிருதி பரம அணுக்களாய்ப் பாகுபாட்டை அடைகிறது. அகங்காரத் தத்துவமானது, பிரகிருதியில், தமோகுணம் மேலிடும்படியாகச் செய்வித்து ஒன்றன்பின் ஒன்ருய்ப் பஞ்சதன்மாத்திரைகளையும் சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என்றவைகளுக்கு அதிஷ்டானமான இந்திரியங்களையும் அதற்குரிய ஸ்தூல பஞ்சீகிருத பூதங்களான ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பிருதிவீ என்றவைகளையும் உண்டாக்கிற்று. பின்பு ரஜோகுணத்தை மேலிடும்படியாகச் செய்வித்து அகங்கார தத்துவமானது பத்து இந்திரியங்களை (அதாவது ஐந்து ஞானேந்திரிய தத்துவங்களை, ஐந்து கர்மேந்திரிய தத்துவங்களை) உற்பவிக்கும்படி செய்கிறது. சத்துவகுணம் மேலிடக் கர்ம ஞானேந்திரியங்களுக்குச் சம்பந்தப்பட்ட அவைகளின் அதிஷ்டான 10 தேவதைகள் மேற்படி அகங்கார தத்துவத்தினின்று உண்டாயின.

இந்த மூன்றுவிதமான சிருஷ்டிகள் முறையே பூதாதி சிருஷ்டியென்றும், சலனத்தன்மை பொருந்திய தைஜஸ சிருஷ்டி என்றும், நியாமகத்தன்மை பொருந்திய வைகாரிக சிருஷ்டி என்றும் சொல்லப்படுகின்றன.

மேற்கண்ட விஷயங்களில் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டிய முக்கியமான அம்சங்களாவன:—பிரகிருதி ஜடபதார்த்தங்களில் தமோகுணப் பிரதானம்; இந்திரியங்கள் ரஜோகுணப் பிரதானம். அவைகளின் அதிஷ்டான தேவதைகள் சத்துவகுணப் பிரதானமாயிருக்கின்றன.

சிருஷ்டிக் கிரமம் அடியில் வருமாறு உண்டாகிறது. மனு சொல்லியபடி கருமத்தைச் செய்வதே சுபாவமுள்ளவர்களான சுரர்கள் (தேவர்கள்) உண்டாகின்றார்கள். அவர்களோ அறிவுள்ளவர்களும் வெவ்வேறான சக்தி அதிகாரம் வகித்தவர்களுமான பெரிய கூட்டத்தார்களாய்ப் பிரபஞ்சத்தை நடத்தி அதனுடைய வித்தியாசமான சலனங்களை நடப்பிவித்துக்கொண்டு வருகிறார்கள்.

மனிதர்கள், மிருகங்கள், ஓஷதிகள், மற்றைய ஸ்தாவரங்கள் இவைகள் வெவ்வேறாகப் பலவாறாகப்பிரிந்திருப்பதானது ஒரே ஈசுவரன்தான் பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற திரிமூர்த்தி ஸ்வரூபமானவன் என்பதை இல்லை என்று மறுப்பதற்கு எப்படிக் காரணமாகிறதில்லையோ, அப்படியே தேவகணங்கள் பலவாறாகவிருந்தாலும் அதனால் திருமூர்த்தி சுவரூபமான ஈசுவரன் ஒருவன் இருக்கிறான் என்ற விஷயம் பாதிக்கப்படமாட்டாதென்று ஹிந்துக்களாகிய நாம் தெளிவாய் அறிந்திருக்கிறோம் என்பதில் ஐயமில்லை. இதையே அடியில்வருமாறு சுருதிகள் சொல்லுகின்றன.

* 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌮𑌿𑌤𑍍𑌰𑌂 𑌵𑌰𑍁𑌣𑌮𑌗𑍍𑌨𑌿𑌮𑌾𑌹𑍁
𑌰𑌥𑍋 𑌦𑌿𑌵𑍍𑌯𑌸𑍍𑌸 𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑍋 𑌗𑌰𑍁𑌤𑍍𑌮𑌾𑌨𑍍॥
𑌏𑌕𑌂 𑌸𑌦𑍍𑌵𑌿𑌪𑍍𑌰𑌾 𑌬𑌹𑍁𑌧𑌾 𑌵𑌦𑌨𑍍𑌤𑍍𑌯𑌗𑍍𑌨𑌿𑌂
𑌯𑌮𑌂 𑌮𑌾𑌤𑌰𑌿𑌶𑍍𑌵𑌾𑌨𑌮𑌾𑌹𑍁𑌃॥

(இ-ள்.) அவரை இந்திரனென்றும், மித்திரனென்றும், வருணனென்றும், அக்கினியென்றும் அழைக்கிறார்கள். நக இரக்கைகளுள்ள கெருத்மானாக விருக்கிறார். ஒன்றாயிருக்கிற ஒரேவஸ்துவையே ஞானிகள்பலவாறாகப் பிரஸ்தாபிக்கின்றார்கள். அவரையே அக்கினியென்றும், யமனென்றும், மாதரிசுவனென்றும் சொல்லுகின்றார்கன்.

ஸ்மிருதிவசனமும் அவ்வாறே:

† 𑌆𑌤𑍍𑌮𑍈𑌵 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃
𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍॥

(இ-ள்.) எல்லாத்தேவதைகளும் ஆத்துமாவே. எலாத்தேவதைகளும் ஆத்மாவை அதிஷ்டானமாக வுடையன.

‡ 𑌏𑌤𑌮𑍇𑌕𑍇 𑌵𑌦𑌨𑍍𑌤𑍍𑌯𑌗𑍍𑌨𑌿𑌂
𑌮𑌨𑍁𑌮𑌨𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌂।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑍇𑌕𑍇 𑌪𑌰𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣
𑌮𑌪𑌰𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌮𑍍॥

(இ-ள்.) சிலர் அவரை அக்கினியென்றும், சிலர் மனுவென்றும் சிலர் பிரஜாபதி என்றும், இன்னும் சிலர் இந்திரனென்றும், வேறு சிலர் அவரையேபிராணனென்றும்,மற்றும் சிலர் அழிவற்றபிரம்மம் என்றும் இவ்விதமாய்ச் சொல்லுகிறார்கள்.

---

* ருக்வேதம். 164-வது மண்டலம். 46-வது ம-ம்.
† மனுஸ்மிருதி. 12-வது அ-ம். 112-வது சு-ம்.
‡ மனுஸ்மிருதி. 12-வது அ-ம். 123-வது சுலோகம்.

ஆனால் ஈசுவரனின் மனோபீஷ்டத்தை நிறைவேற்று கிற அமைச்சர்கள்போன்று ஆளுதல், காத்தல், சமரஸப் படுத்தல் நியாமகம்செய்தல் முதலிய தொழில்களை மனிதனைவிட எவ்வளவோமடங்கு அதிகமான அறிவுடனும், சக்தியுடனும் தேவர்கள் பிரபஞ்சத்தை நடத்துகின்றார்கள். ஆயினும் அவர்களுடைய அறிவும், சக்தியும் வரம்புக்குள்பட்டதுதான். "தேவ" என்ற பதத்துக்குப் பிரகாசித்தல் (ஜ்வலித்தல்) என்பது பொருள். அப்பெயரே அவருடைய பிரகாசமான சொரூபத்தை விவரிக்கிறது. அவருடைய சரீரங்கள் தேஜோமயமான நுண்ணிய அணுக்களால் அமைக்கப் பெற்று ஜொலிக்கின்றன. ஆகவே அவர்கள் பிரபஞ்சத்தின் பிரகிருதி சம்பந்தமாக விருந்துகொண்டு அதன் சிருஷ்டி, பரிணாமம், இரண்டையும் நடத்துகிறார்கள். பிராகிருத சாஸ்திரங்களில் (Physical Science) விசாரிக்கப்படும் சக்திகள் (ஒளி, ஒலி, அணுயோகம், மின்மயம், காந்தசக்தி, ஸ்தூல சூக்ஷ்ம ஆகர்ஷணசக்தி முதலியன) ஷ தேவதைகளின் சக்திகளே. அவர்களுடைய அனுக்கிரகத்தினாலேதான், மனுஷ்யன்செய்யும் ஒவ்வொரு கிருஷியும் பலப்பிராப்தியை யடைகிறது. பிரகிருதி சம்பந்தமான ஐசுவரியங்களை இச்சிக்கின்றவர்களுக்கு அவைகள் தேவர்களுடைய இடைவிடாத உதவி இன்றியமையாதனவாம். ஆனால் அந்த உதவி மாறாத விதி பூர்வமாய் அடையத்தக்கது. தேவர்கள்செய்யும் செய்கைமுறைகளை நன்றாய்ச் சாஸ்திர ரீதியாய் அறிந்து மனிதன் அவைகளை அனுசரித்துத் தானும் நடப்பானாகில் அவர்கள் செய்கையின் பலப்பிராப்தியைத் தான் அனுபவிப்பதுமூலமாய் அவர்களின் அனுக்கிரகத்தைப்பெறுவான். அல்லது கைம்மாறு ரீதியாய் தேவர்களுக்குப் பிரியமானவைகளை மனிதன் சமர்ப்பிக்க,

அவைகளுக்குப் பிரதியாக அவனுக்கு அனுகூலமாக மனிதன் கோரிபகாரியம் நிறைவேறும்வண்ணம் தேவர்கள் அனுக்கிரகம்செய்கிறார்கள். அதாவது, ஒருபலவானபல ஹீனனுக்கு உதவிசெய்வதுபோலப் பிரபஞ்ச சக்திகளை மனிதனுக்கு அனுகூலமாக இருக்கும்படி தேவர்கள் ஆக்ஞாபிக்கின்றார்கள். தவிரவும், பசியுள்ளவர்களுக்கு அன்னமிடுதல், ஏழைகளுக்கு ஆடை கொடுத்தல், முதலிய தேவர்களுக்குப் பிரியகரமான காரியங்களுடன் கூடியதபஸினால் அவர்களுடைய அனுக்கிரகஅபிவிருத்தியையடையலாகும். மேலும், பரிசுத்தம், ஞானம், தபஸ், இவைகளால் தேவர்களைவிட மேற்போயிருக்கின்ற மகாரிஷிகள், யோகிகள், தேவர்களைத் தங்கள் ஏவல்வேலைக்காரர்களாகச் செய்துகொள்ளலாம். சிலவேளை, ஒருவன் இந்த ஜன்மத்திலேயாவது அல்லது ஜன்மாந்திரத்திலாவது தான்செய்த ஒரு நல்ல கிருத்தியத்தால் தேவானுக்கிரகம் பெறுகிறான். அப்பொழுது அவனுடைய பிரயத்தினங்கள் பலிக்கின்றன. மற்றவர்களுடைய அதேமாதிரியான பிரயத்தினங்கள் தவறிப்போக, இவன் அனுகூலமடைகிறான். அதனாலிவனை அதிருஷ்டசாலியென்று சொல்லுகிறார்கள். நல்ல அதிருஷ்டமானது தெய்வகிருத்தியத்தின் பயனும். தெய்வச்செயல் புலனறிவுக்கு அதீதமாகையால் அது அகஸ்மாத்தாக உண்டாகிறதென்று ஜனங்கள் நினைக்கிறார்கள். ஆனால் தேவர்களோ அவர்கள்செய்யும் எல்லாக்காரியமும் விதிவரம்புக்குட்பட்டதேயன்றி விதிக்குப்புறம்பாக சுவேச்சைப்படியன்று என்றறியத்தக்கது. வேதங்களில் விவரித்திருக்கின்ற யாகாதிகிருதுக்களானவை, தேவர்கள், மனிதர்கள் இருவரும் ஒருங்குசேர்ந்து பிரபஞ்சவிஷயங்களை இடையூறின்றிக் கொண்டு செலுத்துவதற்கு அனுகூலமான சூப்தவிதி

மார்க்கமாக அமையும். அதனால் தேவர்கள் மனுஷியர் கள் இருவர்களும் செய்யும்கிரியைகள் மிகுந்த பலனுடைய வைகளாயாகின்றன.

இதற்கு ஆதாரமாக பகவத்கீதை, 3-வது அத்தியாயம், 11, 12 வது சுலோகங்களைப்பார்க்க.

𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 𑌭𑌾𑌵𑌯𑌤𑌾𑌨𑍇𑌨
𑌤𑍇 𑌦𑍇𑌵𑌾 𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑍁 𑌵𑌃॥
𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑌃
𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 𑌪𑌰𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌥॥
𑌇𑌷𑍍𑌟𑌾𑌨𑍍 𑌭𑍋𑌗𑌾𑌨𑍍𑌹𑌿 𑌵𑍋 𑌦𑍇𑌵𑌾
𑌦𑌾𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌯𑌜𑍍𑌞𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌃॥

(இ-ள்.) இந்த எக்ஞத்தினாலே தேவதைகளை ஆராதியுங்கள். அந்தத் தேவதைகள் உங்களை ரக்ஷிக்கட்டும். இப்படி நீங்கள் அவர்களையும், அவர்கள் உங்களையும், ஒருவருக்கொருவர் அபிவிருத்தி செய்துகொண்டு உயர்ந்த சிரேயஸ்ஸையடைவீர்கள்.

எக்ஞங்களாலே ஆராதிக்கப்பட்ட தேவர்கள் உங்களுக்கு இஷ்டமான பலன்களைக் கொடுப்பார்கள். இதற்குக் காரணம் என்னவெனில் அடியில் வருமாறு:

* 𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌭𑌤𑌾𑌨𑌿
𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑌾𑌦𑌨𑍍𑌨𑌸𑌂𑌭𑌵𑌃।
𑌯𑌜𑍍𑌞𑌾𑌦𑍍𑌭𑌵𑌤𑌿 𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑌃

(இ-ள்.) ஜீவனுக்கு அன்னத்தினால் சரீரங்களும், மழையினால் அன்னமும், எக்ஞத்தால் மழையும் உண்டாகின்றன.

* பகவத்கீதை 3. வது அத்-ம். 14 வது சு-ம்.

மறுபடியும் கீதை.

காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம் யஜந்த இஹ தேவதா: |

(இ-ள்) இந்தலோகத்தில் மனிதர்கள் கர்மாக்களுடைய சித்தியை விரும்பிக்கொண்டு தேவதைகளை உத்தேசித்து யாகம்செய்கிறார்கள்.

“அந்தவத்து ஃபலம்”

(இ-ள்) (அவர்கள் அடையும்) பலன்கள் முடிவையுடையன.

* ஆகையினால்தான் அத்தியாத்ம மார்க்கத்தில் பிரவிருத்திக்கின்றவர்கள், தேவதைகளின் ஆராதனையை அனுஷ்டிக்கிறார்களில்லை.

ஈசுவரனுடைய மந்திரிகள்போலாசரிக்கின்ற இந்தத் தேவதைகளை அவர்கள் உபாசிக்காமல் ஸாக்ஷாத் ஈசுவரனையே பிரமமாகவாவது அல்லது திரிமூர்த்திகள் அல்லது சக்திகள், வித்தியாசித்தமாய் கணேசனைப்போன்ற ஒரு தேவதை, அல்லது அவதாரங்கள் இந்த, ரூபமாயாவது உபாசிக்கின்றார்கள். பிரம்மன், திருமூர்த்தி, சத்திகள், கல்விக்குரியகணபதி அவதாரங்கள் முதலான ஈசுவரனின் கிரியாமூர்த்திகளை அவர்கள் ஆராதனை செய்கிறதில்லை. ஆனால் ஸாக்ஷாத் ஈசுவரனையே பஜிக்கின்றார்கள் இந்த விஷயத்தைப்பற்றி இதின் 5 வது அதிகாரத்தில் விஸ்தாரமாகவிவரிப்பாம்.

ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பூமி இவைகளுக்கு முறையே இந்திரன், வாயு, அக்கினி, வருணன், குபேரன் அதிஷ்டான தேவதைகளாம். ஜகத்தின் இந்த மஹா பூத வகுப்புக்களுக்குத் தனித்தனி இவர்கள் தேவ ராஜர்களாம். அவர்கட்குள் இந்திரன் எஜமானன். அவர்களுக்குள் ஒவ்வொருவருக்கும் கீழாக தேவகணங்கள் அடியில் வருமாறு வகுக்கப்பட்டிருக்கின்றார்கள். இந்திரனுக்குச் சம்பந்தமாய்ச் சாத்தியர்கள், வசுக்கள், ஆதித்தியர்கள், அப்ஸரஸ்ஸுகள் இருக்கின்றார்கள். வாயுவுக்கு மருத்துக்களும், குபேரனுக்குச் சம்பந்தமாக யக்ஷர்

* பகவத்கீதை. 7 வது அத்-ம். 23 வது ச-ம்.

கள், கந்தர்வர்கள், வித்தியாதரர்கள், கின்னரர்களு மிருக்கின்றார்கள். பாம்புகளைப் பாதுகாக்கும் தேவர்க ளான நாகர்கள் (சர்ப்பங்கள்) போன்றும், பறவைகளைப் பாதுகாக்கும் தேவர்களான சுபர்ணர்கள் போன்றும், சில தேவதைகள் ஜீவராசிகளைப் பாதுகாக்கிறார்கள்.

இந்திரன், யமன், வருணன், குபேரன் என நால் வரும் திக்பாலர்களாய் ஜனங்களைப் பாதுகாக்கின்றார்கள்., யமன், மரணதருமராஜன்; அவர் ஞானியாய் நசிகேதஸ் ஸுக்கு ஞானோபதேசம் செய்தவர்.

அசுரர்களோ, சுரர் (தேவர்) களுக்குப் பகைவர்கள். ஜகத்தின் சம்ஹாரத் தொழிலுக்குரிய சக்திஸ்வரூபி கள். வெளிப்படையில் தேவர்களுக்கு விரோதிகளாகத் தோன்றினும், உற்றுநோக்குகையில், ஜகத்தின் காரி யம் நடைபெறுவதில் அவர்களும் அவசியம் உபயோக மானவர்களுமாம். பிரகிருதியின் தன்மையான தமோ குணத்தை யவலம்பித்தவர்களாக இந்த அசுரர்கள், ஜகத் சிருஷ்டியின்போக்கைத் தடுப்பதுபோல்இருக்கின்றார்கள். இந்தத் தடையினாலேயே ஜகத் சிருஷ்டிப்போக்கு ஒழுங் காகவும், உறுதியாகவும் இருக்குமாறு அனுகூலர்களா கிறார்கள்.

இந்தத் தேவசிருஷ்டிகள் இந்திரியங்களுக்குப் புலப் படாத அப்பிரத்தியக்ஷ (சூக்ஷ்ம) பூமிகைகள் சம்பந்த மானவைகள். ஆனால், அவர்கள் (தேவர்கள்) கிரியை யால் பிரத்தியக்ஷலோகங்களுடன் சம்பந்திக்கின்றார்கள். பிரத்தியக்ஷ அப்பிரத்தியக்ஷ பூமிகைகள் இரண்டும் சேர்ந்தே வாஸ்தவத்தில் சிருஷ்டித்தொழிலுக்கு விஸ் தாரமான இடமாக அமைகின்றன. அவைகள் இரண்டும் ஒருங்கே சம்சாரப் பிரவாகமாகப் பரிக்கின்றன.

ஆரம்பத்தில் ஸ்தூல ஸிருஷ்டிக்கிரமம் என்னவென்றால், தாதுவர்க்கங்கள்; பின்பு, ஓஷதிகள்; பின்பு, பிராணிகள்; பின்பு, மனிதர்களாம். விஷ்ணு புராணத்திற் சொல்லியிருக்கிறதாவது: ஸிருஷ்டியைப்பற்றி பிரம்மா உள்முகமாய் தியானிக்குங்காலத்தில் மஹத்தத்துவம், மஹாபூதாதிகள், இந்திரியங்கள் ஆகிய பிரகிருதி ஸிருஷ்டியானபின், ஸ்தாவரவர்க்கமான தாதுக்களும், ஓஷதிகளும் தோன்றின. பின்பு, திரியக், ஸ்ரோதஸ்கள் என்ற பிராணிகள் உண்டாயின. அந்தப் புராணப்படிக்கு இவைகளுக்குப்பின் சிலதேவதைகள் உண்டானார்கள். ஆனால் அந்த தேவர்கள் நம்முடைய லோகத்திற்குச் சம்பந்தமில்லாதவர்கள். அவர்களுக்குப் பின் மனுஷ்ய ஸிருஷ்டி ஏற்பட்டது. இதுவே ஸிருஷ்டிமுறையின் விதியாக விருந்தபோதிலும், கல்பாந்தரங்களில் ஸிருஷ்டி கிரமத்தில் பொதுப்படையாய்ச் சில வேறுபாடுகள் சம்பவிக்கின்றன. அவைகளைப்பற்றிய விவரங்களும் பல கிரந்தங்களிலும் வேறுபடுகின்றன. ஆகவே ஒரு ஸிருஷ்டிவர்க்கம் மற்றொரு வர்க்கத்துடன் கலந்து உண்டாகின்றது. சில பிராணி வகுப்புக்களும், சில ஓஷதிவகுப்புக்களும், மனுஷ்ய ஸிருஷ்டியான வெகுகாலத்திற்குப் பிறகும் உண்டாகின்றன. சொல்லப்புகில் அவைகளைப் பிரிக்கிறோமே யல்லாது உண்மையில் ஜகத்தானது மேற்குறித்த நான்கு வகுப்பான ரோதைகளிலேயே ஒருங்கேயாய்ப் பழுகி நடைபெறுகின்றது.

ஐதரேயப்பிராஹ்மணத்தில் II வது கண்டம், III வது அத்தியாயம், 2=ம் மந்திரத்தில் ஸிருஷ்டிக் கிரமத்தைப்பற்றித் தெளிவாய்ச் சொல்லியிருக்கிறது.

தஸ்ய ஆத்ரா நஸ்ராவிஸாராம வெதஸ்ரூதெ ஹாவி ஸ்ருஷ்டியஃ ॥ ஓஷதிவநஸ்த யொயவதிஷு ஷ்ராண ஸாஸ்ஸஸ்க கா நஸ்ராவிஸாராமவெத ॥ ஓஷதிவநஸ்

திஷு ஹி ரஸோ த்ருஶ்யதே। சித்தம் ப்ராணப்ருத்ஸு॥
ப்ராணப்ருத்ஸ்வேவாவிஸ்தராமாத்மா। தேஷு ஹி
ரஸோऽபி த்ருஶ்யதே। ந சித்தமிதரேஷு॥ புரு
ஷே த்வேவாவிஸ்தராமாத்மா॥ ஸ ஹி ப்ரஜ்ஞாநேந
ஸம்பந்நதம:॥ விஜ்ஞாதம் வததி। விஜ்ஞாதம் பஶ்யதி॥
வேத ஶ்வஸ்தநம்॥ வேத லோகாலோகௌ॥ மர்த்யேநா
ம்ருதமீப்ஸதி॥ ஏவம் ஸம்பந்ந:॥ அதேதரேஷாம்
பஶூநாமஶநாபிபாஸே ஏவாபிவிஜ்ஞாநம்॥
ந விஜ்ஞாதம் வதந்தி॥ ந விஜ்ஞாதம் பஶ்யந்தி। ந விது:
ஶ்வஸ்தநம்॥ ந லோகாலோகௌ॥ த ஏதாவந்தோ ப
வந்தி। யதாப்ரஜ்ஞம் ஹி ஸம்பவா:॥

(இ-ள்.) விஸ்தரிக்கின்ற பிரபஞ்சத்தில் எவன் ஆத்மாவைப் பார்க்கிறானோ, அவனே சிருஷ்டியை உண்மையாய் அறிகிறான். பூண்டுகள், மரங்கள், மற்ற ஜீவராசிகள் இவைகளை ஆத்மாவின் தோற்றமாகவே அவன் அறிகிறான். பூண்டுகளிலும் மரங்களிலும் அந்த ஆத்மா ரஸமாகத் தோன்றுகிறான்; பிராணிகளிடத்தில் மனமாகத் தோன்றுகிறான். பிராணிகளிடத்தில் ஆத்மா அதிகமாகப் பிரகாசிக்கின்றான்; அவைகளில் ரஸமாகவும் விளங்குகிறான். ஆனால் மற்றவைகளில் (பூண்டுகள், மரங்களில்) மனமாகத் தோன்றுகிறானில்லை. மனிதனிடத்திலோ ஆத்மா தானாகவே விளங்குகிறான். அதனால் மனிதன் பிரம்மஞ்ஞான சம்பன்னனாகிறான். அறிந்ததைச் சொல்லுகிறான்; அறிந்ததைப் பார்க்கிறான்; நேற்று நடந்ததை ஸ்மரிக்கிறான்; லோகாலோகங்களை யறிகிறான்; மரண தருமங்களால் அமிருதத்தை அடைய இச்சிக்கிறான். இவ்விதமாய் மனிதன் சம்பன்னனாகிறான். மற்றைப் பிராணிகளுக்கோவென்றால் பசி, தாகம் இரண்டேதான். அவைகளின் ஞானவரம்பு அவைகள் அறிந்ததை வெளியிடா; அறிந்ததைப் பார்க்காவாம்; நேற்று நடந்ததை ஸ்மரிக்காவாம்; லோகாலோகங்களை அறியாவாம்; இவ்வளவுதான் அவைகளின் யோக்கியதை. ப்ரஞ்ஞைக்குத் தக்கபடி பிறப்பு. மேற்கூறிய மந்திரத்திற்கு "ஸாயணர்" அடியில்வருமாறு வியாக்கியானம் செய்திருக்கிறார்.

"𑌸𑌚𑍍𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌰𑍂𑌪𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑍍𑌕𑌾𑌰𑌣𑌸𑍍𑌯 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌭𑍂𑌤𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌾𑌃 𑌤𑌸𑍍𑌯𑍋𑌪𑌾𑌧𑌯𑌃॥ 𑌤𑌤𑍍𑌰𑌾𑌚𑍇𑌤𑌨𑍇𑌷𑍁 𑌮𑍃𑌤𑍍𑌪𑌾𑌷𑌾𑌣𑌾𑌦𑌿𑌷𑍁 𑌸𑌤𑍍𑌤𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌵𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌨 𑌤𑍁 𑌚𑍇𑌤𑌨𑌾𑌜𑍀𑌵𑌰𑍂𑌪𑌤𑍍𑌵𑌮𑍍॥ 𑌯𑍇 𑌤𑍁 𑌓𑌷𑌧𑌿𑌵𑌨𑌸𑍍𑌪𑌤𑌯𑍋 𑌜𑍀𑌵𑌰𑍂𑌪𑌾𑌃 𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌾𑌃 𑌯𑍇 𑌚 𑌶𑍍𑌵𑌾𑌸𑌨𑌿𑌃𑌶𑍍𑌵𑌾𑌸𑌪𑍍𑌰𑌾𑌣𑌯𑍋𑌗𑌿𑌨𑍋 𑌜𑍀𑌵𑌰𑍂𑌪𑌾𑌜𑌙𑍍𑌗𑌮𑌾𑌃 𑌤𑍇 𑌉𑌭𑍇 𑌅𑌤𑌿𑌶𑌯𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌾𑌵𑌿𑌰𑍍𑌭𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑍇 𑌇𑌤𑌿॥"

(இ-ள்.) சத், சித், ஆனந்த ரூபியாயும், ஜகத்காரணமாகவுமிருக்கிற பரமாத்மாவின் காரியமாகச சகல பதார்த்தங்களுமிருக்கின்றமையால் அவைகள் பரமாத்மாவின் உபாதிகளாம். இதில அசேதனமான மிருத்து, கல் முதலியவைகளில் சத்தாகமாத்திரம் ஆவிர்ப்பவிக்கிறான். ஜீவரூபத்தை அடைகிறானில்லை. ஸ்தாவரங்களான பூண்டுகளும் மரங்களும், உச்சுவாச நிச்சுவாசமுள்ள பிராணிகளான ஜங்கமங்களும் ஆத்மாவுக்கு உயர்ந்த ஆவிர்ப்பாவ ஸ்தானங்களாம். இப்படிப் பரிணமிக்கின்ற சிருஷ்டிக்கிரம பாவமானது இக்காலத்திற்றோன்றிய நவீன பாவமென்று சாதாரணமாய் நினைக்கின்றார்கள். அது சரியன்றென்று முந்திய வசனங்கள் நிரூபிக்கிறதை நாம் அறியவேண்டும்.

பிரம்மாவானவர் முன்சொன்னபடி எல்லா உபகரணங்களையும் சிருஷ்டித்துத் தபஸினால் ஜீவராசிகளின் சூக்ஷ்ம பாவங்களைச் சங்கற்பித்தார். ஆனால் இந்தச் சங்கற்ப பாவ ரூபங்களை உயிர்ப்பிக்கவேண்டி விஷ்ணுவின் சகாயத்தைத் தேடினதாகச் சிவபுராணத்திலும் ஸ்ரீ பாகவதத்திலும் நாமறிகிறோம். விஷ்ணு ஈசுவரனின் ஓர் அம்சம். அவரிடம் நின்று சங்கற்ப பாவங்களான ரூபங்களை உயிர்ப்பிக்கிறதும், அவைகளுக்கு அதிஷ்டானமானவுமான பிராணனும் பிரஞ்ஞையும் உண்டாகின்றன.

மேலும் சிவபுராணத்திற் சொல்லியிருக்கிறதாவது: மேற்கண்ட ரூபங்கள் பரிபக்குவமடைந்தபின், மஹாதேவர் உதவிகோர அவர் அவைகளுக்கு அமிருதத்துவத்தைக் கொடுத்தார். அதாவது முன்கல்பங்களில் பக்குவமடைந்த ஜீவாத்துமாக்களை இந்த ரூபங்களுடன் சம்பந்தப்படுத்தினார். இதைத்தான் ருத்திரனுக்கு அகங்காரத்தைக்கற்பிக்கிற பாவத்தில் சூசிப்பிவித்திருக்கிறது. ஜகத் சிருஷ்டித் தொழில்களான இந்த மூன்றுமுறைகளும் தெளிவாய் அறியத்தக்கது. உபகரணங்களையும் ஜீவராசிகளின் சூக்ஷுமபாவங்களையும் சிருஷ்டித்தல்பிரம்மாவின்தொழில். அந்தப்பாவங்களான ரூபங்களை உயிர்ப்பித்தலும், அவைகளின்பின் பிரக்ஞை உண்டுபண்ணுதலும் விஷ்ணுவின் தொழிலாம். சிவன் தொழிலோ, அவைகளில் அநாதிகளான ஜீவாத்மாக்களைச் சம்பந்தித்தலாம்.

மனுஸ்மிருதியில் பிரஹ்மாவின் பெயரைச்சொல்லி இந்த விவரங்களைக்குறிப்பாய்ச் சூசிப்பித்திருக்கிறது. பிரஹ்மா தன் ரூபத்தை மாற்றிக்கொண்டு தன்னையே பகுத்துத்தன்னின்று விராட்ஸ்வரூபத்தை உண்டுபண்ணினரென்றும், விராட்டினின்று சுயம்பூ மனுவும், அவரிடமிருந்து (10) பத்து மகாரிஷிகளும், அவர்களிடமிருந்து சப்தமனுக்களும் உண்டானார்களென்றும், பிரஸ்தாபித்திருக்கிறது. அதன்பிறகு அவர்கள் நேரான சிருஷ்டிகர்த்தாக்களானார்கள். அண்டங்களையும், மகாபூதங்களின் அதிஷ்டான தேவதைகளையும், சில பொதுமூலதத்துவங்களையும் ஜீவராசிகளையும் சிருஷ்டித்தும், வேதங்களைக் கொடுத்தும் இவன்பின் பிரஹ்மாவானவர் அந்தர்த்தானமாயினர். இது சுருக்கமான விவரணம். அந்தச் சுருக்கத்தினலேயே அறியக் கஷ்டமானதாகவிருக்கிறது. ஆனல்

அந்தஸ்மிருதியின் முக்கியவிஷயங்களுக்கு இந்த விவரம் முகவுரையாக ஏற்பட்டுள்ளது.

முன்சொன்ன சிவபுராணத்தில் அடியிற்கண்ட விவரணம் கூறியிருக்கிறது. முதலில் பிரஹ்மா ஜலத்தைச் சிருஷ்டித்தார். அதில் தன்னுடைய ஒரு முஷ்டி ஜீவ வித்தை விதைத்தார். அஃது இருபத்துநான்கு தத்துவங்களுள்ள ஒரு அண்டமாக பவித்தது. விராட்சொரூபமாய்ப் பிரஹ்மா தோன்றி அந்த அண்டமானது கடினமாக ஆகிவிட்டதாகக் கண்டார். இதனால் அவருடைய மனத்தில்சந்தேகம் ஜனித்தது. தபஸ் செய்ய ஆரம்பித்தார். விஷ்ணுவின்மேல் சித்தத்தை நிறுத்திப் பன்னிரண்டு வருஷம் இவ்வாறு தபசுசெய்தார். பின்பு விஷ்ணு பிரசன்னமாகி "உன் தபசால் திருப்தி யடைந்தேன், வேண்டுவன கேட்டுக்கொள்," என்றார். பிரஹ்மாசொன்னதாவது:—ஓ சுவாமி! அஃது இருக்கிறமுறை சரிதான். சிவன் என்னை உம்முடைய ஆதீனத்திலிருக்கும்படி செய்தார். அவர் ஆஞ்ஞைப்படி நான் சிருஷ்டித்த அண்டம் இதோ இருக்கிறது. அது ஜீவனில்லாமல் ஜடரூபமாய்ச் சலனமற்றிருக்கிறது. சுவாமி! நீவிர் ஜீவனாக அதற்கு அமைந்து அதைச் சேதனமாகச் செய்வியும். இவ்விதம் பிரஹ்மா சொல்ல, சிவனிட்ட கட்டளை விதியின்படி அந்த அண்டத்தில் விஷ்ணு உட்பிரவேசித்தார். அந்தப் பிரவேசித்த மூர்த்தி ஆயிரம் சிரசுகள், ஆயிரம் காதுகள், ஆயிரம் பாதங்கள், ஆயிரம் கரங்கள் உள்ள பூமிமுதல் ஆகாயம்வரை வெட்டின மகாபுருஷனாக விளங்கினார். அந்த அண்டத்தில் வியாபித்தார்.

அந்த அண்டத்தில் அவர் அவ்விதம் பிரவேசிக்கவே பாதாளம் முதல் சத்தியலோக பரியந்தம் 24 தத்

துவங்களமைந்த அந்த அண்டமானது ஜீவன்கள் நிரம்பியதாக ஆகி சேதன பாவத்தை அடைந்தது.

புருஷர்களில் மஹாஉத்தமரான ஹரி ஸத்தியமென்ற லோகத்தை யடைந்து அதில் விளங்கினார். பிரம்மா தபோ லோகத்தில் தங்கினார். மற்றப்புருஷர்கள் அவரவர்கட்குரிய லோகங்களை அடைந்தனர். பிரம்மா முதலில் தனனுடைய மனத்தினின்று சங்கல்பத்தால்சிலபுத்திரர்களைச் சிருஷ்டித்தார். ஆனால் அவர்கள் சிருஷ்டித்தொழிலை வகியாமல் துறவிகளானார்கள். மறுபடியும் இன்னும் சில புத்திரர்களைச் சிருஷ்டித்தார். அவர்களும் நிவிருத்தி மார்க்கத்தை அடைந்தனர். ஆகவே பிரம்மா மனமநொந்து வியாகுலப்பட்டுக் கதறி அழ எத்தனித்தார். அவர் கதறி யழவே, மகாதேவர் பிரசன்னமானார். அவருடைய அழுகைக் காரணமாக மஹாதேவர் தோன்றினமையால் ''ருத்திரர்'' என்ற நாமத்தைப் பெற்றார். அவர் தோன்றின உடனே பிரம்மாவை நோக்கி யாது காரணமபற்றி நீர் வியாகுலமடைகிறீர்; அதைச்சொல்லும்; அதை நான் நிவிர்த்திப்பேன் என்றார்.

அதற்குப் பிரம்மா அடியில் வருமாறு அருளினார். ஓ தேவ! மேல் சிருஷ்டி விஷயத்தில் இடையூறுகள் நேர்ந்திருக்கின்றன. அவ்விடையூறுகளை விலக்கிச் சிருஷ்டித் தொழில் நடைபெறும் வண்ணம் செய்வீராக. சங்கடங்களை நிவிருத்திக்கிறவரான மகாதேவர் இதைக்கேட்ட உடனே பிரம்மாவினுடைய அபீஷ்டத்தை நிறைவேற்றி வைக்கத் தீர்மானித்து, உம்முடைய சிருஷ்டியானது எப்பொழுதும் நடைபெறத் தக்கது, என்ற அனுக்கிரக வசனம் சொன்னார்.

உருத்திரர் என்று பெயருள்ளவரா யிருந்தாலும், ஆனந்த ஸ்வரூபியான மகாதேவர் மேற்கண்டபடி அருளிச்செய்து தம்முடைய கணங்களுடனே கைலாஸம் ஏகினார்.

பின்பு சிவானுக்கிரகத்தால் பிரம்மா, பிருகு முதலிய மற்ற ஆறுருஷிகளைச் சிருஷ்டித்தார். தன்தொடையிலிருந்து நாரதரைப் பிறப்பித்தார். தன்னுடைய சாயையிலிருந்து கர்தமரென்றவரையும், கட்டைவிரலினின்று தக்ஷனையும் பிரம்மா சிருஷ்டித்தார். இவ்வாறு 10 ருஷிகள் உண்டாயினார்கள். பிருகுவினின்று மரீசி உண்டானார். மரீசியின்புத்திரர் கசியபர். இந்தக்கசியபரின் சந்ததியே ஜகத்து நிறைந்தது. (சிவபுராணம், 1=வது ஸ்கந்தம், 6=வது அத்தியாயம், 1=முதல் 20=சுலோகங்களைப் பார்க்க.)

ஸ்ரீமத் பாகவதத்தில் அண்ட புவன சிருஷ்டியைப் பற்றி அவயவ அமைப்புள்ளதாகச் சொல்லியிருக்கிறது. ஆனால் முன்போலவே சிருஷ்டிக்கிரமம் விவரணம் மிகப் பெரிது. சிறிதளவில் ஓரேமாதிரியாம். முக்கியமாய் இதில் கவனிக்கவேண்டிய தென்னவெனில், விஷ்ணுவானவர் காரணங்களை யமைத்து வகுத்தார் என்றதாம்.

பாக்வதம், 2=வது ஸ்கந்தம், 5=வது அத்தியாயம், 32, 33=வது சுலோகங்கள் இதற்காதாரமானவைகள்:-

𑌯𑌦𑍈𑌤𑍇𑌽𑌸𑌙𑍍𑌗𑌤𑌾 𑌭𑌾𑌵𑌾
𑌭𑍂𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍋𑌗𑍁𑌣𑌾𑌃 ||
𑌯𑌦𑌾𑌯𑌤𑌨𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌣𑍇
𑌨 𑌶𑍇𑌕𑍁𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌤𑍍𑌤𑌮 ||
𑌤𑌦𑌾 𑌸𑌂𑌹𑌤𑍍𑌯 𑌚𑌾𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌂

[illegible]
[illegible]
[illegible]

(இ-ள்.) பிரத்தியக்கான சிருஷ்டிகளான பூதங்கள், இந்திரியங்கள், மனசு, குணங்கள். இவைகளின் ஆயதனங்களை (அதாவது) அததற்குரிய இருப்பிடமான உபாதிகளை உண்டுபண்ணிக் கொள்ள அசக்தமானவைகளாயிருந்தன. அப்பொழுது பிரம்மவித்துக்களே அவைகள் ஒன்றோடொன்று கலந்து பகவான் விஷ்ணுவினுடைய சக்தியால் ஏவப்பட்டவைகளாய்ச் சத்தாகவும், அசத்தாகவும் பரிணமித்து இதைச் (ஜகத்தை) சிருஷ்டித்தன.

மரீசி, அத்திரி, அங்கிரஸ், புலஸ்தியர், புலஹர், கிரது, பிரசேதஸ், வசிஷ்டர், பிருகு, நாரதர் என்ற 10 மகா ருஷிகள் அமானுஷப் பிறப்புக்கள். முந்திய கல்பங்களில் முத்திபெற்றவர்கள். இந்த ஜகத் சிருஷ்டி கிருத்தியத்தில் சகாயிகளாக ஏவப்பட்டார்கள். அண்டங்களின் நியமங்களை மேல்பார்த்துக்கொண்டு பிரளயம் வரையில் இந்தச் சம்பந்தங்களை வகிப்பார்கள். மேற்கண்ட அதிகாரம் வகித்தவர்களில் சில சமயங்களில், (7) ஏழுபேர்கள் மாத்திரம் குறிக்கப்பட்டு மற்ற மூவர்களான பிரசேதஸ், பிருகு, நாரதர் இவர்களை ஜாப்தாவிலிருந்து விலக்கியிருக்கிறது. தக்ஷர், கர்தமர், இவர்களைச் சில சமயங்களில் மேற்படி அதிகாரம் வகித்தவர்களுடன் சேர்த்துச்சொல்லுகிறதுமுண்டு.

குமாரர்களை நாலாகவும், ஐந்தாகவும், ஆறாகவும், ஏழாகவும் இப்படிப் பலகணக்கினராய்ச் சொல்லுகிறதுமுண்டு. அப்பேரின் பொருள் மாத்திரையில் அவர்கள் ஸ்திரீசம்பந்தமில்லாத பரிசுத்தபுருஷர்களாகவும்முற்றுக்

துறந்தஞானிகளாகவும் இருந்து அவர்கள் ஜகத்தைப் பாதுகாக்கிறார்கள். ருத்திரரென்றும் நீலலோகிதரென்றும் பெயர்பெற்று சிவனே இந்தக் குமாரர்களில்ஒருவராக அமைந்தார். வழக்கமாக சநத்குமாரர், சனந்தனர், சனகர், சனாதனர் என்ற நால்வர்களைப்பற்றித்தான், அடிக்கடி பிரஸ்தாபமிருக்கிறது. ரிபு, கபிலர், ஸனர் என்ற இவர்களையும் சொல்லுகிறதுமுண்டு.

இந்தச் சிருஷ்டிக்கிரமச் சுருக்கத்தில் அடியிற்கண்ட விவரங்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டியது. ஆரியர்களுக்கு முன்னர், இவ்வுலகின்கண் பூர்வீக மானிடவகுப்பினராயிருந்தவர்களைத் தானவர்களென்றும் தைத்தியாளென்றும் வழக்கத்தில் சொல்லுகிறது முண்டு. அவர்கள் மகா பலிஷ்டர்களாகவும், பராக்கிரம சாலிகளாகவும் பெரிய ஆகிருதியுள்ளவர்களாகவு மிருந்தார்கள். தேவர்களுக்கு மவர்களுக்கும் அடிக்கடிப் பலமான யுத்தங்கள் நேர்ந்துள்ளன. இவர்களைவிட அதிக மிருகத்தன்மை பொருந்திய அதிகக் கொடூரர்களாகவும், அவலக்ஷண சுயரூப முள்ளவர்களாகவும், பெரிய சரீரமுள்ளவர்களாகவும், இரக்கமற்றவர்களாகவும், வன்மையுள்ளவர்களாகவும்,மனுஷ்ய பக்ஷிணிகளாகவும், சாதுக்களுக்குப்பய சுவரூபிகளாகவும் இருந்த ஒரு மானிட வகுப்பினர் இருந்தார்கள். அவர்களே அரக்கர்கள். மேலும் துஷ்கிருத்தியங்களான சூன்னிய வித்தைகளால் சாதுக்களைப் பயமுறுத்தியும் ஹிம்சித்தும் வந்தார்கள். அவர்களெல்லாம் உலகத்தைவிட்டு ஒருங்கே வெகுகாலத்திற்கு முன்னமேயே போய்விட்டார்கள்.

இந்த விஸ்தாரமான சம்சாரப் பிரவாகத்தில் பிராயாணிகளாகிய ஜீவர்கள் அலைந்து திரிந்து கடைசியாய்

மானிட சரீரமடைந்து அதன்மூலமாய் ஆத்மஞானம் பெற்று முக்தியடைகின்றார்கள்.

இந்த அதிகாரத்தில் கவனிக்க வேண்டியவைகள்:

(1) சகுணப் பிரம்மத்தினின்றும் மூலப்பிரகிருதியினின்றும் மாயாசக்தி விசேஷத்தால் பலவைகளான ஜீவ ராசிகளின் உற்பத்தியும், சிருஷ்டி, அந்தியத்தில் அவைகளின் லயமும்.

(2) சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், இத்தொழில்களுக்கு அதிஷ்டானதேவதைகளான முறையே பிரம்மா, விஷ்ணு, சிவன், அவர்களின் சக்திகளான சரஸ்வதீ, லக்ஷ்மி, உமை, இவர்களுடன் திருமூர்த்திசொரூபமாக ஈசுவரன் வியஷ்டியாகிறார்.

(3) பிரம்மாவினுடைய தொழில் யாதெனில், பிரபஞ்சத்தின் உபகரணங்களையும், சுரர்கள், அசுரர்கள் தாதுக்கள், ஓஷதிகள், பிராணிகள், மனுஷர்கள், இவர்களின் சங்கல்ப பாவ சுவரூபங்களையும் சிருஷ்டித்தல்.

(4) விஷ்ணுவின் தொழில் யாதெனில், பிராணன், பிரஞ்ஞை இரண்டையும், சமர்ப்பித்து அவயவம் அமைத்தசொரூபங்களை உயிர்ப்பித்து சேதனவத்தாகச்செய்து அவைகளைக் காப்பாற்றி நடைபெறும்படி செய்தல்.

(5) சிவனின் தொழில் யாதெனில், இந்த ரூபங்கள் மனுஷ்யத் தன்மையையடைந்த மேல் முந்திய கல்பங்களில் பக்குவிகளான ஜீவாத்துமாக்களை இந்தச் சரீரங்களில் பிரவேசிக்கும்படியாகச் செய்வித்துஅவித்தையைத் துவம்ஸம் செய்து ஞானத்தை யடையும்படியாகச் செய்வித்தல்.

(6) சிருஷ்டி நியமம் நடைபெறும் காலம் முழுவதும் மனுஷ்யனுடைய க்ஷேமத்தைக் கோரினவர்களாய் ரிஷிகள், குமாரர்கள் போன்ற உயர்ந்த அமனுஷ ஞான மூர்த்திகள் இருந்துகொண்டிருக்கிறார்கள்.

(7) *உலகத்தின்கண் தானவரென்றும் தைத்தியரென்றும், இராக்ஷஸரென்றும், சென்றுபோன மாறுபட்பூதிகள் இருந்தார்கள்.

சநாதன தருமத்தில் முதல்பாகத்தில்
2-வது அத்தியாயம் முற்றுப்பெற்றது.

சுபமஸ்து.

முதல்பிரிவு.

## 3-வது அதிகாரம்.

# புனர் ஜனனம்.



*ஸர்வாஜீவே ஸர்வஸம்ஸ்தே ப்ருஹந்தே
தஸ்மின்ஹம்ஸோ ப்ராம்யதே ப்ரஹ்மசக்ரே॥
ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரஞ்சமத்வா
ஜுஷ்டஸ்ததஸ்தேநாம்ருதத்வமேதி॥

(இ-ள்.) சர்வ ஜீவர்களுக்கு மூலமும் ஆதாரமுமான பிரம்ம சக்ரத்தில் தான் வேறு, பிரம்மன் வேறு என்ற துவைத புத்தியால் ஹம்ஸனாக ஜீவன் சுழலுகின்றான். தானே பிரத்தியக் ஆத்மாவாக இவ்விதம் பிரவிருத்தித்திருக்கிறானென்று அறிந்து ஜீவன்

* சுவேதாசுவதரோபநிஷத். i. 6.

அமிருதத்துவத்தை அடைகிறான். இந்த ஒரு சுலோகத்தில் பிறப்புக்கும் அதன் முடிவுக்கும் காரணம் சொல்லியிருக்கிறது. தான் ஈசுவரனையன்றி வேறு என்ற எண்ணமுள்ளவனும் மனிதன் இந்தச் சம்சாரத்தில் சுழலுகின்றான். தானும் ஈசுவரனும் அபேதம் என்று அறிய அவன் முக்தி பெறுகிறான். சுருதி, ஸ்மிருதி, புராணம், இதிஹாசம் இவைகளில் ஜீவாத்மா பிரம்ம ஸ்வரூபமென்று கூறப்பட்டிருக்கிறது.

*ததஃ பரம் ப்ரஹ்மபரம் ப்ருஹந்தம்
யதா நிகாயம் ஸர்வபூதேஷு கூடம்॥
விஶ்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம்
ஈஶம் தம் ஜ்ஞாத்வா அம்ருதா பவந்தி॥
‡அங்குஷ்டமாத்ர: புருஷோऽந்தராத்மா
ஸதா ஜநாநாம் ஹ்ருதயே ஸந்நிவிஷ்ட:॥

(இ-ள்.) அதன்மேல் எல்லா ஜீவராசிகளிலும் அந்தர்க்கதமாயிருக்கின்றதும், ஜகத்திற்கு ஒரே காரணமானதும், சர்வ ஜகத்திலும் வியாபித்திருக்கிறதுமான வஸ்துவைப் பிரம்மமாக அறிந்து மரணரகிதராகிறார்கள்.

அவர் கட்டைவிரல் பரிமணமாயும், அந்தராத்மாவாயும் எப்பொழுதும் ஜனங்களின் ஹிருதயத்தில் வசித்துக் கொண்டிருக்கிறார்

†"ஸவா அயமாத்மா ப்ரஹ்ம"

(இ-ள்.) இந்த ஆத்மா பிரம்மன்.

ஸர்வேஷ மஹாஜநாத்மா, யோऽயம் விஜ்ஞாநமய ப்ராணேஷு யஏஷோऽந்தர் ஹ்ருதய ஆகாஶ:

* சுவேதாசுவதரோபநிஷத். 3. 7. 13.
† பிரகதாரண்ணியகோபநிஷத். IV. IV. 5.
‡ பிரகதா-த். 22.

(இ-ள்.) மகானுகவும் பிறப்பற்றவனுகவும் இருக்கிற இந்த ஆத்மா சகலப் பிராணிகளிலும் விஞ்ஞானமயனுகவும், சகலப் பிராணிகளின் ஹிருதயாகாசத்திலு மிருக்கின்றான்.

*ஸவா ஏஷ மஹாநஜ ஆத்மாஜரோ அமரோ அம்ருதோ அபயோ ப்ரஹ்மாபயம்॥

(இ-ள்.) மகானுகவும், பிறப்பற்றவனுகவும், ஜரையற்றவனுகவும், மரணரஹிதனுகவும், அமிருதனுகவும், பயமற்றவனுகவு மிருக்கின்ற இந்த ஆத்மாவே பயமற்ற பிரம்மன்.

நெருப்பினின்று அத்தன்மையான பொறிகள் எப்படியோ, அப்படி, பிரம்மத்தினின்று அபேதமான ஜீவாத்மாவாக எல்லாப்பிராணிகளாலும் விகாசமடைகிறான். வித்தானது தான் உண்டான மரம்போல் மரமாக வளருகிறது. அவ்விதமே, ஜீவாத்ம வித்தானது சுவயம் விக்ஞானத்துமாவாக ஆகிறது. ஜீவாத்மா தன்னைத்தான் அறியும் ஹேதுவாகச் சம்சாரம் ஒரு அவகாசமாக ஏற்படுகிறது. பிரம்மத்திற்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ளபேதம், மரத்துக்கும் அதன் வித்துக்கு முள்ளதுபோலும்.

† "ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீசநீசௌ"

(இ-ள்.) அறிந்தவன் அறியாதவன் இருவரும் பிறப்பற்றவர்கள். ஆனால் அவர்கள் முறையே சக்தியுள்ளவர்களாகவும் சக்தியற்றவர்களாயு மிருக்கிறார்கள்.

ஆகையால் ஞானமற்றவனுகவும் அசக்தனுகவுமிருந்தபோதிலும் ஞானியாகவும், சக்தியுள்ளவனுகவும் ஜீவாத்மா அதைவிட்டு வேறொரு சரீரத்தையடைகிறான். இவ்விதமாய் யாத்திரை செய்கிறான்.

* பிரகதா-த். 25.

† சுவேதாசுவதரோ-த். 1. 9.

பகவத்கீதை அத்தியாயம் 2, சுலோகம் 22.

வாஸாம்ஸி ஜீர்ணாநி யதா விஹாய
நவாநி க்ருஹ்ணாதி நரோऽபராணி ||
ததா சரீராணி விஹாய ஜீர்ணா
ந்யந்யாநி ஸம்யாதி நவாநி தேஹீ ||

(இ-ள்.) மனிதன் பழைய துணிகளை விட்டுவிட்டுப் புதிய துணிகளை எவ்வண்ணம் கிரகிக்கின்றானோ, அவ்வண்ணமாகவே பழைய உடல்களை விட்டுவிட்டு வேறுபுதிய உடல்களை ஆத்மா அடைகிறான்.

ஜீவாத்மா அஞ்ஞானத்தினின்று ஞானத்தை யடைதலும், அசக்தனாயிருந்து பூர்ண சக்தியை யடைதலும் என்ற உண்மையைச் சுருதியில் வியக்தமாய்ச்சொல்லியிருக்கிறது. நல்லொழுக்கத்திற்கும், அறிவுக்கியைந்த சன்மார்க்கத்திற்கும் முக்கிய ஆதாரமாக விருக்கிறபடியால் அதை நாம் அறிந்துகொள்ளவேணும். மனிதனுடைய வாழ்வு ஒருநாளோ டற்றதன்று. இன்றிருந்து நாளையில்லாமை யன்று. ஆனால் அநாதித்தன்மையும் மரணராகித்தியமு முள்ளவன், தன்னுடைய யதார்த்த சுவபாவத்தையும், யோக்கியதையும் காலக்கிரமத்தில் அறிவான். பரமஞானமும் பரமசக்தியும் அவனிடத்தில் குப்தமாயிருக்கின்றன. அவைகள் விகாசத்தை இனியடைய வேண்டியது. பிறப்பும், இறப்பும் இதற்காகத்தான். மனித இயல்பை, இத்தன்மையாக அறிந்தோமாகில் ஜீவநிலையின் பெருமை, வலிமை, மகிமை துலங்கும். இதுவே எக்காலங்களிலும் இருந்திருக்கின்ற ஞானிகளின் கொள்கையாம். இதுவே பிராசீன சமயங்களின் ஒவ்வொன்றினுடையவும் துணிபுமாம். கௌதமீயாய சூத்திரத்தின் வாத்ஸ்யாயனர் பாஷியத்தில் சிராக்ஷேபணையாய் முடிவு

பெறத் தெளிவான தர்க்க விசாரணையின் மூலமாய் மேற்கண்ட சித்தாந்தம், பரிஷ்காரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறதை நாம் பார்க்கலாம்.

மேற்றிசை ஜாதியார்க்குள்ளும், இப்பொழுதுதான் அதாவது அவித்தியா அந்தகாரத்தினால் மூடப்பட்டிருக்கிறகாலத்தில் இந்த உண்மையானது மறைந்து போயிருக்கிறது. இக்காரணத்தினாலே, ஜீவாத்மா, அதன் நிலைமை, அதன் கதி இவைகளைப்பற்றி மூடத்தன்மையான விபரீதமான அபிப்பிராயங்கள் உண்டாயிருக்கின்றன. ஆகவே ஈசுவரன் பிரபஞ்சத்தை ஆளுகிறதில் நியாயமும் அன்புமில்லை என்று விபரீதபாவனை நடைபெற்றுக்கொண்டிருக்கிறது.

இப்பொழுதுகூட மேற்குத்திசையார்களுக்குள்ளும், (Huxley) ஹக்ஸ்லி போன்ற புலனறிவு சாஸ்திரத்தில் தேர்ச்சியடைந்த வித்துவான்கள் ஜீவாத்துமாவுக்கு ஜன்மாந்தர மிருக்கக்கூடுமென்று ஒப்புக்கொள்ள எத்தனித்திருக்கிறார்கள். விகாசக்கொள்கை போன்று (Doctrine of Evolution) இந்தஜன்மாந்தரக் கொள்கையும் பிரபஞ்ச சம்பந்தமான சத்தியமான அபிப்பிராயங்களில் ஒன்று என்றும், உபமானப் பிரமாணத்தின் ஆதாரத்தினால் சாதிக்கக்கூடுமென்றும் அவர் சொல்லுகிறார். (Evolution and Ethics) என்ற புத்தகம் 16-வது பக்கத்தில்.

ஜீவாத்மா தனக்குள் அந்தர்க்கதமாய் அனந்தசக்திகளை அமைக்கப்பெற்றிருக்கின்றான். பிரகிருதி சம்பந்தமுண்டாகப் பஞ்ச பூதங்களின் காரியமாகிய தேகத்தைப் பெறுகிறான். ஆனால் இந்தச் சக்திகள் வெளிப்படையாகாமல் குப்தமாயிருக்கின்றன. தாதுவர்க்கங்களிலும், ஓஷதிவர்க்

கங்களிலும், பிராணிவர்க்கங்களிலும் வெவ்வேறன பலசரீரங்களைப்பெற்று நடைபெறுகிறுன். தாதுவர்க்கங்களிலும், ஓஷதிகளிலும்பாகுபாடு அடைவதின்மூலமாய்ப் பவித்துச் சலித்த நிலைமையில் உத்பீஜம் என்றும் ஓஷதிப்பிராணி இவைகளின் கீழானவர்க்கங்களில் வேர்வைபோன்று அரும்பரும்பாய்த் துளித்து உண்டாகி நடைபெறுங்காலத்தில் ஸ்வேதஜம் என்றும், முட்டையிடுகின்ற பிராணிவர்க்கத்தில் முட்டையினின்று பவித்து நடைபெறுங்காலத்தில் அண்டஜம் என்றும், கெர்ப்பத்திலிருந்து நேரில்பவிக்கும் மேலான பிராணிகள், மனுஷ்யவர்க்கம் இவைகளில் பிறந்து நடைபெறுகையில் ஜராயுஜமென்றும் ஜீவன், இவ்விதமாக வெவ்வேறு யோனிகளிற் பிறந்து வேவ்வேறு பெயரைப்பெறுகிறுன். இந்தப்பிறப்புக்களில் ஜீவாத்மாவின் கீழான சில சக்தி அம்சங்கள் விரிகின்றன. குப்தமாகவிருந்த அறிவும் வெளியாகிறது. இருபான்மையான விகாசம் (Evolution) நடைபெறுகின்றது. உயிர் அல்லது பிரஞ்ஞாபாவம் ஒன்று. உடல் அல்லது சரீரபாவம் ஒன்று; அதாவது மென்மேலும் விரிகின்றதும் விருத்தியாகின்றதுமான ஜீவாத்மாவின் தொடர்ந்த பிரஞ்ஞாப் பிரவாகம் ஒன்று. அதை அனுசரித்ததும், அதற்கு நேரான ஜீவாசயமானதும், ஒன்றினின்று மற்றென்று தொடர்ச்சியாய் வந்துகொண்டிருக்கிறதுமான உடல் அல்லது சரீரப்பிரவாகம் ஒன்று. ஒவ்வொரு சரீரம் தனித்தனியாகத் தோன்றினும் வேறொரு சரீரத்தின் அம்சமாக ஒருகாலத்திலிருந்து அதின் சுவபாவத்தில் கலந்து பின்பு தனிமையாய் நடைபெறும் வண்ணம், அதினின்று பிரிகிறது. தன்னுற்பத்திக்குக் காரணமாயிருக்கும் முந்தின சரீரத்தில் ஒரு அம்சமாகத் தானும்கிடக்கையில் அந்தப்பூர்வசரீரத்தில் இயங்குகின்ற ஜீவாத்மாவின் அபிவிருத்தி அல்லது

க்ஷயத்துக்குத் தக்கபடி அதுகாரணமாக இந்தச் சரீரத்தின் விருத்தி அல்லது க்ஷயம் ஏற்படுகிறது. அதாவது ஒரு சரீரத்தினின்று பிந்தியசரீரம் பிரியுங்காலத்தில் ஜீவாத்மா விருத்தியடைந்திருக்கும் பக்ஷத்தில் அதன் தாய்ச் சரீரத்தைவிட உயர்ந்த கதியையும், ஜீவாத்மா க்ஷீணத்தையை யடைந்தால் தன் தாய்ச் சரீரத்தைவிடக் கீழான கதியையும் பெற்றுத் தான் தனிமையாய் நடைபெற ஆரம்பிக்கிறது. பொதுவாக இந்தவிகாசம் அல்லது சிருஷ்டி அபிவிருத்தி நோக்கமாகவேயுள்ளது. ஆயினும் சமுத்திரக்கரையில் மேன்மேலும் பொங்குகின்ற வெள்ளத்தில் உண்டாகின்ற அலைகளின் பெருக்கம் வடிவுபோல இந்தச்சிருஷ்டியில் அல்லது விகாசத்தில் ஏற்றமும்தாழ்ச்சியும் சம்பவிக்கிறதுண்டு. இவ்விதமாய் ஒரு சரீரத்தினின்று மற்றொருசரீரம் உண்டாகின்ற இந்தத் தொடர்ச்சிப்பிரவாகத்தினால் பெற்றோர்களின் அம்சங்கள் சந்தானங்களுக்கமைகிறதென்று புலனறிவு சாஸ்திரத்தால் நாம் அறிகிறோம், ஆனால் மனோபாவங்களும் குணநிசயங்களும் ஒருசரீரத்தினின்று உற்பத்தியாகும். மற்றொரு சரீரத்திற் கிறங்குகிறதில்லையென்று லௌகிக சாஸ்திர அபிஞர்கள் அறிந்திருக்கிறார்கள். ஆகவே, பிரஞ்ஞை விகாசத்தின் காரணத்தைச் சொல்லத்தடுமாறி மயங்குகிறார்கள். ஜன்மாந்தரம் உண்டென்று அவர்கள் ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் அவர்களுடைய கொள்கை நிறைவாகும். சரீரவிகாசத்திற்குச் சரீரங்களின் பிரவாகத் தொடர்ச்சி யெப்படி இன்றியமையாததோ, அப்படியே மனோபாவம், குணநிசயங்கள், மேன்மேலும் விகாசம் பெறுகிறதற்கு பிரஞ்ஞைப் பிரவாகத்தொடர்ச்சி அத்தியாவசியகமாக விருக்கிறது. இந்தத்தொடர்ச்சியே வாத்மாவின் பிரஞ்ஞையாம். ஜீவன் அதன் நிலைமைக்குத்தக்கபடி சரீரத்தைப் பெறு

கிறான். அந்தச்சரீரத்தை ஆசிரயித்து அதன்மூலமாய்த் தன் சுவபாவ சக்திகளை அபிவிருத்திசெய்கிறான். அதன் மூலமாய்ச்சரீரத்தையுங்கூட விருத்திபண்ணுகிறான். இவ் விதமாக ஒரு சரீரத்தினின்று உண்டாகும் சந்ததிகளின் சரீரங்கள் அந்தச்சரீரத்தின் அபிவிருத்தி அம்சங்களையும் பெறுகின்றது. அந்தச் சரீரங்களிலிருக்கின்ற ஜீவாத் மாக்கள் இவ்வண்ணம் அபிவிருத்திசெய்ய மேன்மேலும் சரீரங்கள் விருத்தியடைகின்றன. பழையசரீரம் சிதில மாய்ப்போக அதைவிட்டு ஜீவாத்மா, வேறு சரீரத்தை முன் சொல்லுகிறபடி பெறுகிறான்.

பிராணி சரீரஸ்திதியில் அனுபவிக்க வேண்டிய அனுபவங்க ளெல்லாம் ஆனபிறகு மனுஷ சரீர மடைய ஜீவன் ஆயத்தமாகிறான். ஈசுவரனின் மூன்று சக்திகளின் ஆபாசங்களான ஜீவனுடைய கிரியாத்மக சுவபாவம் விகசிக்க ஆரம்பிக்கிறது. நான் இனிச் சொல்லுகிறபடி மனுஷனான ஜீவாத்மா தன்னிடத்தில் எப்பொழுதும் குப்தமாயிருந்த ஞான, இச்சா, கிரியா, சக்தி இவைகளின் விகாசத்தைப்பெறுகிறான். இவை களினால் அகம்பாவத்தன்மை வெளிப்படுகிறது. அகங்கார தத்துவம் தோன்றுகிறது. நீ, நான் என்ற பிரஞ்ஞை துரிதமாக விருத்தியாகிறது. பிராணிவர்க்க சரீரத்தை உடைத்தாயிருக்கும் காலத்தில் வெளிப்பட்ட இச்சா ஸ்வ பாவமானது இப்பொழுது அதிக வலிமைபெற்று விருத்தி யாகி இப்பொழுது அபிவிருத்தியாகிக்கொண்டு வருகிற மனத்தை அடிமைப்படுத்தி அதன் சக்திகளைத் தன்னு டைய அபீஷ்டங்களை நிறைவேற்றிக்கொள்ள வேண்டிய வாறு உபயோகித்துக் கொள்ளுகிறது. மனம் தாருட்டி யத்தை அடைந்துகொண்டு வரவும், அடங்காத ஆசைப்

போக்கினால் விளைந்த துன்பங்களை ஜீவாத்மா அனுபவத்தினால் தெரிந்துகொண்டு ஆசையின் போக்கைத் தடுத்து அதைத் தன் சுவாதீனப்படுத்தத் தன்னுடைய கோரிக்கைப்படி நடத்த முயலுகிறான். தன்னுடைய தெய்வீக சுவபாவத்தைக் கொஞ்சங் கொஞ்சமாக ஜீவாத்மா அறிந்துகொள்ளத் தனக்கும், உபாதி சம்பந்தமான ராகாதிகளுக்கும் நீண்ட போராட்டம் ஆரம்பிக்கிறது.

அடியில் வருமாறு கடோபநிஷத் I ம் காண்டம், III வது வல்லியில் 3, 7 வது மந்திரங்களில் கண்டிருக்கிறது.

𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌰𑌥𑌿𑌨𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿
𑌶𑌰𑍀𑌰𑌂 𑌰𑌥𑌮𑍇𑌵 𑌤𑍁 ||
𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌤𑍁 𑌸𑌾𑌰𑌥𑌿𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿
𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌗𑍍𑌰𑌹𑌮𑍇𑌵 𑌚 ||
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌹𑌯𑌾𑌨𑌾𑌹𑍁𑌃
𑌵𑌿𑌷𑌯𑌾𑌂𑌸𑍍𑌤𑍇𑌷𑍁 𑌗𑍋𑌚𑌰𑌾𑌨𑍍 ||
𑌆𑌤𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍋𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌭𑍋𑌕𑍍𑌤𑍇𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌰𑍍𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 ||
𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌾𑌨𑍍 𑌭𑌵
𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑍇𑌨 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌦𑌾 |
𑌤𑌸𑍍𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍍𑌯𑌵𑌶𑍍𑌯𑌾𑌨𑌿
𑌦𑍁𑌷𑍍𑌟𑌾𑌶𑍍𑌵𑌾 𑌇𑌵 𑌸𑌾𑌰𑌥𑍇𑌃 ||
𑌯𑌸𑍍𑌤𑍁𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌾𑌨𑍍𑌭𑌵𑌤𑌿
𑌯𑍁𑌕𑍍𑌤𑍇𑌨𑌮𑌨𑌸𑌾𑌸𑌦𑌾 ||
𑌤𑌸𑍍𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿𑌵𑌶𑍍𑌯𑌾𑌨𑌿
𑌸𑌦𑌶𑍍𑌵𑌾𑌇𑌵𑌸𑌾𑌰𑌥𑍇𑌃 ||
𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌾𑌨𑍍 𑌭𑌵
𑌤𑍍𑌯𑌮𑌨𑌸𑍍𑌕𑌃𑌸𑌦𑌾𑌽𑌶𑍁𑌚𑌿𑌃 ||

𑌨 𑌸 𑌤𑌤𑍍𑌪𑌦𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿
𑌸𑌂𑌸𑌾𑌰𑌂 𑌚𑌾𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥.

(இ-ள்.) (கருமபல போக்தாவான) ஜீவனை, ரதத்தின் சுவாமியாக அறி, தேகத்தை ரதமாக அறி, புத்தியைச சாரதியாக அறி, மனத்தைக் கயிருக அறி. இந்திரியங்களைக்குதிரைகளாகச சொல்லுகிருர்கள். அந்தக் குதிரைகளாகிய இந்திரியங்களுக்குச சப்தாதி விஷயங்களை மார்க்கங்களாகச சொல்லுகிருர்கள். சரீரம், இந்திரியங்கள், மனம், இவைகளுடன் கூடியவனைப் புஜிக்கிறவனென்று வித்வான்கள் சொல்லுகிருர்கள். எந்தப் புத்தி என்னும் சாரதி அவிவேகியாகவிருக்கிருனே, சமாதானமடையாத மனத்துடன்எப்பொழுதும் கூடியிருக்கிருனே, அவனுக்கு இந்திரியங்கள், சாரதிக்குத் துஷ்டக் குதிரைகள்போல, சுவாதீனப்படாதவைகளாக ஆகின்றன. விவேகியான சாரதி எந்தப் புத்தியாகிற சமாதானமடைந்த மனத்துடன் எப்பொழுதும் கூடியிருக்கிருனே, அவனுக்கு இந்திரியங்கள் சாரதியின் நல்ல குதிரைகளபோல வசியங்களாக ஆகின்றன.

எந்த ரதிகன் விவேகரகிதனும், மனோநிக்கிரக மற்றவனும் எப்பொழுதும் அபரிசுத்தனும் இருக்கிருனே, அவன் அக்ஷரப் பிரம்மமாகிய பரமபதத்தை அடைகிருனில்லை. ஜனனமரணமாகிய சம்சாரத்தை அடைகிருன்.

உலகத்தின் ஒரு ஜன்மம் முடிய ஜீவன் ஸ்தூல சரீரத்தினின்று பிரிகிருன். அக்ஷய சரீரம் பெற்று லோகாந்தரங்களுக்குச் செல்லுகிருன். உலகத்தில் இருந்த காலத்தின் தரும பலங்களைத் தன்னுடன் கொண்டுபோகிருன். அவைகளை அனுபவிக்கவேண்டிய லோகங்களில் அனுபவித்துத் தீர்க்கிருன். பிரகதாரண்ணிய கோபநிஷத்தில் இதன் விவரணத்தைச் சொல்லியிருக்கிறது. ஜீவன், ஞான அனுபவத்துடனும் கர்ம பலத்துடனும் சரீரத்தைவிட்டுப் பிரிகிருன்.

ப்ரு உபநிஷத். IV. IV. 4.

𑌤𑌦𑍍𑌯𑌥𑌾 𑌪𑍇𑌶𑌸𑍍𑌕𑌾𑌰𑍀 𑌪𑍇𑌶𑌸𑍋
𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌮𑌪𑌾𑌦𑌾𑌯𑌾𑌨𑍍𑌯𑌨𑍍𑌨𑌵𑌤𑌰𑌂
𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌤𑌰𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌤𑌨𑍁𑌤 𑌏𑌵
𑌮𑍇𑌵𑌾𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑍇𑌦𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌨𑌿𑌹
𑌤𑍍𑌯𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂 𑌗𑌮𑌯𑌿𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌯𑌨𑍍𑌨𑌵𑌤𑌰𑌂
𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌤𑌰𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 ||

(இ-ள்.) பிறகு ஒருதட்டான் ஒரு தங்கக்கட்டியை எடுத்துப் புதிதானவும் அழகானவுமான ரூபத்தை எவ்விதம் அமைக்கிறானோ அதுபோலவே ஆத்மாவானவன் முந்திய சரீரத்தைக் கழற்றி எறிந்துவிட்டு அவித்தையைத் தொலைத்துப் புதிதானவும் அழகானவுமான சரீரத்தை அமைத்துக்கொள்ளுகிறான்.

இந்தச் சரீரத்துடன் கருமத்தினால் அவனுக்கேற்படும் லோகாந்தரத்துக்கு அவன் போகிறான். (அதைப் பற்றி ஆறாவது அத்தியாயத்தில் விவரமாய்ச் சொல்லப்படும்.) அதன்மேல் அந்தலோகத்தில் கருமபலத்தை அநுபவித்ததின்மேல் என்ன சம்பவிக்கிறதென்ற விஷயத்தைப் பற்றி அடியில் கண்டபடி உபநிஷத்து சொல்லுகிறது.

பிரகதாரண்ணிய கோபநிஷத், 4 வது கண்டம், 4 வது அத்தியாயம், 6 வது மந்திரம்.

𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌸𑍍𑌤𑌸𑍍𑌯
𑌯𑌤𑍍𑌕𑌿𑌂𑌚𑍇𑌹 𑌕𑌰𑍋𑌤𑍍𑌯𑌯𑌮𑍍 ||
𑌤𑌸𑍍𑌮𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌤𑍍 𑌪𑍁𑌨𑌰𑍈𑌤𑍍𑌯𑌸𑍍𑌮𑍈
𑌲𑍋𑌕𑌾𑌯 𑌕𑌰𑍍𑌮𑌣 𑌇𑌤𑌿 𑌨𑍁 𑌕𑌾𑌮𑌯𑌮𑌾𑌨𑌃 ||

(இ-ள்.) இவ்வுலகத்தில் செய்த கர்மத்தின் பலத்தை அவ்வுலகத்தில் அனுபவித்த பிற்பாடு அந்த உலகத்தைவிட்டு இந்தக் கர்மபூமிக்கு மறுபடியும் வருகிறான். காமிகளின்வரலாறு இவ்விதந்தான்

காமத்தில் அழுந்த அழுந்த இந்தக் கதிதான் திரும்பத்திரும்ப நேரிடும். புனரபி மரணம், புனரபி ஜனனம்

என்ற சக்கரத்தில் காமத்தினால் கட்டப்படுகிறான். இதுவே காமிகளின் வரலாறு.

இதே அபிப்பிராயத்தை தேவீபாகவதத்தில் 4 வது கண்டம், 21 வது அத்தியாயம், 22 முதல் 25 வரையுள்ள சுலோகங்களில் சொல்லியிருக்கிறது.

> പൂൎവ്വദെഹം പരിത്യജ്യ
> ജീവഃ കൎമ്മവശാനുഗഃ ||
> സ്വൎഗ്ഗം വാ നരകം വാപി
> പ്രാപ്നോതി സ്വകൃതേന വൈ ||
> ദിവ്യദെഹഞ്ച സമ്പ്രാപ്യ
> യാതനാദെഹമഥവാ ||
> ഭുനക്തി വിവിധാൻ ഭോഗാൻ
> സ്വൎഗ്ഗെ വാ നരകേഽഥവാ ||
> ഭോഗാന്തെ ച യദോത്പത്തിഃ
> സഞ്ചയസ്യ സജ്ജായതേ ||
> തദൈവ സഞ്ചിതേഭ്യശ്ച
> കൎമ്മഭ്യഃ കൎമ്മഭിഃ പുനഃ ||
> യോജയത്യേവ തം കാലഃ |

(இ-ள்.) பூர்வ சரீரத்தைவிட்டு ஜீவனானவன் கர்மவசத்துக்குட்பட்டு கர்மத்துக்குத் தக்கபடி ஸ்வர்க்கம் அல்லது நரகத்தை அடைகிறான். திவ்விய சரீரத்தைப்பெற்று ஸ்வர்க்க பலனை அனுபவிக்கிறான். அல்லது காமகாரணமா யேற்பட்ட யாதனா சரீரத்தைப் பெற்று நரக அனுபவங்களை அனுபவிக்கிறான்.

பலன்களை அனுபவித்ததின் முடிவில் மறுபிறப்பின் காலம்வரச் சஞ்சித கர்மத்தில் அனுபவிக்கிறதற்கு லப்தமான பிராரப்த கர்மத்துடன் பிறக்கிறான்.

மனுஷ்யவர்க்கத்தின் ஜீவன் உற்பவிக்கிறதினால் முக்கியமாய் ஜீவாத்மாவின் சித்பாவம் விகாசப்படுகிறதும் தவிர இச்சா பாவமானது களங்கம் நீங்கி பரிசுத்தத்தை அடைகிறது. ஆகவே மனமும் பின்பு புத்தியும் தோன்றுகின்றன.

மகாபாரதத்தில் மனுஷ்யனுடைய சரீரங்களின் அமைப்பைப்பற்றித் தெளிவாய் விவரித்திருக்கின்றன.

(சாந்திபர்வம் 202=வது அத்தியாயம்) அதினின்று அடியில்வருமாறு ஸங்கிரகித்து விவரித்திருக்கிறோம்:

மனிதனிடத்தி லிருக்கிற பிரத்தியகாத்மாவாகிய ஜீவாத்மாவும், பரமாத்மாவாகிய பிரம்மமும் தத்துவத்தில் ஒன்றே. அந்த பிரத்தியகாத்மாவினின்று புத்தி தத்துவமும், புத்தியினின்று மகத்தத்துவமும் விரிகின்றன. இவைகளுடன் இந்திரியங்கள் சேர சரீரத்திலிருக்கின்ற ஜீவன் பூரண மனுஷத்தன்மையை யடைகிறான். அவன் வசிக்கும் வீடாகிய சரீரமானது பஞ்சபூதங்களின் காரியமாம். இந்திரியங்கள் சரீரத்துவாரா வெளிப்பிரபஞ்ச விஷயங்களில் சம்பந்திக்கின்றன. அந்தச் சம்பந்தத்தினால் ஏற்படும் பலன்கள் (அதாவது வஸ்துக்களின் குணங்கள்) சுவபாவங்கள் இவைகளை மனத்தில் சேர்ப்பிக்கின்றன. (அதாவது) சம்பந்திக்கப்பட்ட வஸ்துக்களின் குணங்களை மனத்திற்குத் தெரிவிக்கின்றன. மனமானது இந்திரியங்களின் துவாராக விஷயங்களின் குணகுணங்களைத் தெரிந்து மனோபாவங்களாக வகுத்துப் புத்திக்குப் பிரகாசிப்பிக்கின்றது. புத்தியோ குணங்களமைந்த மனோபாவங்களின் மூலமாய் வாஸ்தவ தத்துவத்தை நுழைந்து அறிகின்றது. இதுவே ஜீவாத்மாவின் வெளி நோக்குதல். இவ்விதம் அனுபவத்தைக் கிரகித்தலே பிரவிருத்திமார்க்கமாம்.

இந்த விகாசத்தில் (Evolution) முதல் படியானது யாதெனில், வெவ்வேறான இந்திரியக் கிராஹ்யமானவைகளை அனுபவித்தலாம். இந்திரியகோளகம் மூலமாய் வெளிப் பிரபஞ்சத்தில் சம்பந்தித்துப் பஞ்சேந்திரியங்கள் கிரகிக்கும் விஷயாதிகளை மனத்தினிடத்தில் சேர்ப்பிக்க மனம் அவைகளைப் பெறுகிறது. மனத்தை ஆறாவது இந்திரியமாகச் சொல்லுகிறதுமுண்டு.

பகவத்கீதை 15 வது அத்தியாயம், 7 வது சுலோகம் இதற்காதாரமாம்.

ஷஷ்டாநீந்த்ரியாணி ||

(இ-ள்.) மனத்தை ஆறாவதாக உடைத்தான இந்திரியங்கள்.

அதாவது இந்திரியங்கள் இந்திரியகோளகங்கள், இரண்டையும் சேர்த்துப் பார்க்குங்காலத்தில் பதினொன்றாகின்றன.

இந்த்ரியாணி தசைகம் ச ||

(இ-ள்.) இந்திரியங்கள், பத்தும், ஒன்றும்.

இந்தப்படியில் மனமானது காமாதீனமாய் அனுபவிக்கிறதற்காக விஷயங்களைநாடித் தன்னுடைய சக்திகளை அபிவிருத்தி செய்துகொள்ளுகிறது. தேவர்களுக்கு உலகசம்பந்தமானவஸ்துக்களை விக்ஞானரூபமாக அர்ப்பணம் செய்யவும், அப்படிச்செய்வதினால் உலகத்தில் ஐசுவரியம் அபிவிருத்தியடையவும், பின் சுவர்க்கபோகங்களை அனுபவிக்கவும் ரிஷிகள் மனிதர்களுக்குப் போதித்திருக்கிறார்கள். அந்தக்கற்பனையை யனுசரித்து நடந்தால் ஜீவனின் விகாசம் அல்லது (அபிவிருத்தி) சீக்கிரம் உண்டாகும்.

இந்த விகாசத்தின் இரண்டாவதுபடி என்னவெனில், மனத்துக்கும், காமத்திற்கும், இடைவிடாது நேரிடும்

---

* பகவத்கீதை, 13 வது அத்தியாயம், 5 வது சுலோகத்தைப் பார்க்க.

போராட்டமாம். காமசம்பந்தமான எவ்வித சுகங்களும் முடிவில் துன்பமென்று மனத்திற்கு அனுபவரீதியாய் இப்பொழுது வெளியாகிறது.

பகவத்கீதை, 5 வது அத்தியாயம், 22 வது சுலோகத்தைப்பார்க்க.

யெஹிஸஂஸ்பஶஜாஹொமா
உஃவயொநயவஷவெத ||

(இ-ள்.) விஷயங்களாலுண்டாகும் போகங்கள் அல்லது சுகங்கள் எவையோ, அவைகள் துக்கத்திற்குக் காரணமானவைகளே.

ஆகவே போக சாதனமான விஷயங்களை நாடிச்செல்லும் சுபாவத்தைப் போக்கில்விட்டு சரியான வழியில் திருப்பாமல் முற்றிலும் திருப்ப மனம் எத்தனிக்கிறது. அதனால் தடையும் போராட்டமும் சம்பவிக்கிறது. அதினால் மனம் அதிசீக்கிரமாய் அபிவிருத்தி யடைகிறது. இவ்விதம் தடைநேரிடக் காமசுவபாவமும் கல்மஷங்கள் நீங்கிச்சுத்தத்தன்மையை யடைகிறது. இச்சாசக்தியின் மேலான பாவம் விகஸிக்க ஆரம்பிக்கிறது. இச்சாசக்தியானது காமனை ஜயித்த சிவனின் ஸ்ரீசக்தியாம். காமனே விஷ்ணு லக்ஷ்மி இவர்களின் புத்திரன். இச்சாசக்தியின் கீழான பாவஸ்வரூபி.

இந்த விகாஸத்தின் மூன்றாவதுபடி அதாவது மனத்தின் அபிவிருத்தியாவது.

*[விஷ்ணுவின் ஞானசக்தியினின்று தருமமும், இச்சாசக்தியினின்று காமமும் உற்பத்தியாகின்றன. விஷயாஸக்தியினால் மனிதனிடம் முதலில் காமபாவம் விருத்தியடைகிறது. ஆகவே தருமம் (அறம்), காமம் (இன்பம்), அர்த்தம் (பொருள்) என்று மூன்று புருஷார்த்தங்கள் ³ பிரவிருத்தி மார்க்கத்தில் விதிக்கப்பட்டிருக்கின்றன.]

விக்ஞான சக்தி மேன்மேலும் அபிவிருத்தியாகும் விஷயமாம். அங்ஙனமெனில், மனமானது காமபாசத்திற்குட்படாமலும் காமத்தினால் தூண்டப்படாமலும் சுத்தமனமாகி விஷயசம்பந்தங்களன்றித் தான் உற்பத்தி செய்யும் பாவங்களுடனே கிரீடித்துக்கொண்டிருத்தலாம். இப்பொழுது ஜீவாத்மாவுக்கு விஷயசம்பந்தமான அனுபவங்களிலும், அவைகளின் ஸ்மரணைகளிலும், சந்தோஷமில்லை. ஆனால் சுத்தமனோபாவங்களையே நாடி ஆத்ம அநாத்ம விவேசனஞ்செய்ய யத்தனிக்கிறான். இதானது புத்தியின் விகாஸத்திற்குக் காரணமாகிறது. அதனால் சுத்த அபரோக்ஷஞானம்பவிக்கிறது. அன்பும் அறிவும் ஒன்றுபட்டு ஆத்மஸாக்ஷாத்காரம் உண்டாகிறது.

மேற்கண்ட அபிப்பிராயங்களை அடியில்வரும் கீதா சுலோகங்கள் தெரிவிக்கின்றன:

𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌮𑌯𑌾𑌦𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌜𑍍
𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌃 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 ॥
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌖𑌿𑌲𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥
𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌪𑌰𑌿𑌸𑌮𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 ॥
𑌯𑍇𑌨 𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌶𑍇𑌷𑍇𑌣
𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌥𑍋 𑌮𑌯𑌿 ।

(இ-ள்) ஓ அர்ஜுனா! திரவியங்களால் செய்யக்கூடிய யக்ஞத்தைப்பார்க்கிலும் ஞானமாகிற யக்ஞமானது சிரேஷ்டமாகும். ஓ குந்தி புத்திர! ஈசுவரார்ப்பணமாகச் செய்யப்படும் சகலகர்மமும் அதின்பலனுடன் பிரம்மஞானத்தில் அடங்கியிருக்கின்றது.

அதனாலே சகலபிராணிகளையும் ஆத்மாவினிடத்திலும் (உன்னிடத்திலும்) அப்படியே என்னிடத்திலும் பார்ப்பாய்.

* 4 வது அத்தியாயம், 33, 35 வது சுலோகங்கள்.

ஜீவாத்மா இந்தப்பதவியை அடைந்தால் நிவிருத்தி மார்க்கப்படி ஏறுகிறான். "விரமிதோ துச்சரிதாத்" பாப கர்மங்களில் நின்றும் முன்னமே, ஓழிவை அடைந்திருக்கிறான். "ஶாந்த:" சாந்தனாகிறான். "ஸமாஹித:" சித்தம் ஒருமுகப்படப்பெறுகிறான். "ஶாந்தமானஸ:" சாந்தமனத்தையுடையவனாகிறான். (கடோபநிஷத், I, 2 வது வல்லி, 24 வது மந்திரத்தைப்பார்க்க.)

மறுபடி அதே உபநிஷத்து, i, iii, 8 வது மந்திரம் அடியில் வருமாறு அறிவுறுத்துகிறது.

யஸ்து விஜ்ஞாநவாந் பவதி
ஸமநஸ்க: ஸதா ஶுசி: ||
ஸ து தத்பதமாப்நோதி
யஸ்மாத் பூயோ ந ஜாயதே ||

(இ-ள்.) எவனுடைய புத்தியாகிய சாரதி விவேகத்துடன் கூடியிருக்கிறதோ, எவன் சுத்தாந்தக்கரண முடையவனாயும், அதினால பரிசுத்தமான மனத்தையுடையவனாயுமிருக்கிறானோ, அந்த ஸ்தானத்தினின்று மறுபடியும் பிறப்பை அடையமாட்டானோ, அந்தஸ்தானத்தை அடைகிறான்.

பிறப்பு, இறப்பு என்ற சக்கிரவட்டம் ஆத்மாவுக்கு எப்பொழுதும் நடைபெறக்கூடியதல்ல; பற்றினால் வருவது இது. பற்றற்றால் உறுவது மோக்ஷம். "அற்றது பற்றெனின் உற்றது வீடு" என்று பெரியாரும் பணித்தார். தன் உண்மையறியாமையால் பிரிவுத்துன்பமும் அதை யறிந்த பின், வீடும் பெறுகிறான்.

"பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்
பிறவார் உறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்னது
அற்றோர் உறுவதறிக" மணிமேகலை 2-ம் காதை 64-67

𑌮𑍃𑌤𑍍𑌯𑍋𑌃 𑌸 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿
𑌯 𑌇𑌹 𑌨𑌾𑌨𑍇𑌵 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿॥

(இ-ள்.) இங்கே பேதமிருப்பதுபோலப் பார்க்கின்றவன் (பேத புத்தியுடன் பார்க்கிறவன்) ஜனனமரணசக்கிரத்தில் சுழலுகிறான்.

𑌯𑌦𑌾 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇
𑌕𑌾𑌮𑌾 𑌯𑍇𑌽𑌸𑍍𑌯 𑌹𑍃𑌦𑌿 𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ॥
𑌅𑌥 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑍋𑌽𑌮𑍃𑌤𑍋 𑌭𑌵𑌤𑍍𑌯𑌤𑍍𑌰
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 𑌇𑌤𑌿 ॥

(இ-ள்.) ஹிருதயத்தில் ஆசிரயித்திருக்கின்ற காமபாவங்கள் எப்பொழுது சிதறி விடுபடுகின்றனவோ, அப்பொழுது மனிதன் மரணமற்றவனாகிறான். இங்கேயே (இவ்வுலகத்திலேயே) பிரஹ்ம சாக்ஷாத்காரத்தை யடைகிறான்.

இந்த தாத்பரியத்தையே பிரகதாரண்ணியகோப நிஷத். IV. IV. 23 மந்திரத்தில் சொல்லியிருக்கிறது.

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌵𑌂 𑌵𑌿𑌚𑍍𑌛𑌾𑌨𑍍𑌤𑍋, 𑌦𑌾𑌨𑍍𑌤 𑌉𑌪𑌰𑌤𑌸𑍍𑌤𑌿𑌤𑌿𑌕𑍍𑌷𑍁𑌃 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾𑌽𑌽𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵𑌾𑌽𑌽𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿, 𑌨𑍈𑌨𑌂 𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌤𑌰𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑌾𑌪𑍍𑌮𑌾𑌨𑌂 𑌤𑌰𑌤𑌿, 𑌨𑍈𑌨𑌂 𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌤𑌪𑌤𑌿, 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑌾𑌪𑍍𑌮𑌾𑌨𑌂 𑌤𑌪𑌤𑌿, 𑌵𑌿𑌪𑌾𑌪𑍋 𑌵𑌿𑌰𑌜𑍋𑌽𑌵𑌿𑌚𑌿𑌕𑌿𑌤𑍍𑌸𑍋 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍋 𑌭𑌵𑌤𑍍𑌯𑍇𑌷 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑌃 ।

(இ-ள்.) ஆசையினால் அறிந்து சாந்தியடைந்து, சமாதானம் பெற்று துவந்தமற்றுப்பொறுமையடைந்து மனிதன் தன்னிடத்தில் ஆத்மாவைப்பார்க்கிறான். எல்லாவற்றையும் ஆத்ம ஸ்வரூபமாகப் பார்க்கிறான். பாபம் அவனை மேற்கொள்ளுகிறதில்லை. அவன் பாபத்தை அதிகிரமிக்கிறான். பாபம் அவனைத் தபிக்கிறதில்லை. அவன் பாபத்தைத் தபிக்கிறான். பாபரஹிதனாய் மோகமற்றவனாய்ப் பிரம்மனாகிறான். இதுவே பிரஹ்மலோகம்.

திரும்புதல், அதாவது, நிவிர்த்திமார்க்கம் என்ன வென்றால் வெளிப்போக்கைத் தடுத்தலாம். மகாபாரதத்தில் தெளிவாய் இதைச் சூசிப்பித்திருக்கிறது. பிரவிருத்தியைப்பற்றி அதினின்று சுருக்கி எழுதின மாதிரியாய் நிவிருத்தியைப்பற்றியும் சுருக்கி எழுதுவாம். இந்திரியங்கள் சரீரமூலமாக வெளி விஷயங்களின் சம்பந்தத்தினின்று விலகிச் சாந்தியை அடைகின்றன. இந்திரியத் துவாரமாக ஏற்படும் விஷயங்களினின்றும் விலகி மனமானது சாந்தியை அடைகிறது. மனத்தினால் ஏற்படும் பாவங்கள்விலகி விஞ்ஞானம் சாந்தமடைய அதில் ஆத்மா பிரதிபலிக்கிறான். இந்திரியங்களில் பிரவிருத்திக்கிற பரியந்தம் மனத்திற்குத் துக்கந்தான் பிராப்தியாகிறது. விஞ்ஞானத்தை நோகக ஆனந்தம் லபிக்கிறது.

ஜீவாத்மா நிவிருத்திமார்க்கத்தில் நடைபெறச் சம்சார அலைச்சலினின்று திரும்பி தன்னுடைய யதார்த்தம் சாசுவதமாகவிருக்கின்ற வாசஸ்தானத்தை அடைகிறான். அப்படி நிவிருத்தி மார்க்கத்தில் நடைபெறுகையில் தான் பிரவிருத்தி மார்க்கத்தி லிருந்தகாலத்தில் ஏற்பட்ட ரணங்களைத் தீர்க்கிறான்.

ஞானமென்றால் ஆத்மதரிசனமே, பக்தியென்றால் ஆத்மாவுக்கு அன்பு பாராட்டுதல், கர்மமென்றால் ஆத்ம சுசுருஷை. ஞானம், பக்தி, கர்மம் என்ற இம்மூன்று மார்க்கங்கள் மோக்ஷவழியாம். சித்து, அம்சம் அதாவது விஞ்ஞான அபிவிருத்தியை யுடையவர்கள் ஞானமார்க்கத்துக்கு அதிகாரிகள். இச்சையபிவிருத்தியுடையவர்கள் பக்திமார்க்கத்துக்கு அதிகாரிகள். கிரியை அபிவிருத்தியுடையவர்கள். கர்மமார்க்கத்திற்கு அதிகாரிகள். ஆனால்

ஒவ்வொரு ஜீவாத்மாவும் கிரியாத்மகமாயிருப்பதால் இந்த மூன்று பாவங்களும், அதாவது சித்து, இச்சை, கிரியை இவைகளின் விகாஸம் ஒவ்வொருமார்க்கத்திலும் நடைபெற்றுவரவேண்டும். ஞானி விஞ்ஞானத்தையடையும் பொழுதே அவனிடத்தில் பக்தியும் சத்கர்மமும் காணப்படும். பக்தி பூர்ணமாகிறபொழுது, பக்தனிடத்தில் சத்கர்மமும் ஞானமுமிருக்கும். காமி தன் கர்மம் முழுவதும் நிஷ்காம கர்மமாக ஏற்படுத்திக் கொள்ளுங்காலத்தில் ஞானத்தையும் பக்தியையும் அடைவான். உண்மையில் மூன்று மார்க்கங்களும் ஒரு முடிவையுடையன. ஆனால் சுபாவங்கள் மூன்றுவிதமாய் வேற்றுமைப்பட ஒவ்வொருமார்க்கத்தை உறுதியாக ஏற்றுக்கொள்ளுகிறான். யோகத்தினால் ஆத்மதரிசனம், ஆத்மாவுக்குப் பக்தி செய்தல், ஆத்ம சுசுருஷை இம்மூன்றும் அமையப்பெறும்.

சாங்கியம், யோகம் என்ற தர்சனங்களைப்பற்றி பகவத்கீதை, 5 வது அத்தியாயம், 4, 5 சுலோகங்களில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்லியிருக்கும் அபிப்பிராயம் இவ்விடத்தில் பொருந்தும்.

𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌯𑍋𑌗𑍌 𑌪𑍃𑌥𑌗𑍍𑌬𑌾𑌲𑌾𑌃
𑌪𑍍𑌰𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌨 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 ||
𑌏𑌕𑌮𑌪𑍍𑌯𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍
𑌉𑌭𑌯𑍋𑌰𑍍𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑍇 𑌫𑌲𑌮𑍍 ||
𑌯𑌤𑍍𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑍈𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂
𑌤𑌦𑍍𑌯𑍋𑌗𑍈𑌰𑌪𑌿 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 ||

(இ-ள்.) ஞானகர்மயோகங்களின் பலன் வெவ்வேறென்று அவிவேகிகள் சொல்லுகிறார்கள். அறிஞர்கள் அப்படிச்சொல்லுகிறதில்லை. ஏனெனில் இரண்டில் ஒன்றையாவது செவ்வையாய் அனுஷ்டிக்கிறவன் இரண்டினுடைய பயனை (மோக்ஷத்தை) அடைகி

ருன். ஞானநிஷ்டாளான ஸந்நியாஸிகளால் எந்த ஸ்தானமானது அடையப்படுமோ, அந்த ஸ்தானமானது கர்மயோகிகளாலும் அடையப்படும்.

மோக்ஷத்தை அடைந்தவன் முக்தன். அவன் திரிலோகங்களிலும் அவன் யுக்தப்படி வேலை செய்யவும் வேலை செய்யாமலுமிருக்கலாம். ரிஷிகள், முக்தர்கள் உலகங்களை ஆயினும், நடத்தலிலும் பாதுகாத்தலிலும் அவர்கள் இருந்து கொண்டிருக்கிறார்கள். ஜனகர் முக்தர்; ஆனால் அரசனாயிருந்து இராச்சிய பரிபாலனஞ்செய்து வந்தார். துலாதாரர் முக்தர்; ஆனால்வியாபாரியாகவிருந்து கொண்டு வாணிபம் செய்துவந்தார். இதிகாசத்தில் எத்தனையோ முக்தர்களைப்பற்றிச் சொல்லியிருக்கிறதில் அவர்கள் உலகசம்சாரபந்தங்களினால் சூழப்பட்டிருக்கிறார்கள். முக்தியென்றால் மேற்கண்டவைகளைவிட்டு விலகுவது அன்றாம். ஆனால் தனக்குள் தன்னுடைய சுவபாவத்தை பேதப்படுத்தல் மாத்திரந்தான். ஜீவாத்மா தானிருக்கும் நிலைமைக்கு ஏற்பட்ட விருத்திகள் காரியங்களை மாற்றுகிறது முக்தி அன்றாம். ஆனால் ஆத்மாவுக்கும், அநாத்மாவுக்கும், தனக்கும் இருக்கும் நிலைமையை உள்ளபடி அறிதலாம்.

பொதுவாக விகாஸம் (Evolution) மென்மேலும் அபிவிருத்தியே அடைந்து கொண்டிருந்தாலும் சிறுபான்மை இடையே வக்கிரம் நேரிடுகிறதுண்டு. சிலபிராசீன ஆரியகிரந்தங்களில் அப்படி வக்கிரக்கிறதினால் அதிக அபாயத்துக்கு இடமுண்டென்று வற்புறுத்திக்கூறியிருக்கிறது. இக்காலத்தைவிட ஆதிகாலத்தில் வக்கிரம் சுலபமாய் நேரிடுகிறதற்கு ஆஸ்பத மிருந்திருக்கிறது. அதற்குப்பிற்பட்டகாலத்தில் கீதை 16 வது அத்தியாயம், 19 வது சுலோகத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லுகிறபடி, மகா

அதமர்களான மனிதர்கள் மாத்திரம், அசுரயோனி களில் பிறக்கின்றார்கள். அதாவது கொடியபாபகுலத்தில் பிறக்கின்றார்கள். விதிக்கிரயம் என்னவென்றால், ஒருவன் மனிதபதவிக்குக்கீழாகத் தன்னுடைய நடத்தையினால் தன்னைத்தாழ்த்தி நடத்திக்கொள்வானாகில் அதனால் தனக்கு ஏற்பட்டிருக்கும் அதமமான குணங்கள் அதம மான ஜீவசரீரத்தின் மூலமாய் வெளியாகி நடைபெறக் கூடும். ஆகவே புனர்ஜன்மம் வருங்காலத்தில் மனுஷ்ய யோனியில் பிறவாமல் போகிறான். மனுஷ்யஜன்மம் வெகு காலஞ்சென்று கீழான யோனிகளிற்பிறந்து பின்பு அடை வான். அப்படிக்கீழான அசுரயோனிகள் அதாவது பிரா ணிகள், ஓஷதிகள், தாதுவர்க்கங்கள் இவைகளிற்பிறந்து அந்தந்தவர்க்கங்களிலிருக்கும் ஜீவன்களுடன் தான் ஒண் டிக்குடியிருக்கிறவன்போலிருந்து அமானுஷ்யமான கீழா ன கர்மபந்தங்களை அனுபவித்துத் தொலைத்து அவை கள் அற்றுப்போகப் பின்பு அதினின்று கரையேறிமனுஷ் யலோகத்தில பிறப்படைய அருகனாகிறான். யாதாமொரு பிராணியின்மேல் வரம்புமீறின வாஞ்சை வைததால், அம்மானுஷ்யனும் இவ்வாறான கதியை யடைவான். ஆதலால் அளவுக்கு மீறின அவ்விதமான வாஞ்சை ஒரு வன் வைத்துக்கொள்ளக்கூடாது.

இந்த அதிகாரத்தில் முக்கியமாய்க் கவனிக்கத்தக்க வைகளாவன:—

(1) வித்தே மரமாவதுபோல ஜீவாத்மா பிரம்மனா கிறான். தன்னுடைய உண்மையான சுபாவத்தை அறியும் வரையில் சம்சாரத்தில் உழன்றுகொண்டிருக்கிறான்.

(2) பழைய சரீரத்தினின்று புது சரீரம் ஒன்றி னின்று மற்றொன்று உண்டாகித் தனிமையான நடை

யுடையவனுய்ச் சரீரங்களின் தொடர்ச்சிப்பிரவாகம் இருக்கிறது. அப்படி உற்பத்தியாகும் ஒவ்வொரு சரீரத்திலும் இயங்குகின்ற ஜீவாத்ம ஸ்வரூபமாகிய பிராணப் பிரவாகமிருக்கிறது.

(3) ஜீவாத்மா ஒரு சரீரம் எடுத்து அதில் அனுபவிக்கவேண்டிய அனுபவத்தை அடைந்து அது சிதிலமாய்ப்போக அதை எறிந்துவிட்டு லோகாந்தரங்களில் பலன்களை யனுபவித்து பூமியில் ஜன்மம் எடுக்கிருர்.

(4) தன்னுடைய துன்மார்க்கத்திஞலே பிராணி சரீரங்களை ஜீவாத்மா எடுத்து மனுஷ சரீரத்தை அடையத்தாமதப்படுகிருன்.

(5) மனத்தின் விகாஸத்தில் மூன்று படிகளுண்டு, (1) காமவசமாயிருத்தல், (2) காமத்தோடு போராட்டம், (3) காமத்தை ஜயித்தல். அதன்மீது விஞ்ஞானம் பவித்தல்

(6) புத்திவிகாஸ முண்டாகுதல்: அதன்மூலமாய் மோக்ஷப்பிராப்தி.

(7) மோக்ஷத்திற்கு மூன்று மார்க்கங்கள் உள. ஞானம், பக்தி, கர்மம், இவைகள் கடைசியில் ஒரு முடிவை யுடையன.

முதற்பிரிவு

3 வது அதிகாரம் முற்றிற்று.

முதற்பிரிவு.

# 4. வது அத்தியாயம்.

## கர்மம்.

---

கர்மம் என்ற பதத்திற்குச் செய்கை அல்லது தொழில் என்பது பொருள். ஒவ்வொரு தொழிலின் ஸ்வ பாவம் மூன்று பிரிவுள்ளது. இறந்தகாலத்தின் சிறு பான்மையைப்பற்றியும் நிகழ்காலத்தின் சிறுபான்மை யைப்பற்றியும், எதிர்காலத்தின் சிறுபான்மையைப்பற்றியு மிருக்கிறது. அதனால் கர்மம் என்ற வார்த்தை செய்கை அல்லது சம்பவங்களின் தொடர் என்ற அர்த்தத்தில் உப யோகிக்கப்படுகிறது. அதாவது காரியகாரணத் தொடர் என்ற அர்த்தத்தில் விளங்குகின்றது. கர்மம் எதன் காரியமோ அதனின்று வேறன்று. அதன் பகுதியாம். அதனின்று பிரிக்கக்கூடியதன்று. காரியமானது கார ணத்தின் எதிர்காலத்தைக் குறிக்கின்றது. அதில் எதிர் கால அம்சத்துடன் நிகழ்கால அம்சமுமிருக்கிறது. உதாரணமாக, ஒருவன் துன்பத்தை அனுபவிக்கிறான். அஃது ஒரு பிசகான செய்கையின் காரியமன்று. பிசகான செய்கையினின்று வேறு படுத்தக்கூடிய காரியமன்று. ஆனால் அந்தச் செய்கையில் ஒரு அம்சமே. துன்பம் அனுபவம்மாத்திரம் பிற்பட்டிருக்கலாம். ஒரு யுத்தவீரன் ஒரு யுத்தத்தில் காயப்படுகிறான். யுத்த ஆவேசத்தி லிருக் கும் காலத்தில் அந்த ரணத்தின் நோவை உணர்கிறா னில்லை. யுத்த ஆவேசம் தணிந்து ஸ்வபாவ நிலைமைக்கு

வரும்பொழுது ரணத்தின் துன்பத்தை உணர்கிறான். அப்படிப்போல ஒரு மனிதன் பாபம் செய்கிறான். செய்கையில் துன்பத்தை உணர்கிறானில்லை; பின்பு துன்பத்தை உணர்கிறான். காயம் அல்லது ரணத்தினின்று அதனால் ஏற்படும் துன்பம் பிரிக்கக்கூடியதன்று. நெருப்பினின்று உஷ்ணத்தைப் பிரிக்கக்கூடாமைபோலும் அநுபவத்தில் மாத்திரம் அதன பயனைய் அநுபவிக்கிறது போல் தோன்றும்.

ஆகையால் எல்லாச் சம்பவங்களும் ஒன்றுக்கொன்று தொடர்ச்சியாய்ச் சங்கிலிப் பின்னலா யிருக்கின்றன. இறந்தகாலம், வருங்காலம் இரண்டிற்கும் சம்பந்தமில்லாத சம்பவம் கிடையாது. தேவிபாகவதம், 1-வது காண்டம், 5-வது அத்தியாயம், 74-வது சுலோகத்தில் இதந்த வாறு இருக்கிறது.

அகாரணம் கதம் கார்யம்
ஸம்ஸாரேऽத்ர பவிஷ்யதி ॥

(இ-ள்) இந்த சம்சாரத்தில் காரணமில்லாமல் காரியம் எப்படிச் சம்பவிக்கும்; ஆகவே ஜீவாத்மா பிரமாண வரம்புக்குட்பட்டவனாய்த் தன்காரியங்களை யெல்லாம நடத்தவேண்டியவனாயிருக்கிறான். பிரகிருதிதர்மம் என்று சொல்லப்பட்டவிதியின் பலபிரிவுகளை ஜீவாத்மா அறிந்துகொள்ளாமற்போனால் அவைகளின் வசமாய்ச சுதந்திரமில்லாதவனாய்ப் பிரகிருதிசுபாவங்களின் பிரவாக கதியாய் அவைகளால் அங்கு மிங்கும் மோதப்பட்டு அவைகள்போனபடியெல்லாம் இவனையும் இழுத்துக்கொண்டு போகின்றன. அவைகளை யறிந்தானாகில் அவைகளைத் தான்வசப்படுத்திக்கொண்டு கருத்துக்களை நிறைவேற்றிக்கொள்வான். அஃது எதுபோலென்றால், துடுப்பு, பாய், சுக்கான் இவைகளில்லாமல் ஒருபடகு காற்றினாலும் ஜல ஓட்டத்தினாலும் பராதீனப்பட மாலுமியானவன் தன்னால் சுவாதீனப்படுத்தக்கூடாமல் திகைத்திருக்கும் நிலைமையில் பலாத்காரமாய் காற்று ஜல ஓட்டம் இவைகள் தன்னை இழுத்துக்கொண்டு

போகிறது. ஆனால் துடுப்பு, பாய், சுக்கான், உதவியுள்ளவனுய்ச் சாமர்த்தியமுள்ள ஒருமாலுமிதான் நோக்கினதிக்கெல்லாம் படகை ஓட்டுவான். அதனால் காற்று ஜல ஓட்டம் இவைகளின் கதியைத் திருப்புகிறான் என்பது அருத்தமன்று. ஆனால் அவைகளின் கதிகளைத்தெரிந்து எவ்விதமாய்ப்போனால் அவைகள தனக்கு அனுகூலமாயிருக்குமோ அதற்குத்தக்கவாறு காற்றிற்கும் வெள்ள ஓட்டத்திற்கும் ஒன்றுக்கொன்று ஈடுகொடுத்து அவைகளைத் தன்வசப்படுத்த வேண்டியவாறு அவைகளின் பிரயோஜனத்தைப் பெறுகிறான். அவ்வண்ணம் பிரகிருதி சுவபாவங்களை யறிந்தவன் தன்னுடைய போக்குக்கு அனுகூலமாயிருக்கிறவைகளைச் சுவாதீனப்படுத்திக்கொண்டு தன்னை எதிர்க்கின்றவைகளின் வேகத்தை மற்ற உபாயத்தினால் தணித்து உலககாரியங்களை நடத்துகிறான். ஆகையால் அறிவு இன்றியமையாதது. அறிவின்மை அடிமைப்படுத்தும்.

பிரகிருதி தருமம் என்றால், ஒன்றை இவ்விதமாய்ச் செய்யவேண்டுமென்று கட்டளையிடும் விதியன்றாம். ஆனால் இன்ன இன்ன நிபந்தனைகள் அமைந்தால் இன்ன இன்ன கர்மம் முடிவுபெறும் என்பதாம். உதாரணமாக, சாதாரணமாய் ஏற்படும் வாயுவிற்குரிய பாரம் இயங்குகையில் (Atmospheric pressure) சீதோஷ்ண அளவை இயந்திரத்தில் 100 டிகிரி (degree) அளவில் அந்த யந்திரத்தில் ரஸம் நிற்குங்காலத்தில் ஜலம் கொதிப்பெடுக்கும். இஃது ஒருபிரகிருதிதருமம். இதனால் ஒருவனை ஜலத்தைக் கொதிப்பிக்கும்படியாக விதி ஏற்படவில்லை. ஆனால், 100 டிகிரியில் (degree) தண்ணீர்கொதிக்கவேண்டுமென்று அபேக்ஷை இருந்தால் அவ்விதமுண்டாகிறதற்குரிய நிபந்தனைகளை இந்தப்பிரகிருதிதர்மத்தால் அறிகிறோம். ஒருவன் உயர்ந்த ஒருமலையின்மேலில் இருந்தானானால் வாயுவுக்குரியபாரமானது சமபரப்பி லிருக்கிறதைவிடக் குறையும். ஆகவே சமையலுக்குப்போதுமானபடி உஷ்ணம் உண்டாகாமல் கொதிநிலையும்(boiling point) குறைவுபடும். அதா

யது 100 டிகிரிக்குக்குறைந்து கொதிப்பு உண்டாகும். இந்த ஸ்திதியில் பிரகிருதிதருமத்தால் எந்த உபாயத்தைத்தேடிக்கொள்ளலாமெனில், வாயுவுக்குரிய பாரத்தை விருத்திசெய்தால் முன்போல கொதிநிலையும் 100 டிகிரியாயிருக்கும்பொழுது ஜலத்தைக் கொதிப்பித்துக் கொள்ளலாமென்று தெரிந்துகொள்ளலாம். அதற்காகப் பாத்திரத்திலிருக்கிற ஜலம்பொங்கி ஆவி மத்தனிக்குங்காலத்தில் ஆவி வெளிப்போகாமல் பாத்திரத்தை மூடி அதனால் நீராவியின் பாரத்தை வாயுவுக்குரிய பாரத்துடன் சேர்ப்பிக்க 100 டிகிரி கொதிநிலையும், உண்டாகும்படியாகச் செய்து கொள்ளலாம். ஒவ்வொரு பிரகிருதி தருமமும் அவ்வாறே. பிரகிருதி தருமங்கள் இன்ன இன்ன நிபந்தனைகள் ஏற்பட்டால் இன்ன இன்ன கர்மபலன்கள் சம்பவிக்குமென்று குறிப்பிடும். எந்தக் கர்மபலன்களை இச்சிக்கிறோமோ அவைகள் நிகழும் வண்ணம் நிபந்தனைகளையும் சரியாய் அமைக்கவேணும். அப்படி அமைக்கவே நினைத்த கர்மபலன் தவறாமல் சித்திக்கும்.

ஆகவே, பிரகிருதி தருமம இன்ன கர்மத்தைச் செய் யென்று கட்டளையிடாது. ஆனால் கர்மபலன்கள் பலிக்கும் விதத்தை மாத்திரம் தெரிவிக்கும். ஆகையினால் பிரகிருதி தர்மஞானம் பரம சாதகமாம்.

முன் சொன்னபடி ஜீவாதமா சுவபாவத்தில் மும்பான்மையது. இச்சா ஞான கிரியா சக்தி யுடையது. முறையே சித்தம், ஞானம், செய்கை உடைத்தானது. இவைகள் சரீரங்களான உபாதிகளில் முறையே விருப்பம், புலனறிவு, நடத்தை என்று வெளியாகிறது. இம்மூன்றும் மனுஷ்யகர்மத்தை இசைவிக்கிறது. இவைகள் ஒவ்வொன்றும் அததற்குரிய தர்மப்படி நடைபெறுகின்றது.

காமம் மனோபாவத்திற்குக் காரணமாய், அதைத் தூண்டி நடத்துகிறது. மனோபாவம் காமத்தினால் ஏற்பட்டதாய் அதின் நோக்கத்தைப்பற்றியதாய் கர்மத்துக்குக் காரணமாயிருந்து உலக விஷயாதிகளில் பிரவிருத்திக்கிறது. இந்த அபிப்பிராயத்தையே பிரகதாரண்ணிய கோபநிஷத், 4-வது கண்டம், 4-வது அதிகரணம், 5-வது மந்திரத்தில் அடியில் வருமாறு பிரஸ்தாபித்திருக்கிறது.

காமமய ஏவாயம் புருஷ இதி
ஸ யதா காமோ பவதி தத்க்ரதுர் பவதி।
யத்க்ரதுர் பவதி தத் கர்ம குருதே
யத்கர்ம குருதே தத் அபிஸம்பத்யதே॥

(இ-ள்) மனிதன் உண்மையாய் காமஸ்வரூபி. அவன் காமம் எப்படியோ, அவ்வாறு மனோபாவம். அவன் மனோபாவத்துக்கும் தக்கபடி அவன்செய்கை. அவன் செய்கைக்குத் தக்கபடி பலன் அனுபவிக்கிறான்.

இந்த மந்திரத்தின் கருத்து அவர் உலகத்திற்கு வித்தாமென்று சங்கரர் பாஷியம் செய்திருக்கிறார்.

கர்மத்தின் மூன்று விதிகளைப்பற்றி இனி விவரிப்பாம். அதன்மீது எந்த எந்த நிபந்தனைகளுக் குள்பட்டு உலக விஷயங்கள் சம்பவிக்கின்றன வென்பதையும், நம்முடைய கர்மகதியை நாமிச்சித்த பலன் பலிக்குமாறு எப்படி அமைத்துக்கொள்ளலா மென்றதையும் தெரிந்துகொள்வோம்.

காமம் மனிதனை விஷயங்களில் சேர்ப்பிக்கிறது. அவ்விதமாய் அவனுடைய பிரவிருத்திகளின் மார்க்கங்களை உண்டுபண்ணுகிறது.

இதற்கு ஆதார சுருதிவாக்கியம், பிரகதாரண்ணிய கோபநிஷத். IV. IV. 6.

தத³ேவ ஸக்த꞉ ஸஹ கர்மணைதி
லிங்க³ம் மநோ யத்ர நிஷக்தமஸ்ய ||

(இ-ள்) மனம் எந்தவிஷயத்தில பற்றி முழுகியிருக்கிறதோ, அந்த விஷயத்தைநோக்கிக் காமி செல்லுகிருன்.

அறுக்கமுடியாத ஆசாபாசத்திஞல் மனிதன் விஷயங்களில் கட்டுப்படுகிருன். எங்கே ஆசைக்குரிய விஷயமோ, அங்கே ஆசையுடையவன் செல்லுகிருன். நோக்கம் விஷய சுகமான பலம் எங்கே இருப்பினும் ஆசை நோக்கிய பலனை அனுபவித்துத்தான தீரவேணும்.

இதை அடியில்வரும் கீதாவாக்கியம் ஆதரிக்கிறது.

காமகாரேண
ப²லே ஸக்தோ நிப³த்⁴யதே ||

(இ-ள்) ஆசையிஞல் ஏவப்பட்டு, பலனில ஆசையுடையவன் பந்தத்தில கட்டுப்படுகிருன். பலன் நன்மைபெறும் அல்லது தீமைபெறும், சுககரமேனும் அல்லது துக்ககரமேனும், விதி, ஒரே மாதிரியாய நடைபெறுகின்றது, பலனை அபேக்ஷிககிறவரையில் மனுஷன் பந்தத்தில் கட்டுப்படுகிருன். பலன் நன்மையாகவிருந்தால், நலலகர்மம்செய்கிறவஞகவும், தீமையாகவிருந்தாலும் கெட்டகர்மம் செய்கிறவஞகவும் ஏற்படுகிருன். இந்த விதியை ஒருவன் அறிந்தாஞகில் தன் ஆசைகளின் கதியைக் கவனித்துச் சந்தோஷகரமானவிஷயங்களில் பற்றும்படி செய்வான் (அதாவது நல்லகருமங்களை சசெய்வான். அப்படிச்செய்வாஞகில் மறுஜன்மத்தில் அவைகளையடைய சந்தர்ப்பங்கள் உண்டாகும். அவைகளே அவனை எதிர்கொண்டுவரும். இது முதலாவது விதியாம். இஃது இசசா பாவத்தை யனுசரித்தது. இரண்டாவது விதி மனத்தைப் பொறுத்ததாம்.

(2) மனமே கிரியாசக்தி. எது நினைப்போ, அதுவாக ஆகிருன்.

5-வது அத்தியாயம், 12-வது சுலோகம்.

இதற்கு ஆதாரமான வாக்கியம் சாந்தோக்கி யோப நிஷத்தில் iii. XIV. 1. மம்.

𑌅𑌥 𑌖𑌲𑍁 𑌕𑍍𑌰𑌤𑍁𑌮𑌯𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋
𑌯𑌥𑌾𑌕𑍍𑌰𑌤𑍁𑌰𑌸𑍍𑌮𑌿𑌁𑌲𑍍𑌲𑍋𑌕𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋
𑌭𑌵𑌤𑌿 𑌤𑌥𑍇𑌤𑌃 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 𑌭𑌵𑌤𑌿 ॥

(இ-ள்) மனிதன் வாஸ்தவத்தில் மனோபாவ காரியமே. இந்த உலகத்தில் ஒருவன் மனோபாவம் எவ்விதம் பலிக்கிறதோ, இறந்தபிறகும் அவ்விதம் அவனாகிறான்.

பிரம்ம சங்கல்பம் அதுபோல சிருஷ்டியாம். பிரம்மப் பிரதி பிம்பமான மனத்திற்குச் சிருஷ்டித் தன்மை முக்கிய காரியமாம். பிரம்மா கிரியாசக்தி ஸ்வரூபி. ஆனால் அவர் சக்தி விசேஷம், சங்கல்பம் தமதுமட்டுந்தான். அது உல கங்களின் உற்பத்திக்குக் காரணமாம். ஆகவே சங்கல்பம் வெளிபபட்டுக் காரியமாகப்பரிணமித்து ஸ்தூல உலகமாக விகசிக்கிறது. அதுபோல மனிதனின் காரியங்கள் எல் லாம்முன் நினைத்த மனோபாவங்களின் ஸ்தூல விகாரமாம். பிரம்மா உலகத்தைச் சிருஷ்டிக்கிறார். அதுபோல மன மும் தன் உபாதிகளைச் சிருஷ்டித்துக்கொள்ளுகிறது. அவைகளின் சாதனத்தினால் சங்கல்பிக்கிறது. மனுஷ சுபாவம் சங்கற்பத்தின் காரியமாம். கர்மத்தின் மூன்று அங்கங்களில் இது முதன்மையானது. மனுஷன் நினைப்பு எப்படியோ, அப்படியே அவனைக்குறித்தும் முக்கிய சுபா வம் இப்பொழுது நினைக்கிறபடி பினபு அவ்விதமாகிறான். மேலான பாவம் அவன் நினைத்தால், மேலானசுபாவம் பெறுகிறான். கீழானபாவம் நினைத்தால் கீழான சுபாவம் பெறுகிறான. இவ்விதமாய் நன்மையுள்ளதும், சுத்தமான வும் மேலானவுமான எண்ணங்களை மனதினின்று துரத் தியும் ஒருவன் தன் சுபாவத்தைத் தானாகவே நன்றாய் உணர்ந்து அமைத்துக்கொள்ளலாம். இந்து இரண்டாம

விதி. இது மனத்தைப்பற்றியது. மூன்ருவது விதிகர்மத்தைப்பற்றியது. கர்மங்களால் விஷயசந்தர்ப்பங்கள் உண்டாகின்றன. இது சம்பந்தமாய் மஹாபாரதம் சாந்திபர்வம் 201 வது அத்தியாயம், 23 வது சுலோகத்தில் சொல்லியிருக்கிறதாவது:

— யதா யதா கூபுருஷ: கரோதி
கர்மாந்யம் கர்மயோனிர் நிவிஷ்ட: ||
ததா ததாயம் பலமஶ்நுதே
ஶுபாஶுபம் கர்மகாலம் நத்வா ||

(இ-ள்) காமபலனை அபேக்ஷித்தவனாய் எந்த எந்த விதமான கர்மத்தை ஒருவன் செய்கிருனே, அந்த அந்த கருமபலத்தை சுபமாயும் அசுபமாயும் அனுபவிக்கிருன்.

ஜலப்பிரவாகத்தை எதிர்கொண்டு மீன்கள் எப்படிப் போகின்றனவோ, அநதமாதிரியாய் முன ஜன்மாந்திர கர்மங்கள் கர்மம் செய்தவனை இந்த ஜன்மத்தில் எதிர்கொண்டுபோய்த் தாக்குகின்றன். சரீரம் எடுத்த ஒவ்வொருவனும் நல்ல கர்மத்திற்கேற்க சம்பத்தையும், துஷ்கர்மத்திற்கேற்க விபத்தையும் அனுபவிக்கிருன்.—இதற்காதாரமாக மஹாபாரதம் சாந்திபர்வம் 291 வது அத்தியாயம் 12 வது சுலோகத்தைப் பார்க்க.

— நாபீஜாஜ்ஜாயதே கிஞ்சித்
நாகர்த்வா ஸுகமேததே
ஸுக்ருதைர் விந்ததே ஸௌக்யம்
ப்ராப்ய தேஹக்ஷயம் நர:

(இ-ள்) வித்தின்றி எஞ்ஞான்றும் முளையில்லாவாம். அதுபோன்று முன் சத்கர்மமின்றிப் பின் சவுககியமின்ரும். நற்கர்மத்தால் மரணத்திற்குப் பிறகு சுகத்தைப் பெறுகிருன். பிறருக்குச் சந்துஷ்டியை ஜனிப்பித்தால மரணத்திற்குப்பின் தான் சந்

தோஷத்தை அனுபவிப்பான். துன்பத்தை விளைவித்தால் துன்பத்தை அனுபவிப்பான்.

இவ்விதமாய்க் கர்மவிதியின் கதியை நன்ருய் அறிந்து ஒருவன் தனக்கு அனுகூல அல்லது பிரதிகூல விஷய சவுகரியங்களைத் தேடிக்கொள்ளலாம். அந்தச் சவுகரியங்கள் தன்னுடைய நல்ல அல்லது கெட்ட சுபாவத்திற்குத் தக்கவாறும், இன்பத்தை அல்லது துன்பத்தை விளைவிக்கும் விஷயங்களுக்கும் தக்கவாறும் அமையப்பெறுவான். இது மூன்ருவது விதி, கர்ம நடைகளைப்பற்றியது.

இந்த மூன்று விதிகளுக்குள் கர்மச்செயல் அடங்கும். ஏனெனில் ஜீவாத்மா, இச்சா ஞான கிரியா என்ற மூன்று சக்திஸ்வரூபி. இம்மூன்றும் உலகத்தில் காமம், பாவம், கர்மமென்று விகசிக்கின்றன. மனிதனின் விதி அல்லது உள்ளது, சமயம், சீலம், விஷயசந்தர்ப்பங்களென்று மூன்று அங்கங்களாகப் பிரியவே, அவைகளுக்குள் கர்மச்செயலெல்லாம் அடங்கும். பின் வேறு சொல்ல இடமில்லை.

நாம் புதுகர்மம் செய்துகொண்டிருக்கின்ருேம். முன் செய்தவினைப்பயனையும் அனுபவித்துக்கொண்டிருக்கின்ருேம். ஆகவே, முன்செய்த வினைப்பயன்கள் என்ற வரம்புக்குட்பட்டு நாம் இப்பொழுது நடக்கவேண்டியவர்களாகவிருக்கின்ருேம். அன்று விரும்பிய விஷயங்களையடைய இன்று சமயம் ஏற்படுகிறது. அன்று நம்மால் உண்டுபண்ணப்பட்ட சீலமும், யோக்கியதையும் இன்று கைக்கொள்ளுகிருேம். அன்று நம்மால் உண்டான சந்தர்ப்பங்களில் இன்று திகழுகின்ருேம். ஆனுல் அன்று விரும்பினவனும், அன்று நினைத்தவனும், அன்று நடத்தியவனுமான சம்சாரியான ஜீவாத்மாவே அதேசக்தியுடன் இன்றுமிருக்கிருன். தன்ஞல் செய்வித்த கர்மபந்தத்தின் வரம்புக்குள்

தன் சக்திகளை வெளிப்படுத்தலாம். பூர்வகர்மங்களைக் கொஞ்சங் கொஞ்சமாய்ப் பேதிக்கலாம் (மாற்றலாம்). வரும் ஜன்மம், சவுகரியமாகப் பவிக்கும் வண்ணம், தக்கவாறு மேன்மையான நிலைமையைச் செய்துகொள்ளலாம். இக்காரணம்பற்றியே, விதியைவிட மதி பெரிதென்று பீஷ்மாசாரியாரும் சொல்லியிருக்கிறார்.

புருஷப்பிரயத்தினங்கள் கர்மகதிக்கு எதிராகப் பயனற்றனவென்று அபிப்பிராயம் ஆராய்ச்சியில்லாத தப்பான அபிப்பிராயம். கர்மகதியினால் தான் முயற்சிக்கவேண்டிய மார்க்கத்தை அறியவேண்டும். முயற்சி யின்மையாகிய செயற்சோர்வைத்தான் அடைய வொண்ணாது.

சாதாரணமாய்க் கர்மத்தைப்பற்றி ஒரு சந்தேகம் உண்டு. பழவினைப்படி நல்லவன் அல்லது கெட்டவனாகுதலும், ஒரு கர்மத்தைச்செய்தலும் செய்யாதலும் அமைந்திருக்குமாகில் அந்து அப்படித்தானே நடைபெறும். அதற்கு மாறாக ஏன் முயற்சிப்பானேன்று கேட்கிறார்கள். இம்மாதிரிகருத்துக்கொண்டுசொல்லுவதின்குற்றத்தைத் தெளிவாய்த் தெரிந்துகொள்ளல்வேண்டும். கர்மத்தின கதியைச் சரியாய் உணராததால் இந்தத் தப்பான பாவம் உண்டாயிருக்கிறது. நன்மை தீமைபோல முயற்சியும் கர்மகதியின் ஓர் அம்சமாய்க் கர்ம என்பது முன்னரே முற்றுப்பெற்று நாம் அனுபவிக்க வேண்டியதற்காக, நம்மை எதிர்நோக்கிவரும் விஷயமன்று. ஆனால் முன்வினைப்பயனால் உரு அமைந்து தற்காலம் நாம் செய்யும் வினையினால், திரிந்தும் மாறியும் விகசித்துக்கொண்டே வருவது கர்மமாம். ஒருவன் எவ்வளவுகெட்டவனாக இப்பொழுது இருப்பினும், நல்லவனாக யிருக்க விரும்பின் தன்னை நல்லவனாக்கும் கர்மத்தைச் செய்ய முயலுகிறான். ஊழ்வினைக்குத்

தக்கவாறு நல்லவன் அல்லது கெட்டவனென்று, முன்ன மேயே ஏற்பட்டு, மனிதன் சுதந்தரமற்றவனல்லன். ஆனால் தான் பகுத்தறிந்து தினம் தினம், செய்யும் கர்மத் துக்குத் தக்கவாறு நல்லவனெனறும் தீயனென்றும் ஆகி ருன். அவன் உயிருடன் இருக்கிறவனுகையால் அவனிருக் கும் வரையிலும் முயற்சித்துக் கொண்டே யிருக்கிருன்; அப்படியே இருப்பான். ஒருவழியைப் பகுத்தறிந்துவிட்டு மற்றதை யனுசரித்து முயலுகிறதில்தான் அவன் தன்னி ஷ்டம் விளங்குகிறது. அப்படி முயலாமல் சும்மா இருத்த லும், அவன் இஷ்டமே. ஒன்றும் தான் முயலாமலிருந்த தினுல் தனக்குள்ள சுதந்தரம் அல்லது இஷ்டம், இல் லாமற் போகவில்லை. ஒன்றும் முயலாமலிருத்தலே இஷ்ட மானதாகத் தீர்மானிக்கிருன். ஒருவன் விரும்பவும் வேண் டும்; நினைக்கவும் வேண்டும். முயலவும் வேண்டும். அப்படி நிகழப் பெறின் தான நினைத்துத் தீர்மானித்தவாறு தன் கர்மம் நடைபெறும் இந்தவழியினுலேயே தேவர்கள், அவர்கள் நிற்கும் உயர்நத பதவியை யடைந்திருக்கிருர் கள். அவ்வாறு மற்றவர்களும் உயரலாம். இதற்கு ஆதா ரமான வாக்கியங்கள், தேவீபாகவதம், 9-வது கண்டம், 27-வது அத்தியாயம், 18, 20 சுலோகங்களில் உள்ளன.

கர்மணா மநுர்பவேஜ்ஜீவோ
ப்ரஹ்மபுத்ர: ஸ்வகர்மணா ||
ஸ்வகர்மணா ஹரேர்தாஸோ
ஜந்மாதிரஹிதோ பவேத்
ஸ்வகர்மணா ஸர்வஸித்திம்
அமரத்வம் லபேத்த்ருவம் ||
லபேத் ஸ்வகர்மணா விஷ்ணோ:
ஸாலோக்யாதி சதுஷ்டயம் ||

[illegible]
[illegible] ||
[illegible]
[illegible] ||

(இ-ள்) ஒருவன் தன் கர்மத்தினாலே, இந்திரனாகிறான். தன் கர்மத்தினாலே, ஹரிபக்தனாகி ஜனனமரண தர்மமற்றவனாகிறான். தன் கர்மத்தினாலே, நிச்சயமாய்ப் பூர்ணத்தை அடைந்து மோக்ஷத்தைப்பெறலாம். கர்மத்தினாலே விஷ்ணு சம்பந்தமான, சாலோகியம் முதலான நாலவிதமுக்தி பெறலாம். கர்மத்தினாலே ஈசுவரத் தன்மையும், புருஷத்தன்மையும் பெறலாம். சம்விராட்டாகவும் ஆகலாம். கர்மத்தினாலேயே, சிவபதவி, கணபதிஸ்தானமும் பெறலாம்.

கர்மவிஷயத்தில் நாம் அறியவேண்டியதுயாதெனில், நம்மால் அன்றி அந்நியரால் ஏற்பட்ட மாற்றமுடியாத விதி அன்று என்று எண்ணத்தக்கது, நம்மால் ஏற்பட்டது. ஆகவே, நம்மால் எப்பொழுதும் மாற்றற்பாலது.

கர்மவிஷயமாக இன்னும் ஒரு குற்றமான அபிப்பிராயம் வழங்குகிறது. அவனவன் முன் கர்மத்துக்குத் துன்பம் அனுபவிக்கிறான். நான அந்தக கர்மகதியில் பிரவேசிககப்படாது. இவ்விதமாக எண்ணுகிறார்கள். இப்படி எண்ணுகிறவர்கள்தான் பிறர் காயத்திற்குக் காரணஸ்தர்களாகவும், தம் கர்மத்தை அனுபவிக்கவேண்டியவர்களாகவு மிருக்கிறார்களென்று ஞாபகத்திற்குக் கொண்டுவரவேண்டும். நாம் ஒருவனுக்கு உபகாரஞ்செய்தால், எந்தக் கர்மத்தினால் அவன் துன்பமனுபவிக்கிறானோ, அந்தக்கர்மம் முடிவு பெறுகிறது. அவன் துன்பநிவிருத்தி மூலமாக் நாம் அவன் கர்மத்திற்கு முன்காரணமாகவு மிருந்திருக்கிறோம். நாம் அவனுக்கு உதவிசெய்யாவிடில், பாபகர்மத்தை நாமே தேடிக்கொள்ளுகின்,

றோம். நமக்கு இனி உதவிவராமல் தடுத்துக்கொள்ளுகி றோம். வேறுயாதானும் ஒருவன் அவனுக்கு உதவிபுரிந்து அதன் மூலமாய்த் தனக்கு இனி நேரிடும் ஆபத்திற்கு உதவியான ஒரு வித்தைத் தேடிக்கொள்ளுவான். உதவி செய்தால் கர்மத்தின் கதியைத் தடுக்கிறோம் என்று சொன்னால், உதவிசெய்யாதிருந்தாலும், கர்மத்தின் கதி யைத்தடுக்கவில்லையே. இந்த ஆக்ஷேபணை இருபக்ஷத் திலும் பொருந்தும். சந்தேக எண்ணங்கள் காரணமாக நாம் நடக்கக்கூடாது. நாம்செய்யும் எந்தக்கர்மமும் நிச்சய மாகத்தெரிந்த அபிப்பிராயத்தை ஒட்டியே செயற்பாலது. பிறருக்கு உபகாரம் செய்வது நலமென்பதை அறிவோம். அறிஞர்களும் அப்படியே விதித்திருக்கிறார்கள். ஒருவன் இப்பொழுதுதுன்ப அனுபவித்திற்கேதுவாயுள்ள எல்லாக் காரணங்களைத்தெளிவாய் நிச்சந்தேகமாய் நாம் அறிந்தா லொழிய, கர்மபலத்தை அனுபவிக்கிறான்; அதனால் நாம் உதவிபுரியமாட்டோமென்று சொல்வது கூடாது.

கர்மம். (𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌂) பிராரப்தம். (𑌸𑌞𑍍𑌚𑌿𑌤𑌂) சஞ்சிதம், (𑌆𑌗𑌾𑌮𑌿) ஆகாமி, என முப்பான்மையது. பிராரப்த கர்மமாவது அனுபவ சித்தமாயிருக்கும் பழ வினை. அதன் நடையைத் தடுக்க ஒண்ணாது. அனுபவித் தேதீரவேண்டும். சஞ்சிதகர்மமாவது, பழவினைத்தொகுதி. அதைச் சிறுபான்மை, ஒருவன் சுபாவத்தினாலும், சக்தி களாலும், பலஹீனத்தினாலும், இயற்கையான தன்மை யினாலும், அறிந்துகொள்ளலாம். ஆகாமி, அல்லது, வர் த்தமான கர்மம் இப்பொழுது செய்யப்படும் கர்மம்.

இதையே தேவீபாகவதம், 6-வது கண்டம், X வது அத்தியாயம், 9, 12, 13, 14-வது சுலோகங்களால் தெரி ந்துகொள்ளலாம்.

அநேகஜந்மஸஞ்ஜாதம்
ப்ராக்தநம் ஸஞ்சிதம் ஸ்ம்ருதம் ||
க்ரியமாணஞ்ச யத்கர்ம
வர்த்தமாநம் ததுச்யதே ||
ஸஞ்சிதாநாம் புநர்மத்யாத்
ஸமாஹ்ருத்ய க்ரியஸ்க்ருஶு ||
தேஹாரம்பே ச ஸமயே
கார்முகச்யுதபாணவத் ||
ப்ராரப்தம் கர்ம விஜ்ஞேயம்

... ... ... ...

(இ-ள்) பூர்வத்தில் அனேக ஜன்மங்களில் செய்தவினைகள், சஞ்சிதம். நிகழ்காலத்தில் செய்யும் கர்மம், வர்த்தமானம். சஞ்சித கர்மத்தொகுதியினின்று ஒருபாகம் சரீரமெடுக்க ஆரம்பிக்கிறகாலத்தில் வேறுபடுத்தப்பட்டு காலத்தினால் பக்குவமாகிறது. அதற்குப் பிராரப்தம் என்று பெயராம்.

சஞ்சிதகர்மம் என்றால், கர்மங்கள் சேர்க்கப்பட்டு ஏற்பட்டதொகுதியாம். அது மனிதன் உற்பத்திக்குக் காரணங்களின் பொக்கிஷம். அவன் சுபாவங்கள் அதனின்று அமையப்பெறும். வர்த்தமான கர்மம், இப்பொழுது நடக்கும் கர்மம். இனிவருங்காலத்திற்கு வித்தாம். பிராரப்தகர்மம், இப்பொழுது பலன் அனுபவிக்கும் கர்மமாம்.

முன் சுலோகத்தில் சொல்லியிருக்கிறபடி சஞ்சித கர்மத்தின் தொகுதியினின்று ஒருபாகம் தெரிந்தெடுத்து வேறுபடுத்தப்பட்டது, பிராரப்த கர்மமாம். வேதாந்த கிரந்தங்களில் சில இடங்களில் வில்லினின்று வெளிப்பட்ட அம்பை இதற்கு உபமானமாகச் சொல்லுகிறது. ஒரு சரீரமெடுத்தகாலத்தில் அனுபவித்து முடியக்கூடிய போதுமான பாகத்தை இது சம்பந்தமான தேவதைகள் தெ

ரிந்து பிரிக்கின்றார்கள். அதற்குத்தக்கசரீரம் அமைக்கப்படுகிறது. அந்தக் கர்மம் பூராவும் அனுபவித்துத் தீரும் வண்ணம் மாதாபிதாக்கள், தேசம், ஜனவகுப்பு, ஜாதி, மற்றச் சம்பந்தங்கள் ஒத்து ஏற்படுகின்றன.

பிராரப்த கர்மத்தை முன் குறித்தபடி மாற்றமுண்ணாது. அனுபவித்துத்தான் தீரவேண்டும். அதுவிஷயமாய், நாம் செய்யக்கூடியது என்னவென்றால், அது நேரும்பொழுது நன்மையேனும், தீமையேனும், திருப்தியுள்ளவர்களாகவும், பொறுமையுள்ளவர்களாகவும் இருந்து அனுபவித்து முடித்தல்வேண்டும். அதன்மூலமாய் பழையகுணங்களைத் தீர்த்துக்கொள்ளுகிறோம். அதனால் நம்முடைய உத்தரவாதங்களை விலக்கிக்கொள்ளுகிறோம்.

இதற்கு ஆதாரமாகத் தேவீபாகவதத்தில் IVவது கண்டம். II=வது அத்தியாயம், 8=வது சுலோகத்தைப் பார்க்க.

ஷாாரப்ஷகஉூணாஂஹொஸாஶெவக்ஷயஃ ||

(இ-ள்) அனுபவிக்கவேண்டிய அனுபவங்களை அனுபவித்து முடித்தால்தான் பிராரப்தகர்மம் ஒழியும்.

புதிதுபுதிதாய்ச் சேரும் கர்மங்களால் சஞ்சிதகர்மம் வெகுவாய் மாறுதலை அடைய இடமுண்டு. இதில் துர்க்குணங்கள் சோர்வு அடையும்; நற்குணங்கள் விருத்திக்கும். ஏனெனில், நம்முடைய ஒவ்வொரு நினைப்பினாலும், இச்சையினாலும், கிரியையினாலும் சேர்மானம் உண்டாகி வரும் ஜன்மத்திற்குச் சஞ்சித கர்மமாக அமைகின்றது.

வர்த்தமான கருமமோவென்றால் பெரும்பாலும் அந்த ஜீவதசையிலேயே அழியப்பெறும். ஒரு குற்றத்திற்குப் பிராயச்சித்த மாகவேண்டுமென்று தெரிந்து சரியான உபகாரம் முதலியது செய்கிறதின்மூலமாயும், கொடுக்

க வேண்டிய கடன்களை இனிவரும் காலத்தை எதிர்பாராமல் முன்னமேயே கொடுத்து விடுகிறதின் மூலமாயும் திரும்படி செய்துகொள்ளலாம்.

இந்த விஷயத்தில் ஒரு கேள்வி பாக்கி யிருக்கிறது. கர்மசக்தியினின்று ஒருவன் எப்படி விடுபடுவான்?

இப்பிரபஞ்சத்தில் ஒருவன் இருக்கும்வரை அதன் பொது தர்மமாகிய கருமசக்தியினின்று விலகுகிறது முடியாது. தேவர், மக்கள், பிராணிகள், ஓஷதிகள், தாது வர்க்கங்கள் இவைகளெல்லாம் கர்மவசப்பட்டிருக்கின்றன. சரீரமெடுத்த ஒவ்வொரு ஜீவனும் கருமசக்தியைத்தடுக்க ஒண்ணாது. அந்த விதி இல்லாவிடில் பிரபஞ்சம் நடையற்றுக் கலக்கமுண்டாகும்.

இதற்கு அடியில் வரும் வசனம் ஆதாரம்:—

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌚 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂
𑌤𑌦𑍍𑌵𑌶𑌤𑍍𑌵𑌂 𑌨𑌰𑌾𑌧𑌿𑌪 ॥

(இ-ள்) ஓ அரசனே! எல்லாப் பிரம்மா முதலியன அதின் ஆளுகைக்கு உள்ளாயின.

இந்தவிதியை மீறிநடக்க வேண்டுமானால் இந்தப் பிரபஞ்ச எல்லையைத் தாண்டவேண்டும். அஃதாவது,— பூர்ணத்தில் சாயுஜ்யத்தை அடைதல் வேண்டும்.

ஆனால் ஜனன மரண சக்கிர வட்டத்தினின்று விலகியும் ஈசுவரன் இருக்க இச்சிக்கிற காலம்வரை தானும் புது கர்மம் செய்யாமலும், பாக்கியுள்ள பழைய கர்மத்தைத் தொலைத்துக்கொண்டும் இருக்கலாம். ஜனனசக்கிரத்தில் பந்தப்படுத்துகிறது ஆசையாம். ஆசை ஒடுங்கக் கர்மபந்தம் இனிஏற்படா. இதற்குஆதாரம் கடோபநிஷத்தில் II-வது கண்டம் VI-வது வல்லி, 14-வது மந்திரம்.

---

தேவி பாகவதம்'. IV. II. 8.

𑌯𑌦𑌾 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇
𑌕𑌾𑌮𑌾 𑌯𑍇𑌽𑌸𑍍𑌯 𑌹𑍃𑌦𑌿 𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ॥
𑌅𑌥 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑍋𑌽𑌮𑍃𑌤𑍋 𑌭𑌵
𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 ॥

(இ-ள்) இவனுடைய ஹிருதயத்தில் ஆசிரயித்துக் கொண்டிருக்கின்ற காமங்கள் எப்பொழுது விடுபடுகின்றனவோ, அப்பொழுது அவன் மரண மற்றவனாக ஆகிறான். இந்த உலகத்திலேயே பிரம்மத்தை அடைகிறான்.

இதைப்பற்றி அடிக்கடி சுருதி கூறுகின்றது. பகவத் கீதை IV வது அத்தியாயம், 19, 23 வது சுலோகங்களைப் பார்க்க.

𑌯𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌃
𑌕𑌾𑌮𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌃 ॥
𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌦𑌗𑍍𑌧𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌂
𑌤𑌮𑌾𑌹𑍁𑌃 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌂 𑌬𑍁𑌧𑌾𑌃
𑌗𑌤𑌸𑌙𑍍𑌗𑌸𑍍𑌯 𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯
𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌚𑍇𑌤𑌸𑌃 ॥
𑌯𑌜𑍍𑌞𑌾𑌯𑌾𑌚𑌰𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮
𑌸𑌮𑌗𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌲𑍀𑌯𑌤𑍇 ॥

(இ-ள்) எவனுடைய சகல கருமங்களும், ஆசையும் சங்கல்பமுமில்லாம லிருக்கின்றனவோ அப்படிப்பட்ட ஞானமாகிய அக்கினியினால் எரிக்கப்பட்ட கருமத்தையுடையவனை ஞானிகள் விவேகியாகச் சொல்லுகிறார்கள்.

அபிமானங்கள் காமக்குரோதங்கள், இவைகளைவிட்டு ஞான நிஷ்டையிலேயே ஸ்திரமான மனத்தையுடையவனாய் ஈசுவரா ராதனார்த்தமாகவே செய்கிறவனுடைய கருமமானது, பலனுடன் கூடி நசித்துப்போகும். (கரும)

மும் கருமபலனும் இவனைப் பந்தப்படுத்த மாட்டாது. பின் சுதந்திரம் பெறுகிறான்.

ரிஷிகள் போல பிரம்மாண்டத்தில் நடைபெறுகின்ற விகாசத்திற்கு உதவிசெய்கிறவனாக இருக்கலாம், அல்லது, பூர்ண சாந்தியை அடையலாம்.

இந்த அத்தியாயத்தில் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டிய விஷயங்களாவன:—

1. கருமம் அதனால் விளையும் பயன்.
2. கரும விதியின் கதி.
3. ஜீவாத்மாவைப்பற்றிய கருமத்தின் மூன்று விதிகள்.
4. விதிக்கும் மதிக்கும் உள்ள சம்பந்தம்.
5. மூன்றுவித கருமம்.
6. அவனவன் கர்ம முடிவு.

முதற்பகுதியில்

நான்காவது அதிகாரம்

முற்றுப் பெற்றது.

உ

## முதற்பிரிவு.

## 5-வது அதிகாரம்.

## “எக்ஞம்.”



கர்மவிதி எப்படி எங்கும் வியாபகமாக இருக்கிறதோ, அப்படியே எக்ஞவிதியும் எங்கும் வியாபித்துப் புவனங்களின் சிருஷ்டியையும், அவைகளின் ஸ்திதியையும் நடப்பிவிக்கின்றது. எல்லா ஜீவன்களும், ஒன்று மற்றொன்றைப் புஜித்து வாழ்கின்றன. “ஜீவா ஜீவஸ்ய ஜீவநம்” ஜீவன், ஜீவனுக்கு ஜீவனம். ஒரு ஜீவன் மற்றொரு ஜீவனை உண்டு நிலைபெறுகின்றது. எல்லாச் சமயங்களிலும் எக்ஞவிதி நுழைந்து நுழைந்து நடைபெறுகின்றது. பிரபஞ்சமெல்லாம் அதனுட்புகுந்து நீக்கமற்றதாய் இழைந்திருக்கின்றது.

இந்தக் கருத்தை பகவத் கீதை 4-வது அத்தியாயம், 31-வது சுலோகத்திற் சொல்லியிருக்கிறது.

நாயம்லோகோஸ்த்யயஜ்ஞஸ்ய
குதோऽந்ய: குருஸத்தம

(இ-ள்) ஓ! குருவம்ச சிரேஷ்டனே ! எக்ஞம் செய்யாதவனுக்கு (அற்ப சுகமாகிய தர்மார்த்த காமானுபவமுள்ள) இந்த லோகம் கிடையாது. (சுவர்க்காதி) மற்றது ஏது?

இந்த எக்ஞபாவமானது சநாதநதருமத்தில் முக்கியமானதை அமைத்துள்ளது. இதைப்பற்றிச் சுருதிகளெல்லாம் முறையிடுகின்றன. ஸ்மிருதிகளெல்லாம் வற்புறுத்திக் கூறுகின்றன. புராண இதிகாசங்களோ இதைப்பூர்ணமாக உடையன. ஆறுவேதாங்கங்களும் இந்த எக்ஞத்

தைச் சுற்றிச்சுற்றி நடைபெறுகின்றன. ஆறு தர்சனங்களும் இந்த எக்ஞத்தை ஞானசாதனமாக முக்கியமாய் ஆதரிக்கின்றன.

இப்புத்தகத்தின் இரண்டாம் பகுதியில் எதார்த்தமான ஆரியகுலத்தின் ஆயுள்நாள் முடிய, எக்ஞமே அவனுக்குக் கடைப்பிடியாக இருக்கின்றது என்றதை விவரமாய்த் தெரிந்துகொள்ளுவோம். அதின் பொதுவிதியைப் பற்றி இங்குப் பிரஸ்தாபிக்கிறோம். அதன் விரிவான பிரயோகங்களைப்பற்றிப் பின் சொல்லுவாம்.

எக்ஞ ரூபமாய்ச் சிருஷ்டி ஆரம்பம். இதற்காதாரம்: பிரகதாரண்ணிய கோபநிஷத்தில் 1 வது கண்டம், 1 வது அத்தியாயம், 1 வது மந்திரம்.

ஓம். உஷாவா அச்வஸ்ய மேத்யஸ்ய சிர:

(இ-ள்) ஓம். உதயம், சத்தியமாகவே எக்ஞக் குதிரையின சிரசு.

"உதயம்" என்றால் பிரம்மாவின் பகல் உதயமென்று அர்த்தம் சொல்லப்படுகிறது. அதாவது, சிருஷ்டியின் பகல் ஆரம்பம். அதன்பின், பெரிய அசுவமேதயாகம். அசுவம் (குதிரை). அதனசரீரமாவது பிரபஞ்சம், தேவர், கந்தர்வர், அசுரர், மக்கள் என்ற பலவாறனவர்களைத் தாங்குகின்ற ஒரு புருஷனின் எக்ஞம். இதை அடுத்த சுலோகத்திற் சொல்லியிருக்கிறது. இதன்பின்னர், ஒன்றுமில்லாமல் அவ்யக்தமாயிருந்தால் முன்னிருந்தது என்றும், பின்பு பஞ்சசிருஷ்டி என்றும், உபநிஷத் சொல்லப் புகுகின்றது.

இதையே, ருக்வேதம், 10 வது மண்டலம், 90 வது மந்திரத்தின்கண்ணுள்ள, புருஷசூக்தமென்ற கெம்பீரமான மந்திரம் கோஷிக்கின்றது. அந்தப்புருஷன்தானே,

அந்த மகா எக்ஞத்தில் ஆஹுதியானதும், அந்தக் கிரியையினால் அவரின் நாபியில் ஒருபாகத்தினின்று ஜீவகோடிகள் உண்டாயினவென்றும், மற்ற மூன்றுபாகம் அப்பிராகிருதமாய் என்றைக்குமுள்ள பிராணனாகவிருக்கிறதென்றும் அந்தமந்திரம் சொல்லுகிறது.

சதபதப்பிராஹ்மணம் XIII, VII, I வது மந்திரத்தில் சிருஷ்டி எக்ஞத்தைப்பற்றி அழகாய் விவரித்திருக்கிறது.

ப்ரஹ்ம வை ஸ்வயம்பு தபோऽதப்யத

ஹந்தாஹம் பூதேஷ்வாத்மாநம் ஜுஹவாநி
பூதாநி சாத்மநீதி||
தத்ஸர்வேஷு பூதேஷ்வாத்மாநம் ஹுத்வா
பூதாநி சாத்மநி ஸர்வேஷாம் பூதாநாம்
ஶ்ரைஷ்ட்யம் ஸ்வாராஜ்யமாதிபத்யம் பர்யைத்||

(இ-ள்) சுயம்புவாகிய பிரம்மா தபஸ் செய்தார். தபசில் எல்லையின்மை என்றது அன்றும். சர்வபூதங்களிலும் என்னை ஆஹுதிசெய்யக்கடவேன். சகலபூதங்களையும் அப்படியே என்னிடம் ஆஹுதி செய்யக்கடவேன் என்று அவர் சங்கற்பித்தார். இவ்விதமாகத் தன்னைச்சகலபூதங்களிலும், சகலபூதங்களைத் தன்னிலும் ஆஹுதி செய்தபின் அவர் மகிமையடைந்தார். தேஜஸ்வியானார். வியந்தாவானார்.

பிரம்ஹாவானவர் வேதத்தை வெளியிடும் முன்னம் சநாதநமான (என்றுமுள்ள) எக்ஞத்தைச் சிருஷ்டித்தார் என்று மனுசொல்லுகிறார். "யஜ்ஞம் ஸநாதநம்" (மனுஸ்மிருதி, 1வது அத்தியாயம், 22 வது சுலோகம்.)

ஜகத்சிருஷ்டி நிமித்தம், ஈசுவரன் தன்னை எக்ஞத்தில் ஆஹுதி செய்துகொண்டார் என்ற கம்பீரமான உபதேசத்தின் கருத்து யாதெனில், தன்னுடைய பிரா

ணன் வெவ்வேருன ஜீவகோடிகளைச் சிருஷ்டித்துக் காப் பாற்றும்பொருட்டு தானே பிரகிருதிவரம்புக்கு உட்பட்டுக் கொண்டார். சங்கேதமாக மரணமடைந்தார். அவர் ஆளு கின்ற பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு ஜீவனும், அவரு டைய அம்சமாகும். பகவத்கீதையில், 15 வது அத்தியா யம், 7 வது சுலோகத்தில் "மமைவாம்ஸ:" என்னுடைய அம்சம் என்று ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்லியிருக்கிருர். இவ்விதமான எக்ஞ ஆஹுதி யின்றிப் பிரபஞ்சம் உண் டாகாது. அந்தப்புருஷனின் நாவில் ஒருபாகம் இந்தப் பிரபஞ்ச விகாசத்திற்குப் போதுமானதாகச் சொல்லியிருக் கிறது.

அதுபோல X வது அத்தியாயம், 42 வது சுலோ கத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்லுகிருர்:

விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்ந
மேகாம்ஸேந ஸ்திதோ ஜகத்

(இ-ள்), என்னுடைய ஒரு அம்சத்தினல் இந்தப்பிரபஞ்சத் தில பரவேசித்தும் வியாபித்து மிருக்கிறேன்.

ஈசுவரன் தன்னுடைய பிரபஞ்சத்தைவிட அதாவது (மண்ணிறந்து விண்ணிறந்து) மிக்கான். ஆனல் பிரபஞ் சம் அவனிடத்தில் அடங்கும்; அவனிடத்தில் ஜீவிக்கின் றது; அவன் மயமானது. ஸ்ரீ கிருஷ்ணபகவான் கீதையில் III வது அத்தியாயம், 10 வது சுலோகத்தில் சொல்லு கின்றதாவது:

ஸஹயஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா

(இ-ள்) பிரம்மாவானவர் எக்ஞத்தோடு கூடின ஜனங் களைச் சிருஷ்டித்து அவரவர்களுக்கு இஷ்டமான போகத்தைத் தரக்கூடிய காமதேனுவாக இந்த எக்ஞம் ஆகட்டும் என்று ஆக்ஞா பித்தார். ஆகவே எக்ஞத்தில் கர்மம்முக்கியமாவே வேருன்றியிருக்

கிறது. இதையே பகவத்கீதை VIII வது அதியாயம், 3 வது சுலோகத்தில் சொல்லியிருக்கிறது.

𑌭𑍂𑌤𑌭𑌾𑌵𑍋𑌦𑍍𑌭𑌵𑌕𑌰𑍋
𑌵𑌿𑌸𑌰𑍍𑌗𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌃॥

(இ-ள்) பூதங்களாகிற வஸ்துக்களுக்கு உற்பத்தியை உண்டாக்குகிற எக்ஞத்தில் ஹோமம் செய்தல், கர்மம் என்கிற பெயரை உடையது.

எக்ஞத்தில் ஹோமம் செய்தல் என்றது, பிராணனை ஹோமம் செய்தலாம். அதினாலேயே வெவ்வேறான ஜீவர்கள் விகஸிக்கநேர்ந்தன. இந்தஹோமம்செய்தலைத்தான் புருஷசூக்தத்தில் விவரித்திருக்கின்றது. இந்தவிஷயமானது இவ்வளவு பூர்ணமாக எங்கேபார்த்தாலும் காணப்படுகின்றமையால், எக்ஞத்திற்குப் பொதுவாகக் கர்மம் என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே எக்ஞகிருத்தியங்கள் யாவற்றிற்கும், கர்மகாண்டமென்று பொதுப்படபெயர் திகழுகின்றது.

ஆகையினால் எக்ஞத்தின் முக்கிய கருத்து, பிறர் க்ஷேமத்தின் பொருட்டுத் தன் பிராணனை ஹோமம் செய்தலாம் (கொடுத்தலாம்). இதுவேஜீவவிகாசத்திற்கு இன்றியமையாத விதியாம். கீழான ஜீவராசிகளில், இடைவிடாத போராட்டத்தன்மையாக இந்த விதி பரிணமிக்கிறது. தானே மனம் ஒப்பித் தன்னைத் தியாகஞ்செய்கின்ற தன்மையே மனிதனின் சிரேயஸ்கரமான கௌரவமாம். மனிதனின் மேல்விகாஸமானது அபிவிருத்தியின் அறிகுறி இந்தத் தியாகமே. தன்னையும் தன் கருமங்களையும் ஈசுவரார்ப்பணஞ்செய்து அவன் வீடு பெறுகிறான்.

இந்த அபிப்பிராயத்தைக் கீதை 9 வது அத்தியாயம், 27, 28 வது சுலோகங்கள் வெளியிடுகின்றன.

𑌯𑌤𑍍𑌕𑌰𑍋𑌷𑌿𑌯𑌦𑌶𑍍𑌨𑌾𑌸𑌿
𑌯𑌜𑍍𑌜𑍁𑌹𑍋𑌷𑌿𑌦𑌦𑌾𑌸𑌿𑌯𑌤𑍍 ।
𑌯𑌤𑍍𑌤𑌪𑌸𑍍𑌯𑌸𑌿𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯
𑌤𑌤𑍍𑌕𑍁𑌰𑍁𑌷𑍍𑌵𑌮𑌦𑌰𑍍𑌪𑌣𑌂
𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌫𑌲𑍈𑌰𑍇𑌵𑌂
𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌨𑍈𑌃 ॥

(இ-ள்) ஓ, குந்திபுத்திரா! நீ எதைச்செய்கிறாயோ, எதைப் புஜிக்கிறாயோ, எதை ஹோமம்செய்கிறாயோ, எதைத்தானம் செய்கிறாயோ, எந்தத் தபஸைச்செய்கின்றாயோ, அதை எனக் கர்ப்பிதமாகச்செய். இவ்விதமாய் சுபாசுப பலன்களுக்கு ஹேதுவான கரும பந்தங்களினின்று விடுபடுவாய்.

இந்த எக்ஞவிதி ஸ்தூலபிரபஞ்சத்தில் எவவிதம் நடைபெறுகின்றது என்பதை விசாரிப்போம்.

ஓஷதிகளின் உணவாக அமையும் வண்ணம், தாது வர்க்கங்களின் சரீரங்கள் பாகுபாடு பெறுகின்றன. இந்தக் கிரமமாக இந்த வர்க்கங்களில் இயங்குகின்ற ஜீவன் அபி விருத்தியடைகிறான். ஆகவே ஓஷதிவர்க்கத்தை உபரி விக்கும்பொருட்டு தாதுவர்க்க சரீரங்கள் நாசமடைகின்றன. இந்த எக்ஞத்தினால் தாதுவர்க்கங்களில் நிகழ்கின்ற ஜீவன் பலவிதமாக அபிவிருத்தியை யடைகிறான்.

ஓஷதிவர்க்கத்தில் இயங்குகின்ற ஜீவன, சிறுசெடிகள் பெரிய செடிகளுக்கு இரையாகிக்கொண்டு, அவ்வண்ணம் அபிவிருத்தியடைகின்றது. உதாரணமாக, ஓராண்டுப் பயிர்கள் ஒரு வருஷம் முடிய, மடிந்து, அவைகள் நின்ற இடத்திற்கு உரமாகின்றன. அந்த இடத்தில்பெரிய விருக்ஷங்கள் உண்டாகின்றன. மற்ற ஓஷதிகளைப் பிராணிகள் உண்டு அதனால் அவைகளின் சரீரத்தை விருத்தி செய்கின்றன. அந்தப்பிராணி சரீரங்களில் ஜீவன் கிரீடிக்க அதிகமான அவகாசமுண்டு.

பிராணிவர்க்கத்தில் இயங்குகின்ற ஜீவன், கீழான சரீரங்கள் மேலானவைகளுக்கு உணவாக ஏற்பட்டும், பிராணிவர்க்கத்தின் சம்ரக்ஷணார்த்தமாக ஏற்பட்டும், அவ்வண்ணம் ஒருவாறு அபிவிருத்தியடைகிறது. மனித வர்க்கத்திற்கூட வனவாசிகளாக மிருகத்தன்மை பொருந்தியிருக்குங்காலத்தில், "வல்லான் வகுத்ததே வாய்க்கால்," என்ற ரீதியாக, பலஹீனர்கள் பலிஷ்டர்களுக்கு இரையாகின்றார்கள். ஆனால் காலக்கிரமத்தில் பிராணிகள் அறிவின் அபிவிருத்தியை யடையவும், மனிதனிடத்தில் அன்பும் தயையும் விகசிக்கவும், ஜீவாபிவிருத்தி மார்க்கமானது முன்னிருந்த மாதிரியைவிட வேறாக நடைபெற வாரம்பிக்கிறது. மனிதன் தன்னைப்போன்று சுக துக்க உணர்ச்சியுள்ளவைகளைத் தன் சரீராபிவிருத்தி நிமித்தம் இரையாக்க வெறுக்கின்றான் பின்னர் பிராணிவர்க்கத்திற் கீழினங்களான ஆபேக்ஷிகா சக்தர்களான மற்றப் பிராணிகளை உண்ணுதலையும் விடுகிறான். தன்னிடத்திலிருக்கும் தெய்வீக சுபாவம், தன்னைப் பிறருக்குத் தியாகம் செய்தால்தான் விகஸித்து அபிவிருத்தியாகிறதென்றும், அன்னியமானவைகளைத் தனக்கு உபயோகமாகும்படி பலிபோட்டுக்கொண்டால், அதுவிருத்தியடைகிறதில்லை என்றும், மனிதன் அநுபவரீதியா யறிகிறான். ஆகவே தன்னால் கூடியவரை தன்னுடைய ஜீவரக்ஷணையானது அன்னிய ஜீவர்களைப்பொறுக்காமல் தன்னுடைய விருப்பங்களைக் குறைத்துக் கொள்ளுகிறான். அவ்வாறே தன்னுடைய தியாகங்களை விருத்திசெய்து கொள்ளுகிறான். மனிதன், சரீரமே தானென்றும் (அதாவது, சரீரமே ஆத்மாவென்றும்) நினைப்புக்கொண்டிருக்கிறவரையில், அன்னியவஸ்துக்களைக் கிரகிக்கிறதும், அன்னியர்களைத் தனக்கிரையாக்கிக் கொள்ளுகிறதும் ஆக நடை

பெறுவான். ஏனெனில், சரீரவளர்ச்சியின் கதியானது, அம்மாதிரியே யிருக்கிறது. தன்னை ஆத்மாவென்று உணர்வானாகில், பிறருக்குக்கொடுத்தலே தனக்குரித்தான தருமமென்றும் எண்ணித் தியாகத்தைக் கடைப்பிடி பாகப்பற்றுகிறான். ஏனெனில் ஆத்மானந்தம் தியாக ரூபமாகவே இருக்கிறது. பிரவிருத்திமார்க்கத்தில் வஸ்துக்களைக் கிரகித்துப் பற்றுதலையடைகிறான், நிவிருத்திமார்க்கத்தில் அவைகளைவிட்டு ஒழிவடைகிறான். இவ்விதமாக மனிதனுடைய ஜீவகதி மேன்மேலும் விருத்தியடைகின்றது. இந்த எக்ஞவிதி ஆதிகாலத்தில் பூர்விக ஆரிய ஜன சமூகத்தைப் பாதுகாத்துவந்த ரிஷிகள் மனிதனுக்குக்கற்பித்தனர். தன்னைப் பூர்த்தியாகத் தியாகஞ்செய்து கொள்ளுதலைக் கற்பிக்க முயலவில்லை. மனிதனுக்கு எக்ஞங்களின் முறைமைய மாத்திரம் ஸ்தாபித்தார்கள். ஆனாலும் தாங்கள் சுதந்தரம் பாராட்டும் பொருள்களைத் தியாகஞ் செய்துகொண்டுவரப் பினபு பூர்த்தியான தியாகம் சித்திக்கும் என்ற கருத்துடனா அவ்விதமமைத்தனர். தனக்குப் பிராணாதாரமான உணவுகளின் நெருங்கிய பற்றானது கொஞ்சங் கொஞ்சமாய் யாகஞ்செய்தலென்னும் கிரியையால் விட்டு விலகின்து. இந்த யாகத்தின் பிரதிபலன் ஸமீபத்தில் நிகழாமலும், அதிருச்யமாகவும் இருந்துகொண்டிருக்கிறது.

ஸஹயஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: |
அநேந ப்ரஸவிஷ்யத்வமேஷ வோऽஸ்த்விஷ்டகாமதுக் ||
தேவாந்பாவயதாநேந தே தேவா பாவயந்து வ: |
பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய: பரமவாப்ஸ்யத ||
இஷ்டாந்போகாந்ஹி வோ தேவா தாஸ்யந்தே யஜ்ஞபாவிதா: |
தைர்தத்தாநப்ரதாயைப்யோ யோ புங்க்தே ஸ்தேந ஏவ ஸ: ||

(இ - ள்) ஓ இராஜாக்களே! ஓ இந்திர! ஓ வருண! எங்களால் கொடுக்கப்பட்ட ஆஹுதிகளாலும், நமஸ்காரங்களாலும், இந்த எங்களுடைய யாகத்தில் பிரசன்னராகுங்கள். ஓ இந்திர! ஓ வருண! ஏராளமான திரவியத்தையும், அன்னத்தையும், ஆசீர்வாதத்தையும் கொடுங்கள்.

இந்த என்னுடைய ஸ்தோத்திரம், இந்திரன், வருணன் இவர்களை எட்டட்டும். அதின் வழியால் எனக்குப் புத்திரர்களும் சந்ததிகளும் உண்டாகட்டும்,

இம்மாதிரியான பிரார்த்தனைகளை ஸம்ஹிதையின் ஒவ்வொரு பக்கத்திலும் காணலாம். இவ்விதமாக இனி வரும் லாபத்தை உத்தேசித்துத் தாங்கள் அபிமானித்த தங்கள் கைப்பொருளைத் தியாகஞ் செய்ய மனிதர்கள் படிப்புப் பெற்றார்கள்.

இந்த யாகங்களினால் விஸ்தாரமான பிரபஞ்சத்தில் தான் ஒரு அம்சமென்றும் தன்னைச்சுற்றியிருக்கும் யாவற்றுடனும் சம்பந்தப்பட்டிருக்கிறனென்றும் மனிதன் அறிவுறுத்தப்படுகிறான். மற்ற உயிர்ப்பிராணிகளின் அழிவால், தியாகத்தினால், தன்னுயிர் விருத்தியடைந்தது. அதினாலுண்டான ருணத்தைத் தம்முடைய சொத்தைப் பிறருக்குத் தியாகஞ்செய்கிறதின் மூலமாய்த் தீர்க்கிறான். அதாவது, தேவர்களின் முகமாகிய அக்கினிக்கு (அவருக்கு "அன்னாதி" என்றும் பெயர் உண்டு. அதாவது அன்னத்தை உண்ணுகிறவன்.) (பிரஹத் ஆரண்ணிய கோபநிஷத் 1, 4, 6 பார்க்க.) ஆஹுதி செய்கிறதென்ற இஷ்டியினாலும், மனிதர்களுக்குத் தானஞ்செய்கிறதென்ற பூர்த்தத்தினாலும் தீர்க்கிறான். இம்மாதிரியாய்ச் செய்நன்றி உணர்ச்சி மனத்தில் பதிகிறது. ஜீவர்களின் அந்நியோந்நிய சம்பந்தாபாவமும் உண்டாகிறது.

அடுத்தபடியில் தன்னுடைய பிரியமானபொருள்களைத் தானிறந்ததுமேல் அடையும். புலனுக்கெட்டாத சந்தோ

ஷத்தை யுத்தேசித்துத் தியாகம் செய்ய உபதேசிக்கப் படுகிறான். “𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌕𑌾𑌮𑍋 𑌯𑌜𑍇𑌤” சொர்க்க பலத்தை நோக்கி எக்ஞம் செய்யப்படுகிறது.

இதற்கு முண்டகோபநிஷத்தில் I. ii. 5. 6. மந்திரங்கள் ஆதாரமாக விருக்கின்றன.

𑌏𑌤𑍇𑌷𑍁 𑌯𑌶𑍍𑌚𑌰𑌤𑍇 𑌭𑍍𑌰𑌾𑌜𑌮𑌾𑌨𑍇𑌷𑍁
𑌯𑌥𑌾𑌕𑌾𑌲𑌂 𑌚𑌾𑌹𑍁𑌤𑌯𑍋 𑌹𑍍𑌯𑌾𑌦𑌦𑌾𑌯𑌨𑍍 ॥
𑌤𑌂 𑌨𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑍇𑌤𑌾𑌃 𑌸𑍂𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌰𑌶𑍍𑌮𑌯𑍋
𑌯𑌤𑍍𑌰 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌪𑌤𑌿𑌰𑍇𑌕𑍋𑌽𑌧𑌿𑌵𑌾𑌸𑌃 ॥
𑌏𑌹𑍍𑌯𑍇𑌹𑍀𑌤𑌿 𑌤𑌮𑌾𑌹𑍁𑌤𑌯𑌃 𑌸𑍁𑌵𑌰𑍍𑌚𑌸𑌃
𑌸𑍂𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌰𑌶𑍍𑌮𑌿𑌭𑌿𑌰𑍍𑌯𑌜𑌮𑌾𑌨𑌂 𑌵𑌹𑌨𑍍𑌤𑌿 ॥
𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌂 𑌵𑌾𑌚𑌮𑌭𑌿𑌵𑌦𑌨𑍍𑌤𑍍𑌯𑍋𑌽𑌰𑍍𑌚𑌯𑌨𑍍𑌤𑍍𑌯
𑌏𑌷 𑌵𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌃 𑌸𑍁𑌕𑍃𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑌃 ॥

(இ-ள்) ஜ்வலித்துக்கொண்டிருக்கிற இந்த (முன்குறித்த) அக்கினி ஜ்வாலைகளில் காலந்தவறாமல், அக்கினி ஹோத்திராதி கருமங்களை ஆசரிக்கிறானே, அவனை அவனால் கொடுக்கப்பட்ட ஆஹுதிகள் சூரிய கிரணங்களாகி ஸ்வர்க்கத்தில் எல்லாத்தேவதைகளுக்கும் மேலான இந்திரனுடைய ஸ்தானத்திற்குக் கொண்டுபோகின்றன.

பிரகாசத்தோடு கூடினதாயிருக்கிற இந்த ஆஹுதிகள் அந்தஎக்ஞம்செய்கிற எஜமானனை, “வாரும், வாரும்,” இந்தச் சொர்க்கலோகம் உங்களுடைய பவித்திரமான சுகிருதரூபமாகிய பலன் என்று பூஜிக்கின்றனவாய்ப்பிரியமான வசனத்தைச் சொல்லிச் சூரிய கிரணங்களின் மார்க்கமாய்க் கொண்டுபோகின்றன.

கண்ணுக்குத் தோன்றும் பொருளை, கண்ணுக்குப் புலப்படாப் பிரயோஜனத்தைக் கருதியும், தற்கால பலத்தை இனி வெகுகாலஞ் சென்று மேல்வரும் இலாபத்தை

உத்தேசித்தும், தியாகம், செய்தலான இந்த யாகத்தால், ஜீவன் அதிகப்படி யேறுகிறான். அதாவது, அதிகமேன்பாட்டை அடைகிறான். ஆனால், யாகப்பழக்கத்தின் பிரயோஜனம், சுவர்க்கானுபவமன்று; பூலோக ஐசுவரியப் பிராப்தியுமன்று. அவ்விதம் யாகத்தில் தியாகம் செய்யும் பழக்கத்தால், பொருளீட்டலின் அவா குறைதலும், தம்மைச்சுற்றி இயங்கும் பிராணனுக்குத் தம்முடைய பிராணன்கள் உடன்பட்டுக், கடமைப்பட்டிருத்தலும் என்ற கற்பனைகளை ஜீவன் பெறுகிறான். ஆகவே இவ்விதமான யாகத்தினால், பிரதிபலன் எதிர்பாராத நிஷ்காம கர்மத்தைச்செய்தல் என்ற மூன்றாவதான பதவியை, ஜீவன் அகிக்க ஆயத்தனாகிறான்.

கீழானதை மேலானதிற்குத் தியாகம்செய்தல் உசிதமென்று நாம் இப்பொழுதுதான் அறியலாம். மேலானது கீழானதிற்கு நிரந்தரமாய்ச் செய்துவரும் தியாகத்திற்கும், ஜீவகோடிகளான தம்முடைய குழந்தைகளின் க்ஷேமத்தை உத்தேசித்து ஈசுவரன் தன்னுடைய பிராணனை எக்ஞம் செய்கின்றதற்கும் ஈடாகப் பிரதியாக நாம் இவ்விதம் செய்யக் கடமைப்படுகின்றோம். மேலும் நம்முடைய சரீரத்தைக் காப்பாற்றின கீழான ஜீவராசிகளுக்கு நம் சரீரம் பட்டகடனை அவைகளுக்கு உதவிபுரிதலாலும் தீர்க்கவேண்டும். அப்பொழுதுதான் நாம் அடியில் வரும் உபதேசத்தைப் பெறப் பாத்திரனாவோம்.

பகவத்கீதை, II வது அத்தியாயம், 47, 48. வது சுலோகங்கள்:

𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑍇𑌵𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑍇
𑌮𑌾 𑌫𑌲𑍇𑌷𑍁 𑌕𑌦𑌾𑌚𑌨 ॥
𑌮𑌾 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌹𑍇𑌤𑍁𑌰𑍍𑌭𑍂𑌰𑍍

மா தெ ஸங்கோऽஸ்த்வகர்மணி ||
யோகஸ்த²: குரு கர்மாணி
ஸங்க³ம் த்யக்த்வா த⁴னஞ்ஜய ||

(இ-ள்) உனக்குக் கர்மம் செய்வதிற்றானே அதிகாரமிருக்கிறது. அதால் ஒருபொழுதும் கருமபலனில் இச்சைவைக்காதே. கர்மபலத்திற்குப் பாத்திரனாகாதே, கருமம் செய்யாமலிருப்பதில் ஆசை வைக்காதே.

ஓ, பொருளாசை யற்றவனே! நீ யோகநிஷ்டையிலிருந்து கொண்டு அபிமானத்தைவிட்டு கர்மம் செய்.

எப்பொழுதும் இடைவிடாது சுழன்றுகொண்டிருக்கிற சம்சார சக்கிரம், ஜீவராசிகளின் அந்நியோந்நியபாவம் இவைகளை நன்றாய் அறிந்தபின் மனிதன் அச்சக்கிரச் சுழற்றில் தன்னுடைய கடமையைத் தான்செய்யவேண்டுமென்றும், அப்படிச் செய்யாமல் தன்காலம் கழித்தல் அநீதியென்றும் உணர்கிறான். இந்த அபிப்பிராயத்தையே பகவத்கீதை, 3-வது அத்தியாயம், 16-வது சுலோகத்தில் காண்க.

ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம்
நாநுவர்த்தயதீஹ ய: ||
அகா⁴யுரிந்த்³ரியாராமோ
மோக⁴ம் பார்த்த² ஸ ஜீவதி ||

(இ-ள்) (ஓ குந்திபுத்திர!) இவ்விதமாய் நடைபெறுகின்ற கருமம் என்ற சம்சாரசக்கிரத்தை இந்தலோகத்தில் எவன் அனுசரிக்கிறானில்லையோ, அவன் பாபசுவரூபமான ஆசையுடையவனாய் இந்திரியங்களின் போக்கின்படி விஷயங்களை அனுபவிக்கிறவனாய் விருதாவாய் ஜீவிக்கிறானென்று அறி.

இவ்விதம் பழகிக்கொண்டுவரத் தன்னையே ஈசுவரனுக்கு முழுவதும் அர்ப்பணம்செய்தல் என்ற கடைசியான

உபதேசம் பெறுகிறான். ஈசுவரன் கட்டளையை இந்த உலகத்தில் நடத்தும் ஒரு கருவியாகத் தன்னை உணர்கிறான்.

இதனையே கீதை 18-வது அத்தியாயம், 65, 66, வது சுலோகங்களிற் சொல்லியிருக்கிறது.

𑌮𑌨𑍍𑌮𑌨𑌾 𑌭𑌵 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍋
𑌮𑌦𑍍𑌯𑌾𑌜𑍀 𑌮𑌾𑌂 𑌨𑌮𑌸𑍍𑌕𑍁𑌰𑍁॥
𑌮𑌾𑌮𑍇𑌵𑍈𑌷𑍍𑌯𑌸𑌿 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌤𑍇
𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑌾𑌨𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑍋𑌽𑌸𑌿 𑌮𑍇 ॥
𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯
𑌮𑌾𑌮𑍇𑌕𑌂 𑌶𑌰𑌣𑌂 𑌵𑍍𑌰𑌜 ॥

(இ - ள) என்னிடத்தில் மனமுள்ளவனாய் என்பக்தனாகக்கடவாய், எனக்கு அர்ப்பணம் செய், என்னையே நமஸ்காரம் செய், என்னையே அடைவாய், எனக்குப் பிரியனாகவிருக்கிறாய், உண்மையாக உறுதிசொல்லுகிறேன்.

சகல தருமங்களையும் விட்டு என்னையே சரணமாக அடை.

இனிமேல் ஜீவகாலம் முழுமையும், ஒரு எக்ஞமாக, இவனுக்கு நடைபெறுகிறது. இவன் ஈசுவரனிச்சையை (கொண்டு செலுத்த வேண்டுமென்ற ஒரு தருமம் மாத்திரம் அவனுக்குண்டு) நடத்தத்தான் ஜீவிக்கிறான். பிறதக்கான தருமங்கள் தன்னைக் கட்டுப்படுத்தாதனவாய் தருமங்களை எல்லாம் விடுகிறான். ஈசுவர ஆக்ஞையைக்கொண்டு செலுத்தவேண்டுமென்ற ஒரு தருமம் மாத்திரம் அவனுக்கு உண்டு. குடும்ப உத்தரவாதம், பந்துஜனஉத்தரவாதம் இவைகளை முன்விட அதிக திருப்தியாக நடத்துவானாகில், அதற்குக் காரணம் அவைகளின் பற்றன்று. அவ்விதமான நிலைமைகளில் ஈசுவரன் இவனை அமைத்திருப்பதினால் அவனாளாக இருந்துகொண்டு அந்தப் பிரதிநிதி

ஸ்தானத்துக்கேற்ற கருமங்களை ஈசுவராக்ஞையாகச் செய்கிறான் என்பதுதான்.

இவ்விதமான நீடித்த பயிற்சியினால், பகிர் எக்ஞமான பொருள் தியாகமானது, அந்தர் எக்ஞமான பலத் தியாகத்தைவிடத் தாழ்ந்த அந்தஸ்துள்ள தென்றும், பகிர் சுத்தத்தைவிட, மனம் அந்தக்கரண சுத்தம், அதிக முக்கியமானதென்றும், மனிதன் காலக்கிரமத்தில் அறிகிறான். பகிர் விஷயங்களை அலக்ஷியஞ் செய்யக் கூடாது தான். ஆனால் அந்தர்விஷயங்களை அலக்ஷியம் செய்தல் முழுமோசமாக முடியும்.

இதற்காதாரமாக கௌதம தருமசூத்திரம், 8-வது அத்தியாயம், 24, 25 வது சூத்திரங்களைப் பார்க்க.

யஸ்யைதே சத்வாரிம்ஶத் ஸம்ஸ்காரா:
ந சாஷ்டாவாத்மகுணா: ந ஸ ப்ரஹ்மண:
ஸாயுஜ்யம் ஸாலோக்யம் ச கச்சதி
யஸ்ய து கலு ஸம்ஸ்காராணாம் ஏகதேஶோ(அ)ப்யஷ்டாவாத்ம
குணா அத ஸ ப்ரஹ்மண: ஸாயு
ஜ்யம் ஸாலோக்யம் ச கச்சதி ||

(இ-ள்) ஒருவன் 42 சம்ஸ்காரங்களை முழுமையும் செய்தவனாயினும், 8 வித ஆத்மகுணங்களிலலாவிடில், ஸாயுஜ்ய, ஸாலோக்கிய பதவியை அடைய மாட்டான். ஆனால 42 ஸம்ஸ்காரங்களில (ஏகதேஶ) ஏகதேசம் சில ஸம்ஸ்காரங்கள் செய்தவனாயினும், 8 வித ஆத்மகுணங்களை மாத்திரம் உடையவனானால் அவனுக்கு சாயுஜ்ய சாலோக்கிய பதவிகள் சித்திக்கும்.

எக்ஞத்தின் பிரயோஜனம் பவித்திரப் படுத்துகை. இதையே அடிக்கடி வற்புறுத்திக் கூறப்படுகிறது.

பகவத் கீதை II வது அத்தியாயம், 42, 43, 44 வது சுலோகங்களில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் அடியில் வருமாறு சொல்லுகிறார்.

𑌯𑌾𑌮𑌿𑌮𑌾𑌂 𑌪𑍁𑌷𑍍𑌪𑌿𑌤𑌾𑌂 𑌵𑌾𑌚𑌂
𑌪𑍍𑌰𑌵𑌦𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑌿𑌪𑌶𑍍𑌚𑌿𑌤𑌃 ॥
𑌵𑍇𑌦𑌵𑌾𑌦𑌰𑌤𑌾𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥
𑌨𑌾𑌨𑍍𑌯𑌦𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌵𑌾𑌦𑌿𑌨𑌃 ॥
𑌕𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌪𑌰𑌾𑌃
𑌜𑌨𑍍𑌮𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌪𑍍𑌰𑌦𑌾𑌮𑍍 ॥
𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌵𑌿𑌶𑍇𑌷𑌬𑌹𑍁𑌲𑌾𑌂
𑌭𑍋𑌗𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌗𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿 ॥
𑌭𑍋𑌗𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌪𑍍𑌰𑌸𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂
𑌤𑌯𑌾𑌽𑌪𑌹𑍃𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍 ॥
𑌵𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃
𑌸𑌮𑌾𑌧𑍌 𑌨 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥

(இ - ள்) ஓ அர்ச்சுனு! வேதத்தின் பலனைச் சொல்லுகின்ற வாக்கியங்களாகிய அர்த்தவாததத்தில் பிரீதியையுடையவர்களும், சுவர்க்கத்தைக்காட்டிலும், வேறே விசேஷபலன்களில்லை என்று சொல்லுகிறவர்களும். புத்திர மித்திர களத்திராதிகளில் ஆசையுடையவர்களும், சுவர்க்கமே மேலானபிரயோஜனமென்று எண்ணியிருக்கிறவர்களுமாகிய அவிவேகிகள்போக, ஐசுவரியங்களை அடைவதற்காக, அனேககருமபேதங்களைச் சொல்லுகிறவும், ஜநநத்தையும், கருமத்தையும், கருமபலன்களையும் கொடுக்கிறவும், பலமில்லாத புஷ்பத்தை உடையமரங்களைப்போல் விளங்குகின்ற வார்த்தைகளால் அபகரிக்கப்பட்ட மனத்தை உடையவர்களாயும், போக ஐசுவரியங்களில் ஆசையுடையவர்களுமா யிருக்கிறவர்களுக்கு நிச்சய சுவரூபமான புத்தியானது உண்டாகவேமாட்டாது.

மறுபடியும், ஷை கீதை IV வது அத்தியாயம், 33, 38 வது சுலோகங்களின் அடியில்வரும் வசனங்களைப பார்க்க.

ஶ்ரேயாந் த்³ரவ்யமயாத்³யஜ்ஞாஜ்
ஜ்ஞாநயஜ்ஞ: பரந்தப ||

. . .

நஹி ஜ்ஞாநேந ஸத்³ருஶம்
பவித்ரமிஹ வித்³யதே ||

(இ-ள்) சத்துருக்களைத் தபிக்கச்செய்கிறவனே, திரவியங்களால் செய்யக்கூடிய எக்ஞத்தைப்பார்க்கிலும், ஞானமாகிய எக்ஞமானது சிரேஷ்டமாகும்.

இந்த உலகத்தில் ஞானத்திற்கு சமானமான பரிசுத்தமுள்ளது கிடையாது.

இதே தாத்பரியத்தைப் பீஷ்மர் மகாபாரதம், சாந்திபர்வம், 162 வது அத்தியாயம், 26 வது சுலோகத்தில் சத்தியத்தைப்பற்றிப் பேசும் சந்தர்ப்பத்தில், அதுவே உயர்ந்த யக்ஞமென்று பிரஸ்தாபித்து அடியில்வருமாறு சொல்லியிருக்கிறார்.

அஶ்வமேத⁴ஸஹஸ்ரஞ்ச
ஸத்யஞ்ச துலயா த்⁴ருதம் ||
அஶ்வமேத⁴ஸஹஸ்ராத்³தி⁴
ஸத்யமேவ விஶிஷ்யதே ||

(இ-ள்) ஒரு காலத்தில் ஆயிரம் அசுவமேத யாகத்தை ஒரு தராசுத் தட்டிலும், சத்தியத்தை ஒரு தராசுத்தட்டிலும் வைத்துச் சீர்தூக்கிப்பார்த்தார்கள். அப்பொழுது சத்தியமுள்ள தராசுத்தட்டு மற்றதைவிட அதிக கனமாக இருந்தது.

அஹிம்சையைப்பற்றி அவர் சொல்லுகிறதாவது, (ஆனுசாசனிக பர்வம், 166 வது அத்தியாயம், 40, 41 வது சுலோகங்கள்) :—

ஸர்வயஜ்ஞேஷு வா தா³நம்
ஸர்வதீர்தே²ஷு வாப்லுதம் |

ஸர்வயஜ்ஞதாநஸ்நாநாதி
நைதத்துல்யம் அஹிம்ஸயா ||
அஹிம்ஸ்ரஸ்ய தபோऽக்ஷய்யம்
அஹிம்ஸ்ரோ யஜதே ஸதா ||

(இ - ள்) சகல யக்ஞங்களிலும் செய்யும தானமும், சகலதீர்த்தங்களிலும் செய்யும் ஸ்நாநமும், சகலதானங்களின் புண்ணியமும், அஹிம்சாதருமத்திற்குச் சமமாகமாட்டாது. அஹிம்சாதருமத்தை அனுசரித்து நடக்கிறவனுடைய, தவம் குறைவற்றது. அஹிம்சாதருமத்தை அனுசரித்து நடக்கிறவன் யப்பொழுதும் யக்ஞம் செய்கிறவனுக எண்ணப்படுகிருன்.

பிரதக்பாவத்தை நீக்குதல் எல்லா யக்ஞத்தின் முடிவான பலனைப் பெறுதலாம். (அதாவது—பவித்திரமாகுதலும், ஈசுவரஸாயுஜ்யத்தை அடைதலுமாம்.) இம்மார்க்கத்தின் வழியாகத்தான் மகா ரிஷிகள் சநாதன தரும மார்க்கிகளை நடத்தி வந்திருக்கிருர்கள்.

இந்த அதிகாரத்தில் கவனிக்கவேண்டிய விஷயங்களாவன :—

(1) உலகசிருஷ்டியும் ஸ்திதியும், தெய்வயக்ஞத்தால் ஏற்படுகிறது.

(2) யக்ஞமென்றுல் முக்கியமாக தியாகம் (கொடை என்று பொருள்படுகிறது).

(3) யக்ஞமே சிருஷ்டிக்கிரமவிதி, கீழான ஜீவராசிகளில் அது பரதந்தரமாகவும், மனுஷ்யராசிகளில் சுதந்தரமாகவும் நடைபெறுகின்றது.

(4) மனிதன் வேதசம்பந்தமான யக்ஞத்துவாராகக்கிரமமாக படிப்படியாக ஆத்மத்தியாகி ஆகிருன்.

(5) ஞான யக்ஞமானது திரவிய யக்ஞங்களைப்பார்க்கிலும் அதிக பலவத்தானது.

முதற்பகுதியில்
ஐந்தாவது அதிகாரம்
முற்றுப்பெற்றது.

௨

# முதற் பகுதி

## 6-வது அதிகாரம்.

---

### ஸ்தூல ஸூக்ஷ்ம பூமிகள் ?



ஜீவாத்மாவின் சிருஷ்டியையும், அதனதன் விகாஸத்தின் விதிகளையும், பிரக்ஞையின் மலர்ச்சியையும் பற்றி இதுவரை விவரித்துவந்தோம். ஜீவாத்மா வசிக்கும் உபாதிகளைப்பற்றியும், அதன் நீடித்தயாத்திரையில் அது போய்த் தங்கும் லோகங்களையும் இனிக் கவனிப்போம். இந்த உபாதிகள் அந்தந்த உலகங்களுக்குச் சம்பந்தப்பட்டிருக்கின்றன. ஜீவாத்மா அந்தந்த உபாதிகளினால் அவ்வவ்வைகளுக்கு உரித்தான உலகங்களுடன் சம்பந்தப்பட்டு அங்கங்கே அனுபவங்களை அடைந்து கிரீடிக்கிறான். லோகாந்தரங்களை யனுபவிக்க அவாவுள்ள ஜீவாத்மாவிற்கு அனுகூலமாக இந்த உபாதிகள், ஏற்படுகின்றன. ஜீவாத்மா சரீரி ஆவதற்கு மூலம், தன்னுடைய அவாவே என்று தெளிவாய்ச் சாந்தோக்கியோபநிஷத்தில் சொல்லியிருக்கிறது.

முதலில் விதிவாக்கியம் வருகின்றது.

சாந்தோக்கியோ பநிஷத், 8-வது பிரபாடகம். 12-வது கண்டம், 1-வது மந்திரம்.

“𑌮𑌘𑌵𑌨𑍍𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌂 𑌵𑌾 𑌇𑌦𑌂 𑌶𑌰𑍀𑌰𑌮𑌾𑌤𑍍𑌤𑌂
𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌨𑌾 𑌤𑌦𑌸𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌸𑍍𑌯𑌾𑌶𑌰𑍀𑌰
𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌽𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌮𑍍 ॥”

(இ-ள்) ஓ! மகவன். சத்தியமாக, இந்தச் சரீரம் இயமனுடைய அதீனத்திற்கு உட்பட்டதாய் மரண தருமத்தையுடையது. அசரீரி

யான மரண ரஹிதமான ஆத்மாவின் வாஸஸ்தானம், பிறகு அனுபவிக்கவேண்டுமென்ற, அவாவினல் ஆத்மா அனுபவங்களைக் கிரஹிக்கவும், கொடுக்கவும், சாதகமான இந்திரியங்களை உண்டுபண்ணிக் கொள்ளுகிறான். அதன் சுவாவே ஒவ்வொரு இந்திரியத்திற்கும் மூலமாக விருக்கிறது. பிரகிருதி ஆத்மாவின் இச்சையை அனுசரித்து நடக்கிறது. அந்தந்த இசசை விகசித்துப் பூர்த்தியடையத் தகுமான கருவியாகப் பிரகிருதி அமைகிறது. (இக்காலத்திய புலனறிவு சாஸ்திரங்களும், உளளிருக்கும் பிராணகலை வெளிப்படுகின்ற நோக்கத்துவாராக, இந்திரிய அமைப்பு ஏற்படுகின்றது என்று அடிக்கடி ரூபிக்கின்றன.)

சாந்தோக்கி யோபநிஷத் ௰௨-டி கண்டம். 4. 5. மந்திரங்கள் அடியில் வருமாறு தெரிவிக்கிறது.

"யோ வேதேதம் ஜிக்ராணீதி ஸ,
ஆத்மா கந்தாய க்ராணமதயோ,
வேதேதமபிவ்யாஹராணீதி ஸ,
ஆத்மாபிவ்யாஹாராய வாகத,
யோ வேதேதம் ஶ்ருணவானீதி ஸ,
ஆத்மா ஶ்ரவணாய ஶ்ரோத்ரமத,
யோ வேதேதம் மன்வானீதி ஸ ஆத்மா,
மனோऽஸ்ய தைவம் சக்ஷு: ||"

(இ-ள்) முகரவேண்டுமென்று ஆத்மா விரும்புகிறான். ஆத்மா கிராணேந்திரியத்தைத் தான் முகர அமைக்கப் பெறுகிறான். வசனிக்கவேண்டுமென்று ஆத்மா விரும்புகிறான். ஆத்மா வாக்கிந்திரியத்தைத் தான் வசனிக்க அமைக்கப்பெறுகிறான். கேட்க வேண்டுமென்று ஆத்மா விரும்புகிறான். ஆத்மாச்ரோத்திரேந்திரியத்தைத் தான் சிரவணஞ்செய்ய அமைக்கப் பெறுகிறான். சிந்திக்க வேண்டுமென்று ஆத்மா விரும்புகிறான். ஆத்மா தெய்வ சக்ஷுஸ்ஸாகிய மனத்தை அமைக்கப் பெறுகிறான்.

சூக்ஷ்மேந்திரியமான மனத்தினல் ஆத்மா பார்க்கிறான், அனுபவிக்கிறான். ஸ்தூல பிரகிருதி நுட்பமான

ஆத்மாவினுடைய சூக்ஷ்மதத்துவத்தை எப்படியும் சம்பந்திக்காது.

இதற்குச் சுருதி ஆதாரம்.

"𑌸𑌵𑌾 𑌏𑌷 𑌏𑌤𑍇𑌨 𑌦𑍈𑌵𑍇𑌨,

𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 𑌮𑌨𑌸𑍈𑌤𑌾𑌨𑍍 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍 𑌰𑌮𑌤𑍇" ॥

(இ-ள்) ஆத்மா திவ்விய சக்ஷுஸ்ஸாகிய மனத்தினால் காமங்களைப் பார்க்கிறான், அநுபவிக்கிறான்.

மேற்கண்ட சுருதியில் ஜீவாத்மாவின் அந்தர் நடையும், பகிர் நடையும், ஒழுங்கே வெளியிடப்பட்டிருக்கிறது. ஜீவாத்மா பிரக்ஞாவான். பகிர் அனுபவங்களை நாடி விஷயங்களைச் சம்பந்திக்கும் பொருட்டு இந்திரியங்களையும், இந்திரிய கோளகங்களையும், ஜீவாத்மா அமைத்துக் கொள்ளுகிறான். தவிரவும், தன்னுடைய சுவபாவ சார்பினையுடைய அந்தர்ப பிரபஞ்சத்திற்கும், பகிர்ப் பிரபஞ்சத்திற்கும், ஒருசேதுப்போல, மனத்தையும் அமைத்துக்கொள்ளுகிறான். இவைகளையும் இவைகள் சம்பந்தமான விஷய பரிலோகங்களையும் பற்றி இனி, நாம் விசாரிப்போம்.

இம்மாதிரியாகவே ஸ்ரீ கிருஷ்ண பகவான், ஜீவாத்மாவும், பரமாத்மாவும், வஸ்து ஒன்றே என்று சொல்லி அறிவுறுத்துகிறார்.

பகவத்கீதை, 15 வது அத்தியாயம், 7. 9. வது சுலோகங்களைப் பார்க்க,

"𑌮𑌮𑍈𑌵𑌾𑌂𑌶𑍋 𑌜𑍀𑌵𑌲𑍋𑌕𑍇,

𑌜𑍀𑌵𑌭𑍂𑌤𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ॥

𑌮𑌨𑌃𑌷𑌷𑍍𑌠𑌾𑌨𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿,

𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌷𑌤𑌿 ॥

𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌨𑌂 𑌚,

𑌰𑌸𑌨𑌂 𑌘𑍍𑌰𑌾𑌣𑌮𑍇𑌵 𑌚 ॥

ஹயிஷாயசநஶாயஃ,
விஷயாநுபஸெவதெ॥"

(இ-ள்) என்னுடைய அம்சமாகவும், அநாதியாகவும், இருக்கிற ஜீவனுவன் பிரகிருதியில் அடங்கியிருக்கிறவும் மனத்தை ஆருவதாக உடையவுமான இந்திரியங்களைச் சஞ்சாரத்திலே போகார்த்தமாயிருக்கிருன். .. .. .. .. ..

இந்த ஜீவனுனவன், காது, கண், துவக்கு, நாக்கு, மூக்கு, மனம், இவைகளை, ஆசிரயித்து விஷயங்களையனுபவிக்கிருன்.

ஜீவாத்மா ஜனன மரணமென்ற சக்கிரத்தில் சுற்றும்படி மூன்று லோகங்களிலிருக்கின்ருன்.

பூலோகம் அல்லது பூமி ஒன்று. அதற்கு அடுத்ததும் அதற்கு அதிக, சம்பந்தமுள்ளதும், சூக்ஷ்மப்பிரகிருதி மயமான, புவர்லோகம், இரண்டு. மேலான லோகமான சுவர்க்கலோகம், மூன்று. இம்மூன்றிற்கு மேற்பட்டதும் ஜீவாத்மாவின் இனி மேன்மேலும், விகஸித்து நடைபெறும்படியான, இன்னும் நாலு லோகங்கள் உண்டு. அவைகளாவன:—மஹர்லோகம், ஜநலோகம். தபோலோகம், சத்தியலோகம். முதல் மூன்று லோகங்கள். சிருஷ்டியின் ஒருபகல் முடிவில், (அதாவது) பிரம்மாவின ஒருபகல் முடிவில் அழிகின்றன. மறுநாள் உதயத்தில் உண்டாகின்றன. மற்ற நான்கும் ஸ்திரமாக நிலைத்திருக்கின்றன. ஆனுல் மகர்லோகவாசிகள் அதைவிட்டு விலகி அதுவாச யோக்கியமின்றி விடுகிறபடியால் பிரம்மாவின் இரவு தொடங்குங்காலத்தில், நான்கு லோகங்கள் அழிகின்றனவென்று சொல்லலாம். மற்ற மூன்று லோகங்களான ஜன, தபஸ், ஸத்திய, லோகங்கள் நிலைத்திருக்கின்றன. இந்த ஏழு லோகங்களும், ஒரு பிரம்மாண்டத்தில் அடங்கும். வைகுண்டமும் கோலோ

களும் பிரம்மாண்டத்திற்கு அப்பால் இருக்கின்றன. ஆனால் பிரம்மாண்டத்தினின்று, அவைகளை அடையலாம். (விஷ்ணு புராணம். I. iii, அத்தியாயங்களைப் பார்க்க.)

மற்ற லோகங்களான இந்திரலோகம், சூரியலோகம், பிதுருலோகம், முதலியன தேசங்கள் கண்டங்களில் அடங்குவதுபோல, முன் பிரஸ்தாபித்த சப்தலோகங்களில் உள்ளடங்கியன.

தலங்கள் என்று வழங்குகின்ற வேறு ஏழு லோகங்கள் உள்ளன. தலம், என்றால் மேல் பரப்பு. பூமிக்குள் அடங்கி, பூமியைவிட ஸ்தூலபிரகிருதிமயமான இடங்களாம். சகர ராஜாவின் குமாரர்கள் தவறிப்போன குதிரையை உலகத்தின்மேல் பரப்பு முழுமையும் தேடிக்கண்டு பிடிக்காமல் கீழ்லோகங்களை ஊடுருவிப் பிரவேசித்து, ரஸாதலம் போனார்கள். இந்த ஏழு லோகங்களின் பெயர்களாவன.—பாதாளம், மஹாதலம், ரஸாதலம், தலாதலம், சுதலம், விதலம், அதலம். பிம்பத்திற்குப் பிரதிபிம்பம்போல மேற்கூறிய ஏழுலோகங்களுக்குப் பிரதிபிம்பம் போன்றனவாம். லோகங்கள் மேல்நோக்கனாகவும், இவைகள் கீழ் நோக்காகவும் உள்ளன.

இந்த லோகங்கள் ஜீவாத்மாவின் பிரக்ஞையின் விகஸிப்புக்குத் தக்கவாறு படிப்படியாக அமைகின்றன. ஜீவாத்மாவின் சக்திகள் மென்மேலும் விகசிக்க ஒன்றன் பின் ஒன்றாய் இந்தலோகங்கள், ஜீவனுக்கு விஷயமாகின்றன. அந்தந்த லோகங்களுக் கேற்ற பூத சமூகங்களால் அமைந்த உபாதிகளில் ஜீவன் உணர்கிறான், நினைக்கிறான், கிரீடிக்கிறான். ஒவ்வொரு லோகமும், அவஸ்தையாகப் பார்க்கில் ஈசுவரனின் பிரக்ஞாரூபமாக விளங்குகின்றது. ஸ்தா

ணமாகப் பார்க்கில் அந்தப் பிரக்ஞையைத் துலக்குகின்ற பிரகிருதியின் பரிணாமமாக விளங்குகின்றது. ஜீவாத்மா ஈசுவராம்ச மாகையால் இந்தச் சப்தப் பிரக்ஞா பூமிகளை அறியச் சக்தியுள்ளவன். இவைகளுக்கு உரிய பிரகிருதி அம்சமுள்ள ஏழு பிரக்ஞா பூமிகளுடன் சம்பந்தித்து நடக்கவும், திறமையுள்ளவன்.

முன் பிரஸ்தாபித்தபடி இந்த ஏழுபுவனங்களும்சேர்ந்து பிரம்மாவின் சிருஷ்டி கிருத்தியம் நடைபெறும் ஒரு பிரம்மாண்டமாக ஆகிறது.

இந்தத் தாத்பரியம் அடியில் வரும் தேவீபாகவத சுலோகங்களில், தெரிவிக்கப்பட்டிருக்கிறது. 9=வது அத்தியாயம், 8=10=12=16. சுலோகங்கள். இதையே. ஸ்ரீமத் விஷ்ணுபாகவதத்தில். iii வது அத்தியாயம். 10=7=9 XI 28=31=வது சுலோகங்களிலும் பார்க்க.

"பாதாளாத் ப்ரஹ்மலோகாந்தம்,
ப்ரஹ்மாண்டம் பரிகீர்த்திதம் ||
தத ஊர்த்வம் ச வைகுண்டோ
ப்ரஹ்மாண்டாத் பஹிரேவ ஸ: ||
தத ஊர்த்வம் ச கோலோக:,
பஞ்சாசத்கோடியோஜந: ||
நித்யஸ்ஸத்யஸ்வரூபஶ்ச,
யதா க்ருஷ்ணஸ்ததா (அ)வ்யய: ||
ஊர்த்வம் ச பாதாளாத் பூர்லோகோ,
புவர்லோகஸ் ததஶ்சார: ||
ததஶ்சோர்த்வம் ஸ்வர்லோகோ,
ஜநலோகஸ் ததஶ்சார: ||
ததஶ்சார்த்வம் தபோலோக:,

ஸத்யலோகஸ்த தத்வாநி ||
தத்வைர்ப்ரஹ்மலோக꞉
த்வகாண்டஸந்திஹ꞉ ||
ஏவம் ஸம்ப்ராக்ருதிர்ஜ்ஞேயா
பாஹ்யா ஹ்யண்டாதேவ ச ||
தஸ்ய நாஶோ விநாஶஶ்ச,
ஸர்வேஷாமேவ நாந்யதா ||
ஜ்யோதிஸ்ஸ்வரூபம் ஸததம்,
விஶ்வஸம்ஸாரநிர்க்ருத꞉ ||
நித்யௌ கோலோகவைகுண்டௌ,
ஸத்யௌ ஶஶ்வதக்ருத்ரிமௌ ||

(இ-ள்) பாதாளம் முதல் பிரம்மலோக பரியந்த முள்ளது, பிரம்மாண்டமென்று சொல்லப்படுகிறது. அதற்கு அப்பால், (அதாவது)பிரம்மாண்டத்திற்குப் புறம்பாக வைகுண்டமுள்ளது. அதற்கு மப்பால் கோலோகமுள்ளது. அது. 50 கோடியோஜனைக்குமேல் பரவியிருக்கிறது. அது நித்தியமுள்ளது. சத்தியமயமானது. கிருஷ்ணன் எப்படியோ அப்படி அஃது முள்ளது. பூமிக்குமேல் பூலோகமும், அப்பால் புவர்லோகமும், அதற் கப்பால் சுவர்க்கலோகமும், அதற்கு மப்பால் ஜனலோகமும், இன்னும் அப்பால் தபோலோகமும், அதற்குமப்பால் சத்தியலோகமும், மற்றும் அப்பால் ஜ்வலிக்கின்ற சுவர்ணம் போன்ற பிரம்மலோகமு முள்ளன.

இவைகளெல்லாம் ஒன்றுக்குள் மற்றொன்று அந்தர்க்கதமா யிருக்கின்றன. அது (பிரம்ம லோகம்) அழிய எல்லாம் அழிகின்றன. ஓ! நாரதரே! இந்தச் சமஷ்டிப் பிரபஞ்சம், நீரிற் குமிழிபோல் நிலையற்றது. ஆனால் கோலோகம் வைகுண்ட மிரண்டும். சத்தியமு முள்ளன. சிருஷ்டிக்கப் பட்டவைகளல்ல.

மேற்கண்ட சுலோகங்களில், பாதாளம் என்றதில், ஏழு தலங்கள் அடங்கும். மஹர் லோகத்தை விட்டிருக்

கிறது. ஏழு கணக்குக்குப பிரம்ம லோகத்தைச் சேர்த்திருக்கிறது.

இந்த வசனங்களை நுணுக்கமாக, விசாரிப்போம். முதல் மூன்றான பூர், புவர், சுவர் லோகங்கள், ஜனன மரண சக்கிரத்தில், ஜீவன் உழன்று தன்னுடைய நீடித் தவிகாஸம், நடைபெறுங்கால முழுமையுங் கழிக்கும் லோகங்களாம். இதற்கு ஆதாரம் பிரகதாரண்ணிய கோப நிஷத்தில், 1=வது அத்தியாயம். 5=வது கண்டம், 16. வது மந்திரமாவது.

"அத த்ரயோவாவலோகா,
மநுஷ்யலோக: பித்ருலோகோ தேவலோக இதி"॥

(இ-ள்) உண்மையாய், மனுஷ்ய லோகம், பிதுருலோகம், தேவலோகமென்ற மூன்று லோகங்கள் உள்ளன.

இவைகளைத்தான ( த்ரிலோகி) மூன்று லோகங்கள் என்று சொல்லுகிறது.

இந்த ஒவ்வொரு லோகமும், அததற்குறிய தத்துவம் அமைக்கப்பட்டதாய். அந்நியமித்தமாய் வரம்புக் குட் பட்டஸ்தானமாம்.

பூலோகத்தின் பிராதான்னியமான தத்துவம், பிருதிவீதத்துவம்; அஃது ஏழுவிதமாகப் பரிணமித்திருக்கிறது. அவைகளாவன. பிருதிவி, அப, அக்கினி, வாயு, ஆகாசம் (அதாவது. ஸ்தூலத் தன்மை (Solid) திரவ பதார்த்தத் தன்மை. (liquid) ஆவித்தன்மை. (gaseous) பிரகாசமான பதார்த்தத்தன்மை, (radiant matter) ஆகாசத்தன்மை (etheric) பரஆகாச (அதாவது) பரம அணு சூக்ஷ்மத் தன்மை, (super-etheric and atomic) இந்தப் பிரகிருதி பரிணமங்களின் சேர்க்கைகளில், அஃதாவது

அணுத்திரள்களில், பிருதிவிதத்துவம், பிராதான்னிய மாக விளங்குகின்றது.

புவர்லோகத்தில் ஆபதத்வம் பிரதானமானது. மேற் கண்ட விதமாக ஏழு பரிணும,விகாரங்கள் உண்டு. அந்த லோக சம்பந்தமான அவைகளில், (அணுத்திரள்க ளில்) ஆபதத்துவம் பிரதானமான அம்சமாக இருக்கி றது.

சுவர்லோகத்தில் அக்கினிதத்துவம் பிரதானமாக விருக்கிறது. அந்த லோகத்தின் அணுத்திரள்களில், அக்கினி தத்துவத்தின் அறிகுறி விளங்கும, அந்த லோகத்தின் ஜீவராசிகளின் சரீரங்கள், தேஜோமயமான வைகள். அக்காரணத்திஞல் அவர்களுக்கு தேவர்கள் அதாவது தேஜோமயாள், என்று பெயர் இருக்கிறது.

மகர்லோகத்திலும் அக்கினிதத்துவம் பிராதானனி பந்தான். அக்கினி அணுஅம்சத்தின் நுண்ணிய மூன்று உயர்ந்த அம்சங்களால், அந்த லோகம அமைக்கப் பெற் றுள்ளது.

அவைகளுக்கு மேற்பட்ட 3. லோகஙகளான, ஜன, தப, சத்தியலோகங்கள்; ஜீவாத்மா பக்வியாகும் வரை அவற்றிற்கு அதீதமானவன்; ஜன, தபோலோகங்களில், வாயு தத்துவம் பிரதானமாக இயங்குகிறது. ஆகவே அணுத்திரள்களின் சேர்க்கை காரியமான பதார்த்தங் கள். இந்த லோகத்தில், அவைகளைப்போலச் சிரமமில் லாமல் ஒன்ருேடொன்று ஊடுருவிக் கூடியியங்குகின்றன. ஆகையால் பிரத்தியக் பாவமின்றி ஏகிபாவம் பிராதான் னியமாக அமைந்துள்ளது.

சத்தியலோகத்தில் ஆகாசதத்துவம் பிரதானம. இதில் ஜீவாத்மாவுக்குச் சப்தபிரம்மலோகப் பிராப்தி ஏற்

படுகிறது. முக்திப்படியேறுகிறான். பிரம்மாண்டத்தை எல்லை அடைந்துவிட்டான். அதற்கு அப்பால் மஹத் தத்வம், ஆதிதத்வமென்ற இரண்டு உயர்ந்த தத்வமய மான வைகுண்டம், கோ லோகங்களிருக்கின்றன. மஹத் தத்வத்திற்கு உபாதகம்; அஃதாவது ஆதாரம், இல்லா மையால் அனுபாதக தத்வமென்ற பெயர் சிலவேளை வழங்குகிறது. ஆதிதத்தவம் என்றால் எல்லாவற்றிற்கும், மூல தத்தவம் என்பது பொருள்.

இந்த ஏழு லோகங்களுக்கும் முறையே ஜீவாத்மா வின் ஏழு பிரக்ஞாவஸ்தைகளிருக்கின்றன. மனிதனில் பிரக்ஞையாயிருக்கின்றது பிராணன். அஃது ஆத்மாவி னுடையது. அதைப்பற்றி பிரச்நோபநிஷத்தில். iii வது பிரச்னம். 3. 5. வது மந்திரத்தில் சொல்லுகிறதாவது,

"ஆத்மந ஏஷ ப்ராணோ ஜாயதே"||

(இ-ள்) இந்தப் பிராணன் ஆத்மாவினின்று உண்டாயிற்று.

மறுபடியும்.

"தஸ்மாதேதா ஸப்தார்சிஷோ பவந்தி" ||

(இ - ள்) அதினின்று இந்த ஏழு ஜ்வாலைகள் உண்டாகின்

முண்டகோபநிஷத்தில் (I-வது. II வது வல்லி. 3. 6. மந்திரங்களில்) இந்த ஏழு ஜ்வாலைகளை ஏழு லோகங்களுடன் சம்பந்தப்படுத்தி யிருக்கின்றது எனவும் இந்த ஜ்வாலைகள் மேலான லோகங்களுக்கு, மரணத் திற்குபிறகு ஜீவனைக் கொண்டுபோகின்றன என்றும் சொல்லியிருக்கிறது.

இவைகளைப்பற்றித் தேவீபாகவதம், VII வது ஸ்கந் தம், 38. வது அத்தியாயம், 49. வது சுலோகத்தில் விவ ரித்திருக்கிறது.

அவனுடைய சம்ஷ்டிப் பிரபஞ்சத்தினுடையவும், சிதாபாஸனாகவிருந்து ஒவ்வொரு விஷயத்திலும் பிரதிபிம்பிக்கிறான்.

மாண்டூக்கியோபநிஷத்தில் ஆத்மாவுக்கு, நான்கு அவஸ்தைகளை உண்டென்று சொல்லப்பட்டிருக்கிறது. (1) ஜாக்கிராவஸ்தை விழித்துக்கொண்டிருக்கும் காலம். அப்பொழுது ஜீவாத்மாவுக்கு வைசுவானரன் என்று பெயர். (2) சொப்னவஸ்தை, அஃதாவது கனவுகாணுதல், அப்பொழுது ஜீவனுக்கு தைஜஸன் என்று பெயர். (3) சுஷுப்தி அவஸ்தை. அதாவது நல்ல நித்திரை. அக்காலத்தில் ஜீவனுக்குப் பிராக்ஞனென்று பெயர். நான்காவது அவஸ்தை, அப்பொழுது ஜீவனுக்கு பிரம்மம் என்று பெயர். பிரக்ஞா நிலை விகசிக்கின்ற சரீரங்களை நோக்குங்காலத்தில், இந்த மூன்று அவஸ்தைகளும், மூ லோகங்களுக்கும். உண்டென்று தெரியவரும். பிரக்ஞா நிலைகளையும், அதற்குரிய கோசங்களையும் இனி விசாரிப்போம்.

ஆத்மா உபாதிகளாக உபயோகிக்கின்ற 3. முக்கியமான சரீரங்களுண்டு (1) ஸ்தூல சரீரம். அஃதாவது. புலன்களுக்குக் கோசமானது. அது வைசுவானரப் பிரக்ஞைக்கு உபாதியாக இருக்கிறது. (2) சூக்ஷ்ம சரீரம், அஃதாவது நுண்ணிய தேகம்; இது தைஜஸப் பிரக்ஞையின் உபாதி; (3) காரண சரீரம், இது பிராக்ஞனின் உபாதி.

இந்தவிஷயத்தையே தேவீ பாகவதம், 47. 49. வது சுலோகங்களில், சொல்லி யிருக்கிறது.

"ஸ்ராஜ்ஞஸ்ய காரணாத்ராஸ்ர்ாக,
ஸூக்ஷ்மெஹீ தர்வெதஜஸ:॥

[illegible]
[illegible] ॥
ப்ராஜ்ஞஸ்தைஜஸ விஶ்வாக்ய:,
ஈஶஸ்ஸூத்ரம் விராட் வேதா: ॥
வ்யஷ்டயோ ஜீவா: ...
ஸமஷ்டிரூப: பரமாத்மா"॥

(இ-ள்.) ஆத்மாவுக்குக் காரண உபாதியில் பிராக்ஞன் என்றும, சூக்ஷ்ம உபாதியில் தைஜஸனென்றும, ஸ்தூலோபாதியில் விசுவனென்றும் பெயர். ஆகையால் ஆத்மா, முப்பான்மையுடையதாகச் சொல்லப்படுகிறான். இப்படியே. ஈசுவரனும், ஈசன், சூத்திராத்மா, விராட் என்ற மூன்று பெயர்களால, அறியப்படுகிறான். ஜீவர்கள வியஷ்டி ரூபிகள. சமஷ்டிஸ்வரூபி பரமாத்மா.

ஒவ்வொரு மனிதனும். 3. உபாதிகளுடையவன். அவைகளை மூன்று விதப் பிரக்ஞைக்குக் கருவிகளாக உபயோகித்துக் கொள்ளுகிறான். ஈசுவரன் அவ்விதமாகவே, மூன்று தேகங்கள். அஃதாவது மூன்று உபாதிகளையுடையவன்.' மனிதனுடைய வியஷ்டிப் பிரக்ஞைகளான, பிராக்ஞன் தைஜஸன். வைசுவாநரன், இவைகளுக்கு நேராக முறையே ஈசஸூத்திர விராட என்ற முப்பான்மையான சமஷ்டிப் பிரக்ஞைகள் ஈசுவரனுக்கு உண்டு.

பரமாத்மாவின் முப்பான்மை சுவரூபமான, சத்தியம், ஞானம், அநந்தம், இவைகள் பிரதி பிம்பித்துப்பிரகிருதியில் மேற்கண்ட மூன்று உபாதிகளாக வெளிப்படுகின்றனவென்று சொல்லலாம். ஸ்தூல சரீரம் அனந்த ஸ்வரூபத்தின் உபாதி. சூக்ஷ்மசரீரம், ஞான சுவரூபத்தின் உபாதி. காரண சரீரம் சத்திய சுவரூபத்தின் உபாதி. மேற்கண்ட மூன்று ஆத்மஸ்வரூபங்கள், உயர்ந்த தாழ்ந்த, (அதாவது சமஷ்டி, வியஷ்டி) பிரக்ஞா நிலைகளில் முறையே (1) சமஷ்டி தசையில், (அஃதாவது ஈசுவரனை

நோக்கி.) சத்தியமென்றும், வியஷ்டி தசையில் (ஜீவனை நோக்கி) அதுவே இச்சையென்றும், (2) சமஷ்டி தசையில், ஞானம் (மேலறிவு) என்றும், அதுவே வியஷ்டி தசையில், சிற்றறிவு (சாதாரண ஞானம்,) அதாவது புலனறிவு என்றும், (3) சமஷ்டி தசையில், சிருஷ்டி என்றும், அதுவே வியஷ்டிதசையில், சந்ததி, பிறப்பு. என்றும் விளங்குகின்றன. அவ்விதமாகவே, சரீரங்களுக்கும், அந்தந்த கோசத்தி லியங்குகின்ற, பிரக்ஞைக்குத் தக்கபடி வெவ்வேறாக, ஸ்தூல, சூக்ஷமப்பிரகிருதி அணுத்திரள்களால், ஏற்பட்ட கோசங்கள் அமைக்கப்பட்டுள்ளன. மேற்கண்ட. 3. சரீரஙகளும், சப்தலோகங்களும, அடியில் வருமாறு சம்பந்தித் திருக்கின்றன. பூர்லோகத்தில், ஸ்தூல சரீரம் உபாதியாம்.

| | |
|---|---|
| பூர்லோகத்திலும்,<br>புவர்லோகத்திலும்,<br>சுவர்லோகத்திலும்,<br>மஹர்லோகத்திலும், | சூக்ஷமசரீரம் உபாதியாம். |
| ஜன லோகம்,<br>தபோ லோகம்,<br>சத்திய லோகம்,<br>இவைகளில் | காரண சரீரம் உபாதியாம். |

மேற்கண்டபடி சரீரங்கள் கோசங்களால் அமைக்கப்பட்டுள்ளன. வேதாந்த தர்சனத்தில் பஞ்சகோச பாகுபாடு மேற்கண்ட விஷயத்தைத் தெரிந்துகொள்ளச் சாதகமாக விருக்கும்.

முதற் கோசம் அன்னத்தால் ஆயது. அதனால் அதற்கு அன்னமய கோசமெனப் பெயராம். இதுவே ஸ்தூல சரீரம், ஸ்தூலாம்சம், திரவாம்சம், ஆவியம்சம், இவைகளால் அமைந்திருக்கிறது. இதில் பிருதிவி தத்வம் பிரா

தான்னியமா யிருக்கிறது. கர்மேந்திரியங்களுடைய வெளிக்காரணங்களான வாக்கு, பாணி, பாத, பாயு, உபஸ்தம், இவைகளுக்கு இதுவே இருப்பிடம். இந்த கோசம், மூளையை நடுநாயகமாக உடைத்தான நாடி ஸமூகமிருக்கின்றது. அதின் சாதனத்துவாரா, ஜாக்ர அவஸ்தை அபிமானியான வைசுவானரன் பூலோக விஷயங்களில், சம்பந்தித்து நடை பெறுகிறான். இரண்டாவது, மூன்றுவது, நான்காவது, கோசங்களான முறையே பிராணமய, மனோமய, விக்ஞானமய, கோசங்களால் சூக்ஷ்மசரீரம் அமைகிறது.

இதற்கு ஆதார வசனம். தேவிபாகவதம். VII வது ஸ்கந்தம். 32-வது அத்தியாயம். 41, 42-வது சுலோகங்களைப் பார்க்க.

“ஜ்ஞாநேந்த்ரியாணிபஞ்சைவ,
பஞ்சகர்மேந்த்ரியாணி ச॥
ப்ராணாதிபஞ்சகஞ்சைவ,
தியா ச ஸஹிதம் தத:॥
ஏதத்ஸூக்ஷ்மசரீரம் ஸ்யாத்,
மம லிங்கம் யதுச்யதே॥

(இ-ள்) பஞ்ச ஞானேந்திரியங்கள், பஞ்ச கர்மேந்திரியங்கள், பஞ்சப்பிராணன்கள், விக்ஞான சகிதமான இவைகள், சூக்ஷ்ம சரீரமாம். அஃது எனனுடைய லிங்கமாம்.

இந்தப் பிரகிருதத்தில் வரும், கர்மேந்திரியங்கள் என்ற வசனம் கவனிக்கத்தக்கது. பாணிபாதம் முதலிய கர்மேந்திரியங்கள் ஸ்தூலசரீரத்துக்குச் சேர்ந்தவைகளென்பது பிரத்தியக்ஷம். அவற்றை உள்ளிருந்து நடத்து

கின்ற, சக்திகள் ஸூக்ஷ்மசக்ரத்தின் கண்ணிருக்கின்றன. அதுபோலவே, ஸ்தூலசரீரத்திலுள்ள, கண், காது, மூக்கு, நாக்கு, துவக்கு, இவைகளை நடத்துகின்ற உள்ளிருக்கும்சக்திகளும் சூக்ஷ்ம சரீரத்திலேயே உள்ளன. ஆகவே ஒவ்வொரு இந்திரியத்திற்கும், சூக்ஷ்ம சரீரத்தின கண் நுண்ணிய சக்தி அமைப்பும், ஸ்தூல சரீரத்தின் கண்காரணமும் உண்டு. இதை நன்குய்த கிரகித்தால் வார்த்தைகள் உபயோகிப்பதில் தோன்றும் வித்தியாசங்களால் விபரீத பாவனைகள் நேரிடாது.

சூக்ஷ்ம சரீரம். (முன்னெடுத்துக் காட்டியிருக்கிற ஜாப்தாப்படி) பிராணமய கோசத்தின் மூலமாயப் பூலோகத்துடன் சம்பந்தித்திருக்கிறது. பூலோக சம்பந்தமான நுண்ணிய ஆகாச அணுத்திரள்களால் இந்தக் கோசம் அமைக்கப்பெற்றுள்ளது. ஸ்தூல சரீரத்தின் கிருஷிகளை நடப்பிவிக்கும் பிராணதாரங்களைக்கொண்டு செலுத்தும் பிராணனகள் இநத ஆகாசத்திரவியத்தில் சஞ்சரிக்கின்றன. அவைகளில் பஞ்சப்பிராணன்கள் நடைபெறுகின்றன. 2. பிராணன்கள் அந்தர்கதமாயுள்ளன. இந்தப் பஞ்சப்பிராணன்களாவன:—

வெளி நோக்குகின்ற பிராணன்.
உள் நோக்குகின்ற அபானன்.
கும்பகமான வியானன்
மேல் நோக்குகின்ற உதானன்.

சமானமாக்குகின்ற (அதாவது ஜீர்ணமான அன்னசத்தைச் சரீரமெங்கும் வியாபிக்கச்செய்யும் சமானன். இந்தப் பிராணன்களின்கண், சரீரத்தினுடைய ஆகர்ஷக

சக்திகளிருக்கின்றன. சரீரத்தின சக்திக ளெல்லாம் இவைகளின் பரிணாமங்களாம்.

இதற்காதாரவசனம், பிரச்னோபநிஷத். II வது அத்தியாயம், 3 வது மந்திரம்.

"அஹமேவைதத் பஞ்சதா
ஆத்மானம் ப்ரவிபஜ்யைதத்பாண
மவஷ்டப்ய விதாரயாமீதி" ||

(இ-ள்) நானே இந்த என சுவருபத்தை, ஐந்து விதமாக பாகஞ்செய்து இந்தச் சரீரத்தைச் சிதறிப்போகாமல பிடித்துக் கொண்டு தரிக்கிறேன்.

மேலும் பிரகதாரண்ணிய கோபநிஷத்திலும், அடியிற்கண்ட மந்திரத்தைப்பார்க்க.

யஸ்மாத்கஸ்மாச்சாங்காத்ப்ராண,
உத்க்ராமதி ததேவ தச்சுஷ்யதி" ||

(இ-ள்) எந்த எந்த அங்கத்தினின்று பிராணன் வெளிபோறுகிறதோ, அந்தந்த அங்கம் சோஷித்துப்போகிறது.

இப்பொழுது நாம் தெரிந்துகொள்ளுவோம். பிராணன் வெளிப்படச் சரீரம் மரணமடைகிறது. அடியில் வருமாறு பிரச்னோபநிஷத்தின், 6வது அத்தியாயம், 3-வது மந்திரத்தில் புருஷன் கேட்கிறான்.

"கஸ்மிந்நஹமுத்க்ராந்த உத்க்ராந்தோ பவிஷ்யாமி
கஸ்மின்வா ப்ரதிஷ்டிதே ப்ரதிஷ்டாஸ்யாமீதி |
ஸப்ராணமஸ்ருஜத ||

அந்த புருஷன் பிராணனை சிருஷ்டித்தான்.

(இ - ள்) எவன் தேகத்தைவிட்டு வெளியே போகும் நிலைமை யில், நான் வெளிப்போனவனுக ஆவேனே எவன் சரீரத்தில் ஸ்திர மாயிருக்கும்பொழுது நான் நிலைபெற்றிருப்பேனே.

தற்காலத்துப்புலனறிவு சாஸ்திரத்தின் முடிவான அபிப்பிராயமும், என்னவென்முல் மேற்குறித்த சக்திக ளில் விகசிப்பது எல்லாம், நுண்ணிய ஆகாச அணுத் திரள்களில் ஏகமாம். இந்த ஆகாசமே முன்குறித்திருக் கின்ற பிராணமயகோசத்தின் அமைப்புப் பொருளாம்.

புவர்லோகம் சுவர்லோகம் இவைகளுடன் சம்பந்தித் திருக்கிற சூக்ஷ்மசரீரத்தின் மற்றொருபாகம், மனோமய கோசமாம். இந்த மனோமயகோசம், மேற்படி 2. லோகங்க ளின் பிரகிருதி அணுத்திரளால் அமைக்கப்பட்டிருக்கின் றது. அது காமவசமாய் உண்டான அசுத்த மனத்தின் உபாதியாம். காமபாவங்களினின்று விலகாத இந்த மன த்துக்குக் காம பாவங்கள் இயங்குகிறதற்காக, புவர்லோ கவஸ்துவும், மனோபாவங்கள் இயங்கக்கூடியதாக அதற் குத்தக்க சுவர்லோக வஸ்துவும, இந்த மனோமய கோசத் தில் அமைக்கப்பட்டுள்ளன.

சூக்ஷ்ம சரீரத்தின் மிக நுண்ணிய பரம அணுக்கள் துவாராக, அது மஹர்லோகத்துடன் சம்பந்தப்படுகிறது. அது காமரஹிதமான சுத்தமனத்திற்கு உபாதியாம். மகர் லோகத்தின் வஸ்துவின் சாமான்னியமான இந்த நுண் ணிய அணுக்களின் திரள் ஒழுங்கு சேர்ந்து விக்ஞான மய கோசமாகின்றது.

இந்தச் சூக்ஷ்ம சரீரமானது அதிக சிக்கலுள்ள தென்று முன்சொன்ன விஷயங்களினுல் ஏற்படும். மர ணத்திற்குப்பிறகு ஜீவனின் கதியைத் தெரிந்துகொள்ள

வேண்டுமானால் அது சூக்ஷ்ம சரீரத்தைப்பற்றி நன்றாய் அறிந்துகொள்ளவேண்டியது அவசியமானதாக யிருக்கிறது. இந்தச் சூக்ஷ்மசரீரத்தில் நடைபெறும் பிரக்ஞைக்குத் தைஜஸம் என்று பெயர். இவன் சுவப்னு பிமானியென்று சிலவேளை சொல்லப்படுகிறான். இவன் புலன்களுக்கு அதீதமான ஸ்திரமான லோகங்களுடன் சம்பந்திக்கிறான். ஸ்வப்னம் என்றுமுன்னே சொன னேம். வழக்கமாய் அந்தவார்த்தையின் பொருளை விட அதிகவிஷயங்கள் அதிலடங்கி யிருக்கின்றன. அதில் யோகத்தினால் அடையும் உயர்ந்த சமாதியிலே அடங்கும். அந்தயோக சமாதியினால் ஒருவன் மஹர் லோகத்தை எட்டலாம்.

3-வது சரீரம் காரணசரீரம். முந்திய லோகங்களை யபேக்ஷித்து ஸ்திரமானவைகளென்று சொல்லக்கூடிய மேலான மூன்று லோகங்களான ஜன, தப, சத்திய லோகங்களுக்குரிய வஸ்துவினால் இந்தச் சரீரம் அமைக்கப் பட்டுள்ளது.

வேதாந்திகள் சொல்லுகின்ற ஆனந்தமய கோசம் இந்தக்காரணசரீரமே. இது மேற்கூறிய மூன்றுலோகங்களின் வஸ்துக்களால் அமைந்தது. இந்த ஆனந்தமய கோசமென்ற ஒன்றில் யதார்த்தத்தில் 3 கோசங்கள் அந்தர்க்கதமாயிருக்கின்றன. ஜன லோகத்தில் வசிக்கின்றவர்கள் சரீரங்களில் அந்த லோகத்தினுடைய வஸ்து பிரதானமாயிருக்கும். அவர்களுக்கு ஞானம் முக்கியமான அறிகுறி. அந்தலோகம் காமந்தீண்டாத சுத்தஞான முடைய ஸநத்குமாரர்கள் வசிக்கும் ஸ்தானமாம். தபோலோகத்தில் துறவிகளும் பக்தசிரோமணிகளு மிருக்கின்றார்கள். அவர்களின்சரீரங்களில் அந்தத் தபோலோகத்தின் வஸ்துக்கள்

பிரதானமாயுள்ளன. அவர்களின்முக்கிய அறிகுறி ஆனந் தமாம். சத்தியலோகம் அதாவது பிரம்மலோகம். பிரம் மாவைப்போன்று கிருத்தியங்கள் செய்யக்கூடிய யோக்கி யதை யுடையவர்கள் வசிக்கும் ஸ்தானம்.

இந்த மூன்றாவது சரீரத்தில் நடைபெறும் பிரக் ஞைக்குப்பிராக்ஞனென்று பெயர். அவன்முந்திய கீழான சரீரங்களுடன் நேராக சம்பந்திக்கிறானில்லை. இந்த மூன்றாவது சரீரத்துக்கப்பால், பேசுவோமானால் அந்து இந்தப் பிரம்மாண்டத்துக்குப் புறம்பாகயிருக்கிறது. அத ற்கு அப்பால் ஆத்மா வெளியேறி ஈசுவரனுடன் சேர்ந்து சாயுஜ்ய பதவியை யடைகிறான்.

அன்னமயகோசத்தின் பிரக்ஞையானது மூளையில் வேலைசெய்கின்றது. பகிர்வேலைகளுடன் சம்பந்திக்கிறது சரீரத்தின் வியாபாரங்கள் நடத்துவதற்காகப் பிராணமய கோசத்தையும், அந்தப்பிரக்ஞை உபயோகித்துக் கொள் ளுகிறது. அதின் மூலமாய் வெளிவிஷயங்களுடன் சம்பந் தித்து அவைகளில் வேறுபாடுகளை உற்பவிக்கும்படியா கச் செய்கின்றது. இந்த, அன்னமய, பிராணமய கோசங் கள் இரண்டும், அவைகள் சம்பந்திக்கும் பதார்த்தங் களில், தங்களுடைய அம்சங்களான நுண்ணிய பரம அணுக்களை உதிர்க்கின்றன. இந்த ஆதாரத்தின் பேரில்தான் பாஹ்ய சரீர சுத்திக்கு விதிகள் ஏற் பட்டிருக்கின்றன. ஜாக்கிர அவஸ்தையி லிருக்கின்ற பிரக்ஞை மனோமய கோசத்தைக் கருவியாகவும், உபயோ கப் படுத்திக்கொளுகிறது. அதினால் தான் விருப்பு, வெறுப்பு, மனோபாவங்க ளேறபடுகின்றன. ஜாக்கிர அவஸ்தையில் மேகண்ட இந்த அன்னமயப் பிராணமய மனோமய கோசங்கள் சுறுசுறுப்புள்ளவைகளா யிருக்கின்

றன. ஜாக்கிர அவஸ்தையில் தீவிரமான புத்தியுள்ள ஞானிகள் விக்ஞானமய கோசத்தைக் கருவியாக உபயோகிக்கின்றார்கள். ஆனால் வைகுவாய்ச் சாதாரண மனிதர்கள் மனோமய கோசத்துக் கப்பால் போகிறதில்லை.

மரணகாலம் சம்பவிக்குங்காலத்தில் பிராணமய கோசமானது அன்னமயகோசத்தினின்று பிரிகிறது. பிந்தியது ஜடமாய் உதவியற்றதாய் மயானத்துக்குக் கொண்டுபோகக் கூடியதாகத்தான் ஏற்படுகிறது. யாக்கையின் கட்டுவிட்டு அதனுடைய அணுக்கள் சிதறுண்டு அததின் ஸ்தானத்தில் போய்ச் சார்கின்றன. உயிர் நடைக்குப பிராணனின் சக்தி முக்கியம்.

இதைக் கௌஷீதகோபநிஷத்தில் 3 வது அத்தியாயம், 2 வது மந்திரத்தில் சொல்லியிருக்கிறது. அஃதாவது,

"யாவத்யஸ்மிந் ஶரீரே ப்ராணோ
வஸதி தாவதாயு:"||

(இ-ள்.) சரீரத்தில் பிராணனிருக்கிறவரையில் ஜீவன் இருக்கிறது.

இதே உபநிஷத்தில் இறந்து போகிற ஒரு மனுஷனைப்பற்றிச் சொல்லுகிறதாவது:—ஜாக்கிர அவஸ்தை சம்பந்தமான யாவற்றுச்சக்திகளும்பிராணனில் அடக்கம். பிராணன் வெளியேறுங்காலத்தில் இவைகளெல்லாம் கூடப் போகின்றன. ஜீவன் வெளியேற எல்லாச்சக்திகளும் அவனுடனே வெளியேறுகின்றன. அவன் அப்பொழுது காரண சூக்ஷ்ம சரீரங்களிலிருக்கின்றான். நுண்ணிய

ஆகாச அணுத்திரள் மயமானதும், சூக்ஷ்ம சரீரத்தின் ஒரு பகுதியான பிராணமயகோசம், சீக்கிரம் பிரிந்து விழுகிறது. மனுஷன் புவர்லோகத்தில் ஒரு ஸ்தானமாகிய பிரேத லோகத்துக்குப் போகின்றான். அவன் கெட்ட நடத்தை யுள்ளவனாக இருந்திருக்கும் பக்ஷத்தில் அவனுடைய மனோமய கோசத்தில் ஸ்தூல அணுத் திரள்கள் (மனுஸ்மிருதியில் 12 வது அத்தியாயம் 16) வது சுலோகத்திற் சொல்லியபடி) (𑌯𑌾𑌤𑌨𑌾𑌶𑌰𑍀𑌰𑌂) துருவம் சரீரமாக மாறுகிறது. அதற்குச் சிலவேளைகளில் யாதனா சரீரமென்றும் பெயருண்டு. அவனுடையபாபகருமங்களின் பலன்களை இந்தச்சரீரத்தின் மூலமாய் அனுபவிக்கிறான். அவன் நல்ல மனிதனாகவும், நன்னடக்கை யுள்ளவனாகவுமிருந்திருக்கும் பக்ஷத்தில் மனோமய கோசத்தின் ஸ்தூல அணுத்திரள்கள் சிறுகச்சிறுக உதிர்ந்து போய், இவ்விதமாய் ஒருவாறு சுத்தமாயிருக்கின்ற மனோமய கோசத்துடன் புவர்லோகத்திலேயே இன்னொரு பாகமாக இருக்கின்ற ஜலாம்சமான அமைதிபுள்ள, பிதுரு லோகத்துக்குப் போய்ச்சேர்கிறான் மனோமய கோசத்தினின்று காமசம்பந்தப்பட்ட அணுக்களான ஸ்தூல அணுக்கள் பூர்த்திபாகவிலக ஜீவனானவன சிலவேளை சந்திரலோகமென்று சொல்லப்படுகிற சுவர்க்கத்தினுடைய ஒருபகுதிக்குப்போகிறான்.

இதற்கு ஆதாரவசனம். கௌஷீத கோப்நிஷத். I-வது 2-வது மந்திரத்தைப்பார்க்க.

“𑌯𑍇𑌵𑍈𑌕𑍇𑌚𑌾𑌸𑍍𑌮𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌯𑌨𑍍𑌤𑌿𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌮𑍇𑌵
𑌤𑍇𑌸𑌰𑍍𑌵𑍇𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿। ..................𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌸𑍍𑌯𑌲𑍋
𑌕𑌸𑍍𑌯𑌦𑍍𑌵𑌾𑌰𑌂𑌯𑌚𑍍𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌾𑌃”॥

(இ-ள்) இந்தலோகத்தை விட்டுப் போகின்றவர்கள் எல்லோரும் சந்திரனிடத்திலேயே போகிறார்கள். சந்திரன் சுவர்க்கத்

மறுபடியும் பிரகதாரண்ணிய கோபநிஷத்தில் சொல்லுகிறதாவது. 6-வது 2 வது 16-வது மந்திரம்.

"வித்ருலோகா வித்ருலோகாவநு"।

(இ-ள்) உலகத்தை விட்டுப் போகின்றவர்கள் பிதுருலோகத்திற்குப் போகின்றார்கள். பிதுருலோகத்தினின்று சந்திரனை அடைகின்றார்கள்.

மனோமய கோசத்திற்குச் சந்திரம் சரீரமென்று பெயருமுண்டு. ஸோமனென்றும் அதற்குப் பெயருண்டென்று பின்வரும் விஷயங்களால் தெரியவரும். சுவர்க்கத்தின் சிலபகுதிகளான இந்திரலோகம் சூரியலோகம் முதலானவைகள் விசேஷபோக்கியதைகளைப்பற்றியும், ஜீவன் அடைகிறான். மற்றச்சாதாரண ஜனங்கள், இறந்ததின் மேல் மறுஜன்மம் பவிக்கிறதற்குமுன் மத்திய காலத்தில் ஏற்பட்டிருக்கிற சுவர்க்கலோகத்தின் ஒரு பகுதியான சந்திரனென்று சொல்லப்படுகிற ஸ்தானத்திற்கு மார்க்கம் பூமியினின்று, பிதுருலோக மார்க்கமாய் சந்திரனிடத்துக்குப்போகின்றது. இதைத்தான் பிதுருயானமென்று சொல்லுகிறது. இதைப்பற்றி பிரச்னோபநிஷத், 1-வது. 9-வது மந்திரத்தையும், சாந்தோக்கியோபநிஷத். 5-வது 10-வது 4-வது மந்திரத்தையும் பார்க்க.

இந்தச்சந்திரனிடமிருந்து பூமிக்கு அவர்கள் திரும்புகின்றார்கள். திரும்புகையில் முதல்கதி புகிதாயிருக்

கின்ற ஒரு மனோமயகோசம் அமைக்கப் பெறுகின்றார்கள். இதைத்தான் அக்கினிஸ்தானமாகிய சுவர்க்கத்தினின் றும், தேவர்களால் கொண்டுவரப் படுகின்ற சோம ராஜா என்று சொல்லுகிறது. பிறகுதேவர்கள் பர்ஜன்னி யாக்கினியில் அதாவது ஜலசம்பந்தமானலோகத்தில் மறு படியும் சோமராஜாவை வைக்கின்றார்கள். ஜலாம்சமான அணுக்கள் மனோமய கோசத்தில் அமைக்கப்படுகின்றது. அந்தஜலாம்சமான அணுக்கள் காமத்திற் குரிய சாத னங்களாம். பின்பு இந்தமனோமய கோசம் பூலோகத் திற்குக் கொண்டுவரப்படுகின்றது. பூலோகத்தில் பிராண மய, அன்னமய கோசங்கள் அமைக்கப்படுகின்றன. இவ் விதமாய்ப் புனர்ஜனமம் ஏற்படுகிறது. (சாந்தோக்கியோப நிஷயத். 5-வது 4-முதல் 8-வரை. பார்க்க.) தேவதைகளுடைய மார்க்கமான தேவயானமார்க்கம். இந் தக்கல்பத்திற்குள்ளேயே பூமிக்குத் திரும்பிவரவேண்டிய தென்று கட்டுப்படாதவர்கள் நடக்கும் மார்க்கம், மற்ற வர்களைப்போலவே பூமியை விட்டு வெளியேறிச் சந்திரன் வரையில் போய் பின்பு மனோமய கோசத்தைக் கழற்றி விட்டு தேவலோகத்திற்குப் போய் அங்கிருந்து சூரியன் வித்யுத் (மின்னல்) இவைகளின் லோகமாகிய பிரம்ம லோகத்திற்குச் செல்லுகின்றார்கள். அந்தப் பிரம்மலோக ங்களில் வெகுகாலம் வசிக்கின்றார்கள்.

இதற்கு ஆதாரம் சுருதி. பிரஹதாரண்ணிய கோப நிஷத் 6-வது பிரபாடகம் 2-வது 15-வது மந்திரம் சாந் தோக்கியோப நிஷத். 5-வது 10-வது. (இரண்டா வது) 2-வது மந்திரம் இவைகளைப்பார்க்க.

"𑌤𑍇𑌷𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑍇𑌷𑍁,
𑌪𑌰𑌾𑌃 𑌪𑌰𑌾𑌵𑌤𑍋 𑌵𑌸𑌨𑍍𑌤𑌿"||

(இ-ள்) ஸ்ரீசங்கராசாரியார் சொல்லுகிறதாவது:—மேற்கண்டவர்கள் முற்றிலும் மறுபிறப்பற்றவர்களாக ஆகமாட்டார்கள். ஆனால் இந்தக்கல்பத்தில் மாத்திரம், அவர்களுக்குப் பிறப்பில்லை. இவர்களைப் பற்றித்தான் விஷ்ணுபுராணத்தில (1-வது அம்சம். 3-வது அத்தியாயம்.) இவர்கள பிரம்மா தூங்குங் காலத்தில் (அதாவது பிரம்மப் பிரளயத்தில்) மேலான லோகங்களில் இவர்கள் வசிக்கிறார்களென்று சொல்லப்பட்டிருக்கிறது.

மனிதனுடைய சரீரங்களைப் பற்றியும், சப்தலோகங்களைப்பற்றியும், இன்னம் ஒரு முக்கியமான விஷயம் சொல்லவேண்டியதுண்டு. யோகத்தினால் மனிதன ஜீவித்திருக்கும் பொழுதே கீழான கோசங்களினின்று விலகி, மேல்லோகங்களுக்குப் போகக்கூடும். மேலும் முக்தியைக் கொடுக்கின்ற வித்தியா ஸ்தானத்தையும் அடைவான.

சாந்தோக்கியோபநிஷத் VIII i 1-வது மந்திரம்.

"𑌅𑌥 𑌯𑌦𑌿𑌦𑌮𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑍁𑌰𑍇,
𑌦𑌹𑌰𑌂 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌂 𑌵𑍇𑌶𑍍𑌮,
𑌦𑌹𑌰𑍋𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌨𑍍𑌤𑌰𑌾𑌕𑌾𑌶𑌃" ||

(இ-ள) இந்தப்பிரம்மபுரமாகின்ற சரீரத்தில் ஒரு சிறியதாமரை மொட்டுப் போன்ற குகையிலிருக்கின்றது. அதின்கண், அந்தராகாசமிருக்கிறது.

இதில் ஆத்மா இருக்கிருன். சாதாரண ஜனங்களுக்கு அகோசரன. கெடு உபநிஷத் கெடு 3-வது 2-வது மந்திரம்.

„𑌯𑌥𑌾𑌪𑌿 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌨𑌿𑌧𑌿𑌂 𑌨𑌿𑌹𑌿𑌤𑌮𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌾
𑌉𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌰𑌿 𑌸𑌞𑍍𑌚𑌰𑌨𑍍𑌤𑍋,
𑌨 𑌵𑌿𑌨𑍍𑌦𑍇𑌯𑍁𑌰𑍇𑌵𑌮𑍇𑌵𑍇𑌮𑌾𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾
𑌅𑌹𑌰𑌹𑌰𑍍𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍍𑌯 𑌏𑌤𑌂
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑌂 𑌨 𑌵𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿" ||

(இ-ள்) ஒரு வயலில் சுவர்ணப் புதையலிருக்கின்றதை யறியாதவர்கள், அதைத் தெரிந்து கொள்ளாமல் அதன்மேல் எப்படி நடக்கின்றார்களோ அதுபோலவே தினந்தோறும் மனிதர்கள பிரஹ்மலோகத்திற்குப் போகின்றார்கள். ஆனால் அதை யறியவில்லை. ஸுஷுப்தியில் சரீரத்தை விட்டு நடக்கின்றவாறு அந்தப் பிரஹ்மலோகத்தின்மேல் நடக்கின்றார்கள். ஆனல அதையறியவில்லை. ஆனால் அதை அறிந்தவன் தினந்தோறும், ஹிருதயகுகையிலிருக்கின்ற இந்த ஸ்தானத்திற்குத் தூங்குகிறபொழுது போகிறான்

„𑌸𑌂𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍋𑌽𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌛𑌰𑍀𑌰𑌾𑌤𑍍 𑌸𑌮𑍁𑌤𑍍𑌥𑌾𑌯
𑌪𑌰𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍁𑌪𑌸𑌂𑌪𑌦𑍍𑌯,
𑌸𑍍𑌵𑍇𑌨 𑌰𑍂𑌪𑍇𑌣𑌾𑌭𑌿𑌨𑌿𑌷𑍍𑌪𑌦𑍍𑌯𑌤
𑌏𑌷 𑌆𑌤𑍍𑌮𑍇𑌤𑌿" ||

ஷ. 4-வது மந்திரம்.

(இ-ள்) சரீரத்தினின்று வெளிப்படும் ஜோதிர்மயமான திவ்விய சரீரத்தைப்பெற்றுத தன் ஸ்வரூபத்திலேயே வசிக்கிறான். இது தான் ஆத்மா.

யோகத்தினால் இந்தச்சரீரப்பிரிவு ஏற்படுகின்றது.

இதைக்கடோபநிஷத். II-வது VI வல்லி 17-வது வல்லியில் வவிவரித்திருக்கிறதாவது.

„𑌤𑌂 𑌸𑍍𑌵𑌾𑌚𑍍𑌛𑌰𑍀𑌰𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌵𑍃𑌹𑍇𑌨𑍍𑌮𑍁𑌞𑍍𑌜𑌾𑌦𑌿
𑌵𑍇𑌷𑍀𑌕𑌾𑌂 𑌧𑍈𑌰𑍍𑌯𑍇𑌣" ||

(இ-ள்) அந்த அந்தராத்மாவை முஞ்சி என்ற புல்லினின்று அதன் மத்தியிலிருக்கிற கோரைத் தண்டைப்போல், தைரியத்தி

ளால் தன்னுடைய சரீரத்தினின்றும், (புருஷன்) வேறு படுத்தல வேண்டும்.

யோகவிஷயத்தைப்பற்றி விவரிக்க இவ்விடமன்று. மனிதனுக்கு அந்தவித யோக்யதையை பெறச் சக்திகள் உண்டென்றும், பரிசுத்த நடத்தையாலும் ஞானத்தா லும், அன்பினாலும், அனுபவசித்தமென்றும் நாம் இப் பொழுது அறிந்து கொள்வோம்.

இந்த அத்தியாயத்தில் அடியிற்கண்ட விஷயங்கள் கவனிக்கத்தக்கவைகள்.

(1) அனுபவத்தை அபேக்ஷிக்கிறதினால் சரீரங்களை ஜீவாத்மா அமைத்துக் கொள்ளுகிறான்.

(2) பிறப்பு என்ற சக்கிரத்திற்குட் பட்டகாலத்தில் ஜீவன் மூன்று லோகங்களில் வசிக்கிறான்.

(3) பிரம்மாண்டத்தில் சப்தலோகங்களும் சபததலங்களு மிருக்கின்றன.

(4) மூன்று முக்கிய பிரக்ஞை நிலைகளுண்டு. அவைக ளுக்குரிய, மூன்று முக்கிய சரீரங்கள் உண்டு. ஷெ மூன்று பிரக்ஞை நிலைமைகளும், 7. உட்பிரிவுக ளுள்ளன, அவைகளுக்குத் தக்கபடி ஏழு லோகங் கள் அமைந்திருக்கின்றன.

(5) மரணமான உடனேயும், மரணத்திற்குப் பின்னும், ஜீவாத்மா கீழான கோசங்களைக் கழற்றி விடுகிறான். பிது ருலோகம் போய் அதை விட்டுப்பின்சுத்தமான மனோமய கோசத்துடன் சொர்க்கத்தில் கடைசியில் வசிக்கிறான்.

(6) ஜீவதசையிலேயே யோக சாதனையினால் கீழான கோசங்களைக்கழற்றிக்கொள்ளவும் கூடும்.

இதனடியிற்கண்ட அட்டவணையால் இந்த அதிகாரத்தில் கண்ட விஷயங்களை எளிதில் அறிந்துகொள்ளலாம்.

சநாதந தருமத்தில்
முதற் பிரிவில்
6 வது அதிகாரம்
முற்றிற்று.

| ஜீவாத்மாவின நாமங்கள். | பிரகஞா நிலைகள். | பிரக்ஞா நிலையின் உட்பிரிவுகள். | சரீரங்கள். | கோசங்கள். | லோகங்கள். |
|---|---|---|---|---|---|
| (1) வைசுவானரன. | ஜாக்கிரம் | ஸ்தூல நிலை. விழிக்கின்ற நிலை. | ஸ்தூல சரீரம். | அன்னமய கோசம். | பூலோகம். |
| (2) தைஜஸன. | ஸ்வப்னம். | ஸ்தூல நிலை, கனவு. பரவச நிலை, மகாபரவசநிலை, அல்லது சமாதி நிலை. | சூக்ஷம சரீரம். | பிராணமயகோசம். மனோமயகோசம். விக்ஞானமய கோசம். | பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம் மஹர்லோகம் |
| (3) பிராக்ஞன். | சுஷுப்தி. | குமார, நாரத, மனு. (பிராஜாபத்திபா.) | காரண சரீரம். | ஆனந்தமய கோசம். மூப்பானமையது. | ஜனலோகம் தபோலோகம் சத்தியலோகம் |

## இரண்டாவது பிரிவு.



### ஹிந்துமத சம்பந்தமான சாமாந்நிய ஆசாரங்களும் சம்ஸ்காரங்களும்.

#### 1—வது அதிகாரம்.

#### சம்ஸ்காரங்கள்.

சமயசம்பந்தமான கர்மங்கள், ஆசாரங்கள், சம்ஸ்காரங்கள், சில பொதுவான தத்துவங்களை ஆதாரமாக உடையன. அவைகளைத் தெளிவாய்த் தெரிந்துகொள்ள வேண்டும். இல்லாவிடில் கருமங்களை அநுஷ்டிப்பதில் மனத்திற்கு எப்பொழுதாவது அருவருப்பு உண்டாகும்.

இந்தத் தத்துவங்களாவன:—

(1) புருஷன் பலகோசங்களுள் அடங்கியவன். ஜீவாத்மா வெவ்வேறான கோசங்களின்கண் அடைபட்டிருக்கிறான். ஒவ்வொரு கோசமும் புலப்படக்கூடிய (அல்லது) புலப்படக் கூடாத லோகங்களுடனும் அக்காரணத்தினால அவைகளின்வாசிகளுடனும், சம்பந்தப்படுகிறது. ஆகவே அந்த லோகங்களுடன் ஜீவன் இடைவிடாத அந்நியோந்நிய சம்பந்த முடையவன்.

(2) ஜீவாத்மாவும் பிரகிருதியும், இடைவிடாத சலன நிலைமையில் இருக்கின்றன. இந்தச் சலனம் வேகத்திலும், ஒழுங்கிலும், பின்னலிலும் வேறுபடுகிறது.

(3) ஜீவாத்மாவின் சலனம் வேகமாகவும் ஒழுங்காகவுமிருக்கின்றது. அதன் சக்திகள் மலர மலர, விகசிக்க விகசிக்க அதிக பின்னலுள்ளதாக ஆகின்றது.

(4) கோசங்களின் அணுத்திரள்களின் சலனங்களாஜீவாத்மாவின் சலனங்களால் இடைவிடாது பாதிக்கப்படுகின்றன. அவைகள் அந்தந்த அணுத்திரள்களுக்குரிய லோகங்களின் சலனங்களால் இடைக்கிடையே பாதிக்கப் படுகின்றன. தவிரவும் ஒவ்வொரு கோசமும் அதற்குரிய லோகத்தின் மூலாதாரமான சலனத்திற்கு ஒற்றுமையாய் இடைவிடாது சலிக்கின்றது.

(5) ஜீவாத்மா தன்னுடைய சலனங்களுக்குத்தக்கவாறு ஒற்றுமையாய்த் தன் கோசங்களின் சலனங்களும் நடைபெறும் வண்ணம், இருக்கும்படி முயற்சிக்கின்றது.

(6) ஆனால் பாஹ்ய விஷயங்களின் சலனங்களா கோசங்களைத் தாக்கி ஜீவாத்மாவின் நோக்கத்திற்கு மாறுகவேறுனதிலை உண்டுபண்ணுகின்றமையால், ஜீவாத்மாவின் முன்சொல்லிய முயற்சி பலிக்காமல் அடிக்கடி தவறிப் போகின்றது.

(7) ஜீவாத்மாவின் சலனங்களுக்கு அனுசரணையாய (பாஹ்யவிஷயங்களின்) சலனங்களுமிருக்கும் பக்ஷத்தில், அதின் காரியத்திற்கு ரொம்ப சாதகமாக விருக்கும்.

இந்த விஷயங்களை நன்றாயும் ஐயமறவும் அறிந்து கொள்ளல் வேண்டும். பிறகு சில முக்கிய விஷயங்களைப் பற்றிச் சொல்லுவோம். அவைகளையும் அவசியமாய் அறிந்து கொள்ளல் வேண்டும்.

மந்திரமானது அணுத்திரள ஒலிகளின் தொடர்பாம். இந்த ஒலிகள் சலனங்களாம். ஆகவே உதாத்த

மாகவும் அனுதாத்தமாகவும் மௌனமாகவும் உச்சரித்தலானது அதற்குத்தக்க சலனக்கோர்வையை அமைப்பிக்கின்றது. ஒலியானது வரையறையான ஒரு ரூபத்தை உண்டு பண்ணுகிறது. தொடர்ச்சியான ஸ்வரங்களினால் தொடர்ச்சியான சித்திர ரூபங்கள் உண்டாகின்றன. தக்க இயந்திரங்களினால் ஒலிகளின் சலனங்களைப் பதியச் செய்து, பாதுகாத்தல் மூலமாக கண்ணுக்குப் புலப்படும்படி செய்வித்துக் கொள்ளலாம். ஆகவே, மந்திரத்தின் உச்சரிப்பினால் ஏற்படும் ரூபங்கள் அந்த மந்திரத்தின் ஸ்வரத்தைப் பொறுத்ததாக இருக்கின்றன. மந்திரத்தை உச்சரிக்கிறதினால் சூக்ஷ்மப்பிரகிருதியில் ரூபங்கள் தொடர்ச்சியாய்ப் பதிக்கின்றன. சலனங்களின் சுபாவம் உற்பத்திக்கும் நாசத்திற்கும் காரணமாயும் அமைவை விளைவிக்கக் கூடியதாகவும், அல்லது வேறு ஏற்றுப்பெற்ற மனோபாவங்களை உண்டாக்கக் கூடியதாகவும் இருக்கின்றன. அதற்குக் காரணம் அந்தந்த மந்திரத்தின்கண்ணிருக்கும் வார்த்தைகளின் வித்தியாசங்களேயாம்.

கண்ணுக்குப் புலப்படும் அல்லது புலப்படாத பூமிகளிலிருக்கும் பதார்த்தங்களை மந்திரத்தின் வேகமாயுந் தாக்கும். வேகமானது அதை உச்சரிக்கிறவனுடைய பரிசுத்தமான நினைப்புக்கும் பக்திக்கும் அறிவுக்கும் சித்த சக்திக்கும் தக்கபடி இருக்கிறது. இச்சலனங்களைப் பற்றி முன்னர் கோசங்களைத் தாக்குகிறதாகச் சொல்லியிருக்கிற 4 வது தத்வத்திலும், 7 வது தத்வத்திலும் விவரித்திருக்கிறது

பன்முறை மந்திர உச்சாரணமானது, அதாவது பலமுறை ஒருவிதமான ஒலிச்சலனங்களை உண்டு பண்ணுதலானது கோசங்களில் நடைபெறும் இயற்கையான சல

னங்களைத் தாக்குகிறதினால் நாளிடையில்தான் மேரு கொள்ளுகிறது அதனால் மந்திர ஒலிச்சலனங்களுக்கு ஒற்றுமையான சலனங்களெல்லாம், ஒரே ரீதியான ஒழுங்கான, சாந்தமாக ஆக்கப்படுகின்றது. மந்திர உச்சாரணையினால் உண்டாகும் மனச்சாந்தமும், மனச்சமாதானமும், இந்தக் காரணத்தினால்தான் பலிக்கிறது.

மந்திரத்தில் வருகிற தேவதையின் பெயரை உச்சரிக்கிறதினால் அந்தத் தேவதையின்கண் நிகழ்கின்ற சலனங்களையும், அந்த தேவதையின் கோசங்களில் நிகழ்கின்ற சலனங்களையும், ஒத்ததான சலனங்கள் சம்பவிக்கின்றன. பலமுறை உச்சரிக்கின்றதினால் ஏற்படும் வேகத்தினால் உச்சரிக்கிறவனுடைய கோசங்கள் அல்லது கேட்கிறவனுடைய கோசங்கள் காலக்கிரமத்தில் மந்திரத்தின சலனங்களையே திருப்பிச்செய்கின்றன.

ஆன்னிக சூத்திரவல்லி, 13-வது பக்கத்தில் யோகயாக்ஞயவல்க்யர் சொல்லியிருக்கிறதாகப் பிரஸ்தாபித்திருக்கிற சுலோகமாவது,

"யஸ்யயஸ்ய ஸஒஞஸ்ய
வெ[illegible]யாவடெவதா||
தடிகாரரஂஹவெதக்ஸ
டெவதாஂடெவடெதாவ்டெத"||

(இ-ள்) மந்திரத்தில் எந்தஎந்தத்தேவதை (ஆவாகனம் பண்ணப் படுகிறதோ) அந்தவஸ்து அந்தத்தேவதை ஆகிருதியாகிறது. அந்தத்தேவதையின் மந்திரம் அந்தத்தேவதை என்றே சொல்லப் படுகிறது.

வைதீக மந்திரங்களைப்பற்றி எழுதியிருக்கிற பிங்களர் சந்தஸ்களை ஏழுவிதமூலாதாரமான ஸ்வரங்களாக வகுத்திருக்கிறார். ஒவ்வொரு ஸ்வரத்திற்கும் அதற்குரிய தேவதையின் பெயரையே வைத்திருக்கிறார்.

கோசங்களின் அணுக்கள் சலிக்கிறதினால் தேவதையின்சக்தி பிரவேசித்து வேலைசெய்கிறதற்குச் சௌகரியம் ஏற்படுகிறது. மற்றவைகளின் பிரவேசத்திற்கு இடமில்லாமற் போகிறது. ஆகவே தேவதாசக்தி ஜீவனை எட்டுகிறது. மற்றவைகளின் பிரவேசமும் தடுக்கப்படுகிறது.

மந்திரத்தினால் ஏற்படும் விரைவானவும் நுண்ணியவுமான சலனங்களுக்குத் தக்கபடி ஒத்ததாய்ச் சலிக்கக்கூடாத அசுத்தமான பதார்த்தத்தின் அணுக்கள் கோசங்களில் அமைக்கப்படுமாயின, மந்திர ஆவிருத்தியினால் துன்பமும், வியாதியும், மரணமும், சம்பவிக்கும். ஆகையினால்தான் அசுத்தமானவன் மந்திரத்தை உச்சரித்தாலும், பிறர் உச்சரிக்கக் கேட்டாலும், பிறர் மௌனமாய் உள்ளுக்குள் உச்சரிக்க அவர் சமீபத்திலிருந்தாலும், அபாயத்திற்குப் பாத்திரனாவான்.

கோசங்களில் சுத்தமான பதார்த்தத்துடன் அசுத்தமான பதார்த்த அணுக்கள் சேர்ந்திருக்குமாகில் மந்திரத்தின் சுவரத்திற்கு ஒத்ததாய்க் கோசங்கள் சலிக்கிறதினால் அசுத்தமான பதார்த்தங்கள் வெளியேற்றப்பட்டு அவைகளுக்குப் பிரதியாய் சுத்தமான பதார்த்தங்கள் அமையப்பெறும்.

மந்திரத்தில் வர்ணமும், சுவரமும், முக்கியமானவைகள் என்று கவனிக்கத்தக்கது. இந்தவிஷயத்தை வியாகரண மகாபாஷியத்தில் I. i I. ல் ஆதியில் வருமாறு சொல்லியிருக்கிறது.

"துஷ்டஶ்ஶப்த: ஸ்வரதோ வர்ணதோ வா
மித்யாப்ரயுக்தோ ந தமர்த்தமாஹ ।।
ஸ வாக்வஜ்ரோ யஜமானம் ஹினஸ்தி
யதேந்த்ரஶத்ரு: ஸ்வரதோऽபராதாத்" ।।

(இ-ள்) மந்திரத்தின் சுவரத்திலாவது வர்ணத்திலாவது குறை உண்டானால் மந்திரம் பிசகான பிரயோகமாக முடியும். அதன் சரியான அர்த்தமும் பலிக்காது. அந்த விபரீதமான வாக்கின் வீரியம் யாகம் செய்கிற புருஷனைத் தாக்குகிறது. அஃது எதுபோலென்றால், "இந்திர சத்ரு" என்ற மந்திரத்தின் ஆதி சுவரத்தினால் உத்தேசித்தபடி விருத்திரன் சத்துருவான இந்திரனைக் கொல்லாமல் இந்திரனுக்குச் சத்துருவான, யாகஞ்செய்த விருத்திரனையே கொன்றது.

ஆகையால் ஸம்ஸ்கிருதபாஷையின் நல்ல ஞானம் ஆவசியகமாகவிருக்கிறது.

இந்த அனுச்சலன விஷயத்தில் பதார்த்தங்களின் கண்ணறியாத காந்தத்தன்மை (Magnetic properties) முக்கியமாய் நடைபெறுகின்றது. எல்லாப் பதார்த்தங்களிலும் அவைகளின் அணுக்கள் எப்பொழுதும் சலித்துக் கொண்டேயிருக்கின்றன. அவைகளுக்குச் சமீபமாயிருக்கின்ற மற்ற வஸ்துக்களின் கோசங்களை இவ்விதமாய்த் தாக்குகின்றன. ஒரு குறிப்பிட்ட ரீதியாய்க் கோசங்களைத் தாக்கவேண்டுமானால் குறிப்பிட்ட சலனகதிகளை உடைய திரவியங்களை தெரிந்துக்கொள்ளவேண்டியது ஆவசியகமாம்.

இந்தத் தத்துவங்களுடைய ஆதாரத்தின் பேரில், ரிஷிகளும், ஞானிகளும், எல்லாக்கருமங்களையும், கிருதியங்களையும் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். மந்திரங்களும் அவைகளுடன் பிரயோகிக்கப்படும் திரவியங்களும், இந்தத் தத்துவங்களுக்குள் அடக்கம். கோசங்களை வசப்படுத்தவும் பரிசுத்தமாக்கவும் அவைகள் துர்மார்க்கத்தில் பிரவிருத்திக்காமல் தடுக்கவும், ஜீவாத்மாவுக்கு அனுகூலமாகவும், அல்லது பாஹ்யவிஷயங்களை மனுஷ்யனுக்கு க்ஷேமகரமாகவும், உபயோகமாகவும், ஆதாரமாகவும்,

செய்விக்கும் பொருட்டும், மந்திரங்களும் அவைகளின் சம்பந்தமான திரவியங்களும் ஏற்பட்டிருக்கின்றன.

இந்தத் தத்துவங்களையும் இந்தவிஷயங்களையும் நாம அறிந்துகொள்வோமாகில், வைதிகதருமத்தில் விதி நிஷேதங்களின் காரணங்களையும் யாரார் மந்திரத்தை உச்சரிக்கலாமென்றும், எவர் முன் உச்சரிக்கலாகாதென்றும், பற்பல கிருத்தியங்களில் எந்தெந்த வஸ்துக்கள் கிராஹ்யமென்றும், எந்தெந்த ஆஹுதிகள் செய்யலாமென்றும், பின்னும் மற்றவைகளையும் அறிந்துகொள்ளலாம். கிருத்தியங்களும், சப்தங்களும், திரவியங்களும், தந்திரங்களும் சுற்றுச் சூழ்ச்சியுள்ள அதிசயங்களும், அர்த்தமில்லாதவைகளாய்த் தோன்றாமல், ஜீவாத்மாவுக்கு அனேக சக்திகள் விசாலிக்கவும், அவனுக்குச் சம்பவிக்கும் இடையூறுகளை நிவிருத்திக்கவும், அனுகூலமாகவும் உபயோகமாகவும் ஏற்பட்டிருக்கின்றன வென்று தெரியவரும்.

சம்ஸ்காரங்களின் எண்ணிக்கையைப் பலவாறாகச் சொல்லியிருக்கிறது. சில ஜாபதாக்களில் 10 என்றும், மற்றவைகளில் அதிகப்படுத்திக்கொண்டேபோய், 52 வரையிலும் சொல்லியிருக்கிறது. முக்கியமான சம்ஸ்காரங்கள், 10 என்று சொல்லப்படுகிறவைகளில், சில, விவாகமவரை மனிதனின் ஆயுஸ்கதியில் பருவகாலங்களைக் குறிப்பிடுகின்றன. மற்றவைகள் தினந்தோறும் செய்யக்கூடிய கிருத்தியங்களாகவும், அல்லது முக்கிய 10 சம்ஸ்காரங்களுக்குத்துணையான கிருத்தியங்களாகவுமிருக்கின்றன.

முக்கியமானவைகளும் பொதுவாய் அங்கீகரிக்கப்படும், 10 சம்ஸ்காரங்களாவன:—

(1) கர்ப்பாதானம்.
(2) பும்ஸவனம்.
(3) ஸீமந்தோந்நயனம்.
(4) ஜாதகர்மம்.
(5) நாமகரணம்.
(6) அன்னப்பிராசனம்.
(7) சூடாகரணம்.
(8) உபநயனம்.
(9) சமாவர்த்தனம்.
(10) விவாகம்.

இவைகளைப்பற்றி மனுஸ்மிருதியில் II—வது அத்தியாயம், 26 வது ஸ்லோகத்தில் சொல்லியிருக்கிறதாவது.

വൈദികൈഃ കർമ്മഭിഃ പുണ്യൈർ
നിഷേകാദിർദ്വിജന്മനാം
കാര്യഃ ശരീരസംസ്കാരഃ
പാവനഃ പ്രേത്യ ചേഹ ച"॥

(இ-ள்) த்விஜாளுக்கு (அதாவது) இருபிறப்புளோர்களுக்கு) நிஷேகம் முதலான சரீரசம்பந்தமான சம்ஸ்காரங்கள் வைதீக கிரியைகளுடனே செய்யற்பாலது. அவைகள் இவ்வுலகிலும் அப்பாலும் பரிசுத்தம் செய்யும்.

இவ்விதமாய் ஆரியன் பிண்டோற்பத்தி முதல், தகனபரியந்தம் அவனுடைய ஆயுள் முழுமையும் காப்பாற்றப்படுகிறான்.

கர்ப்பாதான கிரியையானது:—சிருஷ்டி கிருத்தியத்தைப் புனிதமாக்குகிறது. அற்பமானதென்று நினைத்தாவது, ஸ்திரீ அல்லது புமான்கள் மனத்தில் அசுத்த பாவத்துடனேயாவது, கேவலவிஷயானுபவத்திற்காகவாவது, இந்தக் கிருத்தியம் செய்யப்படாது. தேவகாரியமான மனுஷசரீர சிருஷ்டியை வகிக்கிறோமென்ற கருத்துடன் முயற்சிக்க வேண்டும். ஒரு சிசு உற்பவிக்குக, என்று பிரார்த்திக்கிறான். நூதனஜீவஉற்பத்தி மந்திரத்தின் உச்சாரணையின்கண், உதயமாகிறது.

(ருக்வேதம் X 85 வது 21 22 வது மந்திரங்களைப்பார்க்க.)

அன்னமயகோசமும் பிராணமயகோசமும் தாயார் கர்ப்பத்திலுண்டாகின்றன. மூன்றும்மாதத்தில் புருஷப்பிரஜை உண்டாகிறதற்காக, புத்திரசந்தானாய் பும்ஸவன சம்ஸ்காரம் செய்யப்படுகிறது. (ருக்வேதம். I, ! 3. III, IV, 9. V. XXXVII. 2. II. iii. 9.)

7-ம் மாதத்தில் சீமந்தோந்நயனம், அதாவது தாயாரின் தலைமயிர் வகிடுபிரித்தல் என்ற ஸம்ஸ்காரம் செய்யப்படுகிறது. அதில் ருக்வேதமந்திரங்கள், X. CXXI.10. CLXXXIV. I. II. XXXII 4. 8.) பிரயோகிக்கப்படுகின்றன. ஆர்ச்சம்பவங்களை கேடில்லாமல் செய்யக்கூடியதாயும் சாந்தமானவும் க்ஷேமகரமானவும், சந்தோஷமானவுமான நவரசலனங்களை உண்டுபண்ணுகிறதினால் பிறக்கின்ற குழந்தைகள் நன்றாய் அமையுமாறு இந்த மந்திரங்கள் பிரயோகிக்கப்படுகின்றன.

மேற்கண்ட மூன்றுசம்ஸ்காரங்களும், மாதா பிதா, இவர்களின் க்ஷேமத்திற்காக ஏற்பட்டவை. குழந்தையின் வளரும் சரீரம் நன்றாய் அமைய அனுகூலமான நவரசலனங்கள் இந்த சம்ஸ்காரங்களில் நிகழ்கின்றன. இவ்விதமாய் விகசிக்கின்ற சிசுவின் சரீர அமைப்பின் அழகும் சௌக்கியமும், பவிக்க அனுகூலமான இந்தத்தத்துவங்களின் ஞானம் வெகுநாளாய் லோபித்துப்போனதால் இந்த உபயோகமானவும், ரமணீயமானவுமான கிருத்தியங்களின் அனுஷ்டானம் ஆரியவம்ச க்ஷேமமும், பலமும் குறைபடுகிறதற்குக் காரணமாக க்ஷீணித்துக் கொண்டு வருகின்றது.

அடுத்த சம்ஸ்காரமான ஜாதகர்மம் குழந்தைபிறந்த உடன் பிதாவால் செய்யப்படுகின்றது. பிதாவானவன்புத்திரோற்பத்தியால் சந்தோஷித்து அதன்தீர்க்க ஆயுளை

யும், அதன் ஞானத்தையும் புத்தியையும் க்ஷேமத்தையும் கோரினவனாய் சுவர்ண மது ஆஜ்யத்தினால் ஊட்டுகிறான். (மனுஸ்மிருதி, II வது அத்தியாயம், 29. வது சுலோகம்.)

இந்தச் சம்ஸ்காரத்தைப் பற்றி சாங்கியாயன கிருஹ்ய சூத்திரமும் (I. 24) ஆசுவலாயன கிருஹ்ய சூத்திரமும் (I. 15) ஆபஸ்தம்ப கிருஹ்ய சூத்திரமும் சொல்லுகின்றன. ஆசுவலாயன கிருஹ்ய சூத்திரத்தில், ருக்வேதமந்திரங்களை (II, XXI-6. III, XXXVI-10.) ஜாதகர்ம சம்ஸ்காரத்தின் அந்தத்தில் உச்சரிக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறது.

குழந்தை பிறந்த 10-ம் நாள் அல்லது 10-ம நாள், அல்லது 12-ம் நாள் நாமகரணம். அதாவது பெயரிடுதலென்ற ஸம்ஸ்காரம். ருக்வேத மந்திரத்துடன், (I, XCI 7.) செய்யப்படுகிறது. பெயரானது அந்தந்த ஜாதிக்குரித்தானதாக இருக்கவேண்டும்.

இதை மனுஸ்மிருதி, (2-31-39) அடியில்வரும் சுலோகங்களில் சொல்லியிருக்கிறது.

“𑌮𑌙𑍍𑌗𑌲𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌤𑍍
𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌬𑌲𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌮𑍍
𑌵𑍈𑌶𑍍𑌯𑌸𑍍𑌯 𑌧𑌨𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌶𑍂𑌦𑍍𑌰𑌸𑍍𑌯 𑌤𑍁 𑌜𑍁𑌗𑍁𑌪𑍍𑌸𑌿𑌤𑌮𑍍”

𑌶𑌰𑍍𑌮𑌵𑌦𑍍𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯
𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑍋 𑌰𑌕𑍍𑌷𑌾𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌂॥
𑌵𑍈𑌶𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑍁𑌷𑍍𑌟𑌿𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌶𑍂𑌦𑍍𑌰𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑍇𑌷𑍍𑌯𑌸𑌂𑌯𑍁𑌤𑌂॥

ஸ்த்ரீணாம் ஸுகோத்யமக்ரூரம்
விஸ்பஷ்டார்த்தம் மனோஹரம்।
மங்கல்யம் தீர்கவர்ணாந்தம்
ஆஶீர்வாதாபிதானவத் ॥

(இ-ள்) பிராமணன் பெயர் மங்கள வாசகமாகவும், க்ஷத்திரியன் பெயர் பலவாசகமாகவும், வைசியன் பெயர் தனவாசகமாகவும், சூத்திரன் பெயர் தாழ்மை வாசகமாகவும், இருத்தல் வேண்டும்.

பிராமணன் பெயர் சந்தோஷம் தொனிக்கிறதாகவும், க்ஷத்திரியன் பெயர் ரக்ஷணை தொனிக்கிறதாகவும், வைசியன் பெயர் புஷ்டி தொனிக்கிறதாகவும், சூத்திரன் பெயர் ஊழியம் தொனிக்கிறதாகவும், இருக்கவேண்டும்.

ஸ்திரீகளின் பெயர் சுகமாய் உச்சரிக்கக்கூடியதாயும், கொடூரமற்றதாயும், தெளிவான பொருளையுடையதாயும், ரம்மியமாயும், மங்களகரமாயும், ஆசீர்வாத வாக்கியம் போல், கடையெழுத்து நெடிலாகவுமிருத்தல் வேண்டும்.

ஆறும்மாதத்தில் அன்னப்பிராசன ஸம்ஸ்காரம் ஏற்படுகிறது. (திரவரூபமான உணவை விட்டு அன்னரூபமான உணவு) நைவேத்யத்திரங்களுடன், (IV, XII-4. 5. IX ? XX VI 19. I. XX II-15.) குழந்தைக்கு உண்பிக்கப்படுகிறது.

முதல் ஆண்டு அல்லது மூன்றாம் ஆண்டில் அல்லது கிருஹ்ய சூத்திரங்களின்படி, க்ஷத்திரியனுக்கு ஐந்தாம் ஆண்டிலும், வைசியனுக்கு ஏழாம் ஆண்டிலும் சூடாகரணம் அதாவது, குடுமிவைத்தல் என்ற சம்ஸ்காரம் நடத்தப்படுகிறது. கர்ணவேதனம் (காதுகுத்தல்) என்ற சம்ஸ்காரம் 5-ம் அல்லது ஏழாம் ஆண்டிலும் அதற்கு அப்பாலும் நடத்தப்படுகிறது. தென்இந்தியாதேசத்தில் குழந்தை பிறந்த 12-ம் நாளிலும், அல்லது முதலாண்டு நிறை

வுகாலத்திலும், அல்லது சூடாகரண சமஸ்காரத்துடனும், காதுகுத்தல் நடத்தப்படுகிறது. சாஸ்திரீயமான சம்ஸ்காரங்களில் இந்தக்காதுகுத்தல் என்றது பிரஸ்தாபமில்லை. ஆனால் இக்காலத்தில் அது தவருமல் நடத்தப்பட்டு வருகிறது.

(பாராசரகிருஹ்ய சூத்திரம், II, 1 அதற்கு (ஹரிஹர) கதாதர பாஷ்யத்தைப்பார்க்க.)

இந்தச் சம்ஸ்காரங்களினல் குழந்தையின் சரீரம் அடிக்கடி நேர்மையாக அமைக்கப்பட்டுப் பாதுகாக்கப்படுகிறது. (யாக்ஞவல்க்ய ஸ்மிருதி, I, 13 சுலோகத்தில் சொல்லியிருக்கிறதாவது:—

“ஏவமேந: ஶமம் யாதி
பீஜகர்பஸமுத்பவம்”

(இ-ள்) பீஜத்திலும் கர்பத்திலும் உண்டான, பாபம் இவ்விதமாய், (இந்தசம்ஸ்காரங்களினல்) சமனத்தை அடைகிறது.

இந்தச் சம்ஸ்காரங்கள் பால்யாவஸ்தையை (குழந்தைப்பிராயத்தைச்) சேர்ந்தன. உபநயனத்துடன் கௌமார அவஸ்தையைத் தொடங்குகிறது. பாலன் குழந்தைக்குரிய விளையாட்டுகளை விட்டு அத்தியயனம் (படிப்பு) ஆரம்பிக்கிருன். அஃது உலகத்தில் தான் அடைய வேண்டும் பதவிக்கு ஆயத்தப்படுத்துகிறது.

உபநயனமாவது—யக்ஞோபவீததாரணை (பூணூல் தரித்தல்) என்ற சம்ஸ்காரம். அஃது ஆசாரியர் உபதேசம். அதனுல் இரண்டாவது ஜன்மம் ஏற்படுகிறது. பையன் இதன் மூலமாய்த் துவிஜன், அதாவது இருபிறப்பாளன் ஆகிருன்.

இதைப்பற்றி மனுஸ்மிருதி (II, 148. 148.) சொல்லுகிறதாவது:—

𑌕𑌾𑌮𑌾𑌨𑍍𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌚𑍈𑌨𑌂,
𑌯𑌦𑍁𑌤𑍍𑌪𑌾𑌦𑌯𑌤𑍋 𑌮𑌿𑌥𑌃 ||
𑌸𑌮𑍍𑌭𑍂𑌤𑌿𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌤𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑍍
𑌯𑌦𑍍𑌯𑍋𑌨𑌾𑌵𑌭𑌿𑌜𑌾𑌯𑌤𑍇 ||"
𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌯 𑌯𑌾𑌂 𑌜𑌾𑌤𑌿𑌂
𑌵𑌿𑌧𑌿𑌵𑌦𑍍 𑌵𑍇𑌦𑌪𑌾𑌰𑌗𑌃 ||
𑌉𑌤𑍍𑌪𑌾𑌦𑌯𑌤𑌿 𑌸𑌾𑌵𑌿𑌤𑍍𑌰𑍍𑌯𑌾,
𑌸𑌾 𑌸𑌤𑍍𑌯𑌾 𑌸𑌾𑌜𑌰𑌾𑌮𑌰𑌾 ''||

(இ-ள்.) காமத்தினால் மாதா பிதாக்கள் சேர்ந்து புத்திரன் உற்பத்தியாகிறான். அதினால் காமத்தினின்று பிறக்கிறான். அதனால அவனுடைய ஸ்தூல உற்பத்தி ஏற்படுகிறது.

வேதபாரகனான ஆசாரியனால் உபதேசிக்கப்பட்ட சாவித்திரி மந்திரத்தின் மூலமாய் ஏற்பட்ட பிறப்புத் தான், சத்தியமானதும் ஜனன மரணமற்றதுமானபிறப்பு.

• உபநயனம் என்ற சப்தத்தின் அர்த்தம் என்னவென்றால் ஆசாரியன் சமீபத்திற்குப் பையனைக் கொண்டு போதல். ஆசாரியன் உயர்ந்த மந்திரமாகிய காயத்திரியை அவனுக்கு உபதேசிக்கிறான். அந்தச் சம்ஸ்காரம் நடத்த வேண்டிய வயது விஷயத்தில் சாங்காயனர், ஆசுவலாயனர் ஆபஸ்தம்பர் இவர்கள் யாக்ஞ்ய வல்கியருடன் இணங்குகிறார்கள். பிராமணனுக்கு இந்தச் சம்ஸ்காரத்தை 5 வது வயதிலும், க்ஷத்திரியனுக்கு 6 வது வயதிலும், வைசியனுக்கு 8 வது வயதிலும், ஆரம்பித்து ஷெயார்களுக்கு 16 வயது, 22 வயது, 24 வயது வரையிலும் முறையே செய்யக்கூடுமென்று மனு சொல்லியிருக்கிறார். (மனு. II 37. 38.) யாக்ஞ்ய வல்க்யர் மனுசொல்லுகிறபடி மேற்கண்ட உயர்ந்த வரம்புகளை அங்கீகரித்துக் கொண்டு, தாழ்ந்த வரம்புக்களில் வேறுபடுகிறார். அதா

வது பிராமணனுக்கு 8 வயதிலும், க்ஷத்திரியனுக்கு 11 வயதிலும், வைசியனுக்கு 12 வயதிலும், ஆரம்பிக்கவேண்டுமென்கிறார்.

பையன் கௌபீன வஸ்திரமும், (கோவணமும்) நூதனவஸ்திரமும், பிராமணனாயிருந்தால் தர்ப்பப்புல்லால் அரைநாணாக மௌஞ்சியையும், க்ஷத்திரியனானால் வில்லின் நாணையும், வைசியனானால்கம்பளிக்கயிற்றையும் தரிக்கிறான்.

அந்தந்த ஜாதிக்குத் தக்கபடி முறையே கிருஷ்ணாஜினம். (புள்ளிமான் தோல்) பசுவின்தோல், இவைகளை ஆசாரியன் சிஷ்யனுக்குச் சுற்றிக்கட்டுகிறான். இந்தக் குறிப்பான அடையாளங்கள் தற்காலத்தில் அனுஷ்டானமில்லை. எல்லா வர்ணத்தாரும் ஒரேவிதமாக அனுசரிக்கிறார்கள். அதன்பின்னர் யக்ஞோபவீதத்தைப் போதிக்கிறான். சில பிரச்ன உத்திரங்களுக்குப் பிறகு சிஷ்யனுக்கு ஜலத்தை புரோக்ஷணம் செய்து, சில விதி வாக்கியங்களையும் மந்திரங்களையும், ஆசாரியர் உச்சரிக்கிறார். சிஷ்யனுடைய இருதயத்தின் மேல் கையை வைத்துக்கொண்டு அவர் சொல்லுகிறதாவது:—என்னுடைய ஆக்ஞைக்குள் உன்இருதயத்தை வக்கிறேன். என்மனத்தை உன்மனம் தொடரட்டும். என் வார்த்தையில் பூர்ணவிசுவாசத்துடன், நீ சந்தோஷிப்பாயாக. பிரகஸ்பதி உன்னை என்னுடன் சேர்ப்பிக்கட்டும். இதன்மேல் காயத்திரியை உபதேசித்துச் சிஷ்யனின் ஜாதிக்குத்தக்கபடி, உயரம், அல்லது குட்டையான தண்டத்தை ஆசாரியன் கொடுக்கிறான்.

இந்தச்சம்ஸ்காரம முழுவதும், ஆரியனின் துவிஜத்துவத்தைச் சூசிப்பிக்கிறது. அந்த சம்ஸ்காரத்

தின் அங்கங்கள் யாவும், அர்த்த புஷ்டியானவைகள். ஆத்துமாக்கள் லிங்கவித்தியாச முடையவைகளல்ல. அதாவது, ஆண்என்றும், பெண்என்றும் பேதமில்லை. கௌபீனதாரணம் சிஷ்யன் லிங்கமற்றவனைக் குறிப்பிக் கிறது. ஆனதுபற்றிச் சிஷ்யன், பிரமசரிய விரதத்தை ஆசரிக்கவேண்டும். புதுவஸ்திரம், புதுச்சரீரமடைந் திருக்கிறது என்றதற்கு, அரையில் அரைஞாண் மூன்றுதரம் சுற்றிக்கட்டுதலானது. சம்ஹிதை, பிராம்மணம் உபநிஷத் இவைமூன்று விதத்தையும் சிஷ்யன் அத்தியயனம் செய்யவேண்டு மென்பதைக் காட்டுகிறது. கிருஷ்ணாஜினம் தரித்தலானது அவனுடைய நிவிருத்தி மார்க்கத்தைக் குறிப்பிடுகிறது.

(யக்ஞோபவீதம்) நூல் மூன்று முறுக்குப் போட்ட மூன்றுஇழைகளானது. பிரபஞ்சத்தில் விஷயங்கள் மும்மூன்றாய் வகுக்கப்பட்டிருக்கின்றனவென்பதைக் குறிக்கிறது. உதாரணமாக, ஆத்மாவின் முப்பான்மை, ஸத், சித், ஆனந்தம், பிரகிருதியின் முக்குணம். சத்துவ, ரஜஸ், தமஸ்: பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் அல்லது சிவன் என்ற திரிமூர்த்தி; வைசுவாநரன், தைஜஸன், பிராக்ஞன் என்ற முப்பான்மையான ஜீவாத்மா; ஞானம், இச்சா, கிரியா என்ற மூன்று சக்திகள்: பூ:, (பூ:) புவ: (புவ:) ஸுவ: என்ற மூன்று லோகங்கள் மனம், வாக்கு, காயம் ஒவ்வொன்றும் கிரியாரீதியாக முப்பான்மை யாக வகுக்கப்பட்டிருக்கிறது. இதுபோல இன்னும் பிற வுள. யக்ஞோபவீதம தரிக்கிறவன், மனம், வாக்கு, காயம் என்ற மூன்றையும் அடக்கியாளவேண்டும்.

(மனுஸ்மிருதி. XII. 4. 11.) தண்டமானது சந்நி யாசிகள் வைத்துக்கொண்டிருக்கிற மூன்று தண்டம்

போல் வித்தியார்த்தியானவன் மனோபாவங்களையும், வார்த்தைகளையும் கிரியைகளையும் அடைக்கியாள வேண்டுமென்று காட்டுகிற அடையாளம். இதையே மனுஸ்மிருதி (XII—10. 11.)யில் அடியில் வருமாறு சொல்லியிருக்கிறது.

"𑌵𑌾𑌗𑍍𑌦𑌣𑍍𑌡𑍋𑌽𑌥 𑌮𑌨𑍋𑌦𑌣𑍍𑌡𑌃
𑌕𑌰𑍍𑌮𑌦𑌣𑍍𑌡𑌸𑍍𑌤𑌥𑍈𑌵 𑌚॥
𑌯𑌸𑍍𑌯𑍈𑌤𑍇 𑌨𑌿𑌹𑌿𑌤𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍌
𑌤𑍍𑌰𑌿𑌦𑌣𑍍𑌡𑍀𑌤𑌿 𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥
𑌤𑍍𑌰𑌿𑌦𑌣𑍍𑌡𑌮𑍇𑌤𑌨𑍍𑌨𑌿𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌯
𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌮𑌾𑌨𑌵𑌃॥
𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑍌 𑌤𑍁 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯
𑌤𑌤𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌨𑌿𑌯𑌚𑍍𑌛𑌤𑌿"॥

(இ-ள்) வாக்கையாளுகிற தண்டம். I.
மனத்தையாளுகிற தண்டம். I.
கருமத்தையாளுகிற தண்டம். I.

ஆக இந்தமூன்றையும், எவன் புத்திபூர்வமாய் அனுஷ்டிக்கிறானோ அவனுக்குத் திரிதண்டி என்று பெயர்.

எல்லா ஜீவராசிகளுடன் மேற்கண்ட முப்பான்மையான தண்ட அறிகுறியான விதிகளின் வழிபட்டுக் காமகுரோதத்தை அடக்கி நடக்கிறவன், பூர்ணத்தை அடைகிறான்.

பிரம்மசரியாச்சிரமத்தின் அந்தியம் சமாவர்த்தன சம்ஸ்காரம். சிஷ்யன் ஆசாரியருக்குக் கொடை அளித்து விதி யுக்தமான ஸ்நானஞ்செய்ய அவரிடம் அனுமதி பெறுகிறான். இது பிரம்மசரியாச்சிரமத்தின் முடிவைக்ப்பிடுகிறது. இதற்கு (யாக்ஞ்யவல்கிய) ஸ்மிருதி I. 51 ல். அடியில்வரும் சுலோகம் ஆதாரம்.

"ஶ்ராவெத்ராவ்ராஂஷுகவா
ஸாரீத்தத்ஷநாஜ்ஞயா ||
வெஷஂஷுதாநிவஷாரஂ
நீகஸா ஹ்ய யஷெவவா" ||.

(இ-ள்) ஆசாரியருக்குப் பிரியமானதைக் கொடுத்து வேதம் அல்லது விருதங்களை அல்லது இரண்டையும் பூர்த்தியாய் முடித்துவிட்டு அவருடைய அனுமதியின் பேரில் சிஷ்யன் ஸ்நானஞ் செய்யக்கடவன்.

பிறகு சிஷ்யன் தன்னுடைய சொந்தக் கிரகத்திற்குத் திரும்பி சமாவர்த்தனம், (திரும்புதல்) என்ற கிரியையைச் செய்கிறான். அப்பொழுது அவனுக்கு ஸ்நாதகன் என்றுபெயர். விவாகம் செய்துகொள்ளத் தயாராக விருக்கிறான். கிரகஸ்தாசிரமம் வகிக்கத் தகுந்தவனாகிறான்.

இதையே மனுஸ்மிருதியில் (III. 4) அடியில் வருமாறு சொல்லியிருக்கிறது.

"ஶ்ராவ்ணா நாஜ்தஂஸாகவா
ஸமாவ்ரெத்ாயயாவியி |
உஷஹெதஷிஜொஸாயாஂ
ஸவணாஂஷுக்ஷணாநிதாஂ ||"

(இ-ள்) ஆசாரியனின் அனுமதியின் மேல், ஸ்நானஞ் செய்துவிட்டு விதிப்படி சமாவர்த்தனஞ்செய்து (சொந்த கிரகத்திற்குத் திரும்பி) த்விஜனானவன் தன்னுடைய வருணத்திலுள்ள மங்களமான அழகுள்ள ஸ்திரீயை விவாகம் செய்துகொள்ள வேண்டியது. இவ்விதமாய் பிரம்மசாரி ஆசிரமம் முடிவுபெறுகிறது. விவாகத்தினால் கிரகஸ்தாசிரமம் ஆரம்பிக்கப்படுகிறது. அதன் உத்தரவாதங்களை வகிக்கிறான். யாகம், அத்தியயனம், புத்திரோற்பத்தி என்ற குணங்களைத் தீர்க்க ஆரம்பிக்கின்றான.

விவாகத்தின் கிரியைகள் நாடுதோறும் வேறுபடு கின்றன. கேவல கௌரவமான ஆதிகிரியையானது அதிகடம்பத்தாலும் ஆடம்பரத்தாலும், மூடப்பட்டுள்ளது. ஷெடி சம்ஸ்காரத்தில், பிரயோகிக்கும் வேதமந்திரங்களின் தாற்பரியம் விவாகத்தின் உண்மையான கருத்தை விவரிக்கிறது. யதார்த்த நோக்கமுள்ள ஆரியன் தற்கால டம்பத்தையும், பகட்டையும் விலக்கி இந்தக்கருத்தைக் கைக்கொள்ளல் வேண்டும்.

ஆரியனுடைய விவாகசூக்தம், விவாகத்தின் வைபவத்தைத் தெரிவிக்கிறது. (ருக்வேதம்) (X- LXXXV. 26 27.) ல் பார்க்க

"ஶ்ரு ஹா நு ஶ ஷ ஶ்ரு ஹவை தீ யமா ஸெ
வஶி நீ கூ௱ ஊவி ஜ மஶா வ ஜா ஸி॥
ஜ ஹஶி ய௱ வ்ஶ ஜ யா தெஸஜ ஜா ஸ தா
ஜஸி நு ஶ்ரு ஹெ ஹ ஶா ஹ வை த்ரா யஜா ஶ்ரு ஹி॥
வ நா வ த்ரா த நூ ஸ௱ ஸ௱ ஜ ஸ்வா
யா ஜி வி ஷி ஜ மஶா வ ஜா மஃ॥

(இ-ள்) கிருகம் வன் சுவாதீன மிருக்கிறதுபோல் பிரவேசி. அதன் அதிகாரியாக சிரத்தை யுள்ளவர்களுடன் பேசு. உன் குழந்தைகளுடன் அன்பு பாராட்டு. குடும்பகாரியங்களை வகித்து ஜாக்கிரதையுடன் ஆளு, இதோ இருக்கின்ற உன் புருஷனுடன் மக்களைப்பெறு, வயதுசென்ற உன் பந்துக்களுடன் நீ பேசுவாயாக.

மாப்பிள்ளை (புருஷன்) மணப்பெண்ணுடன் (தன் பத்தினியுடன்) சொல்லுகிற தாவது:—

ஶ்ரு ஹ்ணா மி தெ ஸௌ ஹ ஶ க௱ ய ஹஸ்த
மயா வ த்ரா ஜ ர ஷ்டி ய ஶா ஸஃ।

(ஷெடி வேதம். ஷெடி 36 வது மந்திரம்)

(இ-ள்) சௌபாக்கியத்திற்காக உன்கையைப் பிடித்ததாக கொள்ளுகிறேன். உன் புருஷனை என்னுடன் நீ நீடூழிவாழ்வா யாக.

ஸ்திரீபுமான் இருவரும் கைகளை கோர்த்துக்கொண்டு ஜலத்தையும் அக்கினியையும், வலமாகச் சுற்றுகின்றார்கள். அடியில் கண்ட பிரார்த்தனையுடன் அக்கினியில் தான்னியத்தைப் பெண் ஹோமம் செய்கிறாள்.

"ஆயுஷ்மாந் ஸேதுர் ஜீவது
மே பதிர் ஜீவது நாரீ" ||

(சாங்கியாயன கிருஹ்யசூத்திரம். I. XIV. 1.

(இ-ள்) என்பர்த்தா நீடூழிகாலம் ஜீவிப்பாராக, என் உறவினர் அபிவிருத்தியை யடையட்டும்.

அக்கினி மணமகனுக்கு மணமகளைக் கொடுக்கிறதாகச் சொல்லப்படுகிறது. ஏனென்றால் அக்கினி குடும்பத்துக்கு அதிபதி.

மணமகள் (புருஷனுடைய) புதுக்கிரகத்திற்குப் போகும் பொழுது சூக்தம் அடியில்மருமாறு பிரார்த்திருக்கிறது.

இஹைவ ஸ்தம் மா வியௌஷ்டம்
விச்வமாயுர் வ்யச்னுதம்
க்ரீடந்தௌ புத்ரைர் நப்த்ருபிர்
மோதமானௌ ஸ்வே க்ருஹே ||

(ருக்வேதம். X. L. LXXXV. 42.

(இ-ள்) இங்கே வசியுங்கள். பிரிவினையின்றி யிருங்கள். பூரண ஆயுள் உள்ளவர்களாகுக. உங்களுடைய கிரகத்தில் புத்திரர்கள் பௌத்திரர்களுடனே விளையாடி உல்லாசமாக விருங்கள். தவிரவும் அதேசூக்தம் மறுபடியும் பிரார்த்திக்கிற தாவது. மணமகள் அன்பையும் இளகியமனத்தையும் உடையவளாகக் குடும்பத்திலும் புருஷர்களுக்கும், பிராணிகளுக்கும் கிரகிணியாக நன்றாய்க் குடும்பத்தை ஆண்டு சந்தோஷத்தைக் கொடுப்பாளாக. அவள் வயிற்றில் தீரர்கள் உண்டாவதாக.

மனுஸ்மிருதி (IX. 101. 102.) அடியில் வருமாறு விவாகவிதியை விவரிக்கிறது.

“𑌅𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑍋
𑌭𑌵𑍇𑌦𑌾𑌮𑌰𑌣𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑌃॥
𑌏𑌷 𑌧𑌰𑍍𑌮𑌃 𑌸𑌮𑌾𑌸𑍇𑌨
𑌜𑍍𑌞𑍇𑌯𑌃 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌂𑌸𑌯𑍋𑌃 𑌪𑌰𑌃” ॥
𑌤𑌥𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌯𑌤𑍇𑌯𑌾𑌤𑌾𑌂
𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌂𑌸𑍌 𑌤𑍁 𑌕𑍃𑌤𑌕𑍍𑌰𑌿𑌯𑍌 ।
𑌯𑌥𑌾 𑌨𑌾𑌤𑌿𑌚𑌰𑍇𑌤𑌾𑌂 𑌤𑍌
𑌵𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌵𑌿𑌤𑌰𑍇𑌤𑌰𑌮𑍍” ॥

(இ-ள்) மரணபரியந்தம் (ஸ்திரீ புமான்) ஒருவருக்கொருவர் கற்புடைமை இருக்கட்டும். சுருக்கமாக இதுதான் ஸ்திரீ புமான்களுக்குள்ள உயர்ந்த தருமம்.

அவர்கள் இருவரும், அவர்களுடைய எல்லாக் கடமைகளைச் செய்யமுயற்சிப்பார்களாக. பிரியுங்காலத்தில் பினபு (பின்ஜன்மத்தில்) அந்நியர்களை நோக்கிப் போகார்கள்.

இவ்விதம் ஆரியனின் விவாகத்தின் உயர்நத நோக்கம் நிகழப்பெற்றது. ஒருவருக்கொருவர் ஸ்திரீபுமான மரணம்வரை பூர்ண நம்பிக்கையும் கற்புடைமையுங் கூடியவர்களாயிருக்கக்கடவர்.

ஆரிய இலக்கியங்களில் இந்நோக்கம் எவ்விதமாய் நடைபெற்று வந்ததென்று அறியலாம். முன்னோர்கள் மாதிரியாய் அவர்கள் நோக்கத்தை அனுசரிப்போமாக. அப்படி நடந்தால் முன்னோர்கள் மாதிரியான புருஷர்களையும் ஸ்திரீகளையும் பார்க்கலாம்.

இவ்விதமாய்ப் பண்டைக்காலத்தில் மந்திரோச்சாரணையுடன், ஒருவன் என்ன (தைவ) அனுக்கிரகத்துட

னும் புருஷத்தன்மையை அடையப்பெற்றனன். முன் பிரஸ்தாபித்திருக்கிற கௌதமர் வசனத்தை நாம் ஞாபகத்திற்குக் கொண்டுவருவோம்.

42 சம்ஸ்காரங்களை மாத்திரம் அனுஷ்டித்து ஆத்மாவின் 8 தருமங்கள் இல்லாவிடின் பிரஹ்மத்தை அடையான். பிரம்மலோகத்திற் புகான். ஆனால் ஷெ. 42 சம்ஸ்காரங்களில் சிலவற்றை மாத்திரம் செய்தவனானாலும், ஆத்மாவின் 8 தருமங்களை உடைத்தானவன் பிரஹ்மத்தை அடைவான். பிரம்மலோகத்தையும் பெறுவான்.

இரண்டாம் பிரிவில்,

முதல் அதிகாரம்

முற்றுப்பெற்றது.

# இரண்டாம் பிரிவு.

## 2-வது அதிகாரம்.

### சிராத்தாதிகள்.

இவ்வுலகத்தை விட்டு மரணாந்தரம் போகின்றவர்களை உத்தேசித்துச் செய்யப்படும் பொதுவாய்ச் சிராத்தங்களென்ற கிருத்தியங்கள் சம்ஸ்காரத்தின் விரிவான ஜாப்தாவில் அடங்கியிருக்கின்றன. திருஷ்டமான லோகங்களுக்கும், அதிருஷ்டமான லோகங்களுக்கும், ஜீவகாலத்திற்கும், மரணத்திற்குப் பிற்பட்டகாலத்திற்கும் இடையில் பிரவேசிக்கக்கூடாத பலமான எல்லைக்குறியான யாதொரு சுவரும் இருக்கிறதாக ஆரியர்களுடைய தாற்பரியமன்று. அவர்களுடைய மதக்கொள்கையினால் இடைவிடாது திருஷ்டமான இந்த உலகத்துடன் அதிருஷ்ட உலகங்களின் சம்பந்தம் இருந்துகொண்டே நடைபெறுகிறது. மனிதர்கள் போலவே தேவர்களும் பிரத்தியக்ஷமானவர்கள். அந்தச்சமய ரீதியாய் ஜீவாத்மா இடையனாக இருத்தலை எப்பொழுதுமுடைத்தானதாகையால் மரணத்தால் யாதொரு பயமும் வியாகுலமும் அவர்களுக்கில்லை. அஃது இயல்பான சம்பவம். மரித்தவர்களை உண்மையாய் மரணமடைந்தவர்களாய்எண்ணுகிறதில்லை. அவர்கள் வேறு பூமியில் வசிக்கிறதாக நினைக்கப்படுகின்றார்கள். மறுபிறப்பு உண்டென்ற அந்த மதத்தின் வழக்கமான கொள்கையால் ஒரு ஜன்மம் மற்றொரு ஜன்மத்துடன் சம்பந்தித்திருக்கிறதென்றும், மரணம் என்றால் பிறப்பு இறப்பு என்ற நிகழ்ச்சியில் ஒரு சம்பவமென்றும், ஜீவாத்துமாவே முக்கியத்துவமுடையதென்றும், சரீரம் அற்பமெனவும் ஏற்படுகின்றன. மேலும் திரும்பத்திரும்

பச்செய்யப்படும் சிராத்தாதிகளினால் ஜீவாத்துமாதான் புருஷனென்று ஒவ்வொரு ஆரியன் மனத்தில் நன்றாய் பதிந்திருக்கிறது. இவைகளினால் மரணந்தம் இவ்வுலகம் விட்டுப்போனவர்கள் இன்னும் ஜீவித்திருக்கின்றார்கள் என்ற விஷயம் இப்பொழுது இவ்வுலகத்தி லிருக்கிறவர் களுக்கு அறிவுறுத்துகிறது.

ஒவ்வொரு ஆரியனும் இறந்தவர்களுக்குச் செய்ய வேண்டிய கிரியைகள் ஜீவன் பிரியும் நிமிஷமே ஆரம்பிக் கின்றன. அவைகள் இருபான்மையான பிரேதக்கிரியை கள். அஃதாவது முறையே மரண சம்பந்தமானவைகள் பிதுருகிருத்தியங்களாம். போனவர்களுக்கு சபிண்டீ கரணம் என்ற கிரியை செய்யும்வரை பிரேதசப்தம் உப யோகிக்கப்படுகிறது. அந்தச்சபிண்டீகரணத்திற்கப்பால் பிதுருக்கள் என்ற பெயர் வழங்குகின்றது.

மரண சமயத்தில் புருஷன் பிராணமயகோசத்தி லிருந்துகொண்டு அன்னமயகோசத்தைவிட்டு விலகு கிறான். வைதீக சம்ஸ்காரங்களெல்லாம் ஸ்வாபாவிக போக்குக்களுக்கு உதவியாயிருக்கும்படி ஏற்பட்டு அவ் வாறே அன்னமயகோசமும் பிராணமயகோசமும் ஒருங்கே யிருக்குமளவும் பிராணமயகோசம் அன்னமயகோசத் தையே மருவிச் சேர்ந்துகொண்டு மரணத்திற்குப் பிறகு உலகத்தை விட்டு விலகவேண்டிய ஜீவனை பூமியிலேயே இருத்திவைக்கவுமுள்ள தன்மையை தடுக்கும் பொருட்டு ஷ்டி பிரேதகர்மம் ஏற்படுகின்றது.

ஆகவே அன்னமயகோசத்தை அழிக்க வேண்டி யது முக்கியகிரியை. அது தகன சம்ஸ்காரத்தினால் செய் யப்படுகிறது. இதைப்பற்றிச்சாந்தோக்கியோப நிஷத்தில் வரும் வசனமாவது:—(V-iX-2.)

"[illegible]
[illegible]"

(இ - ள்) மரணமடைந்தவனை எங்கேயிருந்து அவன் உற்பவித்தானே அந்த அக்கினியிடம் அவைகள் சேர்ப்பிக்கின்றன.

பிரேதத்திற்கு அக்கினிவைக்கும் முன், கர்த்தா அதைப்போட்டிருக்கு மிடத்தை மூன்று தடவை சுற்றி வந்து அடியில்வரும் மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு ஜலத்தைப் பிரேதத்தின்மேல் புரோக்ஷிக்கிறான்.

ருக்வேதம் (X-xiv-9) பார்க்க.

"[illegible]"

(இ - ள்) போ, விலகு, இவ்விடத்தைவிட்டு வெளியேறு.

பிரேதம் எரிந்து கொண்டிருக்கையில் அடியில்வரும் மந்திரத்தைக் கர்த்தா உச்சரிக்கிறான்.

ருக்வேதம். (X-XIV-7.)

"[illegible]"

(இ-ள) செல்லு, செல்லு, புராதனமான மார்க்கங்களிற் செல்லு.

தகனத்தின் மூன்றாம் தினம் (தென்தேசத்தில் மறுநாள் இந்தக்கிரியை செய்யப்படுகிறது.) அஸ்திகள் சேர்க்கப்பட்டுப் புதைக்கப்படுகின்றன. அல்லது ஓடுகிற ஜலத்தில் போடப்படுகின்றன. இவ்விதமாய் அன்னமயகோசம் சிதறுண்டு பொய்த்துப்போகின்றது. பிறகு பிராணமய கோசமும் விரைவில் சிதறுண்டு போகின்றது.

இதன்பின் செய்யவேண்டிய கிரியை என்னவென்றால் மனோமயகோசத்தின் அசுத்தபாகம் சிதறுண்டுபோகும்படியாகச் செய்வதுதான். அப்படிச்செய்ததின்மேல் பிரேதசப்தம்போய் ஜீவன் பிதுருகோஷ்டியில் சேருகிறான். இதற்காக ஏகோதிஷ்டசிராத்தமும் சபிண்ட

காரணசிராத்தமும் ஏற்பட்டிருக்கின்றன. ஏகோதிஷ்ட சிராத்தம் மரணமடைந்த ஒருவனை உத்தேசித்து செய்யப்படும் கிருத்தியம். ஆனால் சாதாரண சிராத்தம் பிதுருக்களில் மூன்றுதலைமுறைகளை அல்லது எல்லா பிதுருக்களை உத்தேசித்துச் செய்யப்படுகிறது. இது சம்பந்தமான பலிகள் ஒருவருஷம் முழுமையும் செய்யவேண்டிய தின் பிரயோஜனார்த்தமாக ஏற்பட்டிருக்கின்றன. இந்தக்கிருத்தியத்தில் ஆவாஹன (அழைத்தல்) கிரியையாவது அக்கினியில் ஆஹுதியாவது கிடையாது.

விசுவதேவர்கள் இதில் சம்பந்தமில்லை.

(சூத்திரம V. 2. 5. பார்க்க.)

(சாங்காயன கிருஹ்யம்.)

ஏகோதிஷ்டசிராத்தத்தின் முடிவு அங்கமாக சபிண்டீகரணம செய்யப்படுகிறது. அதன்மூலமாய் ஜீவன்பிதுருகோஷ்டியில் சேருகிறான். இந்தக் கிருத்தியத்தைப்பற்றி சாங்காயனர் சொல்லுகிறதாவது. கர்த்தா நாலு ஜல பாத்திரங்களை எள் சந்தனம் முதலான வாசனைதிரவியங்கள் ஜலம் இவைகளால் நிரப்புகிறான். நிரப்பிய 3 பாத்திரங்கள் பிதுருக்களை உத்தேசித்தவைகள். மிகுதியான ஒன்று புதிதாய் மரணமடைந்தவனுக்கு ஏற்பட்டிருக்கிறது. இந்தப்புது மரணமடைந்தவனுக்கு ஏற்பட்ட ஒரு பாத்திரத்திலுள்ள திரவியங்களை, மற்றப் பிதுருக்களுடைய மூன்று பாத்திரங்களில் வாஜஸநேயசம்ஹிதையில் உள்ள இரண்டு மந்திரங்களை (XIX 45. 46.) சொல்லிக்கொண்டுவிடுகிறான்.

இந்தக்கிரியைகள் சரியானபடி செய்யப்படுமாகில் ஆஹுதிகள் பலிகள் இவைகளின் தத்வாம்சங்கள் பிதுருலோகம் சேரும்வரை இறந்தவனுக்கு உணவாக ஆகின்

றன. இந்தக்கிருத்தியங்களில் உச்சரிக்கப்படும் மந்திரங்கள் அந்த லோகத்திற்குப் போகும்கதியை சுலபப்படுத்துகின்றன. பிதுருக்களில் ஒருவனுக ஆகிருன்.

பிறகு நான்காவதான பிரபிதாமஹர் இனிமேல் சிராத்தக்கிரியைகளில் வரிக்கப்படுகிறதில்லை. இறந்தவன், அவன் பிதா, அவர் பிதாமகர் இம்மூவர்தான் மூன்று பிதுருக்களாக வரிக்கப்படுகின்ருர்கள்.

பிதுருக்களை உத்தேசித்துப் பல பருவ காலங்களில் செய்யப்படும் எண்ணிறந்த கிருத்தியங்களெல்லாம் சங்கேதமாகச் சிராத்தங்கள் எனச்சொல்லப்படுகின்றன. சிராத்தத்தில் செய்யப்படும் யாகம் பிதுருக்களான தேவதைகளை உத்தேசித்ததாம். போஜனம்செய்யும் பிராமணர் ஆஹவனீயாக்கினியின் பிரதிநிதியாக விருக்கின்ருர்கள்.

(ஆப்யுதயிகம்) ஆப்பியுதயிகசிராத்தம் அல்லது (நாந்தீ) நாந்திசிராத்தங்கள் மங்களகரமான காரியங்கள் செய்யுங் காலங்களில் செய்யப்படுகின்றன. உதாகரணமாக புத்திரஜனனம், புத்திரன், அல்லது புத்திரியின் விவாகம், நாமகரணம் ஜாதகர்மம் சூடாகர்மம் முதலியன. இந்தக் கிருத்தியத்தில் நாந்திமுக பிதுருக்கள் (அஃதாவது சுவர்க்கலோகவாசிகளான சுமுகமான பிதுருக்கள் வரிக்கப்படுகிருர்கள். இரட்டைப் படியான எண்ணிக்கையுள்ள பிராமணர்களை மத்தியானத்திற்குமுன் புஜிப்பிக்கவேண்டும்.

பிராசீன கிருத்தியங்களில் சிராத்த கிருத்தியங்கள் மாத்திரம் இப்பொழுதும் சொற்பம் சிரத்தையுடனேநடத்தப்பட்டு வருகின்றன. அவைகளின் தத்துவத்தை நன்ருய் அறிந்துகொண்டால் சிரத்தையானது அதிகப்படும்.

சிரத்தையின்றிச் சிராத்தம் என்ற பெயர் அக்கிருத்தியத்திற்குப் பொருந்தாது.

இனி நான்காவது அத்தியாயத்தில் பஞ்சயக்ஞத்தைப்பற்றி விசாரிக்கும்பொழுது பிதுருயக்ஞமும் அதில் அடங்கியிருக்கிறதென்று தெரியவரும். அமாவாசைதினம் இந்தப்பிதுரு யக்ஞத்துடன் (ஷிண்டாநாஹாயகம்) பிண்டான் வாஹார்யகம் என்ற மாசசிராத்தமும் 7 பாகயக்ஞங்களில் (அதாவது பாகபிண்டபலிகள்) ஒன்றான (வாவணாமாஸம்) பார்வணசிராத்தமும் சேர்ந்து செய்யப்படுகின்றன.

பிதுருக்களுக்குச் செய்யும் யக்ஞங்கள் பிற்பகலில் தெற்கைநோக்கி (ஆபஸ்தம்பர் எக்ஞபரிபாஷை சூத்திரம் L X) தெற்குமுகமாய்ச் சாய்ந்திருக்கிற பூமியில் (மனுஸ்மிருதி iii- 206) செய்யவேண்டியது. அமாவாசைதினங்களில் குசை அல்லது தர்ப்பாசனம் அமைத்துக்கொள்ளல் வேண்டும். ஒற்றைப்படியான கணக்குள்ள பிராமணர்களை வரிக்கவேண்டும். அந்தப் பிராமணர்களுடைய யோக்கியதையைப்பற்றியும் வித்தையைப்பற்றியும் முக்கியமாய்க் கவனிக்கவேண்டியது.

(மனுஸ்மிருதி iii- 142)

— "யவெஎரிணெஷீஜஉவா,
நவவாருஹெதஹெருஃ।
தயாஉநஜெ தஹவிஉஎவா
நஉாதாருஹெதஹெருஃ॥"

(இ - ள்) உவர்நிலத்தில் தான்னியத்தை விதைத்தால் எப்படி யாதொரு பலனும் கிடைக்காதோ, அப்படியே ருக்குக்களைத் தெரியாத பிராமணனை வரித்து அன்னம் கொடுத்தல் யாதொன்றும் பயன்படாவாம். (மனுஸ்மிருதி iii-94.)

"நஶ்யந்தி ஹவ்யகவ்யாநி
நராணாமவிஜாநதாம்
பஸ்மீபூதேஷு விப்ரேஷு
மோஹாத்தத்தாநி தாத்ருபி:"

(இ - ள்) அஞ்ஞானிகளால் தேவர்களுக்கும் பிதுருக்களுக்கும் முறையே ஹவ்வியங்களாகவும் கவ்வியங்களாகவும் கொடுக்கப்படும் ஆஹுதிகள் மோககிரஸ்தர்களால் கொடுக்கப்படுகின்றமையால் சாம்பலில் செய்ததற்குச் சமமாம். மேற்படி-168

"ப்ராஹ்மணஸ்த்வநதீயாந:
த்ருணாக்நிரிவ ஶாம்யதி
தஸ்மை ஹவ்யம் ந தாதவ்யம்
ந ஹி பஸ்மநி ஹூயதே||"

(இ - ள்) அநத்தியயன (வேதமோதாத) பிராமணன் சீக்கிரம் அணைந்து போகின்ற புல்லில்பற்றிய நெருப்பாம். அவன் எக்கிருத்தியங்களை சம்பந்தமான ஆஹுதிகளைப்பெற அருகனல்லன். சாம்பலில் ஆஹுதி பண்ணுவார்களா—?

அதுபோலவே

ஹிரண்ணிய கேசியர் சொல்லுகிறதாவது:—சிராத்தங்களில் வரிக்கப்படும் பிராமணர்கள் பரிசுத்தமானவர்களாகவும் மந்திரப்பிரக்ஞை யுள்ளவர்களாகவு மிருத்தல் வேண்டும்.

(கிருஹ்ய சூத்திரம், II. IV 10.)

மேற்கண்ட விதமாய் ஆராய்ந்து பிராமணர்களை வரித்துக்கொண்டும், யாகத்திரவியங்களைச் சேகரித்துக் கொண்டும் தக்ஷிணாக்கினியில் ஹவிஸ் அர்ப்பிதம் செய்து கர்த்த ஆஹ்வானம் (கூப்பிடுதல்) செய்து ஜலத்தைப் புரோக்ஷிக்கிறான். மனுஸ்மிருதிப்படி 3 பிண்டங்கள் பிதா, பிதாமகர், பிரபிதாமகர் இவர்களுக்குக் கொடுக்கப்

படுகின்றன. பிண்டங்களைச் சுற்றி ஜலம் விடப்படுகிறது. வரித்த பிராமணர்களுக்கு ஷை பிண்டங்களின் சொற்ப பாகம் கொடுக்கப்படுகின்றது. அதன்மேல் அபரான்ன காலத்தில் (பிற்பகலில்) பிராமணர்களை அன்னமிட்டுப் புஜிப்பிக்கவேண்டும்.

(மனுஸ்மிருதி. III. 208. 237.)

கிருஹ்ய சூத்திரங்களில் பிராமணர்களுக்குப் போஜனம் செய்வித்து அதன்மேல் பிதுருக்களுக்குப் பிண்டப் பிரதானம் செய்தல் வேண்டுமென்று விதித்திருக்கிறது. பிறகு குடும்பசம்பந்தமான பதோக்தவாயஸ பலிகொடுக்க வேண்டும்.

மனு. iii-265,)

இம்மாதிரியான கிருத்தியங்கள் கிருஷ்ணபக்ஷத்தில் செய்யலாம். அஷ்டகாசிராத்தம் சிலசமயங்களில் பிதுருக்களுக்குச் செய்யலாம்.

பிதுரு லோகமும், யமலோகமென்ற பிரேதலோகமும் இவ்விரண்டும் புவர்லோகத்தின பகுதிகள். பூலோகத்தினின்று (கிருத்தியங்களின) பலம் ஷை இரண்டு லோகங்களையும் எட்டுகின்றன. பிண்டப்பிரதானத்தின் பலன் பிரேதலோகம் முழுமையும் சாருகின்றது. மீதமான அன்னப்பிரதானம் மேல் தலைமுறைகளுக்கு அதாவது 4-வது 5-வது 6-வது பிதுருக்களுக்குச் சேருகின்றது.

கர்த்தா உட்பட 7 தலைமுறையார்களுக்குப் பிண்டான்னத்தைக் கொடுத்தல் பெறுதல் என்ற கிருத்தியங்களின் பலம் பற்றுகிறது. இவர்களுக்கப்பால் மூன்றுதலைமுறையார்கள் ஜலதர்ப்பணம் மாத்திரம்பெற அருகர்கள். அவர்களுக்குப் பூமியிலிருந்து எவ்வித உதவியும் செய்ய ஒண்ணாது. ஏனெனில் அத்தனை தலைமுறைகள் சம்பவிக்

கிறதுக்குள்ளாகச்சாதாரணமாய் ஒருவன்சுவர்க்கலோகத்தை அடைந்திருப்பான் என்று நினைக்கப்பாலது. சிராத்தத்தின் கருத்தெல்லாம் சுவர்லோகத்தின் கதியைச் சுலபப் படுத்துவதுதான்.

எல்லாச் சம்ஸ்காரங்களின் ஆதாரமான தத்துவங்களை வைத்துக்கொண்டுதான் புதிதாய் இறந்தவனுக்குச் செய்யப்படும் சிராத்தத்தின் பொதுவானவிதிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்தூலதேகத்தின் அபிவிருத்தி க்ஷேமம் இவைகளை உபதேசித்து ஜனனத்திற்கு முன்னும் பின்னும்செய்யும் சம்ஸ்காரங்களைப்போலவே சூக்ஷ்ம தேகங்களை உத்தேசித்துப்பொதுவாய்ச் சிராத்தங்களும் ஏற்பட்டிருக்கின்றன வென்று நினைக்க இடமுண்டு. மறுலோகத்தில் ஜீவன சௌகரிய ஜனனம் பெறவேண்டியதை உத்தேசித்து (கிருத்தியங்கள் மூலமாய்)உபகரித்ததின்மேல்நாம் செய்ய வேண்டிய கடமையைப் பூர்த்தியாகச் செய்துவிட்டோம். இனிச் செய்யக்கூடியது ஒன்றுமில்லை. மறுலோகத்திலிருக்கின்ற (தேவ)அதிகாரிகள் ஜீவாத்மாவைத் தங்களுடைய ரக்ஷணையில் வகித்துக் கொள்ளுகின்றார்கள்.

இரண்டாம் பகுதியில்

இரண்டாவது அதிகாரம்

முற்றிற்று.

# இரண்டாம் பிரிவு,

## 3—அதிகாரம்.

### சௌசம்.

சரீரசுத்திக்கு ஏற்பட்டிருக்கிற விதிகள் அன்னமயப் பிராணமய கோசங்கள் சம்பந்தமான தத்துவங்களின் ரீதியாய் நிகழ்கின்றன.

அன்னமயகோசம் ஸ்தூல திரவஆவியுமான பதார்த்தங்களால் அமைக்கப்பெற்றுளளது. இவைகளின் நுண்ணிய அணுக்கள் சரீரத்தினின்று இடைவிடாது வெளியேறிக் கொண்டிருக்கின்றன. மலஜலவிஸர்ஜன மூலமாயும் வியர்வைமூலமாயும் சரீரத்திற்கு வெளிப்படையாய்த் தினந்தோறும் ஏற்படும் கழிவுகள் தவிர, சரீரம் விழித்திருந்தாலும் தூங்கியிருந்தாலும், இரவும் பகலும் இந்த நுண்ணிய அணுக்கள் இடைவிடாது வெளியேறுகின்றன. சரீரமானது ஊற்றுபோன்றிருக்கிறது. அதினின்று அணுக்களின் தாரை இடையறாது வெளியேபோகின்றது. கல், மரம், பிராணி, மனிதன முதலான ஒவ்வொரு பிரகிருதிசம்பந்தமான பதார்த்தமும் இத்தன்மையதாக இருக்கின்றது. எல்லாம் இந்திரிய அகோசரமான நுண்ணிய அணுக்களை இடைவிடாது வெளியேற்றுகின்றன. அவ்வண்ணமே எலலாம் இந்திரிய அகோசரமான நுண்ணிய அணுக்களை அவைகள் நிறைந்த சுவாசிக்கின்ற வாயுவினின்று சுவாசத்துடனே உள்ளே கிரகிக்கின்றன. இவ்வண்ணமாக எல்லாப்பிரகிருதி பதார்த்தங்களுக்குள்ளும் பரஸ்பர பரிவர்த்தனம் நிகழுகின்றது. ஆகவே தம் சரீரங்கள் பிறர்சரீரங்களினின்று அணுக்களைக்கிரகிக்காமலும் மற்றவர் சரீரங்களுக்குக்

கொடுக்காமலும் ஒருவர் மற்றவரை அணுகுவது முடியாது. தான்சமீபிக்கும் ஒவ்வொரு வஸ்துவும், தன் சரீரத்தினின்று சில அணுக்களைக் கிரகிக்கின்றது. ஒருவன் ஸ்பரிசிக்கும் ஒவ்வொருவஸ்துவும், அவன்சரீரத்தின் நுணுக்கமான சிறு பகுதியைத்தன்மேல் பரப்பில் பற்றப் பெறுகிறது. அவன்வஸ்திரம், அவன் வாசஸ் தலம், அவன சாமான் இவைகளெல்லாம் அவன் சரீரத்தினின்று நுண்ணிய அணுக்களின் தாரைபடியப்பெறுகின்றன. அவ்விதமே அவைகளினின்று அணுக்களின் பிரவாகம், பரிவர்த்தனையாக அவன் மேல்வந்து படிகின்றன.

நுண்ணிய ஆகார அணுத்திரள்களால் அமைக்கப்பட்டதும், பிராணதாரைகளால் உயிர்ப்பிக்கப்பட்டதுமான பிராணமயகோசம் தன்னுடைய அணுக்களை வெளியேற்றுகிறதுமில்லை. பிற அணுக்களைக் கிரகிக்கிறதுமில்லை. ஆனால் தன்னுடைய அணுச்சலனங்களினால், தன் அருகாமையிலுள்ள பிறவஸ்துக்களைத் தாக்குகின்றன. அவ்வாறு பிற வஸ்துக்களின் அணுச்சலங்கள் அதைத்தாக்குகின்றன. இந்த அணுச்சலனங்கள் ஆகாரதிரவத்தில் அலைகளை உண்டுபண்ணுகின்றன. அன்னமயகோசத்தினின்று நுண்ணிய அணுக்களின்பிரவாகம் வெளியேறுகின்றதுபோல், ஒவ்வொருமனிதனின் பிராணமயகோசத்தின்றும், காந்தசத்தான பிராண அலைகள் வெளிப்போகின்றன. பிறரிடமிருந்து அணுக்கள் இடைவிடாது தன்னை எப்படிப்பற்றியதோ அப்படியே அவர்களிடமிருந்தும் பிராண அலைகளும் இடைவிடாது தன்னைத் தாக்குகின்றன.

ஒவ்வொருமனிதனும் ஸ்தூல தேகங்களுடனே தான் நிகழ்கின்ற காலமளவும்மற்றொருவனைமேற்கண்டபடி இரு

வகையாலும் (அதாவது அன்னமயகோசத்தினின்று வெளிபெறுகின்ற அணுத்திரளாலும் பிராணமயகோசத்தினின்று வெளிபெறுகின்ற அணுச்சலனங்களாலும்) தாக்குகின்றான்.

ஆகவே, சௌசவிதிகளின் பிரயோஜனம் யாதெனில் மேற்கண்டரீதியாய் ஒருவன் மற்றொருவனைத் தவறாமல் பாதிக்கவேண்டியதாகவே யிருக்கிறதினால் அந்தச்சம்பவத்தினால் வியாதிக்கு ஆஸ்பதமில்லாமல் சுகத்துக்கு அனுகூலமாக இருக்கும்படிக்கும் நித்தியம் செய்பவனின் சரீரசௌக்கியத்தையும், மனசௌக்கியத்தையும் காப்பாற்றவும் பலப்படுத்தவும் மேற்கண்டவிதிகள் ஏற்பட்டிருக்கின்றன. அன்னமயகோசத்தைத் துல்லியமாய்ச் சுத்திசெய்து வைத்துக்கொள்ளவேண்டும். அப்படியானல் அதன்சுககரமான அணுக்களின தாரைகள் அதனருகிலுள்ள மற்றவர்களையும், தாக்கிச் சௌக்கியத்தைச் செய்விக்கும்.

ஆகாசத்திரவத்தில் மந்திரஸ்வரங்களாலுண்டாகின்ற சலனங்கள்தான் மனோமயகோசத்தை ஊடுருவத் தாக்கக்கூடும். (இந்த ஆகாசத்திரவம் கிரியைகளில் உபயோகிக்கப்படும் திரவியங்களிலும், மற்றவஸ்துக்களைப் போலவே உட்சென்று அமைந்திருக்கின்றது.) இந்தச சலனங்கள் நன்மைபயக்கும்படி இந்தக்கோசத்தைநாடி அதிலிருக்கின்ற அழுக்கானவைகளை வெளியேற்றிச் சுத்திசெய்கின்றது.

சரீரசுத்திசம்பந்தமான விதிகள் வியக்தமாகவும் கண்டிப்பாகவுமிருக்கின்றன. நித்திரையினின்று எழுந்தவுடன் மலஜலவிஸர்ஜனகாரியத்தை முதலில்கவனிக்கவேண்டும். பிறகு வாயைக்கொப்பளித்துத் தந்ததாவ

ணம் செய்யவேண்டும். பிறகு ஸ்நானம் செய்யவேண்டும். (மனுஸ்மிருதி. IV. 45—52. 56—152.)

அசுத்தமான யாதொருவஸ்துவும், தான்வசிக்கும் வீட்டிற் கருகாமையிலிருக்கக்கூடாது. (மனுஸ்மிருதி, IV-151.)

“𑌦𑍂𑌰𑌾𑌦𑌾𑌵𑌸𑌥𑌾𑌨𑍍𑌮𑍂𑌤𑍍𑌰𑌂
𑌦𑍂𑌰𑌾𑌤𑍍𑌪𑌾𑌦𑌾𑌵𑌸𑍇𑌚𑌨𑌂
𑌉𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌨𑌨𑌿𑌷𑍇𑌕𑌞𑍍𑌚
𑌦𑍂𑌰𑌾𑌦𑍇𑌵𑌸𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍”

(இ-ள்) தன் வாஸஸ்தலத்திற்குத் தூரத்தில் மூத்திராதிகளைக் கழிக்கவேண்டும். அவ்விதமே காலை அலம்பின ஜலத்தை விட வேண்டும். எச்சிற்கலைகளை தூரவே போடவேண்டும். அவ்வி தமே ஸ்நானஞ்செய்த ஜலத்தைத் தூரத்திலேயே விடவேண்டும். இந்த விதியை அலக்ஷியம் செய்கிறதினால் அதிகவியாதிக்கு இட முண்டாகிறது. வீடுகளைச்சுற்றிய இடங்கள் அசுத்தமாக யிருப்பது வியாதியும் தேசப்பலககுறைவும் நேரிடக்காரணமாகிறது. தற்கால பட்டணவாசத்தில் சாக்கடைக்கழிவு ஜலத்தைககடத்த ஒழுங்கான ஏற்பாடு பொதுஜனசமூகத்தில செய்துவரப்படுகிறது. ஜனங்கள் வாசஸ்தானத்திற்கப்பால் தூரத்தில் அசுத்தவஸ்துக்களைக் கடத்த வேண்டுமென்ற விதியையனுசரித்தே இந்தஏற்பாட்டை நடப்பித் தல் வேண்டும். ஒவ்வொரு நகரவாசியும் நகரத்தின் அருகாமை யில் ஜனசமூக க்ஷேமத்தைக்கருதினவராய் நதிகளை அசுத்தமாகா மலும் அசுத்தமானவஸ்துக்கள் கும்பலாகாமலிருக்கும்படிக்கும் கவ னித்துப்பார்க்கவேண்டும்.

சமய அனுஷ்டானங்கள் செய்யுமுன் கைகால் முத லியவைகளைச்சுத்திசெய்து கொள்ளவேண்டும். சிலவேளை பூராவாகவும் ஸ்நானம்செய்துகொள்ளல் வேண்டும். பின்பு விதிப்படி ஏற்பட்டமந்திரத்தைச்சொல்லி ஆசமனீயம் (ஜலம் உட்கொள்ளல்) செய்யவேண்டும்.

(மனுஸ்மிருதி. II. 222.)

"𑌆𑌚𑌮𑍍𑌯 𑌪𑍍𑌰𑌯𑌤𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂
𑌉𑌭𑍇 𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑍇 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃।
𑌶𑍁𑌚𑍌 𑌦𑍇𑌶𑍇 𑌜𑌪𑌞𑍍𑌜𑌪𑍍𑌯𑌮𑍍
𑌉𑌪𑌾𑌸𑍀𑌤 𑌯𑌥𑌾𑌵𑌿𑌧𑌿॥"

(இ-ள்) ஆசமனீயத்தினால் சுத்தஞ்செய்துகொண்டு இரண்டு சந்தியாகாலத்திலும் சுத்தமான இடத்தில் ஸாவதானமான மனமுடன் விதிப்படி ஜபஞ்செய்கிற மூலமாய்த் தினந்தோறும் ஈசுவரனை உபாசிக்கவேண்டும்.

சாப்பிடும் முன்னும் பின்னும் கைகால் முதலியன சுத்தம் செய்துகொள்ளல் வேண்டும்.

(மனுஸ்மிருதி. II. 53)

"𑌉𑌪𑌸𑍍𑌪𑍃𑌶𑍍𑌯 𑌦𑍍𑌵𑌿𑌜𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍
𑌅𑌨𑍍𑌨𑌮𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃॥
𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌚𑍋𑌪𑌸𑍍𑌪𑍃𑌶𑍇𑌤𑍍𑌸𑌮𑍍𑌯𑌕𑍍
𑌅𑌦𑍍𑌭𑌿𑌃 𑌖𑌾𑌨𑌿 𑌚 𑌸𑌂𑌸𑍍𑌪𑍃𑌶𑍇𑌤𑍍॥"

(இ-ள்) கைகால் முதலியவைகளைச் சுத்திசெய்து பிறகு த்விஜர்கள் ஸமாதானமான மனத்துடனே போஜனஞ் செய்யவேண்டும். போஜனமானபிறகு ஜலத்தினால் கைகால் முதலியவைகளைச் சுத்தம் செய்து இந்திரிய கோளகங்களை ஸ்பரிசிக்க வேண்டும்.

ஒருவன் அசுத்தமான வஸ்துவையாவது வேறு மனுஷனையாவது தொட்டால் ஸ்நானத்தினால் சுத்தமாகிறான்.

"𑌸𑍍𑌨𑌾𑌨𑍇𑌨 𑌶𑍁𑌧𑍍𑌯𑌤𑌿॥"
(மனுஸ்மிருதி. V. 85.)

"ம்ருத்தோயைஶ்ஶுத்யதே ஶோத்யம்।"

(மனுஸ்மருதி. V. 108.)

(இ-ள்) மண்ணுலும் ஜலத்தினுலும் சுத்தி செய்தால் சுத்தமுண்டாகும்.

மேற்கண்ட இரண்டும் முக்கியமான சுத்தி செய்யும் திரவியங்கள். ஆனுல்புளிப்புத் திரவியங்களைக்கொண்டு. தாமிரம், இரும்பு, பித்தளை, வெண்கலம், தகரம். ஈயம், இவைகளைச் சுத்திசெய்துகொள்ளலாம். மட்பாண்டங்கள் எரிக்கிறதினுலும், வீடுகள் பசுவின் சாணத்தினுலும், சுண்ணும்பினுலும் சுத்தி செய்யப்படுகின்றன. சில குறிப்பிட்ட சாமான்களுக்கு விசேஷசுத்திவிதிகள்விதிக்கப்பட்டிருக்கின்றன. எந்த வஸ்துவிலும் அழுக்கு அல்லது துர்வாசம் இருந்தால் அது சுத்தக் குறைவானது.

(மனுஸ்மிருதி. 105, 127.)

"ஜ்ஞாநம் தபோऽக்நிராஹாரோ
ம்ருந்மநோ வார்யுபாஞ்ஜநம்।
வாயு꞉ கர்மார்க்ககாலௌ ச
ஶுத்தே꞉ கர்த்ரூணி தேஹிநாம்॥"

(ஷை. மனு. 105.)

(இ-ள்) ஞானம், தபஸ், அக்கினி, அன்னம், மண், மனம், ஜலம், அஞ்சனம், வாயு, கர்மம், சூரியன், காலம், இவைகள மனுஷர்களைப் பவித்திரம் செய்கின்ற சாதனங்கள.

ஆனுல், மனமும் அந்தக்கரணமும், சுத்தமாயிருந்தாலொழிய ஒருவனும் யதார்த்தமாய்ச் சுத்தன் ஆகக் கூடியவனல்லன்.

"அத்பிர்காத்ராணி ஶுத்யந்தி
மந꞉ ஸத்யேந ஶுத்யதி।

வித்யாதபோப்யாம் பூதாத்மா,
புத்திர்ஜ்ஞாநேந ஶுத்யதி"||

(மனுஸ்மிருதி, V. 109.)

(இ-ள்) தேகத்தை ஜலத்தாலும், மனத்தைச் சத்தியத்தாலும், பூதாத்மாவை வித்தையினாலும், தபஸினாலும், புத்தியை ஞானத்தினாலும், சுத்திசெய்து கொள்ளவேண்டும்.

வெளிப்படையான காரணங்களால் உண்டாகும், அசுத்தங்களைத் தவிர, சபிண்டர்கள், பந்துக்கள், இவர்களில் நேரிடும் ஜனன மரண ஆசௌசங்களால், பிராணமய கோசத்தில் அசுத்தமான காந்தச் சலனங்கள் உண்டாகின்றன. அவைகள் மூலமாய் அன்னமய கோசமும் அசுத்தமாகிறது. சபிண்டர்கள் விஷயத்தில், மேற்கண்ட ஆசௌசம் அந்தந்த வர்ணத்திற்குத் தக்கபடி 10-நாள் முதல் ஒருமாதம் வரை உண்டு. சிறு குழந்தைகள் மரணத்தால் நேரிடும் ஆசௌசம் சொற்பகாலத்தான் நீங்கும்.

சபிண்டர் என்ற பரக்தவ்வியம் புருஷர்கள் துவாராக ஏழாம் தலைமுறையுடன் நீங்குகிறது. சபிண்டர்களல்லாத பந்துக்கள் விஷயத்தில், சமீப, அல்லது, தூர பந்துத்துவத்திற்குத் தக்கவாறு, 3-முதல் குறைவான 1-வரை ஆசௌசமிருக்கிறது. ஆசௌச காலங்களில் யக்ஞ கிருத்தியங்கள், மந்திர, உச்சாரணை இன்னும் மற்ற மதசம்பந்தமான கிரியைகள், செய்யவொண்ணாது.

ஆசௌச முள்ளவனை ஒருவன் தொடக்கூடாது. அவனுடைய கிரகத்தில் அன்னத்தையும் புஜிக்கக்கூடாது. ஆனால் இது சம்பந்தமான ஆசாரங்கள், பல

இடங்களில் வேறுபடுகின்றன. சபிண்ட சப்தத்தின் அர்த்தம் வெவ்வேறு மாதிரியாகச் செய்யப்படுகிறது.

மேற்கண்ட விஷயங்களை இன்னும் விரிவாய் ஸ்மிருதிகளின் மூலமாய்த் தெரிந்து கொள்ளலாம். தம் தம் வருணத்திற்கும் குடும்ப ஆசாரத்திற்கும், இப்பொழுது மாறுபட்டிருக்கிற மனுஷ நிலைமைக்கும் தக்கபடி, ஷை விதிகளை ஒவ்வொருவனும், அனுசரிக்க வேண்டும். ஒவ்வொருவனும் சுத்தனாயிருக்க விதித்திருக்கின்ற விதிகளுக்குப் புறம்பாய் நடந்தாலும், வீடுகள், உடைகள், தினந்தோறும் பழக்கத்திலுள்ள சாமான்கள் இவைகளைத் துல்லியமாய்ச் சுத்தி செய்யப்படாமலிருந்தாலும். பலவிதமான தொத்து வியாதிகள், ரும்மரமாகவும். கொடுமையாகவும். உண்டாகிப் பரவும். இந்தப் புராதனமான விதிகளை அனுசரித்த விஷயங்கள், நவீன புலனறிவு சாஸ்திரங்களின் மூலமாய் வெகுவாக வகுத்ததின பேரிலும், கிரமத்தின் பேரிலும், திரும்பவும் ஸ்தாபிக்கப்படுகின்றன. அவைகளுக்காதாரமாயுள்ள விதிகளை நன்கு உணர்ந்தால் அவைகளை அனுசரிப்பது பிரியமாகவும், சந்தோஷகரமாகவும் இருக்கும்.

இரண்டாவது பகுதியில,

மூன்றாவது அதிகாரம்.

முற்றிற்று.

# II-வது பிரிவு.

---

## 4-வது அதிகாரம்.

### தினந்தோறும் செய்யும் பஞ்சயக்ஞங்கள்.

உயர்ந்த தியாக விதியானது ஒவ்வொரு ஆரியனின் ஒழுக்கத்தில் யக்ஞ விதிகளாக அமைந்து நடைபெறுகின்றது. அந்த யக்ஞங்களால் ஒன்றோடொன்று பற்றுள்ளதாயும், பரஸ்பர உதவி சம்பந்தமுள்ளதாயும், பரஸ்பரம் சார்பினதாயும், சகலமும் இப்பிரபஞ்சத்தில் ஒவ்வொருவனும் தானும் ஒரு பகுதியென்று நாளிடையில் அறிந்து தெரிந்து கொள்ளுகிறான். இந்தவிஷயம் பூரா உணர்ந்து அனுபவத்திற்கு வந்ததின் மேல்தான் இந்த யக்ஞ கருமங்களை ஒருவன் செய்யாமல் விடலாம். அப்பொழுதுதான் எல்லாவற்றையும் துறந்து பிறருக்குக் கொடுக்கிறதற்கு யாதொன்றுமில்லாத சந்நியாசி ஆச்சிரமத்திற் போகலாம்.

மனிதனுடைய வெவ்வேறான கோசங்கள், பெற்றோர்களிடமிருந்து முதல் முதல் அடையும் சரீரினாலும் அன்னத்தினாலும், மற்ற ஜீவராசிகளின் அன்பு ஆதரவினாலும், காந்த சலனங்களாலும், அறிவினாலும், ஞானத்தினாலும், தனித்தனியாய்ப்போஷிக்கப்பட்டு அபிவிருத்தி படையும்படியான இயல்புடையனவாய் உதவி பெறுகின்றன. ஆகவே மனிதன் ஜகத்தில் ஐக்துவித

மான குணங்களுக் குட்பட்டிருக்கிறான். அவன் சரியாக விருத்தியடைய வேண்டுமானால்தான் குணத்திற் குட்பட்டிருக்கிற தென்பதை நன்றாய் உணர்ந்து அதைத் தீர்க்கும்படி நன்றாய் முயலவேண்டு மென்பது நியாயமா யிருக்கிறது. முன் சொன்ன பிரகாரம் மனிதன் தனித்த ஜீவராசியல்லன். பிரபஞ்சத்துடன் தானும் ஒன்றுப்பட்டு நிகழுகிறதினால் அவனுடையக்ஷேமம் பலிக்கிறது. பிரபஞ்சத்தினுடைய தர்மமானது தனித்தனியாய ஒவ்வொருவனை மேன்மைக்குக்கொண்டு வரவேண்டு மென்ற நோக்கத்துடன் அமையவில்லை. ஆனால் சிருஷ்டி முழுமையும். ஒழுங்காய் மென்மேலும் அபிவிருத்தி யடைந்து விகசிக்கும் வண்ணம் நடைபெறுகின்றது. ஹிந்து தருமாஸ்திரிகளால் விதிக்கப்பட் டிருக்கின்ற யக்ஞாதி கிருத்தியங்கள் ஒவ்வொருவனும் தான் தான் செய்யவேண்டிய கடமைகளின் விவரணமே தவிர வேறல்ல. அவைகளெல்லாம், மனுஷன் சஞ்சரிக்கும் எல்லாப் பூமிகளுக்காகவும். ஏற்பட்டவைகள். ஆகையினால் மனிதன் அடையக்கூடிய உயர்ந்த பதவி வரையில் அவன் பெறும்படியாக அனுகூலகரமாகயிருக்கின்றன.

தினந்தோறும் செய்யவேண்டிய ஐந்து மகாயக்ஞங்களும், சில குறிப்பிட்ட காலங்களில் செய்யவேண்டிய ஏழு பாக யக்ஞங்களும் விதிக்கப்பட் டிருக்கின்றன. இவைகளைத் தவிர, 14-ச்ரௌத யக்ஞங்களுமுண்டு. இவைகள் ஹவிர் யக்ஞங்கள். அதாவது தான்னிய ஆஹுதிகள் செய்யும் யக்ஞங்கள் என்றும் ஸோம யக்ஞங்கள் அதாவது, ஸோமரஸத்தை ஆஹுதி செய்கிற யக்ஞங்களென்றும் இருவகைப்படும். இவைகளிற் சில தினந்தோறும் செய்யவேண்டியவைகளாகவும், சில, சில

ப்ராஹ்ம்யம் ஹுதம் த்விஜாக்ர்யார்சா ப்ராசிதம் பித்ருதர்ப்
பணம்||

ஸ்வாத்யாயே நித்யயுக்தஸ்ஸ்யாத் தைவே சைவேஹ கர்
மணி|

தைவகர்மணி யுக்தோ ஹி பிபர்தீதம் சராசரம்||”

(இ-ள்) பிரம்மயக்ஞம் என்றால அத்தியயனம் செய்வித்தல. பிதுருயக்ஞம் என்றால் ஜலதர்ப்பணம். தேவயக்ஞம் என்றால அக்கினியில் ஹோமம் செய்தல். பூதயக்ஞமென்றால் அன்னபலி கொடுத்தல். மனுஷ்யயக்ஞமென்றால் அதிதிகளுக்குப்போஜனம் செய்வித்தல், அதாவது விருந்தோம்பல்.

இந்த ஐந்து யக்ஞங்களும். ஆஹுத, ஹுத, பிரஹுத, பிராம்மியஹுத, பிராசிஷ்ட, என்ற பெயர்களால் வழங்குகின்றன.

“ஆஹுத,” என்றால், ஜபம். “ஹுத” என்றால் ஹோமம். பிரஹுத, என்றால், பூதங்களுக்குக் கொடுக்கும் பலி. பிராம்மியஹுத என்றால் துவிஜர்களை மரியாதையாய், உபசரித்தல். பிராசிஷ்ட மென்றால் பிதுரு தர்ப்பணம்.

மனிதன் எப்பொழுதும் வேத அத்தியயனத்திலும். தேவகிருத்தியங்களிலும். முயலவேண்டும். தேவகிருத்தியங்கள் செய்தானாகில் சராசர ஜீவராசிகளை ஆதரிக்கிறான்.

மேற்படியும் மனுஸ்மிருதியில் ௩ அத்தியாயம், 80, 81 வது சுலோகங்களில் அடியில் வருமாறு சொல்லியிருக்கிறது.

“ருஷய: பிதரோ தேவா பூதாந்யதிதயஸ்ததா|

ஆசாஸதே குடும்பிப்யஸ்தேப்ய: கார்யம் விஜாநதா

ஸ்வாத்⁴யாயேநார்சயேத்³ருஷீந் ஹோமைர்தே³வாந் யதா²விதி⁴||

பித்ரூந் ச்²ராத்³தை⁴ஶ்ச ந்ரூநந்நைர் பூ⁴தாநி ப³லிகர்மணா||

(இ-ள்) ரிஷிகள, பிதுருக்கள, தேவர்கள், பூதகணங்கள, அதிதிகள், இவர்களெல்லாம் கிரகஸ்தனிடமிருந்து உதவியை எதிர்பார்க்கிறார்கள். ஆகவே அறிவுள்ளவன் அவர்களுக்கு உதவி புரியல் வேண்டும்.

விதிப்படி வேதாத்தியயனத்தினால் ரிஷிகளையும், ஹோமத்தினால் தேவதைகளையும், சிராத்தத்தினால் பிது ருக்களையும், அன்னத்தினால் மனிதர்களையும் பலியினால் பூதங்களையும் ஒருவன் உபாசிக்க வேண்டும்.

செய்யவேண்டிய யக்ஞங்களின விபரத்தைத் தெளிவாய் இவ்விடத்தில் சொல்லியிருக்கிறோம. பிரம்மத்திற்குச் செய்யும், யக்ஞம், வேதயக்ஞமென்றும், ரிஷியக்ஞமென்றும சொல்லப்படுகிறது. அதாவது, அத்தியயனம், அத்தியாபனம். இவை ஒவ்வொரு மனிதனும செய்யப் பரமேசுவரனுக்குக்கடமைப்பட்டிருக்கிறான். அதாவது: ஒவ்வொருவனும், தன்னுடைய அறிவை விருத்தி செய்யவும் தான் படித்தபடிப்பை அந்நியர்களுக்குக் கற்பிக்கவும் கடமைப் பட்டிருக்கிறான். ஒவ்வொரு ஆரியனும் தினந்தோறும், கொஞ்சகாலம் கல்விப்பயிற்சியில் செலவழிக்க வேண்டும். தினந்தோறும் கல்விப்பயிற்சியில்லாதவன் அற்பனாகவும், உபயோக மற்றவனாகவும் ஆவான். இந்தக்கடமையை மேற்கண்ட மகாயக்ஞங்களின் முதன்மையான விதியாக அறிவுறுத்தப் பட்டிருக்கின்றது.

இதன் பிறகு தேவயக்ஞம் கற்பிக்கப்படுகிறது. பிரபஞ்சத்தை நடத்தும் தேவர்களுக்குக் கொடுக்கவேண்டிய

இந்த யக்ஞம அக்கினியில் நெய்யை ஆஹுதி செய்து ஹோமம் செய்தல் மூலமாய் ஷெடி யார்களைத் திருப்தி செய்கிறோம். மனிதர்கள் அன்னத்தினால், எவ்விதம் போஷிக்கப் படுகின்றார்களோ, அவ்விதம் தேவர்களுடைய சரீரங்கள் நுட்பமானவைகளா யிருக்கின்றமையால் நுட்பமான பதார்த்தங்களாகிய ஆவிமயமான திரவியங்களால் போஷிக்கப் படுகின்றார்கள்.

மேற்கண்ட யக்ஞத்திற்குப் பிறகு பிதுரு யக்ஞம் விதிக்கப்படுகிறது. இது பிண்டம், ஜலம், இவைகளைக் கொடுத்தல் மூலமாய், நடைபெறுகின்றது. பிதுருக்கள் மரீசி யுடையவும், மனுவால் உண்டுபண்ணப்பட்ட ரிஷிகளுடையவும், புத்திரர்கள், இவர்கள் பலவகுப்பினர், வெவ்வேறான தேவவம்சம், மானுஷவம்சம் இவர்களுக்கு முன்னோர்கள். சோமசத் பிதுருக்களிடமிருந்து சாத்தியாளும், பரிசுத்தமான பிராமணர்களும், பிறந்தார்கள். அக்கினிஷ்வாத்த பிதுருக்களிடமிருந்து தேவர்களும், பின்னும் சில பிராமணர்களு முண்டானார்கள். பஹிர்ஷத் பிதுருக்களிட மிருந்த தைத்தியர்கள், தானவர்கள், யக்ஷர்கள், கந்தர்வர்கள், உரகர்கள் இராக்ஷஸர்கள், சுபர்ணர்கள், கின்னரர்கள், இவர்களும், மற்றும் சில பிராமணர்களும் உண்டானார்கள். க்ஷத்திரியர்கள் ஹவிர்ப்புக் என்ற பிதுருக்களிடமிருந்தும், வைசியர்கள், ஆஜ்யபர் என்ற பிதுருக்களிடமிருந்தும், சூத்திரர்கள் சுகாலின் என்ற பிதுருக்களிடமிருந்தும் ஆவிர்ப்பவித்தார்கள். அவர்களுடன் எண்ணிறந்த வம்ச பாரம்பரைகள் சம்பந்தப் பட்டிருக்கின்றமையால் யக்ஞத்தை முன்னோர்களை உத்தேசித்துச் செய்யப்படுகிறதாகச் சொல்லப்படுகிறது. இந்தப் பிதுரு யக்ஞமானது ஒவ்வொரு மனித

யையும் தம் முன்னோர்களுக்குத் தான் பட்டிருக்கும் ஏராளமானகடனை நினைவுறுத்தும்படியாகவும், ஒவ்வொருவனும் தான் அனுபவிக்கும் நிதி, வித்தை, நாகரீகம், இவைகளுக்குக் காரணபூதர்களான முன்னோர்களுக்கு நன்றி பாராட்டவும், ஏற்பட்டிருக்கின்றது. மேலும் தானும் அந்த முன்னோர்களுடைய, பெரிய கோஷ்டியில் போய்ச்சேருங்காலத்தையும், தாம் முன்னோர்களால் அடையப்பட்டிருக்கும் தேட்டைக்குறையாமல், தனனுடைய ஜீவ ஒழுக்கத்தால் ஏற்படும் அபிவிருத்தி அம்சத்துடன் சேர்த்துத் தன்னுடைய சந்ததிக்குக் கொடுக்கத்தான் கடமைப்பட்டிருக்கிறான் என்பதையும், இந்தப் பிதுரு யக்ஞமானது ஞாபகப்படுத்துகிறது. பிதுருக்களிடத்தினின்றுதான் உற்பத்தியாகும்முறைமையின் பூர்ணதாற்பரியம் தத்துவவிஷயங்களைச் சொல்லும் பரமரகஸ்ய சாஸ்திரங்களைப் படித்தால் தான் வெளியாகும்.

பூதங்களை உத்தேசித்து வைக்கும் பலி, அன்னம் பூமியில் எல்லாத்திக்குக்களையும் நோக்கிப் போடவேண்டும். சூக்ஷ்ம லோகங்களின் பற்பல வாசிகளுக்காகவும், எல்லாவித பிராணிகளுக்காகவும், திரிந்துகொண்டிருக்கும் ஜாதிப் பிரஷ்டர்களுக்கும், வியாதிஸ்தர்களுக்கும், இந்து ஏற்பட்டது. இது விஷயமான அடியில் வரும் விதிகவனிக்கத் தக்கது.

ஶுநாஞ்சபதிதாநாஞ்ச
ஶ்வபசாம் பாபரோகிணாம்॥
வாயஸாநாம் க்ருமீணாஞ்ச
ஶநகைர்நிக்ஷிபேத்புவி॥"

(இ-ள்) நாய்கள் மதப்பிரஷ்டர்கள், சுவபாகர்கள், கர்மவியாதியுடையவர்கள், காகம், சிறுஜந்துக்கள் இவைகளின் உபகா

ரார்த்தமாகத் தரையில் சாந்தமாய் (பலி) அன்னத்தைவைக்கவேண்டும்.

மண்ணோடு கலந்து கெட்டுப்போகாமல் கவலையீனமாயும் உதாஸீனமாயும் அந்தப்பலி அன்னத்தை எறியக்கூடாது. மேலும் சிரத்தையுடனே செய்யவேண்டிய யக்ஞம் அது. எவ்வளவு கீழ்மையானவைகளாக யிருந்தாலும் சரி, அவைகளை உத்தேசித்து நாம் செய்யவேண்டும் கடமை அது.

கடைசியாக மனுஷயக்ஞம் சொல்லப் படுகிறது. அஃதாவது; அதிதிபோஜனம் வழக்கமாய் ஏழைகளுக்கு அன்ன மிடுதல். அநாதர்களுக்கும் வித்தியார்த்திக்கும் அன்ன மிடுதலாம்.

"கூரவெ்வதஉ ஸ்ரீகஹெ்ஷுவ
சுதியிவைவெயஜாமயெசு||
விஷ்ராஞஸ்ஷவெ்ஹஉலாசு
விபிவஉவாறவாஙிணி||"

(இ-ள்.) பூதபலிக்குப் பிறகு முதல் முதலில் அதிதிக்கு அன்னம் கொடுக்கவேண்டும். அஃதாவது ஏழைக்கும் வித்தியார்த்திக்கும் அன்னமிடல் வேண்டும். இந்த யக்ஞத்தினால் ஒருவன் மற்றொருவனுக்குத் தான் செய்யவேண்டும் கடமையை அஃதாவது தான் அன்பாயும் சுதாவாகவு மிருக்கவேண்டுமென்பதை அறிகிறான். சில ஏழைகளை உண்பிவிக்கிறதினால் ஜன சமூகத்தை உண்பிவிக்கிறான். இதனால், கருணை இரக்கம் என்ற குணங்கள அமையப் பெறுகிறான். அன்ன மிடுதல் மனுஷ்ய விருப்பங்களைத் திருப்தி செய்தலுக்கு உதாகரணமாய் மனுஷ்ய யக்ஞத்தில் ஜனோபகார கிருத்தியங்கள் (பூர்த்தங்கள்) யாவும் அடங்கும், முற்காலம் போலவே இக்காலத்திலும், உணவு இன்மை மனிதனுக்குப்பெரிய குறைவு. அதைமுக்கியமாகவற்புறுத்திச் சொல்லுகின்றார்கள். இக்காலத்தின் ஜீவன ரீதிகளுக்குத் தக்கவாறு அனேகதேவைகள் உண்டாயிருக்கின்றன. ஆனால் அவைகளெல்லாம் நியாயமானவைகளா யிருந்தால் மனுஷ்

யயக்ஞத்தில் அடங்கும். ஆகவே ஒவ்வொருவனும் தன்னுலியன்ற மட்டும் அவைகளை நிவிருத்தி செய்து திருப்தி செய்வித்தல் வேண்டும்.

இந்த ஐந்து யக்ஞங்களிலும் மனுஷ்யனுடன் சம்பந்திக்கின்ற எல்லா ஜீவராசிகளுக்கும், தான் செய்யவேண்டிய கடமை எல்லாம் அடங்கும். இவைகளை யதார்த்தமாய்ச் சாஸ்திர ரீதியாயும் பக்தியாயும், தினந்தோறும் ஒருவன் செய்து கொண்டு வருவானாகில் ஜீவசக்கிரம் இயங்கி நடைபெறுவதில் தான் செய்ய உடன் பட்டிருக்கும் கடமையைச் செய்கிறவனாவான். அதனால் வரும் ஜன்மத்திற்கு நல்ல சவுகரியத்தைத் தேடுகிறான்.

மற்ற யக்ஞங்களைப் பற்றிச் சுருக்கமாய் விசாரிப்போம்.

பாகயக்ஞங்கள். 7. விதம்.

அவைகளாவன:—

(1) (பிதூ॒ஶ்ராஜ்ஸ) பிதுரு சிராத்தம்.
(2) (பார்வணஶ்ராஜ்ஸ) பார்வண சிராத்தம்.
(3) (அஷ்டகா) அஷ்டகா.
(4) (ஶ்ராவணீ) சிராவணீ.
(5) (அஶ்வயுஜீ) அசுவயுஜீ.
(6) (ஆக்ரஹாயணீ) ஆக்கிரகாயணீ.
(7) (சைத்ரீ) சைத்திரீ.

இவைகளில் முதலிரண்டும் பிதுருக்களை உத்தேசித்தவைகள். அவைகளைச் சிராத்த விஷயமான 2-வது அதிகாரத்தில் விவரித்திருக்கின்றனா. நான்காவதைத் தவிர மற்றவைகள் இக்காலத்தில் அருமையாய் அனுஷ்டிக்கப்படுகின்றன.

## சிரௌத கிருத்தியங்கள், 14.

அடியில் வருமாறு:—

### 7. ஹவிர்யக்ஞங்கள்.

(1) (𑌅𑌗𑍍𑌨𑍍𑌯𑌾𑌧𑍇𑌯𑌂) அக்கினியாதேயம்.
(2) (𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌂) அக்கினிஹோத்திரம்.
(3) (𑌦𑌰𑍍𑌶𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑌾𑌸𑍌) தரிச பூர்ணமாஸம்.
(4) (𑌆𑌗𑍍𑌰𑌯𑌣𑌂) ஆக்கிரயணம்.
(5) (𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌮𑌾𑌸𑍍𑌯𑌂) சாதுர் மாஸியம்
(6) (𑌨𑌿𑌰𑍂𑌢𑌪𑌶𑍁𑌬𑌨𑍍𑌧𑌃) நிருடபசுபந்தம்.
(7) (𑌸𑍌𑌤𑍍𑌰𑌾𑌮𑌣𑌿𑌃) சௌத்திராமணி:.

இந்தக்கிரதுக்களில் பால், நெய், பலவித தான்னியாதிகள் பக்ஷணாதிகள் கொடுக்கப்படுகின்றன. தினந்தோறும் காலையிலும் மாலையிலும் அக்கினி ஹோத்திரத்தையும் தர்ச பூர்ணமாஸ இஷ்டிகளை ஒவ்வொரு பக்ஷத்தின் முடிவிலும் புதுதான்னியம் வந்த உடனே ஆக்கிரயணத்தையும், (இந்த இஷ்டிக்கு முன் புது தான்னியத்தை உபயோகிக்கக் கூடாது.) 3. ருதுக்கள் முடிவில் சாதுர்மாஸ்யத்தையும், நிருடபசுபந்தத்தை அயன சந்திகளிலும், பிராமணன் செய்ய வேண்டும்.

(மனுஸ்மிருதி IV. 25. 26.)

### 7. ஸோமயக்ஞங்கள்.

(1) (𑌅𑌗𑍍𑌨𑌿𑌷𑍍𑌟𑍋𑌮𑌃) அக்கினிஷ்டோம:,
(2) (𑌅𑌤𑍍𑌯𑌗𑍍𑌨𑌿𑌷𑍍𑌟𑍋𑌮𑌃) அத்தியக்கினிஷ்டோம:,
(3) (𑌉𑌕𑍍𑌥𑍍𑌯𑌃) உக்த்திய:,
(4) (𑌷𑍋𑌡𑌶𑍀) ஷோடசி,
(5) (𑌵𑌾𑌜𑌪𑍇𑌯𑌃) வாஜபேய:.

(6) (அதிராத்ரஃ) அதிராத்திர:,
(7) (அப்தோர்யாமஃ) ஆப்தோர்யாம:.

இந்த இஷ்டிகளில் அதனதற்குத் தக்கபடி மூன்று அல்லது பல பிராமண புரோகிதர்களை நியமித்தல் வேண்டும். எவனை உத்தேசித்து இஷ்டிகள் செய்யப்படுகின்றனவோ, அவனுக்குப் பெயர் யஜமானன். ஸ்திரீ புமான்கள் மூன்று கௌரவமான அக்கினிகளை ஏற்ற வேண்டும். தேவர்களின் பொருட்டு ஆகவனீயாக்கினியைக் கிழக்கிலும் பிதுருக்களின் பொருட்டுச் செய்யும் கிருத்தியங்களுக்காகத் தக்ஷிணாக்கினியைத் தெற்கிலும், கார்ஹபத்தியாக்கினியை மேற்கிலும் உண்டு பண்ண வேண்டும். சில சமயங்களில் ஆகவாஹாரிய அக்கினி மூன்று சொல்லப்படுகிறது. இந்த அக்கினிகள் அணைந்து போகலாகாது. இது தான அக்கினியான இஷ்டி. சிரௌதகிருத்தியங்கள் இவைகளிற் செய்யப்பட்டிருக்கின்றன.

சில கிரந்தகர்த்தாக்களின் அபிப்பிராயம், என்னவென்றால், கார்கபத்தியாக்கினியை (ஆவசத்திய அல்லது வைவாஹிக, எனவும் இதற்கு பெயர்.) பிரமசாரி குருகுலவாசம்கிரமித்த பிறகு தன் சொந்தக் கிரகத்திற்குத் திரும்பும் காலத்தில் ஏற்ற வேண்டும். ஆனால் இந்த விஷயத்தில் ஆசாரங்கள் பலவாறு வேறுபடுகின்றன. பாகயக்ஞங்கள் கார்கபத்தியாக்கினியிற் செய்யவேண்டும்.

ஆன்ஹிக சூத்திராவளியில் பிராமணன் தினந்தோறும் செய்யவேண்டிய ஆன்ஹிகங்களை விவரித்திருக்கின்றன. பின்வருமாறு சுருக்கமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

பிராஹ்ம முகூர்த்தத்தில் படுக்கையை விட்டு அவன் கண்விழிக்கவேண்டும். (ஒரு இராப்பகல் 24மணிக்கு

30 முகூர்த்தங்களிருக்கின்றன. ஒரு முகூர்த்தத்திற்கு 48- நிமிஷம். பிராஹ்ம முகூர்த்த மென்றால் இரவின் நான்காம் பகுதி.) தருமத்தையும் அர்த்தத்தையும் பற்றியும் சரீரத்தின் கொடுமைகளைப்பற்றியும், வேதங்களைப் பற்றியும் ஸ்மரிக்க வேண்டும். உதயத்தில் எழுந்து சௌச விதிகளை அனுசரித்தும், ஸ்நானம் செய்தும் பிறகு சந்தியா வந்தனமும் செய்யவேண்டும். பிறகு அக்கினி ஹோத்திரம் செய்யவேண்டும். தேவர்களையும் குருக்களையும் அதாவது ஆசாரியனையும், மாதா பிதாக்களையும், உபாசிக்கவேண்டும். இதற்குப் பிறகு, வேதங்களையும், வேதாசிகங்களையும் அத்தியயனஞ் செய்ய வேண்டும். பின்னர் தன்னைச்சார்ந்தவர்களான பெற்றோர்கள், குரு, பத்தினி மக்கள், உறவினர்கள், சிநேகிதர்கள், வயோதிகர்கள், அசக்தர்கள், அனுதர்களான ஏழைகள், இன்னும் எவ்விதஜீவனமுமற்ற வறியர்கள், இவர்களைக் காப்பாற்றும் பொருட்டு கிருஷி செய்யவேண்டும். இதன் பின்னர், ஸ்நானம் செய்து மாத்தியான்ஹிகம் செய்ய வேண்டும். பிதுருக்கள், தேவர்கள், மனிதர்கள், பூதங்கள், இவைகளை அன்னத்தின் மூலமாய்த்திருப்தி செய்து விட்டு அதன் மேல்தான் உண்ண வேண்டும். இதன்மேல் வீண் வார்த்தை விருதாகாலக்ஷேபம் செய்யாமல் புராணங்கள், இதிகாசங்கள், தரும சாஸ்திரங்கள், இவைகளைப் படனம் செய்யவேண்டும். பின்பு கிரகத்தை விட்டு வெளியேறி, ஆலயதரிசனமசெய்தும், சிநேகிதர்களைப் பார்த்தும் அக்கினிஹோத்திரம் செய்யும் படி திரும்பவேண்டும். இதன் பிறகு போஜனம் செய்யவேண்டும். கிரக கிருத்தியங்கள் ஏதேனு முளவாயின், அவைகளைக் கவனித்து விட்டுப் பின்பு வேதத்தைக் கொஞ்சம் ஓதி அப்புறம் சயனத்திற்குப் போகவேண்டும். ஏதேனும் அப்போதைக்கப்

போது நேரிடும் முக்கியமான கிருத்தியங்களைச் செய்ய வேண்டும். இவைகளுக்கு விதி ஏற்படுத்த முடியாது.

இவைகளின் தாற்பரியம் என்னவெனில் ஒரு மனித னுடைய ஜீவயாத்திரை ஒழுங்காகவும் சீராகவும் நிதா னப்பட்டதாகவும் அமைந்து நிகழவேண்டுமென்பதாம். அஃதாவது அவனுடைய ஒவ்வொரு கடமையையும் அத தற்கேற்க காலத்தை வகுத்தும், தன்னுடைய கிருத்தி யங்களில் ஒன்றேனும் தவறாமலும் அஜாக்கிரதையாய்ச் செய்யாமலும் யாதானும் ஒன்றே, எக்காலத்தையும், சுதந்தரப்படுத்திக் கொள்ளாமலும் ஒழுகவேண்டுமென் பதேயாம். முக்கியமாய்ப் பிரபஞ்சத்தினின்று தான் புறம் பாகவும் பிரதக்காகவும் தனிமையாகவும் ஒருவன் ஜீவ னம் செய்ய ஒண்ணாதென்றும், ஜகதுடன் தான் அபின்னமாய்ச் சம்பந்தித்திருக்கிறானென்றும், தன் ஜீவ தசையின் கடமையை நிறைவேற்ற வேண்டுமாயின் ஜீவகதியானது தியாகரூபமாக நிகழவேண்டுமென் றும், உள்ளபடி உணரவேண்டும்.

இவ்விதமாக உணர்ந்து இந்த ஜன்மத்தின் பயனைப் பூர்ணமாய் அடையுமாறு ஜீவயாத்திரையை அமைத்துக் கொள்ளுதல் அறிவிற்கழகாம். அவசியமாம். அது பரபரப்பும் பதட்டமுமின்றி மனச்சமாதானத்திற்கு அநு கூலமாக விருக்கும். இக்கால ஜீவநடையில மேற்கண்ட விவரணங்களான கிருத்தியங்களைக் கொண்டு செலுத்த முடியாது. ஆயினும் பொது தருமமாகிய ஒழுங்கும் மனச்சமாதானம், நிதானம், அனவரதமான தியாகசிந் தையும், தன் கடமையைகொண்டு செலுத்தவேண்டு

மென்ற நியமமும் தலை மேற்கொண்டவனாக எப்புறத்திலும், சாந்தமும், நேர்மையும் மென்மேலும் நடைபெறும் வண்ணம் தான் ஒழுகவேண்டும்.

இரண்டாம் பகுதியில்

நான்காவது அதிகாரம்.

முற்றுப் பெற்றது.

இரண்டாம் பகுதி.

5-வது அதிகாரம்.

உபாசனை.

ஆரியர்கள், தேவர்களின் செயலை நன்றாய் உணர்ந்து அவர்களை ஆராதித்தும், கௌரவப்படுத்தியும், யக்ஞங்கள் மூலமாய் அவர்களைத் திருப்தி செய்தும், வந்தார்களென்று முன்னமே தெரிவித்திருக்கிறோம். ஆயினும் ஆஸ்திக புத்தியுள்ளவன் இவ்விதமாக வித்து வத்தானவும், ஒப்பாசாரமானவுமான யக்ஞாதிகளைச் செய்ததால் மாத்திரம் அதிருசியர்களாக ஆதிகாரிக தேவர்களுக்கு உடனபட்டிருக்கும் தன் கடமை முடிவு பெறாது. தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் மற்றவைகளுக்கும் உயிராயும் ஆதாரமாயும் அவைகளை ஆளும் பரமபுருஷனான ஈசுவரன் அவனுடைய வேலைக்காரர்களான இந்தத் தேவர்களுக்கு அப்பால் பிரதக்காக ஒருவனிருக்கிறானென்ற பிரஞ்ஞை பக்தியுள்ள உத்தம மனிதனின் இருத

யத்தில் ஜனித்தும், அந்தப்பரம புருஷனை நோக்கித் தான் அன்பும் பக்தியும் இயல்பாக மனத்தில் எழும். ஏனென்றால் ஜீவாத்துமா அந்தப் பரம புருஷனின் வித்து அவனுடைய ஓர் அம்சம். ஆகவே தன்னுடைய பிதாவுடனே, ஒன்று பட எழும்பமுயலுகிறான். இவ்வண்ணமான மனநெகிழ்ச்சி அநாத்மாவான பகிர்லோக பாலர்களான தேவதைகளை உத்தேசித்துச் செய்யும் யக்ஞாதிகளினால் திருப்தியடையாது. இவைகளுக்குப் பிரதக்ஷமாயும் அந்தர்யாமியாயும், ஆதாரமாயுமிருக்கிறான். ஆத்மாவையே இந்த மனநெகிழ்ச்சி நாடும். ஆத்மாவினிடம் லயமடையும் வரை இந்த மனோபாவமானது, சுபாவமாகவே திருப்தியின்றி இருக்கும். ஒன்றானவும் நிறைவானவுமான பரிபூர்ணத்தில் பகுதியானதும் பிரிவானதுமான ஜீவாத்மா ஒன்றுபடவேண்டுமென்ற மனநெகிழ்ச்சியானது, வார்த்தைக்கு நேராமாய், உபாஸனை ஆராதனை என்று வழங்கும். இந்த உபாஸனையைத் தன்னுயிருக்கு ஆதாரமான வஸ்துவுக்கும் மனிதன் மாத்திரமல்ல, வழிபட கடமைப் பட்டிருக்கிறான். ஜீவாத்மாவின் மேலான குணங்கள் விகசித்து விளங்கி அவைகளின் துவாராக முக்தியடைந்து அந்தப் பரவஸ்துவின் சாயுஜ்யத்தை அடைய இந்த உபாஸனை, முக்கிய அவசியமான ஒரு நிலைமையாக இருக்கிறது. வழிபட ஒரு மூர்த்தம் மனிதனுக்கு அவசியமாக விருக்கிறது.

அந்த உபாசகனுக்கு எப்பொழுதும் பரம புருஷனாகவே தோன்றும். ஆனால் தத்துவ ஆராய்ச்சியில்தான் வழிபடும் வஸ்துவானது, பரவஸ்துவின் ஒருபகுதி ஆவிர்ப்பவித்திருக்கிறதென்று தன்னறிவுக்கு விளங்கும். ஆனால் அந்த மூர்த்தியினிடத்தில் நெகிழும் அன்பின மிகுதியினால் அதுவே பரமபுருஷனென்று மனோபாவம்

அமையும். வாஸ்தவத்திலும் அது சரிதான். ஏனெனில் பரவஸ்து மூர்த்தங்களை அதிக்கிரமித்தும், அவைகளைத் தன்னிடத்தில் அடங்கப்பெறும்.

ஒரு பிரதீகம் உபாசனைக்கு அவசியம். நிர்க்குணப் பிரம்மம் முற்றும் நிறைந்த நிறைவு பரிபூர்ணம். இஃது உபாசனைக்கு அநர்கமானது. அஃது ஒருவஸ்து அன்று, விசேஷ்யம், விஷயம் இவைகளுக்குப் புறம்பானது. எல்லாமாய் அபின்னமாயுள்ளது.

அதினின்று—

"यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह"

(தைத்தரீயோபநிஷத். II. IV. 1.)

(இ-ள்) மனமும் வாக்குக்களும் எட்டாமல் திரும்புகின்றன.

வாக்குக்கள் மௌனமாகின்றன. மனம்மறைகின்றது. அஃது எல்லாவற்றிலும் எல்லாமாயிருக்கிறது.

சகுணப் பிரஹ்மமோ, தத்துவஞான பிரக்ஞர்களுக்கு உபாசனார்கமானது. அந்தப் பிரம்மத்தைத்தன் ரூபமான சத், சித், ஆனந்த, மூர்த்தியாகவும், எங்குநிறைந்த மூர்த்தியாகவும், ஏகமாகவும் பரமபுருஷனாகவும் தியானம்செய்து விசிராந்தியையும் சாந்தியையும், அடைவார்கள். இந்தத்தியானம் உபாசனையின் உயர்ந்தபடியாம். இது தத்துவ ஆராய்ச்சியுள்ளவர்களுக்கு அதிக அனுகுணமாக விருக்கும். ஏகீபாவமும் உண்டாகும். இதை விடஸ்தூலமான அதிம வரம்புக் குட்பட்ட பிரதீகமாக விருநதால் அந்தச் சாந்தமும் சமாதானமும் அவ்வியல்பினர்களுக்கு உண்டாகாது. ஆனால் பெரும்பான்மையோர்களுக்கு அந்தப் பரமபுருஷனை உலகங்களுக்கு ஈசனென்றும் நியந்தாவென றும் பாவனை செய்தும் அல்லது அவருடைய மூர்த்திகளான, மஹாதேவனென்றும், நாரா

யனென்றும், அல்லது இன்னும் அதிக ஸ்தூலபிரதிகங்களான ஸ்ரீராமன், ஸ்ரீகிருஷ்ணன் என்றும், இன்னும் மற்றச் சரீரியான பாவனைசெய்து வழிபடல் நிரம்ப எளிதாம். இந்த மூர்த்தங்கள் அவர்களுடைய மனத்தில், அன்பும், பக்தியும் நெகிழச்செய்யும், முந்திய பாவனைகளால் இவ்விதமான நெகிழ்ச்சி உண்டாகாது. பக்தனின் மனோபாவ நெகிழ்ச்சியினால் உண்டாகும் கற்பனாசக்தி விசேஷங்களான படர்கொடிக்கூந்தல்கள் இந்த அன்புக்கு அமைந்த மூர்த்தியை அவலம்பிக்கவும் ஆனந்தம் ஜனித்து அதில் மனமானது மூழ்குகின்றது.

இவ்விருவகை வழிபாடுகளில் எது சிரேஷ்டமானதென்பது, விவாதப்பட்டவிஷயம். ஒருசார்பார் மற்றொரு சார்பாரின் அபிப்பிராயத்திற்கு இணங்காதவரா யிருப்பதும் தவிர, அந்தப்பாவத்தைப்பற்றிச் சகிப்பில்லாதவர்களாக விருக்கின்றார்கள். ஆனால் மேற்கண்ட கேள்விக்கு, ஸ்ரீகிருஷ்ணனே முற்றறிவுள்ளவராய் முற்று முணர்ந்தவராய் உத்தரம் சொல்லியிருக்கின்றார். இவ்விதமான சந்தேகத்தினால் அர்ஜுனன் இற்றைக்கு 5000 வருஷத்திற்கு முன்னர் தபித்தான். இதைப்பற்றித் திவ்வியபரமாசாரியனைக் கேட்டான்.

ஏவம் ஸததயுக்தா யே
பக்தாஸ்த்வாம் பர்யுபாஸதே ।
யே சாப்யக்ஷரமவ்யக்தம்
தேஷாம் கே யோகவித்தமா: ॥
(ஸ்ரீபகவானுவாச)
மய்யாவேஶ்ய மநோ யே மாம்
நித்யயுக்தா உபாஸதே ।
ஶ்ரத்தயா பரயோபேதா:

𑌤𑍇 𑌮𑍇 𑌯𑍁𑌕𑍍𑌤𑌤𑌮𑌾 𑌮𑌤𑌾𑌃॥
𑌯𑍇 𑌤𑍍𑌵𑌕𑍍𑌷𑌰𑌮𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑍍𑌯𑌮𑍍
𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇।
𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌗𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌞𑍍𑌚
𑌕𑍂𑌟𑌸𑍍𑌥𑌮𑌚𑌲𑌂 𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍॥
𑌸𑌨𑍍𑌨𑌿𑌯𑌮𑍍𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍍𑌰𑌾𑌮𑌂
𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃।
𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌮𑍇𑌵
𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌹𑌿𑌤𑍇 𑌰𑌤𑌾𑌃॥
𑌕𑍍𑌲𑍇𑌶𑍋𑌽𑌧𑌿𑌕𑌤𑌰𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌮𑍍
𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌸𑌕𑍍𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍।
𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾 𑌹𑌿 𑌗𑌤𑌿𑌰𑍍𑌦𑍁𑌃𑌖𑌂
𑌦𑍇𑌹𑌵𑌦𑍍𑌭𑌿𑌰𑌵𑌾𑌪𑍍𑌯𑌤𑍇॥
𑌯𑍇 𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿
𑌮𑌯𑌿 𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌃।
𑌅𑌨𑌨𑍍𑌯𑍇𑌨𑍈𑌵 𑌯𑍋𑌗𑍇𑌨
𑌮𑌾𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍𑌤 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇॥
𑌤𑍇𑌷𑌾𑌮𑌹𑌂 𑌸𑌮𑍁𑌦𑍍𑌧𑌰𑍍𑌤𑌾
𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑌾𑌗𑌰𑌾𑌤𑍍॥
𑌭𑌵𑌾𑌮𑌿 𑌨𑌚𑌿𑌰𑌾𑌤𑍍𑌪𑌾𑌰𑍍𑌥
𑌮𑌯𑍍𑌯𑌾𑌵𑍇𑌶𑌿𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍॥

(பகவத்கீதை XII 1—7)

(இ-ள்) இப்படி எப்பொழுதும் உம்மிடத்தில் மனமுடைய வர்களாய், யாதொரு பக்தர்கள் உம்மை உபாசிக்கிறார்களோ, எவர்கள் காணப்படாத நாசமற்ற பிரம்மத்தை உபாசிக்கிறார்களோ அவ்விருவர்களுக்குள்ளே யாவர் யோகத்தை அறிந்த சிரேஷ்டர்கள்.

இந்தக் கேள்விக்குப் பகவான் உத்தரம் சொல்லுகிறார்.

என்னிடத்தில் மனத்தை நிறுத்திச் சகல கருமங்களையும் என்னிமித்தம் செய்து, பலனை எனக்கர்ப்பணம் செய்தும், அதிக சிரத்தையுடன் கூடியும், எவர்கள் என்னை உபாசிக்கிறார்களோ, அவர்கள் சிரேஷ்டர்களென்று என்னுடைய நிச்சயமான கொள்கை.

வாக்குக்கெட்டாததாயும், கண்களால்காணக்கூடாததாயும், மனத்திற்கு அகப்படாததாயும், பிரபஞ்சத்திற்குக் காரணமாயும், விருத்தி க்ஷயமற்றதாயும், சாசுவதமாயும், சகலத்திலும் வியாபித்திருக்கிறதாயுமிருக்கின்ற நிர்க்குணமான பிரமத்தை எவர்கள் உபாசிக்கின்றார்களோ, அவர்களும் இந்திரியங்களை அடக்கிச் சகலத்திலும் சமபுத்தியுள்ளவர்களாயும் சகல பிராணிகளுக்கும் நன்மையையே கோருகிறவர்களாயுமிருந்து என்னையே அடைகின்றார்கள்.

ஆனால் நிர்க்குணப்பிரமத்தின் உபாசனை மிகவும் பிரயாசையானது. ஏனெனில் நிர்க்குணவிஷயமான நிஷ்டையானது, தேகாபிமானமுடையவர்களால் அடையப்படுவது கஷ்டம்.

எவர்கள் சகல கருமங்களையும் என்னிடத்தில் சமர்ப்பித்து என்னைச் சரணமடைந்தவர்களாய் ஒரேவிதமான பக்தியினாலே என்னையே தியானம் செய்துகொண்டு, உபாசிக்கிறார்களோ, என்னிடத்தில் வைக்கப்பட்ட மனத்தையுடைய அவர்களை ஓ! அர்ஜுனா! மிருத்தியுவாகிற சம்சார சாகரத்தினின்று நான் சீக்கிரமாகக் கரையேற்றுகிறேன்.

இது முடிவான உத்தரம். இருவர்களும முக்தியடைவார்கள். ஆனால் ஈசுவரனை ஒரு மூர்த்தியாக வழி

படுதல் அமூர்த்தியாக வழிபடுதலைவிட இலகுவானது. இவ்விதமாக உபாசிப்பவர்கள் சம்சார சக்கிரத்தினின்று இலகுவாய்த் தப்பிக்கலாம்.

உபாசனையின் அதிக சுலபமானவழி பூஜை என்பது சாதாரணமாய் வழங்குகின்றது. அதில் உபாஸனைக்கு அநுகூலமாக ஒரு திவ்விய விக்கிரகத்தை வைத்துக்கொள்ளுகிறது. அந்தப் பிரதீகத்தைப் பூஜிக்கிறது. ஹிருதயத்தில் எழும்அன்பு, பக்தியென்ற புஷ்பங்களின் அழகான சின்னங்களாகப் புஷ்பங்கள் உபயோகிக்கப்படுகின்றன. மந்திரத்தினால் ஜலத்தைச் சுத்திசெய்து விக்கிரகத்தின் மேல் அபிஷேகம் செய்கிறது. பின்பு உபாஸகன் தன் மேல் புரோக்ஷணை செய்துகொள்ளுகிறான், உபாசியமான மூர்த்தியின் நாமம்வருகிற மந்திரத்தை மௌனமாய்ச் சிலமுறை ஆவர்த்தனை செய்கிறதின்மூலமாய், முன்பிரஸ்தாபித்த பிரகாரம், தன்னுடைய சூக்ஷ்மதேகங்களில் அந்த மூர்த்தியின் ஆவேசம் உண்டாகும்படியாகச் செய்துகொள்ளுகிறான். பின்னர் உபாசகன் தன்னுடைய சுபாவத்திற்குத் தக்கபடி மெய்மறந்து அந்த மூர்த்தியை ஸ்தோத்திரம் செய்கிறான். மனதின் உற்சாகத்துடனே தியான நிலையில் புகுகிறான். எதிரிலிருக்கும் பிரதீகத்தை மறந்து அதில் ஆவிர்ப்பவித்திருக்கும், அந்த ஒன்றையே நாடினவனாய் அதிலேயே அவன் மனம் லயிக்கிறது. அந்த மூர்த்தியின் சான்னித்தியத்தை யடைந்தவனாய்ச்சாந்தியும சமாதானமும்பெற்று ஆனந்த பரவசனாகிறான். இந்த உபாஸனை மனச்சலனத்தைக் கெடுத்து மனச்சமாதானம் உண்டுபண்ணியும், மனோபாவங்களைச் சுத்திசெய்வித்தும், ஆத்மதரிசனத்திற்குரிய மனோநிலையும், சிலமும் சம்பவிக்கும்படி செய்விக்கிற சாதனமாகவும் இருக்கிறது.

இந்த விதமான உபாஸனையில் விக்கிரகத்தின் உப யோகம் பெரும்பாலும் அனுகூலமாக விருக்கிறது. அது வெகுவாய் அனுஷ்டானத்திலு மிருக்கிறது. விக்கிரகமா னது மனத்தை ஒருமுகப் படுத்தி அது நிலைபெறும்வண் ணம், செய்விக்கிறது. சரியானபடி தெரிந்தெடுத்தால் அந்தவிக்கிரகாராதனை மனோபாவங்களை உற்சாகப்படுத்தி அதில் பிரதிகமாக விருக்கும் மூர்த்தியின் குணவிசேஷங் கள் மனத்தைக்கவர்ந்து கொள்ளுகின்றன.

உதாகரணமாக லிங்கமானது மஹாதேவருக்குரித் தானவும், மலங்களைச் சம்ஹரித்துத் தூய்மைப்படுத் தும். அழல் உருவத்தின் பிரதிக்காம். நான்கு கைகளு ள்ள விஷ்ணு மூர்த்தி ஸ்திதி அதாவது காப்பாற் றும் கிருத்தியத்தின் அறிகுறியாம. அவருடைய கை கள் நான்கு திசைகளைத்தாங்கிக் காப்பாற்றுங் கிருத்தி யத்தின் அறிகுறியாம். அவருடைய கைகள் நான்கு திசைகளைத்தாங்கிக் காப்பாற்றுகின்றன. கைகளில் வைத் திருக்கும் சின்னங்கள், உற்பத்தி, ஆளுகை சம்ஹாரம் அவர் ஆளும் பிரபஞ்சம், இவைகளைக் காட்டும் அடையா ளமாம். விஷ்ணுவின் விக்கிரகமாக சாளக்கிராமம் கிரகங்களில் வழங்குகின்றது. அவைகளெல்லாம் அனு பவப்பிரத்தியக்ஷமானவைகள்.

பூஜையானது பகிர் முகத்தினின்று அந்தர் முக மாய்த்திரும்பினால் உபாஸிய மூர்த்திமனோபாவமாய் ஆவிற்பவித்து உபாசகனை சூக்ஷமப் பிரக்ஞாபூமிக்கு நடத்துகிறது. மூர்த்தியும் உயிர்ப்பித்துக் கொண்டு அவ னுக்குச் சாக்ஷாத்தாகத்தரிசனம் கொடுக்கிறது. மேலும் சரியானபடி நிர்மாணித்தும் மந்திரத்தால், பிராணப்பிர திஷ்டை செய்வித்து இருக்கிற விக்கிரகம், தினந்தோறும்

உபாசகனின் பக்தி விசேஷத்தால் அனுகூலமான காந்தச்சலனம் போன்ற ஆகர்ஷணசக்தி அமையப்பெற்றுப் பின்னர் சலனம் அதினின்றும் உபாசகனின் சூக்ஷ்ம கோசங்களைச் சீராக்கி ஒழுங்குபடுத்துகிறது. அதனால் அவன் சாந்தமும் சமாதான முமான, மனோபாவமுள்ளவனாகி, அவன் பிரார்த்தனையும், தியானமும் வீரிய வத்தாக ஆகின்றன.

மேற்கண்டபடி வியக்தமான உபயோகங்களைத் தவிர, பக்தன் இந்தப் பிரதீகத்தை, நினைக்குந்தோறும் சந்தோஷமடைகிறான். தன் பிராணசிநேகிதனின் படத்தைப் பார்க்கும் பொழுது உண்டாகும் சந்தோஷம் மாதிரியாக. ஆனால் அதிகமாக அனுபவிக்கிறான். மேற்கண்ட காரணங்களினால் ஈசுவர உபாஸனையில் விக்கிரகங்கள் சாதகமாகயிருக்கின்றனவென்று நினைத்துஉபயோகிக்கிறதையாரும் ஆக்ஷேபித்தலும் கூடாது. அவைகள் சாதகமில்லாவிடில் அவைகளைவைத்துக்கொள்ள வேண்டுமென்று கட்டாயப்படுத்தலும் கூடாது. இவ்விஷயங்களில் சகிப்பு இருந்தால் அந்த உண்மையான ஈசுவரபக்திமானின் லக்ஷணமாம்.

சில வேளை குலதேவன் அல்லது தேவிக்குப் பூஜை செய்வதுண்டு. அந்தத் தேவன் அல்லது தேவியின் மூர்த்தங்கள் தன குருவால் சில சமயம் தெரிந்தெடுத்துச் சொலப் பட்டிருக்கலாம். சிலசமயம் மனத்துக்கு ரமணீயமாக இருக்கிறதென்றுதானே தெரிந்தெடுத்திருக்கலாம். இந்த மூர்த்தி தனனுடைய இஷ்டதேவன் அல்லது தேவியாம்.

இன்னும் வேறு விதமான ஆராதனைகளும் உபாசனைக்குள் அடங்கும். புஷ்பங்கள் உபயோகிக்கப்படுகிறதில்லை. அனேகம் முன் பிரஸ்தாபித்திருக்கிற பிரகாரம்

விக்கிரகம் உபயோகித்தாலும் அஃது அவசியமில்லை. தினந்தோறும் செய்யும் சந்தியாவந்தனம் ஓர் உபாசனையாம். அதை எல்லாப்பையன்களும் நன்றாய்க் கற்றுக்கொள்ளவேண்டும். இது வைதிகம், மாந்திரிகம் என இருவகைப்படும். வருணத்திற்கும் குலாசாரத்திற்கும் தக்கபடி வேறு பட்டிருக்கிறது. இந்தியாதேசத்தில் பல இடங்களில், இக்காலத்தில் அனுஷ்டானத்திலிருக்கும், சிக்கலான சந்தியாவந்தன உபாசனைக் கிரமத்திற்கும், தைத்திரீய பிராஹ்மணத்திலும், பிராசீனஸ்மிருதிகளிலும், விதித்திருக்கிற பழைய உபாஸனைக் கிரமத்திற்கும் வித்தியாசமிருக்கிறது. ஆனால் அந்தக்கிரியையின் முக்கிய அங்கங்களான சூரியனுக்கு விடும் அர்க்கியப்பிரமாணமும், காயத்திரி உபாஸனை அதன் தியானமும் முன்போலவே இப்பொழுது மிருக்கின்றன. சரியான சந்தியில் செய்யாவிடில் செய்து பிரயோஜனமில்லை. சிறிய, அல்லது பெரிய, காலவெல்லைகளில் சமபந்திக்கும் சமயம், அல்லது ஒரேவிசேஷ்யத்தின் இரண்டு நிலைமைகளின், சம்யோகம் சந்தியாம். சந்தியாகாலத்தில் ஒரு சக்தி பிரசன்னமாகிறதென்றும் அந்தக்காலம் சென்றுவிட்டால் அதுவும் மறைந்துவிடுகிறதென்றும் இந்தத்தேசத்தின் பிராசீனரிஷிகள் சொல்லியிருக்கின்றார்கள்.

சந்தியாவந்தனத்தின் பொதுவான அங்கங்களாவன.

(1) மந்திரத்தினால் புனிதமாக்கப்பட்ட ஜலத்தினால், ஆசமனம், மார்ஜனம் செய்தல்.

(2) பிராணனை நிரோதம் செய்தல் அதாவது பிராணாயாமம்.

(3) ஜீவன் தன்னுடைய பாபவிமோசனார்த்தமாகச் செய்யும் அகமர்ஷண கிரியை. இதில் உபாசகன் ஜன்ம

ஆரம்பத்திற்கும் புண்ணிய பாபம் உற்பத்திக்கும் முன் தன் ஜீவாத்மாவின் நிலையைமனத்தினால் தியானிக்கிறான்.

(4) இருபான்மையான வைதிக அல்லது தாந்திரிக காயத்திரீ.

(5) சூரிய உபாசனை அர்க்கியமும், உபஸ்தானமும்.

(6) ஜபம் இஷ்டதேவதாமந்திரத்தைச் சில முறை உச்சரித்தல், பிரார்த்தனை நமஸ்காரம்.

வைதிக யக்ஞங்களும் சம்ஸ்காரங்களும் அனேகமாக இப்பொழுது அனுஷ்டானத்தில் இல்லை. ஆயினும், இந்தச்சந்தியா வந்தனம் மாத்திரம் பிராசீன ஆசாரங்களின்கடைசியான சேஷமாய் இப்பொழுது அனுஷ்டானத்திலிருந்து கொண்டிருக்கிறது. ஒவ்வொருவரையும் அதைவிடாமல் பாதுகாத்துத் தினந்தோறும் வழுவாது செய்யவேண்டும்.

மற்றொருவிதமான உபாசனை, தியானம். கிரமமாய் அப்பியாசம் செய்யும் சமயம் வரும் பொழுது பதஞ்சலியாற் செய்யப்பட்ட பாதஞ்சல சூத்திரங்களைக் கவனமாய் வாசித்தல்வேண்டும். வித்தியார்த்தியாக விருக்கும் காலத்தில், சந்தியாவந்தனம் ஒழுங்காய்ச் செய்தும், யாதாமொரு பூஜையை அனுஷ்டித்து, வந்தால் போதுமானது. ஆனால் யோகமார்க்கத்தின் சுருக்கமான விவரம் இவ்விடத்தில் வெளியிடலாம்.

யமநியமாஸநப்ராணாயாமப்ரத்யாஹார
தாரணாத்யாநஸமாதயோऽஷ்டாவங்காநி॥

(பதஞ்சலியோகசூத்திரம். II 29.)

(இ-ள்) யமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், ப்ரத்தியாஹாரம், தாரணை, தியானம், சமாதி, ஆக எட்டு அங்கங்கள.

இவைகளில் முதல் இரண்டு, யமம், நியமம் ஒழுக்கத்தைப் பற்றியவைகள். நல்ல ஒழுக்கம் சுத்தம் இல்லாவிடின் தியானம் முடியாது.

அஹிம்ஸாஸத்யாஸ்தேயப்ரஹ்ம
சர்யாபரிக்ரஹா யமா:॥

(ஸூ 30)

(இ-ள்) அஹிம்ஸை, சத்தியம், திருடாமலிருத்தல், பிரமசாரியம், பேராசைஇன்மை, இவைகள் யமத்தில் அடங்கும்.

சௌசஸந்தோஷதப:ஸ்வாத்யாயேச்வர
ப்ரணிதாநாநி நியமா:॥

(ஸூ 32)

(இ-ள்) சௌசம், சந்தோஷம, (திருப்தி) தபஸ்; அத்தியயனம் ஈசுவரனிடம் மனப்போக்கு இவைகள் நியமத்திலடங்கும்.

இந்த லக்ஷணங்களை அடையப்பெற்று யோக தாரணைசெய்ய ஒருவன் உட்காரலாம். இரண்டு விஷயங்கள் முன்னுகச்செய்யவேண்டும். ஸ்திரமானவும் சவுக்கியமானவுமான எந்த ஆசனமும் அனுசரித்துக்கொள்ளலாம்.

ஸ்திரஸுகமாஸநம்

(ஸூ 46)

(இ-ள்) ஸ்திரமான, பிரியமான, ஆசனம் பிராணயாமம், பிராணவாயு, முறையாய், நிகழும்படி செய்தல். இது குரு மூலமாய்த் தெரிந்து கொள்ள வேண்டும்.

இதன்பின் அடுத்த படியாகிய, பிரத்தியாஹாரம் செய்தல், அதாவது இந்திரியங்கள் விஷயாதிகளிற் செல்லாமல் தடுத்து உன்முகமாகநோக்குவித்துமனத்தில் நிறுத்துதலாம்.

இதன் பிறகு தான் யோகத்தின் யதார்த்த பாவம் வருகிறது. இது மூப்பான்மையது. தாரணை, தியானம், சமாதி.

தேஶப³ந்த⁴ஶ்சித்தஸ்ய தா⁴ரணா,

(ஸூ III.)

(இ-ள்) ஒரேவஸ்துவினிடத்தில் மனத்தைக் கட்டுதல்.

இதுவே மனசை ஏகாக்கிர கப்படுத்தல், ஒரு முனையில் நிறுத்துதல். அது மூலமாய் மனத்தை ஒரு முனைப் படுத்தல். அந்நிலையிலுள்ள மனந்தான் தியானத்திற்கு அருகமாம.

தத்ர ப்ரத்யயைகதாநதா த்⁴யாநம்॥

(இ-ள்) உபாஸ்ய வஸ்துவை நோக்கி, நேரான இடைவிடாத மனோபாவ பிரவாகம் தியானம் இந்த நிலையை அடைந்தால இவ்விதமாக ஒரு முகப்பட்டு மனமானது தான் என்ற பிரக்ஞை அற்றுத தானும் உபாஸ்யமும் ஒன்றுகுகிறது இதுவே சமாதிநிலை.

ததே³வார்த²மாத்ரநிர்பா⁴ஸம்
ஸ்வரூபஶூந்யமிவ ஸமாதி⁴꞉॥

(ஸூ ௩.)

(இ-ள்) அந்தத் தியானமே, (உபாசியமே) தோன்றி உபாசகன் என்ற பிரக்ஞை இல்லாது போன்ற நிலையே சமாதி.

இவைகள் யோகத்திற்கு யத்தனங்களும் படிகளுமாம். இதனால் ஒருவன் அறிவை அடைகிறான். அறிவால் தான் உபாசிக்கும், தேவதையில் தான் சாயுஜ்யத்தைப் பெறுகிறான். இதனால் கர்மபந்தங்களினின்றும் விடுபடுகிறான். யோகமின்றி உண்மையில் ஞானமார்க்கம் லபிக்காது.

சந்நியாசியின் விதியைப் பிராஸ்தாபித்து அடியில் வருமாறு மனு சொல்லுகிறார்.

𑌧𑍍𑌯𑌾𑌨𑌿𑌕𑌂𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌵𑍈𑌤
𑌦𑍍𑌯𑌦𑍇𑌤𑌦𑌭𑌿𑌶𑌬𑍍𑌦𑌿𑌤𑌂
𑌨𑌹𑍍𑌯𑌨𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌤𑍍𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍
𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌫𑌲𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌨𑍁𑌤𑍇॥

(இ-ள்) மேற்சொன்னதெல்லாம் தியானத்தை ஆதாரமாவுடையது. பரமாத்துமாவை அறியாத ஒருவனும் கிரியாபலத்தை (செய்கையின் பயனை)ப் பூர்த்தியாய அனுபவிக்கிறானில்லை.

ஆகையினால் இதை ஒவ்வொருவனும் தெரிந்து ஆயத்தமாக வேண்டும். மேலானமார்க்கத்தை விரும்புமொவ்வொருவனும், யமம் நியமம் இவைகளை அப்பியாசமூலமாய்த் தான் ஆயத்தமாக்கிக் கொள்ளல் வேண்டும்.

## II. வது பகுதி.

### 5. வது அதிகாரம்.

முற்றிற்று.

# II. வது பிரிவு.

## 6. வது அதிகாரம்.

---

### 4 ஆசிரமங்கள்.

சநாதன தருமத்தின் அழகு என்னவென்றால் அதன் ஒழுக்கமும், ஆசாரமும், வரிசையாயும், கிரமமாயும் ஏற்படுத்தி யிருப்பது தான். இதை அனுசரித்தே ஜீவகாலத்தை ஏற்பாடாய் வகுத்து ஒவ்வொரு காலத்திலும் அததற்குரிய அப்பியாசங்களையும், கருமங்களையும் விதித்து அதின் மூலமாய் மனிதனுடைய பலவாறான சக்திகளும் யோக்கியதைகளும் விகஸிக்கும்படி தருமங்கள் நடைபெறுகின்றன. ஆத்மாவின குணங்கள் பிரகாசித்து விகஸிக்க வேண்டியதற்கு அவகாசம் ஏற்பட வேண்டிய உத்தேசத்தினால் பள்ளிக்கூடத்திற்போல ஆயுள் காலம வகுக்கப் பட்டிருக்கிறது. வாழ்நாள் நன்றாய் அல்லது தீதாய்ச் செலவழித்ததற்குத் தக்கவாறு அவ்வுத்தேசமும், நன்றாய் அல்லது தீதாய் முடியும்.

வாழ்நாள் நான்கு ஆச்சிரமங்களாக வகுக்கப் பட்டிருக்கிறது. (1) (𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑍀) பிரஹ்மசாரி, கல்வி கற்கும் மாணாக்கன், விரதமுள்ளவன. (2) (𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌃) கிரகஸ்தன் இல்வாழ்வான். (3) (𑌵𑌾𑌨𑌪𑍍𑌰𑌸𑍍𑌥𑌃) வானப்பிரஸ்தன், இல்லை விட்டு வனத்தின் கண் சென்று, மனையாள் வழிபடத்தவம் செய்வோன. (4) (𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑍀)

சந்நியாசி, துறவி, யதி, யென்றும் பெயருண்டு. சமாதானத்தை அடைந்தவன் (அல்லது ஞானமார்க்கத்தில்) முயற்சிக்கிறவன்.

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑍀 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌶𑍍𑌚
𑌵𑌾𑌨𑌪𑍍𑌰𑌸𑍍𑌥𑍋 𑌯𑌤𑌿𑌸𑍍𑌤𑌥𑌾 ।
𑌏𑌤𑍇 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌪𑍍𑌰𑌭𑌵𑌾𑌃
𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑌃 𑌪𑍃𑌥𑌗𑌾𑌶𑍍𑌰𑌮𑌾𑌃 ॥

(மனுஸ்மிருதி. VI. 87)

(இ-ள்) பிரம்மசாரி, கிரகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி, இந்த நான்கு வகுப்பினாகள், கிரகஸ்தன் மூலமாய் ஏற்படுகிறார்கள்.

ஒருவன் ஒழுங்காய் இந்த ஆச்சிரமங்களை ஒன்றன் பின் ஒன்றாய் அனுஷ்டிக்க வேண்டும். அப்படி இல்லாமல் அனுசரிக்கக் கூடாது. ஓர் ஆச்சிரமத்தின் கடமை முற்றுப்பெற்றபின்பே அடுத்த மற்றொரு ஆச்சிரமத்திற் பிரவேசிக்கலாம்.

𑌵𑍇𑌦𑌾𑌨𑌧𑍀𑌤𑍍𑌯 𑌵𑍇𑌦𑍌 𑌵𑌾
𑌵𑍇𑌦𑌂 𑌵𑌾𑌪𑌿 𑌯𑌥𑌾𑌕𑍍𑌰𑌮𑌮𑍍 ।
𑌅𑌵𑌿𑌪𑍍𑌲𑍁𑌤𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑍋
𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌾𑌶𑍍𑌰𑌮𑌮𑌾𑌵𑌿𑌶𑍇𑌤𑍍 ॥

(மனுஸ்மிருதி, III. 2)

(இ-ள்) வேதங்கள் எல்லாவற்றையும், அல்லது இரண்டுவேதங்களையாவது அல்லது ஒரு வேதத்தையாவது கிரமமாய்ப் படித்த பிறகு விரதத்தினின்று வழுவாது நடந்த பிரமசாரியானவன் கிரகஸ்தாசிரமத்திற்குப் பிரவேசிக்கலாம்.

𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌸𑍍𑌤𑍁 𑌯𑌦𑌾 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍
𑌵𑌲𑍀𑌪𑌲𑌿𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥

அபத்யஸ்யைவ சாபத்யம்
ததாரண்யம் ஸமாஶ்ரயேத்||

(மனுஸ்மிருதி. VI. 2)

(இ-ள்) தேகத்தில் சுருக்கு விழுந்தும், தலைமயிர் நரை உண்டாகியும், தனக்குப் பௌத்திரனும் ஏற்பட்டிருந்தால் பின் ஒருவன் வானப்பிரஸ்தனாய் வனத்திற்குப் போகலாம்.

வனேஷு து விஹ்ருத்யைவம்
த்ருதீயம் பாகமாயுஷ:||
சதுர்த்தமாயுஷோ பாகம்
த்யக்த்வா ஸங்கான் பரிவ்ரஜேத்||

(மனுஸ்மிருதி. ஷ 33)

(இ-ள்) மூன்றாவதான ஆசிரமத்தை வனத்தில் நடத்திய பிறகு பற்றுக்களை யெல்லாம் விட்டுச் துறவியாக நான்காவதான ஆசிரமத்தை அடைந்து ஸ்திரமான இடமின்றிச் சுற்றிக் காலங் கழிப்பானாக.

இந்தவரிசைக் கிரமமானது, ஜீவாத்மாவின் அபிவிருத்தியை நோக்கி, அதிகமுக்கியமாய் எண்ணப்படுகிறது.

இதைப்பற்றி மனுசொல்லுகிறதாவது:

அநதீத்ய த்விஜோ வேதா
நநுத்பாத்ய ததா ஸுதான்|
அநிஷ்ட்வா சைவ யஜ்ஞைஶ்ச
மோக்ஷமிச்சன் வ்ரஜத்யத:||

(மனு VI. 37)

(இ-ள்) வேதாத்தியயனஞ்செய்யாமலும், புத்திரோற்பத்தி பண்ணாமலும், யக்ஞங்களைச் செய்யாமலும் இருக்கின்ற துவிஜன் மோக்ஷத்தை அபேக்ஷிக்கிறவனாய் முயலுகிறவன், கீழான கதியை யடைகிறான்.

வானப்பிரஸ்தனின் முக்கியக் கடமை என்னவெனில் யக்ஞம் செய்தலாம். அதுவே அந்த ஆச்சிரமத்தின் நிலைமையைச் சுட்டிக் காட்டுகிறது.

அரிதாயும், அபூர்வமாயும், பிரம்மசாரியானவன சந்நியாசி ஆச்சிரமத்தை வகிக்கலாம். அப்பொழுது அவன் செய்யவேண்டிய கடமைகளை யாவையும் முன் ஜனமத்திலேயே செய்து முடித்து விட்டதாகத் தாத்பரியம். ஆனால், இவ்விதம் நடத்தல் அருமை; வரிசைக் கிரமம் தவறாமல் நிகழவேண்டும். உண்மையாய்ப் பேசுமளவில், அப்படிச் சந்நியாசி ஆகிறவனை சந்நியாசி என்று சொல்லுகிறதில்லை. சந்நியாசிக்குரிய உபதேசங்களை அவன் பெறுகிறதுமில்லை. சுக, குமாரரிஷிகள் போல, பால, அல்லது, நைஷ்டிகப் பிரமசாரி என்று அவனுக்குப்பெயர். இக்காலத்தில் உண்டாயக் கொண்டிருக்கிற ஏராளமான பால சந்நியாசிகள் பிராசீனவிதிக்கு விரோதமாய் ஏற்பட்டவர்கள். தேசத்திற்கு சங்கடமும், க்ஷேமக்குறைவும் தரித்திரமும், இவர்களால் உண்டாகின்றது.

ஆச்சிரமங்களைப் பற்றி வரிசையாக விசாரிப்போம்.

பிரம்மசாரியாச்சிரமம், உபநயனத்துடன் ஆரம்பிக்கிறது. அப்பொழுது குருவின் வாசமாய்ப் பையனை விடுகிறது. அவன வித்தியாப்பியாசம் நடக்கிறவரை அவருடனே வசிக்கிறான். தேகம் சவுக்கியமாகவும், திடமாயும், வளரும் வண்ணம் அவன் ஒழுக்கம் சாதாரணமாயும், சிரமகரமாயும், நடக்கும். சுகபோஜனம், உல்லாசமாயக் காலங்கழித்தல், இவைகளின்றி விரதத்திற்குட்பட்டவனாக, டம்பமான விஷயங்களில்லாமல் அவன் காலம் கழிக்கிறான். சூரியோதயத்திற்கு முன், படுக்கை

விட்டு எழுந்து ஸ்நாநம் செய்து பிறகு சூரியன் உதயமாகும்வரை காலை சந்தியாகாலத்தில் சந்தியாவந்தனம் செய்கிறான். அவன் தூங்கிக்கொண்டு படுக்கை விட்டு எழாமல், சூரியன் உதயமாய் விட்டால் அன்று முழுவதும் ஜபம் செய்து கொண்டு உபவாஸமாயிருக்கவேண்டும். சந்தியா வந்தனம் முடிந்த உடனே அவன் மதூகரம் தேடப்போகவேண்டும். சேகரித்த பிக்ஷையைக் குருவின் வருதியில் ஒப்புவித்து அவர் அவனுக்குக் கொடுக்கும் பகுதியைத் திருப்தியுடனே புஜிக்கவேண்டும்.

𑌪𑍂𑌜𑌯𑍇𑌦𑌶𑌨𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯
𑌮𑌦𑍍𑌯𑌾𑌚𑍍𑌚𑍈𑌤𑌦𑌕𑍁𑌤𑍍𑌸𑌯𑌨𑍍।
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌹𑍃𑌷𑍍𑌯𑍇𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑍀𑌦𑍇𑌚𑍍𑌚
𑌪𑍍𑌰𑌤𑌿𑌨𑌨𑍍𑌦𑍇𑌚𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃॥
𑌪𑍂𑌜𑌿𑌤𑌂 𑌹𑍍𑌯𑌶𑌨𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂
𑌬𑌲𑌮𑍂𑌰𑍍𑌜𑌂 𑌚 𑌯𑌚𑍍𑌛𑌤𑌿।
𑌅𑌪𑍂𑌜𑌿𑌤𑌂 𑌤𑍁 𑌤𑌦𑍍𑌭𑍁𑌕𑍍𑌤
𑌮𑍁𑌭𑌯𑌂 𑌨𑌾𑌶𑌯𑍇𑌦𑌿𑌦𑌂॥

(மனுஸ்மிருதி. II. 54. 55.)

(இ-ள்) தனக்குச்சேர்ப்படும் அன்னத்தை ஒருவன் மரியாதை செய்யட்டும், அதை நிந்திக்காமல் புஜிக்கட்டும், அதைப்பார்க்கவும் சந்தோஷத்தை அடையட்டும். அதின் வரவுபிரியமாகக் கொண்டாடப்படட்டும், மரியாதையுடன் அங்கீகரிக்கப்பட்ட அன்னம், தேகத்திற்குப் பலத்தையும் வீரியத்தையும் கொடுக்கும். நிந்தித்து அதை உண்டானுகில் மேற்கண்ட இரண்டும் கெடும.

பகற்காலத்தைப் படிப்பிலும் குரு சுசுரூஷையிலும் கழிக்கவேண்டும்.

𑌚𑍋𑌦𑌿𑌤𑍋 𑌗𑍁𑌰𑍁𑌣𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯
𑌮𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌿𑌤 𑌏𑌵 𑌵𑌾।

𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌨𑍍𑌮𑌧𑍁 𑌮𑌾𑌂𑌸𑌂 𑌚
𑌗𑌨𑍍𑌧𑌂 𑌮𑌾𑌲𑍍𑌯𑌂 𑌰𑌸𑌾𑌨𑍍 𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌶𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 𑌯𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿
𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌚𑍈𑌵 𑌹𑌿𑌂𑌸𑌨𑌮𑍍 ॥
𑌅𑌭𑍍𑌯𑌙𑍍𑌗𑌮𑌞𑍍𑌜𑌨𑌂 𑌚𑌾𑌕𑍍𑌷𑍍𑌣𑍋
𑌰𑍁𑌪𑌾𑌨𑌚𑍍𑌛𑌤𑍍𑌰𑌧𑌾𑌰𑌣𑌮𑍍 ।
𑌕𑌾𑌮𑌂 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 𑌚 𑌲𑍋𑌭𑌂 𑌚
𑌨𑌰𑍍𑌤𑌨𑌂 𑌗𑍀𑌤𑌵𑌾𑌦𑌨𑌮𑍍 ॥
𑌦𑍍𑌯𑍂𑌤𑌂 𑌚 𑌜𑌨𑌵𑌾𑌦𑌂 𑌚
𑌪𑌰𑌿𑌵𑌾𑌦𑌂 𑌤𑌥𑌾𑌨𑍃𑌤𑌮𑍍 ।
𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌣𑌾𑌂 𑌚 𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑌣𑌾𑌲𑌮𑍍𑌭
𑌮𑍁𑌪𑌘𑌾𑌤𑌂 𑌪𑌰𑌸𑍍𑌯 𑌚 ॥
𑌏𑌕𑌃 𑌶𑌯𑍀𑌤 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰
𑌨 𑌰𑍇𑌤𑌃 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌯𑍇𑌤𑍍𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍 ।
𑌕𑌾𑌮𑌾𑌦𑍍𑌧𑌿 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌯𑌨𑍍 𑌰𑍇𑌤𑍋
𑌹𑌿𑌨𑌸𑍍𑌤𑌿 𑌵𑍍𑌰𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥
𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑍇 𑌸𑌿𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑍀
𑌦𑍍𑌵𑌿𑌜𑌃 𑌶𑍁𑌕𑍍𑌰𑌮𑌕𑌾𑌮𑌤𑌃 ।
𑌸𑍍𑌨𑌾𑌤𑍍𑌵𑌾𑌰𑍍𑌕𑌮𑌰𑍍𑌚𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌤𑍍𑌰𑌿𑌃
𑌪𑍁𑌨𑌰𑍍𑌮𑌾𑌮𑌿𑌤𑍍𑌯𑍃𑌚𑌂 𑌜𑌪𑍇𑌤𑍍 ॥

(மநு. II. 177. 181.)

(இ-ள்) பிரம்மசாரியானவன், மது, மாம்சம், வாசனைகள், புஷ்பங்கள், ரசவஸ்துக்கள், புளிப்பான திரவியங்கள் முதலியவைகளையும் ஸ்திரீகளையும் வர்ஜிக்கவேண்டும். ஜீவராசிகளை ஹிம்சித்தல் கூடாது.

தைலஸ்நானம், கண்களுக்கு அஞ்சனம், பாதரக்ஷை, குடை, இவைகளை வர்ஜிக்கவேண்டும். காமம், குரோதம், லோபம், நர்த்தனம், கானம், வாத்தியம் இவைகளைத் தவிர்க்க வேண்டும்.

சூதாட்டம், பயனற்றவாசகம், நிந்தனை, பொய், ஸ்திரீகளைக் கூர்ந்து பார்த்தல், அவர்களைத் தொடுதல், பிறரை அடித்தல், இவைகளைச் செய்ய ஒண்ணாது.

அவன் ஏகாந்தமாய்ப் படுக்கவேண்டும். அவன் வீரியத்தைக் கட்டவேண்டும். காமத்தினால் வீரியத்தைச் செலவழிக்கிறவன் விரதபங்கம் செய்கிறான்.

தூங்கும் காலத்தில் காமத்தால் விளைந்த தனக்குத் தெரியாமல் துவிஜனான பிரமசாரிக்கு பிந்துஸ்கலனம் நேரிட்டால் அவன் ஸ்நானம் செய்து சூரியனை உபாசித்து மூன்றுதடவை ([illegible]) புனர்மாம் என்கிற ருக்கை ஜபிக்க வேண்டும்.

பாதரக்ஷை, குடை, இவ்விரண்டு விஷயத்தைத் தவிர மேற்கண்டபடி மனு சொல்லியிருக்கிற மற்ற வர்ஜனைகள் இக்காலத்திலும் பொருந்தும். இக்காலத்தில் காலரீதியை மாற்றியிருக்கின்றமையால் முறைகளுக்குத் தக்கவாறு சில வேறுபாடுகள் இருந்தபோதிலும் ஆசிரம விஷயத்தில் மேற்கண்ட அம்சங்களிலும் பின்னும் முன் பிரஸ்தாபியாத அம்சங்களிலும் மனம் வைக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது.

இந்த ஆச்சிரமத்தில் சிறுகாலத்தில் விரதம், சுத்தம், இவைகளைப்பற்றி அப்பியாசம் ஏற்பட்டிருக்கிறதற்குக் காரணம், மனவொன்றல், தேகபலம், வீரியம், வியாதியின்மை சுகநிலையான மக்கள் பெறுதல், தீர்க்காயுஸ் இவைகளுக்கெல்லாம், பால்யத்தில், ஸ்திரீ சம்பந்தமின்மை என்ற விரதம் ஆதாரமாக இருக்கின்றன. பால்ய துர் அப்பியாசமான வீரியத்தை விடுதலானது, பின்பு வியாதிகளுக்கும் அற்பாயுளுக்கும் ஹேதுவாகிறது. ஆகையினாலேதான் ஆதிதருமசாஸ்திரி

களும் குருக்களும், பிரம்மசரிய விருதத்தில் இந்த அம்சத்தைப்பற்றி முக்கியமாய் அறிவுறுத்தி யிருக்கிறார்கள். ஆகவே பிரம்மசாரி என்றால் கல்யாணம் செய்து கொள்ளாதவனென்று இப்பொழுது அர்த்தம். நர்த்தனம், பாட்டு, சங்கீதம், வீண்பேச்சு, ஸ்திரீகளை ஊன்றிப்பார்த்தல், ஸ்திரீகளைத் தொடுதல், இவைகளை விலக்கவேண்டுமென்று விதித்ததற்குக் காரணம் என்னவென்றால் இவைகளில் பிரவர்த்தியிருக்குமாகில் விரதத்தினின்று நழுவி விரதபங்கம் நேரிடுமென்பதே. மிதமான சாதாரண ஆகாரம் பலத்தை உண்டு பண்ணுந்தொழில் வரம்புக்குட்பட்டுச் செட்டாய்க் காலக்ஷேபஞ் செய்தல் இவைகளெல்லாம் திடமான சரீரத்தை அமைப்பிக்கும். எந்தக்கஷ்டங்கள் நேரிட்டாலும், அவைகளைப் பொறுமையுடன் சகிப்பான். இதைப்பற்றிமனு அடிக்கடி வற்புறுத்திக்கூறுகிறார்.

இந்த்ரியாணாம் விசரதாம்
விஷயேஷ்வபஹாரிஷு|
ஸம்யமே யத்நமாதிஷ்டே
த்வித்வாந் யந்தேவ வாஜிநாம்|

மனு II 88

(இ-ள்) சாரதியானவன் குதிரைகளை எப்படி அடக்குகிறானோ அதுபோலவே அறிவுள்ளவன் விஷயங்களில், அலைகின்ற இந்திரியங்களை அடக்குகிறான்.

வஶே க்ருத்வேந்த்ரியக்ராமம்|
ஸம்யம்ய ச மநஸ்ததா|
ஸர்வாந்ஸம்ஸாதயேதர்த்தாந்
அக்ஷிண்வந்யோகதஸ்தநும்||

(மனு. ஷ. 100.)

(இ-ள்) இந்திரியங்களை நிக்கிரகித்து மனத்தை அடக்கினால் யோகத்தினால் எல்லாக காரியங்களும சித்திக்கும் சரீரத்தைக கிலேசப் படுத்த வேண்டாம்.

சாந்தோக்கியோபநிஷத்தில் (Viii. IV. 3. ம். V. i. 4. ம்.) சொல்லுகிறதாவது. யக்ஞம் அல்லது இஷ்டி, அன்னதானம், வனத்தில் வசித்தல், இவைகளின் பிரயோஜனம், பிரம்ம சரியத்தில் அடங்கி யிருக்கிறது. பிரம்மாவின் 3. வது லோகத்தை இதன் மூலமாய்த் தான் அடையவேண்டும். பால்யத்திலேயே, சரீரத்துக்குப் பலவிதமான விளையாட்டுக்கள் மூலமாய சரீரப் பயிற்சி அதன் அபிவிருத்தி இவைகளில் கவலை கொள்ளாமல் இந்திரிய நிக்கிரகமும், ஸ்திரீ இச்சை அடங்குதலும இலகுவாக அமையும். இராமாயணத்திலும் மகாபாரதத்திலும், பாலர்கள் ஆயுதப் பயிற்சியிலும், குதிரை சவாரி செய்தல், குதிரை ஓட்டுதல், வேட்டை யாடுதல், விளையாடுதல் இவைகளும் மற்றப் பரமசிரமமான செய்கைகளிலும, பயின்று வந்தார்களென்று நாம் வாசிப்பினால் தெரிந்து கொண்டிருக்கிறோம். இவ்விதமான தேகப்பயிற்சி அவர்கள் வித்தியாப்பியாசத்தில் ஓர் அம்சமாக அமைந்து, பலமான வீரியமுள்ள சரீரக் கட்டுக்கு ஆயதனமாக விருந்தது.

அத்தியயனத்தினாலும், விரதானுஷ்டானத்தினாலும், இந்தப் பிரம்மசரிய ஆச்சிரமத்தைக் கொண்டு செலுத்தியதின் மேல் வித்தியார்த்தி தனனால் இயன்ற பட்டில் குருதக்ஷிணை சமர்ப்பித்துக் கிரகஸ்தாச்சிரமத்தை அடைய வேண்டுமென்ற நோக்கத்துடன், தன்னுடைய கிரகத்திற்குத் திரும்புகிறான்.

அப்பொழுது தான் ஒரு ஸ்திரீயை விவாகஞ் செய்து கொண்டு மனுஷத் தன்மையை அடைந்து, அதன் உத்

தரவாதங்களை வகிக்கிறான். விவாகமான பிறகு ஸ்திரீசம்யோகத்தில் மிதமாக விருத்தல் வேண்டும். ஒரு மாசத்தில் 10 நாளில் ஒரு நாள்தான் அனுமதியுண்டு. (மனு. iii. 45—49) பார்க்க. ஸ்திரீகளை உபசரிக்கவும் அன்பு பாராட்டவும் வேண்டும். இல்லாவிடில் கிரகத்திற்கு க்ஷேமமில்லை.

𑌪𑌿𑌤𑍃𑌭𑌿𑌰𑍍𑌭𑍍𑌰𑌾𑌤𑍃𑌭𑌿𑌶𑍍𑌚𑍈𑌤𑌾𑌃
𑌪𑌤𑌿𑌭𑌿𑌰𑍍𑌦𑍇𑌵𑌰𑍈𑌸𑍍𑌤𑌥𑌾 ।
𑌪𑍂𑌜𑍍𑌯𑌾 𑌭𑍂𑌷𑌯𑌿𑌤𑌵𑍍𑌯𑌾𑌶𑍍𑌚
𑌬𑌹𑍁𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌮𑍀𑌪𑍍𑌸𑍁𑌭𑌿𑌃 ॥
𑌯𑌤𑍍𑌰 𑌨𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌤𑍁 𑌪𑍂𑌜𑍍𑌯𑌨𑍍𑌤𑍇
𑌰𑌮𑌨𑍍𑌤𑍇 𑌤𑌤𑍍𑌰 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃 ॥
𑌯𑌤𑍍𑌰𑍈𑌤𑌾𑌸𑍍𑌤𑍁 𑌨 𑌪𑍂𑌜𑍍𑌯𑌨𑍍𑌤𑍇
𑌸𑌰𑍍𑌵𑌾𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑌾𑌫𑌲𑌾𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 ॥
𑌶𑍋𑌚𑌨𑍍𑌤𑌿 𑌜𑌾𑌮𑌯𑍋 𑌯𑌤𑍍𑌰
𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌾𑌶𑍁 𑌤𑌤𑍍𑌕𑍁𑌲𑌮𑍍 ॥
𑌨 𑌶𑍋𑌚𑌨𑍍𑌤𑌿 𑌤𑍁 𑌯𑌤𑍍𑌰𑍈𑌤𑌾𑌃
𑌵𑌰𑍍𑌧𑌤𑍇 𑌤𑌦𑍍𑌧𑌿 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 ॥

(மனு. iii. 55-57.)

(இ-ள்) க்ஷேமத்தைக் கோருகிற பிதாக்கள், சகோதரர்கள், புருஷர்கள், மைத்துனர்கள் இவர்கள் ஸ்திரீகளை உபசரிக்கவேண்டும் ஆபரணாதிகளைக் கொடுக்க வேண்டும்.

ஸ்திரீகள் உபசரிக்கப்படுவார்களாகில் தேவர்களுக்குத் திருப்தி உண்டாகிறது. அவர்கள் உபசரிக்கப்படார்களாகில் செய்யும் கிரியைகளுக்குப் பயனில்லை.

ஸ்திரீகள் துக்காக்கிராந்தர்களானால் குடும்பம் சீக்கிரம் நசித்துவிடும். அவர்கள் துக்கரஹிதர்களானால் குடும்பம் எப்பொழுதும் அபிவிருத்தியடையும்.

— 𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑍋 𑌭𑌾𑌰𑍍𑌯𑌯𑌾 𑌭𑌰𑍍𑌤𑌾
𑌭𑌰𑍍𑌤𑍍𑌰𑌾 𑌭𑌾𑌰𑍍𑌯𑌾 𑌤𑌥𑍈𑌵 𑌚

யஸ்மிந்நேவ குலே நித்யம்
கல்யாணம் தத்ர வை த்ருவம்॥

(மனு. iii. 60)

(இ-ள்) எந்தக் குடும்பத்தில், புருஷன் ஸ்திரீயிடத்திலும், ஸ்திரீ புருஷனிடத்திலும், திருப்தியாக இருக்கிறார்களோ, அதில் எப்பொழுதும் சந்தோஷமிருக்கும்.

கிரகஸ்தன் தான் ஆரிய ஒழுக்கத்திற்கு ஹிருதயஸ்தானமாக விளங்குகிறான். எல்லாம் அவனையே துணையாக உடையன.

யதா வாயும் ஸமாஶ்ரித்ய
ஸர்வே ஜீவந்தி ஜந்தவ꞉।
ததா க்ருஹஸ்தமாஶ்ரித்ய
வர்த்தந்தே இதராஶ்ரமா꞉॥

(மனு iii. 77)

(இ-ள்) ஜீவராசிகள் வாயுவை ஆதாரமாகக் கொண்டு எப்படி ஜீவிக்கின்றனவோ, அப்படியே கிரகஸ்தனை (இல்வாழ்வானென்பானை)த் துணையாகக்கொண்டு மற்ற ஆசிரமிகள் நடைபெறுகின்றார்கள்.

ஸர்வேஷாமபி சைதேஷாம்
வேதஸ்ம்ருதிவிதாநத꞉।
க்ருஹஸ்த உச்யதே ஶ்ரேஷ்ட꞉
ஸ த்ரீநேதாந்பிபர்த்தி ஹி॥
யதா நதீநதா꞉ ஸர்வே
ஸாகரே யாந்தி ஸம்ஸ்திதிம்

ஸர்வேஷாமபி சைதேஷாம் வேதஸ்ருதிவிதாநத: |
க்ருஹஸ்த உச்யதே ஸ்ரேஷ்ட: ஸ த்ரீநேதாந் பிபர்த்தி ஹி ||

([illegible] 89 90.)

(இ-ள்) இவர்கள் எல்லாரையும் விடக் கிரகஸ்தன் சிரேஷ்டன் என்று வேதவாக்கியங்கள் கூறுகின்றன. மற்ற மூவர்களையும் அவன் காப்பாற்றுகிறான்.

ஓடைகளும், நதிகளும், சமுத்திரத்தில் எப்படி விசிராந்தியை யடைகின்றனவோ, அப்படியே எல்லா ஆச்சிரமிகளும், கிரகஸ்தனிடத்திலேயே விசிராந்தியடைகின்றார்கள்.

ஆகையால் கிரகஸ்தாச் சிரமம் ஆச்சிரமங்களில் உயர்ந்தது.

"ஜ்யேஷ்டாஸ்ரமோ க்ருஹீ," திரவியம் சம்பாதித்தல் அவன் கடமை. (இந்த விஷயத்தில வைசிய கிரகஸ்தன சரியான உதாகரணம்) அதைச்சரியானபடி விநியோகித்தலும் அவன் கடனே. விருந்தோம்பல் அவனுடைய முக்கியமான கடனே. அதில் சிறிதேனும் தவறக் கூடாது.

த்ருணாநி பூமிருதகம்
வாக் சதுர்த்தீ ச ஸூந்ருதா |
ஏதாந்யபி ஸதாம் கேஹே
நோச்சித்யந்தே கதாசந ||

(மநு. iii. 101)

(இ-ள்) புற்கள், மண், ஜலம், இன்சொல், இந்நான்கும் சாதுக்களுடைய கிரகத்தில் எப்பொழுதும் தவறாமல் கிடைக்கும்.

அதிதிகளையும் (விருந்தினரை) பிராஹ்மணர்களையும், தன்பந்துக்களையும், தன் வேலைக்காரர்களையும் முதல் முதல் அன்னமிட்டுத் திருப்தி செய்யவேண்டும். பிறகு தானும் தன் மனைவியும் சாப்பிடல் வேண்டும். மேற்கண்டவர்களுக்கு முன்னரே மணமகள் (புதுநாட்டுப் பெண்) சிசுக்கள், வியாதிஸ்தர்கள், கர்ப்பிணி ஸ்திரீகள் இவர்களுக்கு அன்னமிடவேண்டும்.

(மனுஸ்மிருதி, iii. 114—116)

கிரகஸ்தன் சரியானபடி பஞ்சமகாயக்ஞங்களைச் செய்ய வேண்டும் பிராமணகிரகஸ்தர்கள் மாச விரதங்களையும் செய்ய வேண்டும். (மனு. IV. 17.) பிராமணன் அத்தியயனங்களை நடத்த வேண்டும். அவைகளுக்கு விருத்தகரமான தொழிலை செய்யக் கூடாது. பிறர்களுக்குக் கேடு நேராத தொழிலைச் செய்து ஆர்ஜித்து ஜீவனம் செய்யவேண்டும். (மனு. IV. 2) ஒழுக்க முறையைப் பற்றி விஸ்தாரமான விதிகள் ஏற்பட்டிருக்கின்றன. கிரகஸ்தன் மனுஷனின் அச்சு அடையாள புருஷனாகையால் அவனுடைய பொது ஒழுக்கத்தைப் பற்றி iii. வது பகுதியிற் சொல்லப்படும் அவனுடைய உத்தமமான தருமங்களும் ஆசாரங்களுமாவன: அதிதி பூஜை, முயற்சி, ருதம் (மனோபாவம்) சத்தியம், (கிரியாபாவம்) உதாரத் தன்மை, சமை, சரியான ஆகாரம், சுகமாய்க் காலங்கழித்தல், செல்வத்தையும் போகபோக்கியங்களையும் அவன் பேணலாம். ஆனால் அப்பொழுது தானம் செய்ய வேண்டும்.

முன் பிரஸ்தாபித்த பிரகாரம் தான் வயோதிகனாகி, பேரன்வரைசந்ததிகள் உடையவனானால் கிரகஸ்தன் கிரகஸ்தாச்சிரமத்தை விட்டு வானப்பிரஸ்தனாகி வனத்திற்

குப் போகலாம். அவன் மனைவி அவனுடன் செல்லலாம். அல்லது தன்னுடைய புத்திரர்களுடனே இருக்கலாம். அவன் தன்னுடன் அக்கினியையும், யக்ஞபாத்திரங்களையும் கொண்டுபோகிறான். இந்த ஆச்சிரமம் அவன் நடத்துகையில் பிரார்த்தனை ரூபமாயும், யக்ஞரூபமாயும் உலகத்திற்கு க்ஷேமத்தைச் செய்கிறது தான்.

அவன் கடமை. ஆகவே தினந்தோறும் பஞ்சமகாயக்ஞங்களையும் அக்கினிஹோத்திரத்தையும் செய்துகொண்டும் தரிச பூர்ணமாஸை இஷ்டிகளையும் மற்றவைகளையும், நடத்திவரவேண்டும். அவனுடைய காலக்ஷேபம எல்லாம் யக்ஞம், அத்தியயனம், தபஸ் எல்லா ஜீவராசிகளிடத்தும் அருளும் அன்பும் உடையவனாய் ஒழுகுதலுமாம்.

“ஸ்வாத்யாயே நித்யயுக்தஸ்ஸ்யாத்
தாந்தோ மைத்ரஸ் ஸமாஹித:
தாதா நித்யமநாதாதா
ஸர்வபூதாநுகம்பக:”

(மனு VI. 8).

(இ-ள்) அவன் எப்பொழுதும் வேதாத்தியயனத்தில் காலத்தைக கழிக்கவேண்டும். சமதமம், சமாதான உபாதிகுணங்களுள்ளவனாய்ப்பழகவேண்டும். எப்பொழுதும் பிரதிக்கிரகம் வாங்காதவனும், கொடுக்கிறவனுமயிருக்கவேண்டும். எல்லாப்பிராணிகளுக்கும் காருண்ணியமாக ஒழுகவேண்டும்.

இந்தக்கபடமற்ற துறவி இயல்பினதான உயர்வாழ்க்கையானது முற்றும் துறந்த சந்நியாசி ஆச்சிரமத்திற்கு வழியாக அமைகிறது. இந்தச் சந்நியாசி ஆச்சிரமத்திலோ தன்னிடம் கொடுக்க யாதொன்றும் இன்மையால் யக்ஞங்களைச் செய்ய வேண்டுவதில்லை. மற்றப்படி தனக்காதரவாக, வாழ்நாளைத் தியானத்தில் செலுத்துகிறவனாய் ஏகாந்தமாகக் காலம் கடத்துகிறான்.

நவாசம்ந்ருதாம் வதேத்
அத்யாத்மரதிராஸீநோ
நிரபேக்ஷோ நிராமிஷ:
ஆத்மநைவ ஸஹாயேந
ஸுகார்தீ விசரேதிஹ

(மனு VI. 45—49)

(இ-ள்) மரணம் வேண்டுமென்ற விருப்பமும் ஆயுஸ்வேண்டு மென்ற விருப்பமும் அவனுக்குக் கூடாது. வேலைக்காரன தனக குள்ள கூலிக்கு எவ்வண்ணம் காத்திருப்பானோ அவ்வண்ணம் தன்னுடைய நிர்யாணம் நேரிடும் காலத்தை எதிர்பார்க்கவேண்டும்.

கண்பார்த்து ஒவ்வொரு அடியும் வைக்கவேண்டும். வஸ்திரத்தால் வடிகட்டின ஜலத்தைப் பானம் செய்ய வேண்டும். சத்தியத்தால் புனிதமாக்கப்பட்ட வசனத்தை சொல்லவேண்டும். அறிவினால் தன்னை ஆண்டு நடத்தவேண்டும்.

கடுஞ்சொற்களைச் சகிக்கவேண்டும். தான் பிறரை நிந்திக்கக் கூடாது. தன்சரீர சம்ரக்ஷணார்த்தம், ஒருவனையும் பகைசெய்து கொள்ளக்கூடாது.

கோபிஷ்டனைக் குறித்துப் பிரதியாகக் கோபங் கொள்ளக் கூடாது. தன்னைப் பிறர் சபித்தால், தான் அவரை ஆசீர்வதிக்கக் கடவன். ஏழுதுவாரங்களுக்கும் தெரிந்து வருகிற, (கண்கள், 2 காதுகள், 2 நாசிகள் மூக்குகள் 2, வாய் 1, ஆகமொத்தம் 7) வார்த்தையைப் பொய்யாக உச்சரிக்கக் கூடாது.

பரமாத்மாவினிடத்தில் சந்துஷ்டி. யுடையவனாகவும் வேண்டுதல், வேண்டாமை, இல்லாதவனாயும், விஷய போகங்களை விலக்கியவனாயும் தன்னையே தன்னுடைய

யித்திரனுகப் பாவித்தும் சந்தோஷ முள்ளவனுகவு மோக்ஷத்தையே நோக்கினவனுகவும் அவன திரிவானுக.

எப்பொழுதும் ஜன்மாந்தரத்தையும் துக்கத்தையும் சிந்தித்தவனும், பரமாத்மாவையும் சிறிதிலும் பெரிதிலும், அவருடைய சமரான்னித்தியத்தையும் தியானித்துக் கொண்டும் பல ஜன்மங்களில் ஜீவாத்மகதியின் தொடர்பை அறிந்தவனும், பிரஹ்மத்தினிடத்திலேயே பரம ஆசிரிதனுகவும் இருக்க வேண்டும். இவ்விதம் செய்பவர அவன் பிரஹ்மத்தை அடைவான.

சநாதன தருமத்தின் நான்கு ஆச்சிரமங்கள் மேற் கண்டபிரியாக மனிதனை மேலான உயர்ந்த நிலைக்குப் பயிற்றுகின்றன. இக்காலத்தில் அவைகளையெல்லாம் முழுமையுமாக எழுத்தெழுத்தாய அனுஷ்டானத்திற் குக் கொண்டுவர இயலாது. ஆயினும் அவைகளின் உட்கருத்தை இக்காலத்தின் ஜீவவழக்கின் அபிவிருத் தியை உத்தேசித்து, அனுஷ்டானங்களில் அமைத்துக் கொண்டு செலுத்தக்கூடும். குருகுலவாசம் செய்கிறதற் குப் பதிலாக, இக்காலத்தில் பிரம்மசரியத்தைப் பள்ளிக் கூடத்திலும், கலாசாலையிலும் பெரும்பான்மை கழிக்க வேண்டியதாயிருக்கிறது. ஆனால் பூர்வகாலத்தில் அந்த ஆச்சிரமவிதையான செட்டானவும் கடினமானவும் சுத்த மானவுமான ஒழுக்கத்தை இப்பொழுதும் கொண்டு செலுத்தலாம். பிரம்மசரிய விரதத்தை (விவாகமின்றி இருத்தல்) எங்கும் அனுஷ்டானத்திற்கு கொண்டுவர லாம். கிரகஸ்தாச் சிரமத்தின் உயர்ந்த நோக்கமும், விவா கத்திற்குப் பிறகு தம்முடைய கடமையையும், உத்தரவா தத்தையும் சிந்தித்தும், சமயசம்பந்தமான ஆசாரங்களை நடத்தியும் ஒழுங்காய் ஜீவகதியை வகுத்தும், பிற

களுக்குத்தரம் உடன் பட்டிருக்கும் உத்தரவாதங்களைவகித்தும் இவைகள் மூலமாய் இப்பொழுதும் வெகுவாய் நிறைவேறும் வண்ணம், கொண்டு செலுத்தலாம்." மூன்றாவதான ஆச்சிரமத்தை இக்காலத்தில் அநேகர்கள் மனத்தில் நடத்த வொண்ணாது. நான்காவதான ஆச்சிரமம் இக்காலத்திற் பெரும்பாலும் யாவருக்கும் முடியாத காரியம். ஆனால் உலகவியாபாரங்களின்று சிறுகச்சிறுகத்தான் ஒழிவடைந்து, மாறிய பின் சந்நியாசிகளிடம் அவைகளை ஒப்புவித்துத் தியானபரனாய் அந்தியபவர். தபஸ், இவைகள் தான் இனி தன்னுடைய ஆயுசின் முக்கிய கடமைகளாகப் பாவித்து ஒழுகலாம். இப்படிப்பட்ட வயோதிக சாதுக்கள் இருப்பார்களாகில் சாதாரணங்களுக்குச் க்ஷேமகரமாயிருப்பதுமன்றி, சமயநெறியின் உயர்வும் கௌரவமும், இவர்கள் மூலமாக நிதர்சனமாய் விளங்கும். அவர்களுடைய ஒழுக்கமும் மற்றவர்களும் அனுஷ்டிக்கும் வண்ணம் ஒரு திருஷ்டாந்தமாகவும் பயன்படும். இவர்கள் மூலமாய் மனிதர்களுடைய மனோபாவமும் மேன்பாட்டை அடையும்.

நான்கு ஆச்சிரமங்கள் என்றால் ஆயுள் காலம் சீராயும் ஒழுங்காயும் அடிமுதல் அந்தம் ஈறாக அமைக்கப்பெற்றுள்ளது என்று பொருள் படும். இந்த ஆச்சிரமங்களில் பிரம்மசரிய ஆச்சிரமம், கிரகஸ்தாச்சிரமம் இவ்விரண்டும் ஜீவனைப் பிரவிருத்திமார்க்கத்தில் புகட்டி வெளிநோக்கிச்செல்லும் கதியைக்காண்பிக்கின்றன.

மற்ற இரண்டு ஆச்சிரமங்களான வானப்பிரஸ்தசந்நியாச ஆச்சிரமங்கள் உலகத்தினின்று ஒழிவு நிலைகளாம் நிவிருத்தி மார்க்கத்தைக் காண்பிக்கின்றன. முன்னோர்கள் இவ்விதமாக ஒருமனிதன் நடைபெறவேண்டிய மார்க்கத்தை நன்றாயும், ஞானகரமாயும் வகுத்திருக்கின்றார்

கள். ஆகவே நான்கு படிகளாக அமைந்திருக்கும் இந்தத் துறையை அனுசரித்து, 'ஒருவன் ஒழுகுவானாகில் அவனுடைய வெளிநோக்கும் சக்தியும், அதாவது பிரவிருத்தி, நிவிருத்திக்குரிய உபாயங்கள் சமமாய் அமர்ந்து நடைபெறும். முதலில் பிரம்மசரியம் சரியாயும், நன்மை பயக்குமாறு நடைபெறுதலும், கிரகஸ்தாச்சிரமம் உலக வியாபாரங்களில் பலவாறாக முயற்சித்துக் கிரீடித்தலும், பிறகு அவைகளினின்று நழுவி உள் நோக்கி ஏகாந்தமுழுங்கமும் பூஜையும்தபஸும் புரிதலும், உலகவியாபாரங்களிலிருந்தும், சிறுவர்களுக்குப் புத்தி கற்பித்தலும், இதன் பின் ஏகதேசத்தில் சிலர்களாவது முற்றும் அப்படித் துறவறத்தைக் கைகொள்ளுதலுமாம்.

புராணங்கள் மூலமாயும் இதிஹாஸங்கள் மூலமாயும் நாம் அறிந்துகொண்டிருக்கிறபடி இந்த ஆச்சிரமங்கள் மூலமாய் ஆயுளைக்கழித்துப் பின்பு மோக்ஷத்தை அடைய வேண்டுமென்ற விதியின் பிரயோஜனம் யாதெனில் ஈசுவரன் உலகத்தை நடத்துகிற தொழிலும். அவர் அதை விருத்திக்கும்படி செய்யும் முறையிலும் நாமும் அவருடைய ஏவலாளராக இருந்துகொண்டு அவருடையமனோபாவங்களைக்கொண்டு செலுத்தி அனுசரணையாக இருக்கவேண்டுமென்பதேயாம். சந்நியாசி ஆச்சிரமத்தின் வெளி ஒழுக்கத்தில் ஜீவாத்மா பற்றின்மையும சமாதான நிலையையும் அறிகிறான். சந்நியாசமென்றால், வெளிவேஷமன்று. உள்ளத்தில் பற்றற்றிருத்தல். ஜனங்களுடனே கலந்தும் அவர்களுடைய உதவி புரிந்தும் மேட்பாட்டை உண்டுபண்ணியும் ஆனால் மனம் ஒன்றிலும் பற்றாதவனாய் உபேக்ஷையாய் ஒழுகுதலேயாம்.

“அற்றது பற்றெனின் உற்றது வீடு” என்பர் பெரியோர்.

"அநாஶ்ரித꞉ கர்மப²லம்
கார்யம் கர்ம கரோதி ய꞉
ஸ ஸந்ந்யாஸீ ச யோகீ ச
ந நிரக்³நிர் ந சாக்ரிய꞉

(பகவத்கீதை. IV. 1)

இ-ள்) கருமபலன்களில் அபேக்ஷைவைக்காதவனுய்ச் செய்ய வேண்டிய கருமத்தை எவன் செய்கிறுனே, அவனே சந்நியாசி; அவனேயோகி; அக்கினி (கிருத்தியங்களை) விட்டவன் சந்நியாசி ஆகமாட்டான். கருமங்களைவிட்டவன் அப்படியாகமாட்டான்.

அப்படிப்பட்டவன் விஷயாதிகளின் மத்தியிலிருந்தும், அவைகளின் பிரீதியில்லாதவன் தனசம்பத்து இருந்தும், அதைச்சுதந்தரம் பாராட்டான். ஆகையினுல் அவனே உத்தமமான கிரகஸ்தன். எல்லா ஆச்சிரமங்களிலும் கிரகஸ்தாச்சிரமம், உயர்ந்தது. அது மற்றவைகளுக்கு ஆதாரமானது, என்ற மனுவின் வசனத்திற்கு இவனே லக்ஷியமாகிறுன். தன்னுடைய தனத்தை உரிமைகொண்டாடாமல் அது பிறருக்கு உபயோகமாகும் வண்ணம் தன் விசாரணையிலிருக்கிறதென்றும், தான் எஜமானன் அல்லனென்றும் ஆனுல் பிறருக்குத் துணையாக இருக்கும் வேலைக்காரனென்றும், எவன் ஒழுகுகிறுனே, அவனுடைய இல்வாழ்க்கையே வாழ்க்கை. அதுவே, நல்லறம். "இழுமைப்படவாழ்" என்ற முதுமொழியையுங் காண்க.

## II வது பகுதியில்.

## 6 வது அதிகாரம்.

## முற்றுப்பெற்றது.

# இரண்டாவது பிரிவு.

## 1-வது அதிகாரம்.

### நான்கு வருணங்கள்.

நான்கு ஆச்சிரமங்கள் ஒரு ஜன்மத்தில் ஜீவாத்மாவினது பயிற்சிக்குச் சாதகமாக வித்தியாசாலை ரீதியாக எவ்விதம் அமைந்திருக்கின்றனவோ அவ்விதம் நான்கு வருணங்களும், ஜீவாத்மா அதின் ஜன்மாந்தர பிரவாகத்தின் ஒரு பகுதியில் பயிற்சியினால் அபிவிருத்தியடையும் வண்ணமாக அமைந்திருக்கின்றன. பொதுவாய்நோக்கில் இந்த நான்கு ஆச்சிரமங்களும், ஜீவாத்மகதியின் காலம் முழுவதும் அடங்கப் பெறும். ஆனால் வெளிக்குப் புலப்படும் வரை, ஜீவாத்மா அதின் யாத்திரையின் ஒரு பாகம் மாத்திரம், இதில் அடங்குவதாக இருக்கிறது. இக்காலத்தில் வருணங்கள் முறைதமாறிக் குழப்பமாய் நடைபெறுகின்றமையால் அவ்வருணங்களில் விவஸ்தையின் பிரயோஜனம் குறைவுபட்டிருக்கிறது. முற்காலத்தில் இந்த நான்கு ஆச்சிரம ஏற்பாட்டை வகிக்க லாயக்காகிறதற்காக இந்தியாதேசத்திற்குப் புறம்பான தேசங்களில் ஜீவாத்துமா ஜன்மமெடுத்து வெகு நாள் பயின்று பின்னர் இந்தியா தேசத்திற் பிறந்து அந்தந்த வருணத்தில் அறியக் கூடிய அனுபவங்களைக்கிரகித்துப் பின்பு இந்தியா தேசத்திற்குப் புறம்பான மற்றத் தேசங்களில் பிறந்து தெரிந்த விஷயங்களை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவந்து பழகிக்கடைசியாக இந்த ஆச்சிரமங்களிலுயர்ந்த ஆச்சிரமத்தில்ஜன்மம் பெறுமாறு மறுபடியும் இந்தியா தேசத்திற்குத் திரும்புகின்றான்.

வருண பேதத்தின் பிரயோஜனத்தைச் சரியானபடி மதிக்க வேண்டுமானால் அதற்காதாரமான தத்துவ அமைப்பைக் கவனித்துத் தெரிந்து கொள்ளவேண்டியது அவசியமாம். மேலும் இன்றியமையாத முக்கிய அம்சங்கள் இன்னவென்றும், அமுக்கியங்களான காலாவட்டத்தில் வந்து சேர்ந்திருக்கின்ற தாராளமான பிணைப்புக்களான ஆபாசங்கள் இன்னவென்றும் வேறுபடுத்தி அறியவேண்டும்.

நாம் முதல் முதலில் கவனிக்க வேண்டிய விஷயம் யாதெனில், ஜீவாத்மா பரிணமித்து விகஸிக்கும் முறை. நான்கு பான்மையுடையது. இஃது ஒவ்வொரு ஜீவாத்மாவின் தருமம். இஃது ஆரியர்கள், இந்துக்கள் என்பாரிங்களின் அமைக்கப்பெற்ற ஜீவாத்மாக்களுக்கு மாத்திரம் தனித்தருமன்று. ஜீவாத்மாக்கள் ஹிந்து சமயத்திலும் அதின் புறம்பாகவும் ஜனனமடைகின்றார்கள். ஆனால் ஒவ்வொரு ஜீவாத்மாவும் இந்த நான்கு நிலைமையின் ஆதாரமொன்றைச் சார்ந்து ஒழுகின்றான். இந்த நான்கு நிலைமைகளும் ஒருகாலம், ஒருநாகரீகம், ஒருஜாதி, ஒருதேசம் இவைகளுக்கு மட்டும் உரிமையற்றிருக்கவில்லை. அவைகள் எல்லாக் காலங்களிலும் எல்லாஜாதிகளிலும் சாமானியதருமமாக நடைபெறுகின்றன.

முதலாவதான நிலைமை—ஜீவாத்மாவின் பாலிய சக்தியைப்பற்றியது. சுதந்தரத்தன்மையில்லாமலும் மற்றவர்கள் தங்களை அதிகமாக வசிக்காமலும், ஜீவன் சிஷ்யத்தன்மை பொருந்தியவனாக, ஊழியம், படிப்பு, இவையிரண்டிற்குந் தான் தகுந்தவனாக விருக்கிறான்.

இரண்டாவதான நிலைமை—ஜீவன் புருஷனாகி அநந்த சக்தியின் முற்பாதியைப் பற்றியது. அப்பொழுது

பூம். மேற்கண்ட நிலைமைகளுக்குத் தக்க ரீதியாய் வெளிப்படையாய்த் தோன்றும் நான்கு வியக்தமான வருணங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன.

முதலாவது நிலைமை சூத்திரவருணத்தில் விளங்குகின்றது. இதில் விதிகள் சொற்பமானவை என்றும் உத்தரவாதங்களும் வெகுவானவை என்றும் பின்னிட்டுத் தெரிந்துகொள்ளுவோம். அந்தவருணத்தில் முக்கியகடமை என்னவென்றால், சேவகம் அல்லது ஊழியம். அவ்வருணத்தில் பரிணமிக்கிறதினால் ஜீவன் அடையும் குணங்கள் என்னவென்றால் பால்யாவஸ்தையிலும் சிஷ்யனாக இருக்கும் சமயத்திலும். அடையக்கூடிய குணங்களான, வணக்கம், நேர்மை, பயபக்தி, ஒழுக்கம் முதலியனவாம்.

இரண்டாவது நிலைமை— கிரகஸ்தனின் அச்சுமுடையானமாய் இயலும், வைசியவருணத்தில் விளங்குகிறது. ஜனசமூகத்தின் யோகக்ஷேமம், இந்தவருணத்தை ஆதாரமாக உடையது. தன்னையும் விரும்பாமல் பிறர் க்ஷேமத்தைக் கோரும்படியாயும், செல்வத்தைத் தனக்கென்று உரிமைபாராட்டாமலும், ஜனசமூகத்தைத் தன் குடும்பம்போலப் பாவித்தும். அவன் நடக்கும் வண்ணம், கண்டிப்பானவிதிகள் ஏற்பட்டிருக்கின்றன. அவனுக்கு இருக்கவேண்டிய குண சீலங்களாவன:—சுறுசுறுப்பு, எச்சரிக்கை, முன்யோஜனை. விவேகம். தருமசிந்தை, இவைபோன்றவைகள்.

மூன்றாவது நிலைமையில் ஜனங்களை ஆளும் க்ஷத்திரியன் இருக்கிறான். ஜனசமூகத்தின் ஒழுங்கான முறையும், சாவதானமும், அவனைப்பொறுத்ததாகவிருக்கிறது. அவனிடமிருக்கும் சக்தி, பலம், முதலிய விகசிக்கும் பொருட்டும் அவைகளுக்குப் பிறருக்கு உபயோகமாகும் வண்ணம்

செய்பவும், தன்னுடைய எல்லாச்சம்பத்தும் தனனுயிரும் கூடத் தனக்குரித்தானவை அல்லவென்றும், தருமபரிபால னார்த்தம் தியாகம் செய்யவேண்டுமென்றும் உணரவும் கண்டிப்பான விதிகள் ஏற்பட்டிருக்கின்றன. அவனுக்கு ஏற்படவேண்டிய குணசீலங்களாவன:—

உதாரகுணம், வீரியம், தைரியம், தீரத்தனம், ஆளும் சக்தி, சமதமம், இவைபோன்றவைகளாம்.

நான்காம் நிலை பிராஹ்மணனின் ஸ்தானமாம். குருவாகவும் ஆசாரியனாகவும் இருக்கிறான். தன்னைச்சுற்றி யும் சுத்தமான சீலம் நடைபெறவும், கருமம், லௌகிக மார்க்கம், ஞானமார்க்கம், இவைகளிலெல்லாம், நன்மை பயக்கவும், சாதகமான கண்டிப்பான விதிகளுக்குட்பட்டு ஒழுகுகிறான். பொருளாசையற்றவனும், அதிகாரவிருப்ப மில்லாதவனும், அத்தியயனத்திலே கவனமுள்ளவனு கவும், வித்துவானாகவும், ஞானவானாகவும், இருக்ககடவன். எல்லாஜீவராசிகளுக்கும் அடைக்கலமாகவு மிருக்கவேண் டும். ஆபத்காலத்தில் தவறாத துணையாக இருக்க வேண்டும். அவனிடமிருக்கவேண்டிய குணசீலங்களா வன:—செந்தண்மை, உபரதி, மனஸ், வாக்கு, காயம், இவைகளில், மாசில்லாதவனாக விருத்தல், தியாகம் இவை போன்ற மற்றவைகளாம்.

மேற்கண்ட குணங்களை உடைய ஜீவாத்மா எந்தத் தேசத்தில் ஜனனமானாலும் சரி அந்தந்த குணங்கள் எந்த நிலைமைக்குரியனவோ, அந்நிலைமையைப்பற்றியதாக ஒழுகு வான். இந்தியாதேசத்தில் ஹிந்துவாக ஜனித்தால் அந் நிலைமைக்குரியஜாதி அல்லது வருணத்தில் ஜனனமாக வேண்டும். வருணங்களின் அச்சு அடையாளங்கள் தோன்றாமல் முறைகேடாய் ஜாதிகள் இக்காலத்தி

யிருக்கின்றமையால் "ஜனனமாகவேண்டும்" என்று சொல்ல முடியுமேயல்லாது "ஜனிப்பான்" என்ற நிச்சய வசனம் சொல்ல ஒண்ணாது. அந்தந்த வருணங்களுக்குரித்தான குணங்கள்தான் அந்தந்தவருணத்தின் தருமமாம். ஆயினும் விசனிக்கத்தக்கதாய் இக்காலத்தில் அவைகள் அலட்சியம் செய்யப்படுகின்றன.

எவ்விடத்திலும் ஜாதிகள் மேற்கண்ட விதிகளையனுசரித்தே வகுக்கப்பட்டிருக்கின்றன. கைப்பாடு படுகிறவர்கள் சூத்திரவகுப்புக்குரிய ஜீவாத்மாக்களாம். கைத்தொழில்முயற்சியைவிஸ்தாரமாக ஏற்படுத்துகிறவர்களும், வியாபாரிகளும், நாணயவர்த்தகர்களும், பெரிய விவசாயிகளும், பொதுவர்த்தகர்களும், வைசியவகுப்புக்குரியஜீவாத்மாக்களாம். சட்ட நிருபணம் செய்கின்றவர்கள், போர்வீரர்கள் நியாயாதிபதிகள், ராஜகாரியங்களை நடத்துகிறவர்கள், ராஜதந்திரத்தைக் கொண்டுசெலுத்தும் மந்திரிமார்கள், ஆலோசனைகர்த்தர்கள். ஆளுகின்றவர்கள் க்ஷத்திரியவகுப்பைச்சார்ந்த ஜீவாத்மாக்களாம். ஆசாரியர்கள். வித்வச்சிரோமணிகள், சமயானுஷ்டானப்பிரவர்த்தகர்கள், சமய ஆசாரணைகளை நடத்துகிறவர்கள் இவர்களெல்லாம். பிராஹ்மணவகுப்பைச்சார்ந்த ஜீவாத்மாக்களாம். எங்கும் இந்த நான்கு வகுப்பினராய்ஜீவாத்மாக்கள் ஒழுகுகின்றார்கள். எங்கும் அந்தந்தவகுப்புக்குரிய தொழில் ஏற்பட்டுள்ளது. ஆனால் இக்கலியுகத்தில், ஜீவாத்மாக்களின இந்த நான்கு வகுப்புக்களும், அவைகளுக்குரிய நான்கு தொழில் முறைகளும், பகுக்கக்கூடாத விதமாய் கலந்துபோயிருக்கின்றன. ஆகவே ஒவ்வொரு தேசத்திலும், ஐக்கியபத்தியமுடைய ஒருஜன சமூகமாவதில்லாமல் ஜலத்தோடுஜலம் மோதுவது போல ஒருவரையொருவர்

அவன் ஓஜஸ்ஸும், குறையாமலும், அசுத்தப்படாமலு மிருக்கும் வண்ணம், கடினமான விதிகளுக் குட்பட்ட வனாக நடக்கவேண்டியவன். அவன் காலமெல்லாம் அத்தி யயனம், உபாசனை, இவைகளிற் செல்லவேண்டும். ஆகவே ஜாதி நிலைமை ஏற்பட, உத்தரவாதம் அதிகப்பட்டுக் கொண்டே வந்திருக்கிறது. இன்னும் ஜனசமூகத்திற்குத் தன்னை மென்மேலும் தியாகம் செய்கிறான். பிராஹ்மண னின் கடுமையான தபஸ் அவன் பிரயோஜனத்திற்கன்று. பொதுஜனக்ஷேமத்தின் பொருட்டேயாம். தான் அதி கநுட்பமாய்ப் பரிசுத்தமாயிருத்தலினால் ஜனங்களுக்கு க்ஷேமத்தை உண்டு பண்ணுகிறான். எப்படியெனில், தன்சரீரத்தில் புகும் பரம அணுக்கள் புனிதமாக ஆக்கப்பட்டு வெளியேறி, மற்றவர்களின் சரீர அணுப் பில் சேருகின்றன. வியாதியும் துக்கமும் எப்படிக்கலந்து நிகழ்கின்றனவோ, அப்படியே சௌக்கியமும் சந்தோஷ மும், பிறரைப்பற்றுகின்றன. அவனுக்கு ஏற்பட்ட விதிகள் அவன் பெருமை, அகங்காரம், பிறர் நீங்கலான சொந்த அதீன விருத்தி இவைகளை உண்டாக்கும் பொருட்டன் றும். தான்லௌகிக, வைதிக, ஞானத்துறைகளைப்புனிதஞ் செய்யும் ஒரு சுவரூபமாக, இருந்துகொண்டு நிகழ வேண்டுமென்பதற்காகவேயாம். ஜனசமூகத்தின் நன் மையை, மென்மேலும்விருத்திக் குக்கொண்டுவரவேண்டி மேல்வருணத்தார்கள் ஒழுகும்படியாய் விதிகள்ஏற்பட்டுள் ளனவேயல்லாமல் அவர்களுடையஅகங்காரத்தைவிருத்தி செய்துவருணங்களுக்குள்ளே, மேல், கீழ், என்ற வரம்புக ளை, ஏற்படுத்த வந்தவைகளல்ல. அப்படிஎன்று நினைக்கும் பக்ஷத்தில் வருண தருமத்தின் கருத்து விபரீதமாக முடி யும். மனு சொல்லுகிறார்.

𑌸𑌮𑍍𑌮𑌾𑌨𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍁𑌦𑍍𑌵𑌿𑌜𑍇𑌤 𑌵𑌿𑌷𑌾𑌦𑌿𑌵 ।
𑌅𑌮𑍃𑌤𑌸𑍍𑌯𑍇𑌵 𑌚𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑍇𑌦𑌵𑌮𑌾𑌨𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 ॥

மனு. II-162.

(இ-ள்) பிராமணன் பாஷாணத்தைப்போல அன்னியர் வழிபாடு செய்தால், அதை விட்டு ஓடவேண்டும். பிறர் தம்மை நிந்தனை செய்தால் அதை அமிருதமாக விரும்பட்டும்.

மேற்கண்ட விஷயங்களைப்பற்றிச் சுருதியிலும் ஸ்மிருதியிலும் சொல்லியிருப்பதை விசாரிப்போம்.

நான்கு நிலைமைகள் எங்கும் சாமான்னிய தருமமெனவும், ஜனங்களின் மேற்கண்ட விதமாக இயல்பாக நான்கு பகுதியாக வேறுபடுவார்களென்றும் சொல்லிய நியாயத்தை ஸ்ரீ கிருஷ்ணன் அடியில் வருமாறு கூறுகிறார்.

𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌣𑍍𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌸𑍃𑌷𑍍𑌟𑌂
𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃 ।
𑌤𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌪𑌿 𑌮𑌾𑌂
𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯 ... ... ... ॥

(பகவத்கீதை. IV. 13)

(இ-ள்) நாலு வருணங்களும் என்னால் குணங்கள் கருமங்கள் இவைகளைப் பாகஞ் செய்வதினால், உண்டாக்கப்பட்டன. அவைகளுக்கு நானே கர்த்தாவென்று அறி.

இவ்விதமாகப் பாகஞ் செய்தல் தான் வருணங்களை வகுத்தலாம். அஃது இந்தியா தேசத்திற்கு மாத்திரமுரித்தானதன்று. ஆனால் ஆரிய முதல் வகுப்பு குடியேறின இந்தத் தேசத்தில் பிரபஞ்சசிருஷ்டியின்கதியைச் சம்க்ஷேபமாய் இந்த ஜனசமூக முறை ரூபமாய், மனு ஸ்தாபித்தார். வித்தியாசமான நிலைமைகளுக்குரிய ஜீவாத்மாக்கள் ஜனனம் செய்தார்கள். வெவ்வேறான வருணங்களுக்

குரிய, துறைநிசயங்கள் விகஸிக்க ஒரு நல்ல மாதிரியான ஜனசமூக முறைமை அமைந்தது. இதுவே இந்தியாவின் சத்தியயுகமாம். இதைப்பற்றிய பாரம்பரியமான வதந்தி இன்னும் வழங்குகிறது. இந்தக் காலத்தின சரிதமே, கௌரவமான பூர்வ சரிதமாக விருக்கிறது.

மனுஷகுலத்தை ஒரு மகா புருஷனாக உருவகப் படுத்தியிருக்கிறதென்றாவது, அல்லது மனிதர்களைப் படைப்பவன் தன் சரீரத்தினின்று உற்பவிக்கிறதாகப் பாவித்திருக்கிறதென்றாவது, எவ்விதமாக வைத்துக்கொண்டாலும் சரி. நாலு வருணங்களைப்பற்றி அடியில் கண்டபடி வர்ணித்திருக்கிறது.

ப்ராஹ்மணோ஽ஸ்ய முகமாஸீத்
பாஹூ ராஜந்ய: க்ருத: |
ஊரூ ததஸ்ய யத்வைஶ்ய:
பத்ப்யாம் ஶூத்ரோ அஜாயத ||

(ருக்வேதம். X. XE 12)

(இ-ள்) அவருடைய வாக்கு ப்ராஹ்மணன். அவர் இரு கைகளும் க்ஷத்ரியன். அவர் இரண்டு தொடைகளும் வைசியன். அவர் கால்களினின்று சூத்திரனுண்டானான்.

ஆசாரியன் வாக்கு; ஆளும் சக்தி புஜம்; தொடைகள் சரீரத்திற்கு எப்படி ஆதாரமானவைகளோ, அது போல வணிக்கர்கள் ஜனசமூகத்தைத்தாங்கும் தூண்களாம். இவர்களெல்லாம் கைப்பாடுபடுகிறவனை ஆதாரமாக உடையவர்களாம்.

ஒருவருக்கொருவர் ஐக்கியமாக நடைபெற்றும், நடைபெறவேண்டிய ஆவசியத்தையும், கவனிக்குமளவில், ஏதேனும் ஒரு விதமான பகுபாடு, (அது நாலுவர்ணமா

யாவது அல்லது மற்றெந்த மாதிரியாகவாவது,) இருந்து தான் ஜனசமூகம் நிகழவேண்டுமென்று நாம் அறிவோம்.

நான்கு வர்ணங்களுக்குரிய குணங்களையும் கர்மங்களையும் பற்றி ஸ்ரீகிருஷ்ணன் சொல்லுகிறதாவது,

𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌶𑌾𑌂
𑌶𑍂𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌪𑌰𑌂𑌤𑌪 ।
𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑌿
𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌪𑍍𑌰𑌭𑌵𑍈𑌰𑍍𑌗𑍁𑌣𑍈𑌃 ॥
𑌶𑌮𑍋 𑌦𑌮𑌸𑍍𑌤𑌪𑌃 𑌶𑍌𑌚𑌂
𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌾𑌰𑍍𑌜𑌵𑌮𑍇𑌵 𑌚 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌸𑍍𑌤𑌿𑌕𑍍𑌯𑌂
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑌰𑍍𑌮 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌜𑌮𑍍 ।
𑌶𑍌𑌰𑍍𑌯𑌂 𑌤𑍇𑌜𑍋 𑌧𑍃𑌤𑌿𑌰𑍍𑌦𑌾𑌕𑍍𑌷𑍍𑌯𑌂
𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌚𑌾𑌪𑍍𑌯𑌪𑌲𑌾𑌯𑌨𑌮𑍍 ।
𑌦𑌾𑌨𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌭𑌾𑌵𑌶𑍍𑌚
𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌜𑌮𑍍 ॥
𑌕𑍃𑌷𑌿𑌗𑍌𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌵𑌾𑌣𑌿𑌜𑍍𑌯𑌂
𑌵𑍈𑌶𑍍𑌯𑌕𑌰𑍍𑌮 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌜𑌮𑍍 ।
𑌪𑌰𑌿𑌚𑌰𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌕𑌰𑍍𑌮
𑌶𑍂𑌦𑍍𑌰𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌜𑌮𑍍 ॥

(பகவத்கீதை. XVIII. 41-44)

(இ-ள்) ஓ அர்ஜுனா! பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள், இவர்களுக்குப் பூர்வகர்ம சேஷத்தினலுண்டான சத்துவாதி குணங்களால் கருமங்கள் தனித்தனியாய்வகுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றன.

மனத்தையும், வெளி இந்திரியங்களையும் அடக்குதலும், தபசும், மேனி தேகசுத்தியும், பொறுமையும், நேர்மையும், சாஸ்திர ஞானமும், அநுபவஞானமும், வேதத்தில் நம்பிக்கையும், சுபாவத்தி லுண்டான பிராமணனுடைய கருமங்களாக இருக்கின்றன.

பராக்கிரமம், கீர்த்தி, தைரியம், சாமார்த்தியம், யுத்தத்தில் பின்வாங்காமை, தானங்கொடுப்பது, செங்கோல் செலுத்துகிற சக்தி இவைகள் க்ஷத்திரியருக்கு சுபாவமான கருமங்களாக இருக்கின்றன.

பயிரிடுவதும், மாடுகளை ரக்ஷிக்கிறதும், வியாபாரஞ் செய்வதும், வைசியருக்குச் சுபாவமான கருமங்களாக இருக்கின்றன. மற்ற மூன்று வருணத்தாருக்கு பணிவிடை செய்வது சூத்திரர்க்குச் சுபாவமாயுண்டான கருமமாக யிருக்கிறது.

இவ்விதமாக நான்கு வருணங்களின் கருமங்கள் தெளிவாய் விவரிக்கப்பட்டிருக்கின்றன. சம்சாரத்தில் ஜீவாத்மா யாத்திரை செய்கிறதில், இந்நான்கு நிலைமைகளில் ஒழுகாநின்று, அந்தந்த நிலைமைக்குரிய குணங்கள் விகசிக்கப் பெறுகின்றன.

ஒவ்வொரு ஜாதியின் தொழில்களை மனு மிகத்தெளிவாய் அடியில் வருமாறு சொல்லுகிறார்.

𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌯 𑌤𑍁 𑌸𑌰𑍍𑌗𑌸𑍍𑌯
𑌗𑍁𑌪𑍍𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌸 𑌮𑌹𑌾𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌃।
𑌮𑍁𑌖𑌬𑌾𑌹𑍂𑌰𑍁𑌪𑌜𑍍𑌜𑌾𑌨𑌾𑌂
𑌪𑍃𑌥𑌕𑍍𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑍍𑌯𑌕𑌲𑍍𑌪𑌯𑌤𑍍॥
𑌅𑌧𑍍𑌯𑌾𑌪𑌨𑌮𑌧𑍍𑌯𑌯𑌨𑌂
𑌯𑌜𑌨𑌂 𑌯𑌾𑌜𑌨𑌂 𑌤𑌥𑌾॥

𑌦𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 𑌚𑍈𑌵
𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌨𑌾𑌮𑌕𑌲𑍍𑌪𑌯𑌤𑍍।
𑌪𑍍𑌰𑌜𑌾𑌨𑌾𑌂 𑌰𑌕𑍍𑌷𑌣𑌂 𑌦𑌾𑌨𑌮𑍍
𑌇𑌜𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌯𑌨𑌮𑍇𑌵 𑌚।
𑌵𑌿𑌷𑌯𑍇𑌷𑍍𑌵𑌪𑍍𑌰𑌸𑌕𑍍𑌤𑌿𑌶𑍍𑌚
𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌸𑌮𑌾𑌸𑌤𑌃।
𑌪𑌶𑍂𑌨𑌾𑌂 𑌰𑌕𑍍𑌷𑌣𑌂 𑌦𑌾𑌨𑌮𑍍
𑌇𑌜𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌯𑌨𑌮𑍇𑌵 𑌚।
𑌵𑌣𑌿𑌕𑍍𑌪𑌥𑌂 𑌕𑍁𑌸𑍀𑌦𑌂 𑌚
𑌵𑍈𑌶𑍍𑌯𑌸𑍍𑌯 𑌕𑍃𑌷𑌿𑌮𑍇𑌵 𑌚।
𑌏𑌕𑌮𑍇𑌵 𑌤𑍁 𑌶𑍂𑌦𑍍𑌰𑌸𑍍𑌯
𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌮𑌾𑌦𑌿𑌶𑌤𑍍।
𑌏𑌤𑍇𑌷𑌾𑌮𑍇𑌵 𑌵𑌰𑍍𑌣𑌾𑌨𑌾𑌂
𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌾𑌮𑌨𑌸𑍂𑌯𑌯𑌾॥

(மநு. I 87-91)

(இ-ள்) ஜ்வலித்துக்கொண்டிருக்கிற பிரமதேவரானவர் தம்முடைய சிருஷ்டியைக் காப்பாற்றும் பொருட்டு தம்முடைய முகம், புஜங்கள், தொடைகள், பாதங்கள் இவைகளினின்று உண்டானவர்களுக்குத் தனித்தனி கருமங்களை வகுப்பித்தருளினார்.

வேதாத்தியாபனம், (கற்பித்தல்) அத்தியயனம், (கற்றல்) யக்ஞம்செய்தல், பிறருக்கு எக்ஞம் செய்வித்தல், தானம் கொடுத்தல், தானம் வாங்குதல், ஆகிய இந்தத் தொழில்களைப் பிராமணருக்கு ஏற்படுத்தினார்.

முற்காலத்தின் ஆசாரியர்களின் கருத்துப்படி அவனவன் ஜாதிக்குரிய தருமத்தை அனுஷ்டிக்காமற்போனால் அந்தந்த ஜாதிக்குச் சேர்ந்தவனென்று எண்ணப் படான். படிப்பில்லாதவனும், அறிவில்லாதவனுமான பிரா

மணன் சாம்பல்போன்று அவனுடைய தருமங்களைச்செய்ய அருகனல்லனென்றும், உபயோகமற்றவனென்றும், முன்னமேயே பிரஸ்தாபித்திருக்கிறோம். இவைகளைப்பற்றி மனு இன்னும் அதிக கடுமையாகச் சொல்லுகிறார்.

— யதா காஷ்டமயோ ஹஸ்தீ
யதா சர்மமயோ ம்ருக:।
யஶ்ச விப்ரோ(அ)நதீயாந:
த்ரயஸ்தே நாம பிப்ரதி॥
யோ(அ)நதீத்ய த்விஜோ வேதம்
அந்யத்ர குருதே ஶ்ரமம்।
ஸ ஜீவந்நேவ ஶூத்ரத்வம்
ஆஶு கச்சதி ஸாந்வய:॥

(மனு II. 157. 161)

(இ-ள்) மரயானைபோலவும் தோலால் தைத்துவைத்த மான் போலவும், படிப்பில்லாப் பிராமணன் இருக்கிறான். இம்மூவர்களும் பெயர்களை மாத்திரம் பெற்றிருக்கிறார்கள்.

வேதாத்தியயனம் செய்யாமல் வேறு தொழில்களைச் செய்கிற பிராமணன் தானும் தன் சந்ததிகளும் ஒருங்கே இந்த ஜன்மத்திலேயே சூத்திரனாகிறான்.

மறுபடி அவர் சொல்லுகிறதாவது,

ஶூத்ரோ ப்ராஹ்மணதாமேதி
ப்ராஹ்மணஶ்சைதி ஶூத்ரதாம்।
க்ஷத்ரியாஜ்ஜாதமேவம் து
வித்யாத்வைஶ்யாத்ததைவ ச॥

(ஷை X (65)

(இ-ள்) தத்தம் ஒழுக்கத்தால் சூத்திரன் பிராமணனாவான். பிராமணன் சூத்திரனாவான். இந்த விதியே க்ஷத்திரியனுக்கும் வைசியனுக்குமென்று அறி.

அவ்வாறே யுதிஷ்டிரரும் அடியில் வருமாறு எந்தத் தருமங்களின்மையால் வர்ணங்களின் யோக்கியதை போய், பேர்மாத்திரம் இருக்குமோ, அந்த அத்தியாவசியகமான தருமங்களைச் சொல்லுகிறார்.

"ஸத்யம் தாநம் க்ஷமாஶீல-
மாந்ருஶம்ஸ்யம் தபோ க்ருணா ||
த்ருஶ்யந்தே யத்ர நாகேந்த்ர,
ஸ ப்ராஹ்மண இதி ஸ்ம்ருத꞉ |
ஶூத்ரே து யத்பவேல்லக்ஷ்ம
த்விஜே தச்ச ந வித்யதே ||
ந வை ஶூத்ரோ பவேச்சூத்ரோ
ப்ராஹ்மணோ ந ச ப்ராஹ்மண꞉ |
யத்ரைதல்லக்ஷ்யதே ஸர்ப
வ்ருத்தம் ஸ ப்ராஹ்மண꞉ ஸ்ம்ருத꞉ |
யத்ரைதந்ந பவேத்ஸர்ப
தம் ஶூத்ரமிதி நிர்திஶேத் ||"

மகாபாரதம், வனபர்வம் 180, அதிகாரம். (21 25 26)

(இ-ள்) நாகராஜாவே! சத்தியம், தானம், பொறுமை, நல்லொழுக்கம், சாந்தி, தபசு, ஜீவகாருண்ணியம் இவைகள் எவனிடத்தில் பிரகாசிக்கின்றனவோ, அவனே பிராம்மணன், இவைகள் சூத்திரனிடம் காணப்படும். இவ்விஜாதியிடம் காணப்படாமற் போகுமாகில் அந்த சூத்திரன் சூத்திரனல்லன், அந்தப் பிராமணனும் பிராமணனல்லன்.

இந்த ஒழுக்கம் எவனிடம் விளங்குகிறதோ அவன் பிராஹ்மணனாவான். ஓ நாகராஜாவே, இந்த ஒழுக்கமில்லாவிடில், அவன் சூத்திரனென்றே பாவிக்கப்படுவான்.

"யஸ்ய யல்லக்ஷணம் ப்ரோக்தம்
பும்ஸோ வர்ணாபிவ்யஞ்ஜகம்|
யதந்யத்ராபி த்ருஶ்யேத
தத்தேநைவ விநிர்திஶேத்||"

விஷ்ணு பாகவதத்தில், (VII. XI. 35) அடியில் வருமாறு கண்டிருக்கிறது.

(இ-ள்) வருணத்திற்குரிய அடையாள ஒழுக்கங்களைப் பற்றிச் சொல்லுகிறதாவது, பிறப்பைப் பார்த்து, இல்லாமல் அவ்வடையாள ஒழுக்கங்களைப் பார்த்து, அவைகளுக்குரிய வருணத்தைத் தெரிவிக்க வேண்டும்.

இதின்மேல் ஸ்ரீதரஸ்வாமி இவ்விதமாய் வியாக்கியானம் செய்கிறார். சமதமமுதலிய குணசம்பத்துக்களால பிராமணர் முதலிய வருணங்களைக் கண்டுபிடிக்க வேண்டும். பிறப்பினால் மாத்திரம் அன்று,

"ஜந்மநா ஜாயதே ஶூத்ர:
ஸம்ஸ்காராத் த்விஜ உச்யதே|"

(இ-ள்) பிறப்பினால் எவ்வொருவனும், சூத்திரனாகவே யிருக்கிறான். சம்ஸ்காரத்தினால் துவிஜனாகிறான்.

கோதம கோத்திரனான, ஹரித்ருமத என்ற ஆசாரியன். ஸத்தியகாமனென்ற பையன் சிஷ்யனாகவேண்டுமென்று பிரியமுள்ளவனாகச் சமீபித்தான். அப்பொழுது ஆசாரியன் அவனை நோக்கி உன் கோத்திரம் யாதென்று வினவ, அதற்கு அப்பையன் உத்தரம் சொன்னதாவது: தன் தாயாருக்குக் கோத்திரம் தெரியவில்லை என்றும், தன் தாயார் சிலவிருந்தினர்களை உபசரித்த காலத்தில், சேர்ந்த சம்யோகத்தால் தான் பிறந்தவனென்றும், அதினால் தன் தாயாரின் பெயர் தனக்கு வழங்குகிறதென்றும், தன் பெயர், ஜாபாலியின் புத்திரன், ஸத்திய

காமனென்றும் சொன்னான். இவ்வளவு உண்மை பொருந்திய உத்தரம், பிராஹ்மணன் தான் செய்வானென்று ஹாரித்ருமதராகிய ஆசாரியர் சொல்லி, அப்பையனுக்குத் தாமே, உபதேசம் செய்வதாக ஆக்ஞாபித்தார்.

(சாந்தோக்யோப நிஷத். IV IV)

மேலும் கவனிக்கத்தக்க விஷயம் என்னவென்றால்.

சூத்ர வஹிநம் நஷ்டம் நஜிவெத்.

(வசிஷ்டஸ்ம்ருதி. VI. 3)

(இ-ள்) நல்லொழுக்கமில்லாதவனை வேதங்கள் ரக்ஷியாமா

ஒருவன் ஒருவருணத்தினின்று மற்றொருவருணத்திற் கேறியவனாக, ஒரே ஜன்மத்தில் ஆகக்கூடுமா என்ற விஷயத்தில், அதிகவிவாத முண்டாயிருக்கிறது. ஒருவன் தன்னுடைய நன்னடைக்கையால் மேல்வருணத்திற் குரியவனாக ஆகலாமென்பது பொதுவாய் ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆனால் அந்த நல்லொழுக்கத்தினால் வரும் ஜன்மத்தில் மேல்வருணம் கமரிநிபாக. சம்பவிக்குமென்று சாதாரணமாய்ச் சொல்லப்படுகிறது. இது விஷயமான சாஸ்திர ஆதாரங்கள் இக்கருத்தை உடையன. ஒரு மேல்வருணத்தினின்று கீழான வருணத்திற்குத் தன் நடத்தையால் ஒருவன் போகிறான் என்றால், மறு ஜன்மத்தில் கீழான வருணத்தில் ஜனிக்கிறானென்று பொருள். அவ்வாறே மேல் வருணத்திற்குப் போகிறான் என்றதற்கு அர்த்தம். ஆனால் ஒரே ஜன்மத்தில் ஒரு வருணத்தினின்று, மற்றொரு வருணத்திற்கு ஏறியதற்கு உதாரணங்கள் சரித்திரமூலமாய் உண்டு. க்ஷத்திரியனான விசுவாமித்திரர் பிராஹ்மணனான விஷயம் எல்லாருக்கும் தெரியவரும், (இராமாயணம் பால காண்டம்,

57—65.) ஆனால் அந்தப்பதவி அடைய அவர் செய்த மகத்தான முயற்சிகளையும், எல்லாரும் அறிவார்கள். அதினால் அவ்விதமான மாறுதல் அதிக கஷ்டமான தென்று தெரியவரும். ரினி என்றவரின் புத்திரர் கார்க்கிய ரென்றவரும், துரிதக்ஷயரின் புத்திரர்களான திரயாருணி, கவி, புஷ்கராருணி, இவர்களும், க்ஷத்திரியர்களாக விருந்து, பின் பிராமணர்களானார்கள். இவ்வாறே க்ஷத்திரியரான பம்யாசுவ என்பவரின் புத்திரரான, முத்கலரும், பிராஹ்மணரானார். (விஷ்ணு பாகவதம். IX. XXI, 19. 20. 23.) பிருகு, என்பவர் தன ஆச்சிரமத்தில் அடைக்கலம் பெற்றவரான, வீதஹவ்விய னென்ற க்ஷத்திரியனைப் பிராமணனாக செய்வித்தார்.

(மஹாபாரதம், அனுசாசனிக பருவம், XXX.

வாஸ்தவம் என்ன தோன்றுகிறதென்றால், ஒருவருணத்தினின்று மற்றொரு வருணத்திற்கு மாறுதல்கள் முற்காலத்தில் நேர்ந்திருக்கின்றன. ஆனால் அவைகள் அபூர்வமான்மையாக இருந்தது. நல்லொழுக்கத்தினால் ஒருவன் அதின் பலனாக, மறுஜன்மத்தில் உயர்ந்த வகுப்பில் பிறப்பான் என்றதுதான் சாதாரணமான கொள்கை. அடியில் வரும்பெயர் போனசுலோகத்தின் தாற்பரியமும் இவ்வாறு.

ந யோநிர் நாபி ஸம்ஸ்காரோ
ந ஸ்ருதம் ந ச ஸந்ததி:॥
காரணாநி த்விஜத்வஸ்ய
வ்ருத்தமேவ து காரணம்॥

(இ-ள்) ஜனனம், சம்ஸ்காரங்கள், வேதாத்தியாயனம், குலம் இவைகள் பிராஹ்மணத்துவத்திற்குக் காரணங்களாகா. ஒழுக்கம், ஒன்றே அதின் காரணமாம். இந்தவசனம் மேல் வருணத்திற் பிறக்

கிறதற்கும், மேலானவருணத்திற்கு மாறுகிறதற்கும், இரண்டிற
கும் ஒன்றாய்ப் பொருந்தும். மேலும் முற்காலத்தில் இக்காலத்திற்
போல உடனே நேர்தல்என்ற விஷயத்தை அவ்வளவுமுக்கியமாய்ப்
பாராட்டவில்லை. ஏனென்றால், ஜீவாத்மாவின் உயர்ந்த ஜன்மாந்தர
கதியை, நிதரிசனானுபவமாய்த் தெரிந்திருந்தார்கள். ஊழ்வினைப்
பலன் நடைபெறும்விதிகளைத் தெரிந்துஉடன்படுவோராயிருந்தார்கள்.
தவிரவும் வருணங்களின் வகுப்பு ஒரு அநீதியாய் முற்காலத்தில்,
ஜனங்கள் நினைக்கவில்லை. இக்காலத்தில், வருணத்திற்குரிய கரும
ங்களை அனுஷ்டானமில்லாமல் அநேகமாய் மறந்து போட்டார்
கள். மேலான வருணத்தவன் தனது உத்தரவாதத்தையும், அதி
லிருந்து தான் செய்யவேண்டிய கடமையை உணராமல் அகங்காரமும்
மேல்வருணத்தானென்ற செருக்கும்கொண்டவனாய் ஒழுகுகிறான்.
அதைப்பற்றிக் கீழான ஜாதியார்கள் அசூசைகொண்டு, இந்தவர்ண
விபாகத்தை அநீதியென்று மதிக்க இடமுண்டாயிற்று.

பெரிய வருணங்களில் அநேக அவாந்தரவகுப்புகள்
ஆதாரமில்லாமலும், அக்காரணம் பற்றி ஒரு அபிப்
பிராயமுமில்லாமலும், உண்டாயிருக்கின்றன. இந்த அவா
ந்தரவகுப்புக்களினால் ஒருவருக்கொருவர் ஒற்றுமையும், சமா
தானமுமில்லாமல் பலவாறான வேற்றுமைகள் ஏற்பட்டுப்
பொறாமை, பகை, மனஎரிச்சல், முதலியன, சம்பவித்தி
ருக்கின்றன. ஆகவே பரஸ்பரவிவாகம் செய்யும் உறவினர்
களின் எல்லையானது அதிகமாகச் சுருங்கிவிட்டது. அநா
வசியமானதும், அப்பிரதான்யமுமான பல வழக்கங்
களெல்லாம், சாஸ்திரீயமானவைகள் போல். வேரூன்றி
ஜாதி வகுப்புக்களின் ஜனசமூகம், வரவரக் குறைந்து
கொண்டுவர, மனமாற்சரியம், பொறாமை, இம்சை, கலகம்
இவைகள் மேலிட்டுக்கொண்டிருக்கின்றன. கட்டப்பட
வேண்டியதென்று பாராட்டும் வழக்கங்கள் அனேகமாய்,
ஊர், கிராமம் இவைகளைப் பற்றிய ஆசாரங்களே.
தென்தேயத்தில், முக்கியமானவைகளென்று சொல்லும்

வழக்கங்கள் வடதேசத்தில் கேள்வியிலுங் கூட இல்லை. அவ்விதமே வடதேசத்தின்கண், முக்கியங்கள் என்றவழக்கங்கள் தென் தேசத்தில் இல்லை. ஆகையினால் ஹிந்துக்கள் விநோதவிபரீதமான வழக்கங்களை முக்கியமானவைகளாகப்பாராட்டிச் சிறுசிறுவகுப்பினர்களாகப்பலவாறாகப் பிரிந்துஇருந்திருக்கிறார்கள். இவ்வாறு இசைப்பொருத்தமில்லாத, பலபேதங்களுள்ள இவர்களில் விரிவான பொது ஜனசமூகபாவம், நிகழும்படி செய்தல் அதிகக்கஷ்டசாத்தியமானது. முற்காலத்தில், நான்கு வர்ணங்களில் சேர்ந்த ஒருவன் ஜனசமூகத்தில் தான் ஓர் அங்கமாகப் பாவித்து ஒழுகுவான். ஒரு சிறு உள்வகுப்பிலுள்ள ஒருவனுக்கு அவ்வண்ணம் பாவனை நிகழாது. பேதபுத்தி உள்ளவனாக இருப்பான். தேசாபிமானம் இவனுக்கிருக்கமாட்டாது.

இக்காலத்தில் எந்த வர்ணத்தாரானாலும் சரி, எந்தத்தொழிலையும் செய்யத்துணிகிறான் தன வருணத்திற்குரிய தருமங்களையும் குணங்களையும் விருத்திசெய்ய முயலுகிறானில்லை. ஆனதினால், உள்ளும், வெளியும் பொருத்தமில்லை. ஆனதினால் ஒற்றுமைக்குப் பதிலாக வேற்றுமை இருக்கிறது. ஜீவாத்மாக்கள் ஜனமாந்தர கதிமுறையாய் விகசிக்கிறதில். அவர்கள் குணங்களுக்குத் தக்கவாறுப வருணநிலைமைகள், இக்காலத்தில் அமையாமலும், அக்காரணம்பற்றி அந்தந்த ஜீவாத்மாக்கள் ஜன்மமெடுக்கிறதற்குத்தகுந்த சரீரங்களும் இடங்களும் பொருத்தமாக நேராமல் சம்பவித்திருக்கின்றது. ஆகவே ஜீவாத்மாக்கள் மென்மேலும் படிப்படியாய் அபிவிருத்தியடைய ஷோ, துவாய் வித்தியாசாலை முறைபோல் அமைந்திருந்த ஹிந்துமதவிவஸ்தையானது இக்காலத்தில் பயனற்றதாக நேர்ந்திருக்கிறது. அதினால் பொதுஜன அபிவிருத்தியில் இழுக்கு நேரிட்டிருக்கிறது.

ஜாதி விவஸ்தையைப்பற்றிப் படித்தவர்களுக்குள்ளும், உண்மையில் பக்தியுள்ளவர்களுக்குள்ளும், வித்தியாச வித்தியாசமான அபிப்பிராயங்களிருக்கின்றனவென்று நாம் அறிந்துகொள்ளலாம். சரியான ஆராய்ச்சியுடனும், ஆழ்ந்த யோசனையுடனும், நாம் நிர்மானிக்க வேண்டும். பஞ்சஜனமாகிய ஐந்தாவது ஜாதியான, ஆரியர்களுக்கு அதிக க்ஷேமகரமானதென்று. இந்த வர்ணவிவஸ்தையை மனுவானவர் திட்டம் செய்தார். அது பூர்வகாலத்தில் அவ்விதமே, க்ஷேமானுகூலமாயும், ஒழுங்காயும், நேர்மையாயும் நடைபெற்றது. ஜனங்களுக்குள், பரமார்த்த பாவமற்று அகங்காரம் மேலிட்டு அதன் துஷ்டபரிவாரங்களான இழுமாப்பு, துரபிமானம், சுயநயவிருப்பம், இவைகள் உண்டாயிருக்கின்றமையால் அது க்ஷீணதசையை அடைந்திருக்கிறது.

அதனுடன் சிக்கி அமைந்து அதற்கு நேர்ந்திருக்கின்ற இடையூறுமாறுபாடுகளைக் களைந்துவிடுவதினாலன்றி அது நிலைபெறுதல் முற்றிலும்போய்விடும். ஆனால் அந்த மாறுபாடுகளை நிவர்த்தித்து முன்போல் வருணத்தின விவஸ்தை ஸ்தாபிக்கப்பெறும் பக்ஷத்தில் இப்பொழுது மேற்குத் திசையார், அவர்களுடைய நாகரிக முறைகளில் அநாகரீகத்திற்கு இடையூறுகச் சம்பந்தந்திருப்பதும் அவாந்தரமாய் நிவிருத்திக்க முடியாததுமான அநேக சங்கடங்களை இந்தத் தவிவஸ்தையினால், நீர்ப்படுத்தக் கூடும். இந்து மதவிவஸ்தையே ஒருமேலானதும் நேர்மையுமான ஜனசமூக முறைமையைக்காட்டும் பிரத்தியக்ஷ உதாரணமாக ஏற்படும்.

இரண்டாவது பகுதியில்.

7வது அதிகாரம்.

முற்றும்

# மூன்றாம் பகுதி.

## தருமமுறைகள்.

### 1 வது அதிகாரம்.

தருமசாஸ்திரம் யாது? தருமசாஸ்திரமென்பது ஆக்ஞையைப்பற்றிய சாஸ்திரம். அதாவது மனுஷியனுடைய ஒழுக்கத்தை நிர்ணயிக்கின்ற விதிகள். மனுஷனுடைய ஒழுக்கமானது அவன் பிறர் சம்பந்தமாகவும் தன் சம்பந்தமாகவும் அனுசரிக்கவேண்டியதாகிறது. எவ்விதம் நடந்தால் பிறர்சம்பந்தமாக நன்மையாயிருக்குமென்றும், நடப்பவனுடைய கால தேசத்துக்குத் தகுந்தபடி அவனுக்கு நன்மையாயிருக்குமென்றும் நாம் தெரிந்துகொள்ளவேண்டும். நம்முடைய அறிவின் பயிற்சிக்குத்தக்கபடி மென்மேலும் விஸ்தரித்திருக்கின்றது. அதாவது அதிகமான பேர்களுக்குச் சம்பந்திக்கிறது. நமக்கு நம்முடைய நிலைமைக்குத் தக்கபடி எது நன்மையாகுமோ அதையும் தெரிந்துகொள்ளவேண்டும். ஒருவனுக்கு நன்மையாக விருக்கிறது, மற்றொருவனுக்கு நன்மையாகவில்லை. ஒருகாலத்தில் ஓர் இடத்தில் நன்மையாயிருப்பது மற்றொருகாலத்தில் மற்றொரு இடத்தில் அப்படியில்லாமலுமிருக்கலாம்.

ஆகவே தருமநூல்களாபேட்சமாக நிகழுகின்றது. அஃதாவது அவனவனையும் அவனவன் சுற்றத்தாரையும் அனுசரித்துத் தக்கவாறு நடைபெறுகின்றது. தருமநீதியின் நோக்கம் யாதெனில்,

ஓர் பிரதேசத்திலிருக்கும் ஜீவாத்மாக்களுக்குள்ளே அந்நியோந்நிய சம்பந்தங்களை ஏற்படுத்தி அதின் மூலமாய்ச் சந்தோஷத்தை உண்டுபண்ணுகிறதுதான். அஃதாவது ஒரு குடும்பமானால் அதைச்சேர்ந்தவர்களுக்குள்ளும், ஒரு ஜனசமூகமானால் அதிலிருக்கின்ற பல குடும்பங்களுக்குள்ளும், தேசமானால் அதிலிருக்கும் பல ஜனசமூகங்களுக்குள்ளும், மனுஷவர்க்கமானால் அதிலடங்கும் பலதேச ஜனங்களுக்குள்ளும் இப்பூமி முழுதுமெனில், அதிலிருக்கும் ஜனவர்க்கங்களுக்குள்ளும், மற்றுள்ளவாசிகளுக்குள்ளும், லோகங்களின் சமூகமென்றால் அவைகளில் எல்லா லோகவாசிகளுக்குள்ளும், பரஸ்பரம் அந்நியோந்நிய நேர்மையான சிநேக பாவங்கள் நிகழும்படி செய்வித்து அதன் மூலமாய் அவர்களுக்குச் சந்தோஷமும் நல்லது நன்மை ஜனிக்குமாறு, செய்வித்தலாம். இந்த (வட்டம்) எல்லையானது மேனமேலும், வரம்பின்றி விரிந்து கொண்டு அதின் எல்லைக்குள் மேனமேலும் அதிகமான பிரதேசங்களை உள்ளடங்கப் பெறுகின்றது. அந்த எல்லை சிறிதாயினும் பெரிதாயினும் எப்படி இருந்தாலும் இருக்கட்டும். தருமநீதி என்றால் அந்நியோந்நிய ஒழுக்கத்தின் நேர்மை. ஆகவே, குடும்ப தருமம் ஜனசமூகதருமம், தேசசம்பந்ததருமம், பலதேசங்களுக்குள் ஒன்றுக்கொன்று இருக்கும் தருமம், மனுஷவர்க்கத்தின் தருமம், பூமிகளுக்குள் நடைபெறும் தருமம், என்று விரிகின்றன. அவைகளெல்லாம், நம்முடைய சம்பந்தம் பற்றியிருக்கின்றன. தருமத்தின் இன்னும் விஸ்

தாரமான (வட்டத்தின்) எல்லையின் நிகழ்வைப்பற்றி பட க்கூர் சம்பந்தம் இன்னும் ஏற்படவில்லை. இவைகளெல்லாவற்றினுடைய ஆதாரமான தத்துவம், ஒரே ரீதியாகவிருக்கிறது.

மனிதனுக்கும் அவனைச்சுற்றி அவனுடைய சுற்றத்திற்கும், அந்நியோந்நிய சேர்மை, இருந்தால்தான சந்தோஷம் ஜனிக்கும் என்பது, நிதர்சனமான விஷயம். சேர்மையின்மை, ஒருவருக்கொருவர் ஒற்றுமை யில்லாத மனோபாவங்கள், ஒருவருக்கொருவர் அனுகூலமின்மை. பரஸ்பர உதவியின்மை. பரஸ்பர அனுகூலமான உள்ளங்களின்மை, இவைகளால் நாம் எப்பொழுதும் துன்பங்களுக்கு ஆளாகின்றோம். சேர்மையிருக்குமானால் அங்கே சந்தோஷமுண்டு. அதுவன்றிச் சந்தோஷமின்றும். ஆகத நாம் சேர்மையைச்சித்திக்கும்படி செய்வதின மூலமாய சந்தோஷத்தை உண்டுபண்ணுகிறது. குடும்பங்கள், ஜனசமூகங்கள், தேசங்கள். மனுஷவர்க்கங்கள், இந்தபூமியிலும், மற்ற பூமிகளிலும், வசிக்கும் மற்ற ஜீவர்க்கங்கள் இவைகளெல்லாம். இத்தன்மையாகத்தான் சந்தோஷமடைகின்றன.

தருமநூல், அல்லது. தருமசாஸ்திரத்தின் முடிவான கருத்து என்னவென்றால். பிரதக்பாவமுள்ள ஜீவாத்மாக்களை ஒன்றாய் சேர்மைப்படுத்தி பின்னர் அவைகளையும். பரமாத்மாவையும். ஏகிபாவப்படுத்துவதின் மூலமாக சந்தோஷமும் க்ஷேமமும். எங்கும் பரவும்படி செய்தலாம். ஷட் தர்சனங்களும் இதுதான் பரமபுருஷார்த்தமென்று. அங்கீகரிக்கின்றன.

இதை நாம் நன்றாய் உணர்ந்து, அனுபவத்திற்குக் கொண்டுவரவேண்டும். தருமமுறையானது கடைசியாக

ஆனந்தத்தையே விளைவிக்கின்றது. ஆனந்தமென்றதின் பிரபவத்தைப்பற்றிச் சற்று விசாரிப்போம்.

இந்திரியங்கள் மூலமாய் ஏற்படும் நீடித்திராத விஷய ஸுகமும் அல்லது. இந்திரிய ஸுகத்தை யபேக்ஷித்து அதிகமாக நீடித்திருக்கும் மனச்சந்தோஷமும் ஆனந்த மன்று. புத்திகளின் தர்க்கம், அல்லது, அவாவின் திருப்தி ஆனந்தமன்று. பாக்கிய சம்பத்துக்களை ஆர்ஜித்தல், ஆனந்தமன்று. ஆனால் ஆனந்தமென்பது ஆத்மாதனக்குள்ளே தன்னுடன் இணை விடாமல் நிரந்தரமாய் சந்துஷ்டியாயிருத்தலாம். பதமேன்மையின் பரிபூர்ணம், நிராகாரமாய், இருக்கும் ஈசன் ஆனந்தத்தை அடியில் வருமாறு காண்க.

யத்ரோபரமதே சித்தம்
நிருத்தம் யோகஸேவயா
யத்ர சைவாத்மநாத்மாநம்
பச்யந்நாத்மநி துஷ்யதி
ஸுகமாத்யந்திகம் யத்தத்
புத்திக்ராஹ்யமதீந்த்ரியம்
வேத்தி யத்ர ந சைவாயம்
ஸ்திதச்சலதி தத்வத:
யம் லப்த்வா சாபரம் லாபம்
மந்யதே நாதிகம் தத:
யஸ்மிந் ஸ்திதோ ந து:கேந
குருணாபி விசால்யதே

(பகவத்கீதை. VI 20—22)

(இ-ள்) யோகாப்பியாசஞ் செய்வதினால், மனமானது விஷயங்களினின்று இழுக்கப்பட்டு எந்த யோகத்தில், இருக்கிறவன், மன

த்தினால் ஆத்மாவைப் பார்த்து தன்னிடத்திலேயே சந்தோஷமி ருக்கிறானோ,

எந்த யோகத்தில் நிலையாக இருக்கிறவனை, இந்திரியங்களுக்கெட்டாததவும், புத்தியினாலே அறியத்தக்கதுமாய அளவிறந்த அந்தமில்லாச் சுகத்தை அறிகிறானோ, அந்தச்சுகானுபவத்தினின்றும் பிரிகிறதில்லையோ,

எதை யடைந்து அதைக்காட்டிலும் வேறு பிரயோஜன மிருக்கிறதாக எண்ணுகிறானில்லையோ,

எந்த யோக நிலையில் ஸ்திரமாக இருக்கிறவன் விசேஷமான துக்கத்தினாலும் கூட சலிக்கப்படுகிறானில்லையோ,

இதைத் தவிர இதற்குக்குறைவான தொன்றும் ஆநந்தமன்று. இந்த ஆநந்தம் தான் தரும நீதியால் பலிக்கிறது. இது சம்பந்தமான யதார்த்தம் ஞானத்தை, ஏதோ சில சம்பவங்களின் வெளித்தோற்றத்தினால் விபரீத அபிப்பிராயம் உண்டாகி மறைக்கக் கூடும். அப்படிக்கில்லாமல் இந்த உண்மையை மனத்தில்ஸ்திரப்படுத்திக்கொள்ள வேண்டும். நன்மை செய்தல் சில காலத்தில், வருத்தமாக இருந்தாலும், தரும நீதியினின்று வழுவாது நடத்தல், தொந்திரவாகவும் சிரமமாகவுமிருந்தாலும். நாளாவட்டத்தில் உற்று நோக்கில், நன்மை செய்தால, ஆநந்தம் ஜனிக்கும். தீமை செய்தால் துன்பம் ஜனிக்கும். இது திண்ணம். இந்தியா தேசத்தின் ஆசாரியரான, பௌத்தர் சொன்னதாவது, வண்டியின் சக்கரங்கள் எப்படி மாட்டைப் பின் தொடர்கின்றனவோ, அவ்விதமே. துன்பமும் பாவத்தைத்தொடரும், இவ்விதமே எல்லாச்சாஸ்திரங்களும், அறிவுறுத்துகின்றன. இந்நிகழ்வு இன்றியமையாதது, என்று போகப் போகத் தெரிந்துக் கொள்ளுவோம்.

நேர்மை சந்தோஷம், நன்மை. தீமை, பூமியின் கண் வசிக்கிறவர்கள், மற்றைய உலகங்களின்கண் வசிக்கிறவர்கள் இவர்களைப்பற்றிப்பேசினோம்.

எல்லா வற்றிற்குக்காரணமான மூலதத்துவத்தை விசாரிப்போமாகில், மதசம்பந்தத்தின்சாதகத்தைத்தான் தேடவேண்டும். தரும நூலின மூலாதாரம் சமய நெறியின் கண் இருக்கின்றது. வீடு எப்படி அதின அஸ்திவாரத்தின்மேல் கட்டப்பட்டிருக்கின்றதோ, அப்படியே தருமமுறை ஓரே மூலாதாரத்தின் மேல நிற்கின்றது. அஸ்திவாரம் நேர்மையில்லா விட்டால் வீடினமேற கட்டிடம் கோணிக்குறுகி எப்படி கேடுவிழுமோ, அவ்விதமே, சரியான மூலதார மில்லாமலிருக்குமேயாகில், தருமமுறையும் விழுந்து சிதறிவிடும்.

III வது பாகம்

1 வது அதிகாரம்

முற்றிற்று.

## மூன்றம்பிரிவு.

---

## 2-வது அதிகாரம்.

சமயத்தில் தருமமுறைக் கேற்படும் ஆதாரதத்துவங்கள்.

---

சமயத்தினுல் நாம்தெரிந்து கொள்ளுவது எல்லா ஜீவாத்மாககளும், பேத மில்லாமல் ஏகமாக இருக்கின்

றனவென்பதாம், இதுதான் தருமமுறையின் ஆதாரமான தத்துவம்.

தரும நூலானது, ஆத்மா ஒன்றுஎன்றும் அநாத்மா பலவாருன வேற்றுமை யுடையதென்றும், ஆக இவ்விரண்டு தத்துவங்களையும், ஆதாரமாக உடையது.

ஆத்மா ஒன்றே; வெவ்வேருன ஆத்மாக்கள், அந்த ஒன்றின் பகுதிகள். அம்சங்கள் பிரதி பிம்பங்களாம்.

யதா ப்ரகாசயத்யேக꞉
க்ருத்ஸ்நம் லோகமிமம் ரவி꞉
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்நம்
ப்ரகாசயதி பாரத॥

(பகவத்கீதை. XIII—34)

(இ-ள்) ஓ பாரதா, ஒருவனுகிய சூரியன், இந்த லோகம் முழுமையும் எப்படிப் பிரகாசிப்பிக்கிருனோ அப்படியே க்ஷேத்திரக்ஞன் சகலமான சரீரத்தையும் பிரகாசிப்பிக்கிறான்.

ஏகோ தேவஸ்ஸர்வபூதேஷு கூட꞉
ஸர்வவ்யாபீ ஸர்வபூதாந்தராத்மா

சுவேதாஸ்வத ரோபநிஷத். VI—11.

(இ-ள்) சகலமான ஜீவராசிகளில் குப்தமாக ஈசுவரன் மறைந்திருக்கிறான். எங்கும் வியாபித்திருக்கிறான். எல்லாவற்றிற்கும் உள்ளத்திலிருக்கிறான்.

ஒரு சூரியன் பிரகாசிக்கிருன், அவன் ஒவ்வொரு இடத்திலும், ஒவ்வொரு வீட்டிலும், பிரகாசிக்கிருன.

உயர்ந்த மதில்கள் சூழ்ந்த ஆயிரந் தோட்டங்களிருக்கலாம். ஆனால் ஒரு சூரியன் பிரகாசிக்கிறான். அவ்வொன்றிலுமிருக்கும் வெளிச்சமும் வெப்பமும், அவனின்றும் உண்டாகி அவன் அம்சங்களாக இருக்கின்றன. வெவ்வேறான சரீரங்களுள்ள ஜீவராசிகளெல்லா மிருக்கும் ஜீவாத்மாக்கள், ஒரே சூரியனின் ரச்மிகள்போலும், ஒரே நெருப்பின் பொறிகள்போலும், ஒரே ஆத்மாவின் அம்சங்களாம். நாம் பரிசுத்தர்களாக ஆகாதவரையில் இந்தத் தத்துவத்தை உணரமுடியாது. அதை அறியமுடியாது. அதன்படி யெப்பொழுதும் ஒழுக முடியாது. ஆனால் அது ஒரு முக்கியமான விஷயமாக நாம் கவனிக்கத்தக்கது. எவ்வளவு தூரம் அதை அனுசரித்து நம் ஒழுக்கம் நடைபெறுகிறதோ, அதற்குத்தக்கவாறு நாம் தரும முறையில் நிற்கிறோம். தருமவிதிகள் எல்லாம், ஆத்மா ஒன்றே என்ற உண்மையின் ஆதாரத்தின்மேல் ஏற்பட்டிருக்கின்றன. ஆத்மா ஒன்றே. ஆதலால் நான் அயலானுக்குத் துன்பம் செய்தால் அத்துன்பம் என்னைத் தாக்குகிறது. வேணுமென்று தெரிந்து ஒருவன் தன் கை, கால், முகம் இவைகளில் காயஞ்செய்து கொள்ளமாட்டான். ஏனெனில் அவைகளெல்லாம், அவன் சரீரத்தின் அங்கங்களாம். கையின்கண் உள்ள காயம் காலுக்கு நேரில் துன்பத்தை உண்டுபண்ணாவிட்டாலும். அவன் தன் சரீரத்தின் எந்தப்பாகத்தில் துன்பமிருந்தாலும், அதை உணருகிறான். கையிலிருக்கின்ற காயத்தை அறிவில்லாத வரம்புக்குட்பட்ட கால், உடனே தெரிந்துகொள்ளாது. ஆனால் மனிதன் அதை உணர்ந்து கைக்கு நோவுண்டாகும்படியான இடத்திற்குத் தன் சரீரத்தை இழுத்துக்கொண்டு போகும்படி காலுக்கு இடங்கொடுக்கமாட்டான். சரீரத்தின் எந்தப் பாகத்திற்காவது பலமான காயம் நேரிட்டு

அதனால் சரீரத்திற்கு, காயல் (ஜ்வரம்) கண்டால், காயம் படாத காலும் கடைசியாக வருந்தும். கால் தன் சரீரத்தின்மற்ற அங்கங்களைத் தன்னுடன் ஏகீபாவமாக அறியாவிட்டாலும், ஏகீபாவம் மாறுமா? மாறாது. இது போல் தன்னிடமும பிறரிடமும், அமரும் ஆத்மாவொன்றேயென்று எவன் நம்புகிறானோ, அவன் ஒருவனுக்குத் துன்பம் நேர்ந்தால் அதினால் தனக்கும் துன்பம் விளைகிறதென்று நம்புகிறான். ஆனால் அவித்தையினாலும் பேத அறிவினாலும், ஒருவன் அதை அப்பொழுது உணருகிறதில்லை, பின்பு எல்லோரும் ஒரு சரீரத்தின் அங்கங்களாக இருக்கிறார்களென்றும், தன்னிடத்தில் அந்தர்யாமியாகவிருக்கும் ஆத்மாவே, மேற்கண்ட அந்த ஒரு சரீரத்தை உபாதியாக வைத்துக்கொண்டு எல்லா ஜீவர்களிடமும் இருந்து சலித்துக்கொண்டிருக்கிறானென்றும அறிகிறான்.

இக்கருத்தை உள்ளபடி நாம் உணர்வோமாகில் தருமநீதிக்கென்று ஒரு சாஸ்திரம்வேண்டாம். எல்லாருக்கும் நன்மை பயக்குமாறு எப்பொழுதும் ஒழுகுவோம். இக்கருத்தை உள்ளபடி உணராமல் நாம் நடக்கின்றமையால் பிறருக்குத் துன்பம் விளைவிக்காமலிருக்கும்படியும் நமக்கும்பிறருக்கும் நன்மையை நாடிச்செய்யவேண்டுமென்றும் மேற்கண்ட கருத்தை ஆயதனமாகவுடைய ஒழுக்க விதிகள் ஏற்பட்டிருக்கின்றன. ஜீவராசிகளிலியங்கும் ஆத்மா ஒன்றே என்ற பரசித்தாந்தத்தை நன்குணர்ந்த மகரிஷிகள் இந்த உண்மையை ஆதாரமாகவைத்துக்கொண்டு, தருமநீதி சாஸ்திரங்களை இயற்றினார்கள். இந்த அசையாப்பாறைபோன்ற அஸ்திவாரத்தின் மேல் தருமநீதி என்ற கட்டிடத்தை ஏற்படுத்தினார்கள். பொது தருமநீதியைப்பற்றிச் சுருதியின் ஆதேசங்கள் தீர்மானமானவைகள். அவைகள் யுக்திக்கும் ஒத்திருக்கின்றன.

எக்காலத்திலும் கேழக் கூடியவும் யாரும் கட்டுப்பட்டு ஒழுகக் கூடியவைகளென்று விளக்கிக் காட்டக்கூடும்.

சுவாபாவிக விதிகளெல்லாம் தெய்வீக பாவங்களின் விகாஸங்களாம். அந்தத் தெய்வீக பாவத்தின் ஓர் அம்ச மான சித்தானது அறிவாகப் பரிணமித்து அவ்விதிகளை ஆராய்ந்து ருபித்துக்கொள்ளுகின்றது. அந்த விதிகள் அறிவிற்கு ஒப்புதலாகவே யிருக்கிறது மாத்திரமல்ல, அறிவுமயமாகவே இருக்கின்றன. மனிதனிடமிருக்கும் அறிவு, அவைகளின் ஆராய்ச்சியில் சமபந்தப்படுகிறது நியாயமே. ஆனால் இந்த அறிவு வேறு. தர்க்க நூல் ரீதி யாய், ஒரு வாதத்தின் பின் மற்றொரு வாதம் தொடுக்கும். வாதமுறைவேறு. இந்தமுறை அந்த அறிவின் ஒரு காரி யம். அதற்கு நியாயிகரணமென்று பெயர். இத்தன்மை யான காரியம், ஸ்தூலமான அல்லது கீழ்மனத்தைப்பற்றி யது.• அறிவு என்றது சித ஸ்வரூபம். ஸ்தூல (கீழ்) ஸூக்ஷ்ம(மேல்)மனத்தின் எல்லாக்காரியங்களும், கீழ்ப்பிரக் ஞா பூமிகளிலும் மேல் பிரக்ஞா பூமிகளிலும், உணர்ச்சி யுட, உண்மைகளையும், பதார்த்தங்களையும், உள்ளபடி உணருதலும் அடங்கும் உணர்ச்சியாம. ஞானப்பயிற்சியே பிரமாணத்திற்கு முதற்காரணம். ரிஷிகளின உணர்ச் சியோ, தெய்வீக ஞானத்துடன ஒத்து ஒழுகின அவர் களின் அறிவின் பயனும். சுருதிகளோ ரிஷிகள மூல மாய் இந்துக்களுக்குக்கிடைத்த பாக்கியம். அவைகள் பிரமாணமான முது நூல்களாம். ஆகவே அவைகளின் பிரமாணம் அறிவை ஆதாரமாகக் கொண்டு நிற்கிறது. முதலில் தெய்வீக பேர் அறிவும் பின்பு பேரில்லாப் பிரகா சம் பெற்ற மானிட அறிவு அதற்காதாரமாம். முகவுரை யில் நாம் பிரஸ்தாபித்த பிரகாரம் அந்தந்தக் காலங்களு

க்குத் தக்கவாறு, சுருதிகளை ரிஷிகள் வேறு பாட்டுடன் அமைத்திருக்கின்றார்கள். ஏனெனில் ஒரு காலத்திற்கு அனுகூலமான விதிகள் மற்றொரு காலத்திற்கு அனுகூல மானவைகளாக இருக்கவில்லை. மேலும் எக்காலத்திலும் சாமான்னியமாக நிகழக்கூடியவைகளென்றும் சில கால தேசரீதியாய் நிகழக் கூடியவைகளென்றும் அறிவின ஆராய்ச்சினால் விதிகளை வேறுபடுத்தலாம்.

சநாதன தருமத்தில் கற்பிக்கப்படும் தரும நீதி முறை பிரமாணமானதென்று சொல்லலாம். ஏனெனில் ஆத்மஏகீ பாவமென்ற தத்துவத்தைக்கடைப்பிடியாகவை த்துக்கொண்டு அந்தமுறை அமைக்கபபட்டுள்ளது. அத ன்விதிகளும் மேற்கோள்களும் அந்த உயர்வான தத்துவ த்தை அனுசரித்தே நடைபெறுகின்றன. அம்முறை அறி விற்கும் யுக்திக்கும் ஒத்ததாகவுமிருக்கின்றது. மேலும அறிவின் சித்தாந்தங்களும் சுருதியின் ஆதேசங்களும, நேர்மையாக ஒப்பமுடிகின்றனவென்று ஸ்தாபிக்கலாம.

இந்நேர்மை பற்றியே, பலவாறான தரும நீதிமுறை கள் வழங்குகின்ற இந்தியாதேசத்தில் வெவ்வேறு முறை களாக ஏற்படவில்லை.

தெளிவாய் ஆத்ம ஏகீ பாவதத்துவத்தைச் சித்தாந் தப்படுத்தி அறிவுறுத்தாமை பற்றி ஏனைய தேச மதங் களில் தருமநீதி முறைக்குத் துல்லிய பிரமாணம் ஏற்படக் கூடவில்லை. அம்மதங்கள் முக்கியமாய் தெய்வீக பிர மாணத்தை நோக்கி தரும நீதி முறை நடை பெறவேணு மென்று விதிக்கின்றன. தெய்வீக பிரமாணமோ, மனித னிடமிருக்கும் ஜீவாத்மாவின், சுபாவத்துடன் எப்பொழு தும் ஒற்றுமை உள்ளதாகச் சாமான்னியமான அங்கீகார மன்று. ஆகவே பிரமாணத்திற்கும் அறிவுக்கும், விருத்தம்

ஏற்பட்டு இரண்டிற்கும் தீமை விளைவிக்கின்றது. இந்த வேறுபாட்டின் காரியமாக, மதக்கொள்கைக்கு முற்றும் விரோதமாகவும், ஒன்றுக்கொன்று பரஸ்பர விரோதமாகவும் இரண்டு தருமநீதி முறைகள், (கொள்கை) வழங்குகின்றன.

இவைகளில் ஒன்று இயற்கை உணர்வு பக்ஷம். இதின்படி தருமநீதி ஒழுக்கமானது இயற்கை உணர்வு, மனச்சாக்ஷியின் கட்டளைகள் இவைகளின ஆதாரத்தின் மேல் நடை பெறுகிறது. இந்தக்கொள்கை அடியில் வரும் ஆக்ஷேபனைக்குள்ளாயிருக்கிறது. ஜாதியினுடையவும தேசத்தினுடையவும், ஆசாரங்கள், சம்பிரதாயங்கள் இவைகளுடைய வேறு பாடுகளுக்கும், ஒவ்வொருவனுடைய அபிவிர்த்திக்கும் தக்கவாறு இந்த மனச்சாக்ஷி வித்தியாசப்படுகிறது.

இரண்டாவதானது, பொது ஜனப் பிரயோஜனகரமாயிருக்குகை. இதின் ஆதாரதத்துவம், பெரும்பான்மையாருக்குப் பெரும்பான்மை நன்மை விளைவித்தலாம். இதுவும் அடியில் வரும் ஆக்ஷேபனைக்குட்பட்டதாகவிருக்கிறது. சிறுபான்மையாரை அதின் நன்மை பயக்கும் முறையினின்றுவிலக்குவதற்குப் போதுமான காரணமில்லை. தவிரவும் யாவரும் உடன்பட்டு ஒழுகும் வண்ணம் போதுமான உறுதிப்பாடுள்ள பிரமாணமில்லை. பெருமபான்மையாருக்குப் பெரும்பான்மை நன்மை பயக்குதல் என்ற விதி சந்தேக ஆஸ்பதமாகயிருக்கிறது. அனுஷ்டானத்தில் உபயோகமற்ற விதி முறையாக ஏற்படுகிறது.

இந்த இரண்டு கொள்கைகளையும், அதனைப்பற்றி விஸ்தரித்துச்சொல்லியிருக்கும் புஸ்தகங்களை மாணாக்கன் வாசித்துக்கொள்ளலாம. இந்த இரண்டு கொள்கைகளின் பரஸ்பர விரோதத்தை ஆத்ம ஏகி பாவத்தினுல்

சமரசப்படுத்தி, அதனின் ஆதாரமான தத்துவக் குறையை, நிறைவு செய்துக்கொள்ளவேண்டுமென்று அறியவும். இந்த ஆத்ம ஏகி பாவதத்துவத்தினுல் சமய வாதிகள் சொல்லுகின்ற ஆதேசங்கள் அறிவுக்கிசைய இருக்கின்றன வென்றும் அறியவும். இயற்கை உணர்வு, வாதிகளின் மனச்சாக்ஷியின் வேறுபாடுகளுக்குச் சமாதானம் என்னவென்ருல் மனச்சாக்ஷி என்ருல், ஜீவசாக்ஷி, அதாவது ஆத்மாவின் வாக்கு. ஜீவாத்மா தன்மயப்படுத்தியிருக்கும் அனுபவங்களுக்கும் அது பரிணமித்து விகசித்திருக்கும் நிலைமைக்கும் தக்கபடி இந்த மனச்சாக்ஷி நடைபெறுகின்றது. அஃதாவது, வித்தியாசப்படுகிறதென்று அறியவும்.

பொதுஜன நன்மைவாதியின் கொள்கையில் உண்டாகும் ஆக்ஷேபணைகளுக்கு இந்த ஆத்ம ஏகி பாவத்தினுல் ஏற்படும் சமாதானம் என்னவெனில், ஒரு காரியம் எல்லாருக்கும் நன்மைபயக்காவிடின், அது நன்மை என்ற கடைபபிடியினின்று நழுவியதுதான். அதில் பெரும்பான்மையார் என்றவிவாதம் இல்லை. எல்லாம் ஆத்மைகபாவந்தான். தரும நீதி ஒழுக்கத்திற்குப் பிரமாணம், இந்த ஏகி பாவமும் நய ஒருமைப் பாடுமேயாம.

ஆகையினுல் சநாதனதருமத்தில், நீதிஒழுக்கத்தின் ஆதாரம், ஆத்மைகிபாவமென்ற சித்தாந்தம். ஆகவேவெவ்வேருய்த் தோன்றும் ஜீவகோடிகள், பரஸ்பரமாய் அந்நியோந்நியமா யிருந்துகொண்டு உதவிபுரிதல் வேண்டும் என்று ஏற்படுகிறது. ஒவ்வொரு ஒழுக்க விதியும், இந்த ஏகி பாவத்தன்மையை ஆதாரமாகவுடையது. இந்த ஏகி பாவத்தின் பரிணுமமான, எங்கும்பரவிய அன்பே, எல்லாத் தரும நீதி முறைகளுக்கு மூலமென்றும்,

அதின எதிர்மறையே, எல்லா அரிஷ்டங்களுக்கும் மூல மென்றும் நாம் அறிந்துகொள்வோம்.

சாமான்னிய சகோதர வாஞ்சை இந்தஸ்பாவத்தன் மையில் பரிவதானம். ஸ்தூல, ஸூக்ஷ்ம உபாதி பேதங்க ளால் குணங்கள் வேறுபட்டிருப்பினும் ஒரே ஆத்மாவை மூலமாக எல்லாம் உரிமை பற்றி சிகழ்கின்றன. சித் தாந்தம் மேனமேலும், பரஸ் அனுஷ்டானத்திற்கு வரு மேயானால் யுத்தங்கள் ஓய்வு பெறவும் ஜனங்கள் சமா தானமாக இருக்கிறதற்கும் ஆதாரமாக ஏற்படும். இந்தச் சித்தாந்தம் அன்னிய ஜாதிகளும தேசங்களும ஒருவர்க் கொருவர் பாராட்டும் பகை, மாத்சரியம, அவநம்பிக்கை. சிந்தனை, இவைகளைத் தெரித்து ஜனங்களையெல் லாம் நேர்மையாய் ஒரு குடும்பினராக்கச் செய்வித்து அவர் களில் வயோதிகர், பாலியர், இளைஞர், என்ற வித்தியா சங்களை மட்டும் அமைத்து அந்நியமென்ற வேற்றுமை யற்று அவர்கள் சிகழும்படி செய்விக்கும்படியான யோக் கியதை உள்ளது.

மேலும் இந்த ஏகீபாவ ஆதேயமான சகோதரவா ஞ்சை ஜன சமூகத்திற்குள் மட்டும், நடைபெறத்தக்கது அன்று. அதின் வரம்புக்குள் ஒன்று விடாமல் எல்லா ஜீவ ராசிகளும், ஆத்மாவை அடிவேராக உடையன.

கீதை 10-வது அத்தியாயம் 20-வது

சுலோகத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்லுகிற தாவது.

அஹமாத்மா குடாகேச

ஸர்வபூதாசயஸ்தித:

அஹமாதிச்ச மத்யம்ச

பூதாநாமந்த ஏவச

(இ-ள்) ஓ அர்சஜுனு ? சகலப் பிராணிகளின் இருதயசது விருககிற ஆத்மா, நானே. பிராணிகளின் ஆதியும், மத்தியமும, முடிவும, நானே.

பின்பு சூரியன், சந்திரன், மலை, விருக்ஷம் குதிரை, பசு, பக்ஷி, சர்ப்பம், மற்றும் முதலானவைகள் என்று தான் சொல்லிவிட்டு அடியில் வருமாறு எல்லாம் அடங்கும்படி ஓர் உறுதி வசனம் செய்கிருர்.

யஞ்சாபிஸவபூஹூதாநாம
ஸீஜாதுஉஹஜபூந
நதஉஸிஷிநாயஞஸஷ்யாஞ
உயாஹூதுஞாஞா॥

பகவத்கீதை ௧௦-௩௯.

அத்தியாயம் 39.

(இ-ள்) நானும் வித்து ஓ அர்ஜுனு? சகல பூதஙகளுககும் எதுவோ, அது நான் ஜங்கமஸ்தாவரமான எந்தப்பூதமானது இருக்கின்றதோ, அஃது என்னைத்தவிர கிடையாது, "நானன்றி வேறொன்றில்லை.

ஆத்ம ஏகீபாவம். ஆத்மா எல்லாவற்றிலுமிருக்கிரு னென்று இந்த இரண்டு சித்தாந்தத்தை அடிக்கடி திருப்பித்திருப்பி ஸ்ரீ கிருஷ்ணபகவான் அறிவுறுததுகிருர்.

ஸஉஸவெபூஷஹூதெஷு
திஷ்ஜஞவரமெஶ்வரம
விநஶ்ஸ்ஸவிநஶ்ஜஞ
யஃஶஞிஸஶஞி॥
ஸஉஶஞிஸவபூத
ஸஉஞஷிதஶ்வரம
நஹிநஸ்யாத்நஉஉதநம

ததோ யாதி பராங்கதிம்॥
யதா பூதப்ருதக்பாவ
மேகஸ்தமனுபஸ்யதி
தத ஏவ ச விஸ்தாரம்
ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா॥

(கீதை XIII. 27 28 30)

(இ-ள்) சகல பூதங்களிலும் சமமாயிருக்கின்ற பரமேசுவரனை அவைகள் (அந்தப்பூதங்கள்) நாசமடைந்தபோதிலும் நாசமடையாதிருக்கிறவரென்று எவன் அறிகிறானோ, அவனே அறிகிறவன்.

சகல பிராணிகளிடத்திலேயும், சமமாய் நாசமற்ற சுவரூபியாயிருக்கிற ஈசுவரனை அறிந்தவன் தன்னை (ஆத்மாவை) தன்னால் (ஆத்மாவினால்) கெடுத்துக்கொள்ளுகிறானில்லை, ஆகவே மோக்ஷத்தை அடைகிறான்.

பிரபஞ்சத்தின் வேற்றுமையை நாநாவித பேதங்களுள்ள பிரபஞ்சத்தை) ஒன்றிலேயே. (ஆத்மாவினிடத்திலேயே) லயித்திருக்கிறதென்றும், அதினின்றே விரிவாகிறதென்றும் பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கிறானோ அப்பொழுது பிரம்மத்தை அடைகிறான்.

யாக்ஞ்யவல்கியர் தம்முடைய பத்தினியாகிய மைத்திரேயி என்பவளுக்கு விரிவாய்ச் சொல்லியிருக்கிறபடி ஜனங்களுக்குள் வழங்கும் உரிமை முறைமைகளெல்லாம் இந்த ஏகீபாவத்தை ஆயதனமாக உடையதாக இருக்கின்றன. அந்த அம்மை அமிர்தத்தின் (மோக்ஷத்தின) ரகஸ்யத்தை வெளியிடவேண்டுமென்று தம்முடைய கணவனை வேண்ட அவர் சொல்லுகிறதாவது..

ந வா அரே பத்யு꞉ காமாய பதி꞉
ப்ரியோ பவத்யாத்மனஸ்து காமாய
பதி꞉ ப்ரியோ பவதி॥

(பிரகதாரண்ய கோபநிஷத். VI. VI. 5)

(இ-ள்) இதோ கேள். புருஷனின் மேலுள்ள அன்பினால புருஷன் நமக்குப் பிரியன் அல்லன் ஆனால் ஆத்மாவின் மேலுள்ள அன்பினால் புருஷன் பிரியனாகவிருக்கிறான்.

அவ்வண்ணமே மனைவி மக்கள் பொருள் கட்டினர் பூமிகள் தேவர்களுங்கூட இவர்கள் எல்லாம் நமக்குப் பிரியமானவர்களாக இருக்கிறார்கள என்றதற்கு காரணம் யாதெனில் ஒரே ஆத்மா எங்கும் எல்லாவற்றிலுமிருக்கிறான்.

ந வா அரே ஸர்வஸ்ய காமாய ஸர்வம்
ப்ரியம் பவதி ஆத்மனஸ்து காமாய
ஸர்வம் ப்ரியம் பவதி॥

இதோ. கேள்! எல்லாவைகளின் மேலுள்ள அன்பினால் அவைகள் பிரியமானவைகள் அல்ல. ஆனால் ஆத்மாவின் மேலுள்ள அன்பினாலேயே எல்லாம் பிரியமானவைகளாக இருக்கின்றன.

க்ருதாத் பரம் மண்டமிவாதிஸூக்ஷ்மம்
ஜ்ஞாத்வா சிவம் ஸர்வபூதேஷு கூடம்
விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம்
ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாசை:॥

(இ-ள்) ஆனந்தமயனையும் சூக்ஷ்மமானவனையும் பாலின்கண்ணெய்போல் மறைந்துள்ளவனையும் ப்ரபஞ்சத்தின்கண் பரவினவனையுமிருக்கின்ற பரமேசுவரனை அறிந்தால் பந்தங்களினின்று விடுபடலாம்.

இந்த உண்மையைப்பற்றி, ஒவ்வொரு படியிலும் சுருதிமுறையிடுகின்றது. இனி அதிகமாக ஆதார வசனங்களை, மேற்கோளாகச் சொல்லுவது, அநாவசியம். தரும நீதி ஒழுக்கத்திற்கு இதுவே ஆதாரம். அன்பிற்

காதாரமும் அதைநிரூபிக்கும் முறையும் இந்த ஆத்ம ஏகீபாவமே. ஆத்மாவே பல ரூபங்களை எடுத்துத் தன்னுடைய ஏகீபாவத்தை உள்ளபடி அனுபவிக்குமாறு அப்பல ரூபங்களை ஒருங்கு சேர்க்க நாடி ஒழுகுகின்றது. இக்காரணம் பற்றியே அறிவினுல் ஆத்ம ஏகீபாவமானது சித்திக்கப் பல ரூபங்களுள்ள பிரபஞ்சத்தில் அதுவே அன்பின் வழியாக நடைபெறுகின்றது அவ்விதமே அனாத்மாவின் வெவ்வேறான ரூபங்களைப் பற்றிய பாவமே பகைக்குக் காரணமாயும். அதைப் பற்றிய நம முறையாகவும் அமைகின்றது. ஒவ்வொரு ரூபமும் மற்றவைகளை விடத் தான் வேறு என்று பாவமுடையதுபோல் நிகழுகின்றது. இந்த விஷயத்தின் உண்மை. ஆழ்ந்த பயிற்சியினுல் நிதர்சனமாகும் மானுகன இந்தத் தத்துவத்தை மனத்தில் நிறுத்தவேண்டும். எல்லா நீதியும் எல்லா நன்மையும் ஆத்ம ஏகீபாவத்தினின்றுமுண்டான அன்பினின்று விளைந்த பயனுக முடிகிறது என்றும் எல்லா அநீதியும் எல்லாப்பாபமும் இந்த உண்மையை அலக்ஷியம் செய்ததினுலும் ஆத்மா ஒன்றன்று பல தேகங்கள் போல பல உண்டென்ற பேத புத்தியைக் கைக்கொண்டதினுலும் உண்டாகின்றன வென்றும் நாம் இனிப்படிக்கப் படிக்க அறிவோம்.

மூன்றாம் பகுதியில்
II=வது அதிகாரம்
முற்றிற்று.

## மூன்றாவது பகுதி.

## மூன்றாவது அதிகாரம்.

### ருதம். அநிருதம். (Right and Wroug).

---

இப்புத்தகத்தின் முதற்பகுதியில், திருலோகியின் வரலாறு சொல்லியிருப்பதை ஞாபகத்திற்குக் கொண்டு வரவேண்டும். ஒரு புது திருலோகியின் உற்பத்தியாரம்பத்தில் ஜீவன விரிந்து விகசிக்க, ஆரம்பிக்கிறன. இந்த விகாஸமானது மூன்று லோகங்களிலும் நிகழுகின்றது. ஆனால் நாம் நம்முடைய, பூமி சம்பந்தத்தை மாத்திரம் கவனிப்போம். முதல் முதலில் ஜீவகோசங்கள் தோன்றுகின்றன. ஒருகோசத்தின்பின் மற்றொருகோசம் எப்படி ஜீவனை உள்ளடக்கி வருகிறதென்ற விஷயத்தைப் புராணங்களில் பரிபாஷையாய்ச் சொல்லியிருக்கிறது. அவித்தை ஐந்து விதமாகப் பரிணமிக்க (அவித்தை, அஸ்மிதை, ராகம், த்வேஷம், அபிநிவேசம்) அதின் காரியமாக, பிரபஞ்ச விகாசம் (தோற்றுதல்) ஏற்பட்டுப் பூரிப்பினகண், நாநாவித பேதரூபங்கள் உண்டாகின்றன. இந்தத்தொழில் நடைபெறுகையில், ஒன்று பலவாகப் பெருக்கும் பாவம் எல்லா ஜீவராசிகளையும் பற்றி மேலாடுகிறது. பிரளய சுவாபாவீக அம்ச சேஷமான சேஷ்டை இன்மை, என்ற தடையை, விருத்தி பாவம் என்றது பேதித்து வெளிப்பட எல்லா ஜீவராசிகளும், இத்தன்மையின் வசப்பட்டதாய் உற்பவிக்கின்றன. இத்தன்மையே சுத்திசெய்யப்பட்டதாய், பிரவிருத்தி எனப்பெயர்பெறும்.

இதுவே, பொருள்களின்மேல் ஆசையாம். இதனையே பிரவிருத்தி மார்க்கம், அஃதாவது, உலகவிஷயாதிப பிரவேசம், என ஏற்படுகிறது.

ஜீவர்கள் பிரகிருதி அதீனர்களாகிப் பிரதக் பாவங்களைப் பெறுகின்றார்கள். ஆகவே, சுயசுயவிருப்பங்கள் மேனமேலும் விருத்தியாகின்றன, ஒவ்வொருவனும் தனக்குள்ளே உலக ராச்சியத்தை ஏற்படுத்திக் கொள்ளுகிறான். அதினின்று பிறரை ஒதுக்குகிறான். மனிதன் போகார்த்தமாய் ஜீவிக்கிறான். தற்கால சுகத்தையே நாடுகிறான். இந்தப் பிரதக்பாவத்தின் காரியமாக, புத்தி விருத்தியடைகிறது. அஃது எக்காரியத்தையும் தன் சுயலோககமாய்ச் செய்கிறது. இந்த அம்சமானது, மனிதனிடத்திலிருக்கின்ற குணங்களை வெளிப்படுத்த ஆவசியமான கருவியாம். இதின் மூலமாய், அவனுடைய புத்தி பெரும்பாலும் பூர்ண விருத்தியைப் பெறுகிறது

இந்தப் பிரதக்பாவம் (வேற்றுமைக்குணம்.) இனிமேல் அபிவிருத்திக்குத் தடையாக ஏற்படுகிறது. மனிதன் சிறுகச் சிறுக இதை வென்று மேலே போகவேண்டியவனாக இருக்கிறான். எல்லா ஆத்மாக்களையும் ஒருமைப்படுத்தி, அந்த ஏக பாவனையைச் சுதந்தரப்படுத்த வேண்டியவனாகயிருக்கிறான். அந்தப்பாவனை திருடப்படும படியாய், அதற்கு அனுகூலமாய ஒவ்வொரு காரியத்தையும் செய்யவேண்டியவனாகிறான். கடைசியாய் அநந்தச்சித்தாநந்தம், தன் ஜீவ ஸ்வரூபத்தின் சுபாவமாக ஆகிறது. இதுவே ஞான விகாசத்தின் முறையாம். இப்பொழுது மனிதன் நிவிருத்திமார்க்கத்தில் நிற்கிறவனாகிறான்.:– அஃதாவது, உலக விஷயாதிகளினின்று அந்தர்முகமாகத் திரும்புகிறான்.

கடைமுறையில்பிரளயம் நேரிடுகிறது. இந்தப் பிரஹ்மாண்டம் முடிகிறது.

பிரவிருத்தி மார்க்கத்தின் பெரும்பான்மையான முற்பகுதியின் (வேற்றுமை) பிரதக்பாவத்தை உண்டுபண்ணும் கிரியைகள், எல்லாம், ருதம் நேர்மையாம் அதற்கு விரோதமானதெல்லாம் அநிருதம், நேர்மையின மையாம்.

இதன் பிறகு நிவிருத்திமார்க்கத்தில் பிரவேசிக்குமுன்னர், அம்மார்க்கத்திற்கு ஆயத்தம்செய்யும் சமயம். அப்பொழுதும் சாக்ஷாத் தாய பிரவிருத்தி மார்க்கத்திலும், ஒழுகுங்காலத்தில் ஆத்ம ஏகிபாவத்தை விருத்தி செய்யும் கிரியைகள், எல்லாம ருதம். அதற்கு விரோதமானதெல்லாம் அநிருதமாம்.

பிரளயகாலம் சம்பவிக்கும் சமயத்தில் அதற்கு அநுகூலமான காரியங்களெல்லாம் ருதம். அதற்கு விரோதமானவைகளெல்லாம் அநிருதமாம்.

முறையில் அந்தந்த காலத்தின் நிலைமைக்குறியும், அதின் அபிவிருத்திக்கு அநுகூலமானவுமான செய்கை எல்லாம் ருதம். அந்நிலைமைக்குக் கெடுதலாயும் அதின் அபிவிருத்திக்குத் தடையாயும், இருக்கும் செய்கையெல்லாம் அநிருதமாம். ஏனென்றால் ஈசுவர சங்கற்பமும். சிருஷ்டியின் மேன்பாட்டை நோக்கினதாயும், சிருஷ்டி முறை நன்மையை நாடினதாயும், இருக்கிறது. இந்தச் சங்கல்பத்தை அநுசரித்து ஒழுகுவோமானால்ஜகத் விகாஸப்பிரவாகப் போக்கின் நேர்மையாக இருப்போம். அதுவே நன்மையும் கடைத்தேறிவிடும். அதற்கு எதிர்கொண்டு ஒழுகுவோமாகில், கரைபுரண்டுபோகும் ஒரு பிரவாகத்தை எதிர்த்துப் போகிறதுபோல் முடியும். பாறைகளில் முட்டுண்டு புண்ணும் காயமும்பட்டு வருந்துவோம். ருதம் அல்லது நன்மைசெய்தல், நமக்குச்சமாதானமும், ஈசுவர சம்மதமும், அதின்மூலம் சந்தோஷமும்

ணயே உடையது ஒரு மனுஷ ஜீவன் தன் ஜீவகதியில் முதற்பாதியில் அது தளர்ந்தும், நடைபெறுகிறதுபோல, ஒரு பிரஹ்மாண்டமும், முற்பாதியில் அஃதாவது கல்பத்தின் பூர்வார்த்தம் அதாவது, பிரதம பிரார்த்தத்தில், ஸ்தூல உபாதி விருத்தியடைகிறது, பிற்பாதியில் அஃதாவது த்விதீய பிரார்த்தத்தில், ஞானபாகம் மேன்மேலும் விருத்தியடைகிறது. பிறப்பு, அதினின்று இறப்பு, பின்பு அவ்விறப்பினின்று, இன்னும் நுட்பமான இறப்பு, பின்னர் அதினினறும் மேலான பிறப்பு, இவ்விதமாய் முடிவின்றி மாறி மாறி, இந்த ஜீவவிகாசமென்ற சக்கிரம், சுழன்றுகொண்டு இருக்கிறது. நம்முடைய பூமியின் சிருஷ்டி விகாச முறைமையில், ஜீவாத்மா ஸ்தூலமான தாதுவர்க்கமாகபபரிணமித்துப்பின்பு அர்வாக்ஸ்ரோதஸ்களான ஒஷதிவனஸ்பதிகளாயும், திரியக்ஸ்ரோதஸ்ஸுகளான மனிதர்களாயும், ஒன்றன்பின் ஒன்றாய், இந்தவர்க்கங்களில் விகசித்து, மேன்மேலும் உயர்வான சரீரங்களைப்பெற்றுக் கடைசியாய், முக்தியானஸாயுஜ்யத்தை அடைகிறது. இந்த விகாசம், மனுஷ்ய வர்க்கத்தில் நடைபெறுகையில், அதின் விவரணங்களான ஆதியில் கபடமற்ற பால்ய சுபாவமுள்ள மனிதர்களின் சரீரங்கள் , அமையப்பெற்றும், தேவர்களால் நடத்தப்பட்டும் ஆளப்பட்டும், ஸ்தூல தேஹாபிமானிகளாய்ப் பேதபாவனைகளுள்ளவர்களாய், சுயநய விருப்பமுள்ளவர்களாய் விஷயாதிகளையும் பொருள்களையும் தனக்குத் தனக்கென்று அவாக்கொண்டு பற்றுகிறவர்களாய் இக்காரணங்களினால் ஒருவருக்கொருவர் எப்பொழுதும் இடைவிடாது போராட்டமுள்ளவர்களாய், ஜீவாத்மாக்கள் ஒழுகுகின்றார்கள். பின்னர் இந்த நிலைமையினின்று காலடைவில் கொஞ்சம் மேம்பாட்டைப்பெற்றுக் கொடுங்கோன் மன்ன

குடையவும், புத்தவீரர்களுடையவும், அரசாட்சிக்குட்பட்டுப் பிறகு, பிரமாணமும் நேர்மையும் தங்கிய அரசாட்சியைப்பெற்று, நடைமுறையில் பரோபகாரசிந்தையை மேவிட்டுப் பிரத்தியக்ஷமற்று, ஜீவாத்மா, ஏகீபாவத்தைச் சிதாநந்தமாகக் கைக்கொண்டு இனிவரும் சகோதரானுசை நிறைந்த நல்ல காலங்களை மனிதர்கள் அடையப்போகின்றார்கள்.

இந்த விகாஸம் தனித்தனி, மனிதனிடத்தில் நடைபெறும் முறை என்னவென்றால் ஜீவன் சரீரமெடுத்தபிறகு, பால்யத்தில் அனுபவங்களையடைந்தும், அறியவேண்டியவைகளை அறிந்தும், அவைகளின் உதவியைக்கொண்டு, யௌவனத்தில் குடும்பியாகி, மக்களுக்கு அறிவிக்கவேண்டியவை அறிவித்தும், அவர்களும் குடும்பிகளாகும்படியான உதவிகள் புரிந்தும், பின்பு உலக வாழ்க்கையைத் துறந்து, சந்நியாசியாகி, சாந்தமும் ஸந்தோஷமுமானவுமான மனத்தை அடைதலுமாம்.

இவ்விதமாய் விகாசம் நடைபெறுகிறது. அதற்கனுகூலமான ஒழுக்கம், நன்மை, ருதம்; அதற்குப் புறம்பானவை, தீமை, அநிருதம். நாம் ஓர் இடம் நோக்கிப் போவோமானால் அந்த யாத்திரைக்கனுகூலமாயும் அதை லகுப்படுத்தும் சாதனங்கள் எல்லாம் நல்லவை; அந்த யாத்திரைக்குப் பிரதிகூலமாயும் அதற்குத் தடையாயுமுள்ளவைகள் தீயவையாம். முன் சொல்லிய இடத்திற்குப் பதிலாக, அதற்கெதிர்ப்பிலுள்ள மற்றொரு இடம், நோக்கிப் போவோமானால், முதலில் சொன்ன சாதனங்கள் இப்பொழுது நோக்குமிடத்தினின்று, முற்றும் மாறாய், நம்மைக்கொண்டு போகும் இயல்புள்ளவைகளாகையால் இவைகள் தீயவைகளே. நாம் எந்தவழியி

லிருந்து ஒழுகுகின்ருேமோ, அந்தவழியிலேயே, மேன மேலும் நடப்பிவிக்கும் கருமங்கள் நல்லவைகளாயும், ருதமாகவுமுள்ளன. அதற்கு மாருனவைகள், தீயவை களாகவும், அநிருதமாகவு மிருக்கின்றன. ஆகவே, நல்ல ஒழுக்கம், அல்லது தீயஒழுக்கம், என்ற நம்முடைய நோக்கத்தைப்பற்றி நாம் தீர்மானப்படுத்திக் கொள்ளல வேண்டும். அந்நோக்கமோ சாமான்னிய ஜன விகாசத் திற்கு நேர்மையாயிருக்கும்படி நாம கவனித்துப் பார்த் துக்கொள்ளல்வேண்டும். இவ்விதமாகச்சம்பந்தாசம்பந்தத் தைக்கவனியாமற் போனல், நல்லவை, இவை என்றும் தீயவை, இவை என்றும் மதிக்க ஒண்ணுது. இவ்வித மாகச் சம்பந்தாசம்பந்தத்தைக் கவனித்து ஒழுகுவோ மானல், நம்முடைய ஜீவயாத்திரையின் விவரங்களை இலகு வாய் முன அறிந்து விதிகள் அமைத்துக் கொள்ளு வோம். நம்முடையஜீவ வாழ்க்கையின் ஒவ்வொரு நிலைமை யிலும் ருதம், அநிருதம், நன்மை, தீமை இவை களின் பிரமாணத்தை நாம் நேர்மையாய் நடைபெறும வண்ணம் செய்துகொள்ளலாம்.

மேற்கண்ட விவரங்களெல்லாம, பூர்வீக, ரிஷிக ளுடையவும் ஞானிகளுடையவும், ஞானமுதிர்ச்சியினுலும அன்பின் மிகுதியினுலும், அனுக்கிரக பூர்வமாகக்கிடைத் தன. நாம் சம்பந்தப் பட்டிருக்கின்ற பிரம்மாண்டத்தின விகாசத்தின் முறையைப் பூர்ணமாய் நமக்கு அவர்கள் தெரிவித்திருக்கின்ருர்கள். மேலும் ஜீவாத்மாக்கள தாது வர்க்கங்களாயும, ஓஷதி வனஸ்பதிகளாயும், பிராணிக ளாயும் மனிதர்களாயும் தேவர்களாயும், இன்னும் மற்று முதலியவர்களாயும், மேன்மேலும் பரிணமித்துப்படிப்படி யாய்ச் சரியாய் விகாசிக்க, வேண்டுமென்பதாய் நம்முடைய ஜீவகதியும், மற்றக் கீழான ஜீவராசிகளின் ஜீவகதியும்,

நேர்மையாய் ஒழுகவேண்டுமென்றபோது விதிகளைத் தெரிவித்திருக்கின்றார்கள். இந்தப்போது விருத்தாந்தங்களும் இப்புத்தகத்தில் ஆங்காங்கே வெளியிடப்பட்டிருக்கின்றன. உதாரணமாக நான்கு ஆச்சிரம சம்பந்தமான விதிகள் ஸ்ரீவனின் தனித்தனி அதிகாரத்தின விதிகளாகவும், விவரங்களாயும் அமைகின்றன நான்கு வருணங்கள் சம்பந்தமான விதிகள் ஸ்ரீவசிஷ்ட அதிகாரத்தின் விதிகளாயும், விருத்தாந்தங்களாயும், அவர்கள் நேர்மையான ஆராட்சி பெற்றுப் பிறகு அவர்களின் தொழில் பாகுபாட்டையும், முறைமையையும் ஜாதிகளின் விவஸ்தையையும் பற்றியனவாகவுமிருக்கின்றன.

4. வருணங்களுடையவும் நான்கு ஆச்சிரமங்களுடையவும் நிலைமைகளைப் பற்றி சொன்னால் அவைகளுக்குள் இக்காலத்தின் [illegible] சமூக கூடிய வசதியான ஸ்திதிகளும் அடங்கும். சாதன கருமமானது அவ்விதிகளைப்பொதுவகுப்புகளாகப் பிரித்து அவைகளுக்குரிய சாமான்னிய விதிகளை அமைப்பித்திருக்கிறது. இக்காலத்திய ஜன சமூகங்களில் மற்றைய இடங்களில் வருணாச்சிரமங்கள் வியக்தமாய் அங்கீகரிக்கப்படாமலிருப்பதைக் கொண்டு மேற்பார்வையாய்ப் பார்ப்பவர்கட்கு ஒவ்வொரு ஜனசமூகத்திற்கும், முற்றிலும் வெவ்வேறான விவஸ்தைகள் ஏற்பட்டிருக்கின்றன வென்று தோன்றும். ஆனால் அஃது அப்படியன்று. மேற்கண்ட வருணாச்சிரமபாகுபாடுகள் அப்படி வியக்தமாய் ஏற்படாவிட்டாலும், இக்காலத்தில் நடைபெறும் பலதேசங்களிலுள்ள ஜனங்களிடத்திலும், அவ்வருணாச்சிரம நிலைகள் வேறு பெயர்களாலும், வேறு ரூபங்களாகவும் வழங்குகின்றன. ஆனால் அவ்விதம் வியக்தமாய் அங்கீகரிக்கப்படாமையால், அந்த ஜனங்களுக்குள் அந்த நிலைமைகளைப் பற்றி விவஸ்தை

ஏற்படவேண்டும் சமயங்களி லெல்லாம், அசந்தர்ப்பங்களும், தொந்திரவும், காலவிஷயமும் சம்பவிக்கின்றன. அம்மாதிரியாகவே, இந்திய தேசத்திலும் வருணாச்சிரமங்களைப் பற்றி அதிக சுதந்தரங்கள் கௌரவங்கள் பாராட்டுகையினாலும், அதிக உயர்வு கொண்டாடுகையினாலும், தொந்திரவும், துன்பமும் நிகழ்கின்றன. இக்காலத்தி லியங்குகின்ற ஜீவவிகாச நிலைமைகளில் அடியிற்கண்ட முறைமைகள் கட்டாயிருந்து தான் தீரவேண்டுவனவா யிருக்கின்றன. அவையாவன—குருசிஷன் (உபாத்தியாயர், மாணாக்கன்) அரசன், குடி உண்டுபண்ணுகிறவன், உண்கிறவன் யஜமானன், ஏவலாள். பெற்றோர், மக்கள், புருஷன், ஸ்திரீ, சகோதரன், சகோதரி, தொழிலாளன் அதினின்று ஓய்ந்து உபகாரச் சம்பளகாரன வேலைவாங்குகிறவன் வேலைக்கு அமருகிறவன், போர்வீரன, நியாயபாரகன், விவசாயி, வியாபாரி, லௌகிகன வைதிகன் கிரகஸ்தன் சந்நியாசி. இந்த சமயத்தில் இவைகளைப் பற்றிய விதிகளை அப்போதைக் கப்போது பரிசீலனையின்மீது தெரிந்து கொண்டு அதன் பின்னர் மனிதன் ஒழுகுகிற சந்தேகாஸ்பதமான முறையைவிட்டு வியக்தமான ஒழுங்கான விவஸ்தைகள் ஏற்பட்டுள்ளன. அந்த நிலைமைகளுக்குரிய கடமைகள் குணப்பாகுபாடுகளை இச்சமயம் கற்பித்தும் வருணாச்சிரமக கடமைகளும் ஒழுக்கங்களும்மாறுபட் நடக்கப்பாடாதென வுதெரிவிக்கின்றன. அப்படி நடந்தால் அதிகவிகனமும் நாசமும் நேரிடும்.

ஸ்வதர்மே நிதநம் ஶ்ரேய:
பரதர்மோ பயாவஹ:॥

(பகவத் கீதை III 35)

(இ-ர) தன்னுடைய தருமத்தைச் செய்து அதிலிருந்து கொண்டு மரணமடைதல் சிரேயஸ்கரம். பிறர் தருமத்தைச் செய்தல் பயத்தை விளைவிக்கத் தக்கது.

அரசன் தன் கருமத்தை விட்டு வைசியனாக ஒழுகி க்ஷத்திரிய தருமத்தைச் செய்யாமல் வைசிய தருமத்தை நடத்தினாலும், நியாயாதிபதி விவகாரம் தீர்மானிப்பதில் அதினை சத்தியத்தைக்கொண்டு செலுத்தாமல் யுத்த வீரன் மாதிரியாக யுத்த தருமத்தை நாடினும், அல்லது ஆசாரியனைப்போல்கருணையைக் காட்டினும், ஆசாரியன் தன்னுடைய உபதேச முறைகளில் மரண ஆக்கினை நிறைவேற்றுவோன்போல் நடைபெறினும், பிரம்மசாரியும் கிரகஸ்தனும் அவனவன் தருமத்தைவிட்டு விலகி வானப்பிரஸ்தன் அல்லது சந்நியாசி தருமத்தை அனுசரித்து நடப்பினும், அல்லது பின் இரண்டு ஆச்சிரமங்களில் உள்ளவன் அதைவிட்டு மாறி மற்றைய ஆச்சிரமத்தைத் தழுவி நடப்பினும் இயற்கையாய யுத்த வீரனாக இருக்க, அருகனாயுள்ளவன் வைசியனாக ஒழுகினும், வித்தியாப்பியாசம் செய்ய அருகனானவன் விவசாயத் தொழிலில் அமர்ந்தாலும், இவ்விதமாகத் தத்தம் நிலைமை மாறி மனிதர்கள் நடப்பார்களாகில் ஜனசமூகத்தினுடையவும், தேசத்தினுடையவும் நேர்மைகெட்டு க்ஷேமக் குறைவு சம்பவிக்கும்.

ஒரு நிலைமையில் நேர்மையானது மற்றொன்றில் நேர்மையன்று. ஆகவே ருதம், அநிருதம், இவ்விரண்டிற்கும் பொதுவான லக்ஷணம் என்னவென்றால், ஒரு குறிப்பிட்ட விகாசத்தின் நோக்கை, முடிவு பெறும்படியாய்ச் செய்கின்ற அனுகூலமான ஒழுக்கம் ருதமாம். அதற்கு எதிரிடையாக நிகழும் ஒழுக்கம் அநிருதமாம்.

உத்தேசங்களின் வித்தியாசத்தினால் ஒரே கருமம் ருதமாயும் அநிருதமாயும் ஏற்படும். அடியில் வரும் உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். இருவர்கள் இருக்

கிறார்கள். பலாத்காரமாய் ஒருவன் மற்றொருவனை ஒரு வீட்டில் அடைத்து அவனைத் தன்னிஷ்டப்படிபோக வொட்டாமல் தடுத்து அவனிட மிருக்கும் ஜங்கம சொத்தை வியாபித்துத் தான்சொன்னபடி கேட்கும் வேலைக்காரர்களிடம் ஒப்பிவிக்கிறான். இக்காரிய மானது முனபின் சம்பந்தங்களைக் கவனியாமல் தனிமையாய் நோக்கிப பார்த்தால அகிருத மாகிறது. அடைபட்டவனுடைய அபிவிருத்தியைக் கெடுத்தும் அவன குடும்பினர்களுக்கும், அவனைச் சார்ந்தவர்களுக்கும், க்ஷேமக்குறைவாக இருக்கிறது. ஒருவனை நிர்ப்பந்தப் படுத்திக்கொள்ளைசெய்தலாக முடிகிறது. இதே விஷயத்தில் அடைபட்டவன் மூன்றாவது மனிதனிட மிருந்து துராகிருதமாய் அவன் சொத்தைத் திருடியிருக்கிறானென்றும் அவனை வீட்டில் அடைக்கச் செய்வித்தவன் நியாயாதிபதி என்றும் அடைபட்ட இடம் சிறைச்சாலை என்றும் வைத்துக்கொண்டால் அதேகாரியமானது திருடனைச் சிறையில் நியாயமாய் அடைத்திருக்கிறதாகவும், அவனிட மிருந்து சொத்தை அப்புறப்படுத்தினது சிறைச்சாலை விதியை அனுசரித்த நியாய ஒழுக்க மென்றும் தோன்றும். இப்படிச் செய்தல் ஜனசமூகத்திற்கும், அந்த அடைபட்ட திருடனுக்கும் க்ஷேமகரமென்றும் அவசியமென்றும் ஏற்படும். இதிலும சிறையில் அடைபட்டவன் தன்னுடைய சொத்தை வேறொருவன் துராகிருதமாய்த்திருடிப்போனதின் நிமித்தம் தான் அவனிடமிருந்து பலாத்காரமாய் மறுபடியும் தன் சொந்த சொத்தையே பறிக்க நேரிட்டிருக்கும் பக்ஷத்தில் நியாயாயபதியின் தீர்மானம் அகிருதமென்றும் அவன் தீர்மானம் மேலான நியாயாதிபதியின் பார்வையின மூலமாய் மாற்றத் தக்க தென்றும் தெரியவரும்.

இந்த விதியே உலகத்தின் பெரிய விஷயத்திலும், நிகழுகின்றது. பிரபஞ்சாரம்பத்தில் ஜனங்கள் பல்கிப்பெருகியும் கிரகஸ்தர்களாகவும், இருக்கவேண்டுமென்ற நோக்கத்தினால் தக்ஷப்பிரஜாபதி யானவர் ஹரியசுவர்களை முதலான வகுப்பினர்களை உண்டு பண்ணினதாக புராணங்களில் சொல்லியிருக்கிறது. ருதம் அநிருதம் இவைகளை நோக்கியப்படுத்தி நமது பிரபஞ்சத்தில் நிவிருத்தி மார்க்கம் நடைபெறும்படி நாமும் கடமையை வகித்திருக்கின்ற நாரத மஹரிஷியானவர் தமது தொழிலை நியாயமாய் ஆரம்பிக்கவேண்டிய காலத்திற்கு முன்னமே ஆரம்பித்து இந்த ஹரியசுவர்களை நிஷ்கிரகஸ்தர்களாக ஆக்கியதேயன்றி நிவிருத்தி மார்க்கமாகிய சந்நியாசம் பெறுங்கள் என்று உபதேசித்தார். அவர் சமயோசிதமாய்ச்செய்த உபதேசம் அநிருதமாக முடிந்தமையால் அவருக்கு சாபம்நேரிட்டுச் சாபக்கிரஸ்தராய்ப் பிராணிவர்க்கத்திலும் மனுஷ்யவர்க்கத்திலும் ஜனமமெடுத்து மற்றவர்களுடன் கிரகஸ்தராகக் கிரீடித்து அநுபூதவராயினர். அந்த மன்வந்தரத்தின் ஆரம்பகாலத்தில் ஒரு கால சக்கிரத்தின் ஆரம்பத்தில், ரஜோகுண மூர்த்தியும் சிருஷ்டி நியந்தாவுமான சதுர்முகப் பிரம்மாவின் உபாசனை விதிக்கப்பட்டது. பிறகு சத்துவகுண மூர்த்தியும், அன்பு அறிவிக்கும் பிராதானனியரும், உலகசம்ரக்ஷணை கர்த்தருமான, விஷ்ணு உபாசனை விதிக்கப்பட்டது. கடைசியில், தமோகுண மூர்த்தியும் நிவிருத்திமார்க்கத்தின் அதிபதியானவரும், பிரளயகால மூர்த்தியுமான உலக சம்ஹாரகாரணபூதரான சிவஉபாசனை விதிக்கப்பட்டிருக்கிறது.

ஆக ருதம், அநிருதம், அந்தந்த நிலைமைகளை நோக்கியதாக நிகழும். அப்படி முன்பின் சம்பந்தம் கவனி

யாமல் பொதுப்பட அவைகளின் லக்ஷணம் கூறுவோமானால் சம்ஸ்கிருதம் தெரிந்த இந்தியர்களின் நாவிலே சாதாரணமாய் வசனிக்கப்படும் அடியில்வரும் சுலோகத்தில் எறக்குறைய நேர்மையை அனுசரித்தே சொல்லியிருக்கிறது.

𑌅𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑌪𑍁𑌰𑌾𑌣𑍇𑌷𑍁
𑌵𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌯 𑌵𑌚𑌨𑌦𑍍𑌵𑌯𑌮𑍍।
𑌪𑌰𑍋𑌪𑌕𑌾𑌰𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌯
𑌪𑌾𑌪𑌾𑌯 𑌪𑌰𑌪𑍀𑌡𑌨𑌮𑍍॥

(இ-ள்) வியாஸர் 18 புராணங்களிலும் இரண்டே வசனம் சொல்லியிருக்கிறார். பிறருக்கு நன்மைபுரிதல், (ருதம்) பிறருக்குத் தீமைபுரிதல் பாபம் (அன்ருதம்)

பொது விதியாக ஒரு ஜீவன், மற்றொரு ஜீவனுக்கு உதவி செய்து அதினால் தான அறிந்தோ அறியாமலோ, அவனைச்சந்தோஷிக்கச் செய்வானாகில், கைம்மாறு நியாயமாக அந்தச்சந்தோஷம் அவனுக்கே திரும்பிவருகிறது. இதைத்தான் புண்ணியம் சந்தோஷத்தைத் தருகிறதெனவும், அவ்விதமே பாபம் துன்பத்தைப் பயக்குகிறதெனவும் விதி சொல்லுகிறது.

முன்பிரகிருதத்தில்பிரஸ்தாபித்திருக்கிறபடி சிருஷ்டி ஸ்திதி, பிரளயம், என்ற மூன்று கிருத்தியங்களும், பிரபஞ்சத்தின் பிரகிருதி பாவமான, சத்துவ ரஜஸ், தமஸ், என்ற மூன்று தத்துவகுணங்களை ஆதாரமாக உடையன. முதல் முதல் ஜீவனின் பிரகிருதி பாவம் சலிக்கிறதற்குத் தடையாயிருக்கிற பிரளய சுவபாவமான தமஸ் இருக்கிறது. பின்பு மனோவிகாரங்களையும் விக்ஞானத்தையும்,

விருத்திசெய்கின்ற காமபாசத்தால் கட்டப்பட்டு ஓடுகின்ற மனச்சலன மிருக்கிறது. இது-ரஜோகுணமானது. ஜீவனின்பிரகிருதி பாவத்தைத் தாங்குகிறதினால் உண்டாகிறது. கடைசியாகப் பலவாறுகச் சலித்துக்கொண்டிருக்கிற மனத்தை நிறுத்தி, வெளிவிஷயங்கள் எவ்வாறாக இருந்தாலும் அவைகளைக்கவனியாமல் விஷயாதிகளில்பற்றல் மனத்தை இழுத்து சுயநய விருப்பங்களில் பிரவேசியாமல் செய்து சாந்தம், சமாதானம் ஆகிய ஒரு சுபாவம் நமக்கு நேரிடுகிறது. இந்த நிலைமைக்குக் காரணம், சத்துவ குணம் மேல்படுகிறது தான். பிரளயகாலத்தின சமீபத்தில் தமஸ் நம்மை முழுவதும் அழுத்திக்கொள்ளுகிறது.

ஒவ்வொரு மனிதனிடத்திலும் சத்துவமாவது, ரஜஸாவது, தமஸாவது மேற்பட்டு நிகழவேண்டும். அவனுடைய அபிவிருத்தியும் இக்குணங்களின் [illegible] சம்பந்தித்திருக்கும் அவனின் [illegible] தக்கவாறு இருக்கும். ஒருவனுக்கு அபிவிருத்தியின்றித் தமோகுணமிருக்குமாயின், அவன் சோம்பலாளியாகவும், மந்தனாகவும், சுறுசுறுப் பற்றவனாகவும், மூடனாகவு மிருப்பான். அவன் அபிவிருத்தியாக வேண்டுமானால் அவனுக்கு ரஜோகுணம் அதிகமாக விகசிக்கவேண்டும். அவனுடைய மனத்தைக்கவர்ந்து, அவனைச் சுறுசுறுப்பாய்ச் செய்யக்கூடியதெல்லாம், நலம். அதுதான் அவனுக்கு, ஹிதம். அவன் சுறுசுறுப்பாய் நடை பெறுகிறதில் உண்டாகும் சந்தோஷ உற்சாஹங்கள், சுகதுக்க அனுபவங்களின் வெள்ளம் இவைகளெல்லாம் அவனுடைய புத்தியை விசாலிக்கச்செய்கிறது.

ரஜோகுணம் மேலிட்டிருக்கையில் மனிதன் விஷயாதிகளின் பிரவிருத்தியில் ஆவலுள்ளவனாக விருக்கிறான். உயர்ந்தவும் பரவினதுமான மனோராஜ்யம் செய்கிறான். இங்கும் அங்கும் சலிக்கிறான். அவன் பிரியங்கள் மேன்மேலும் விருத்தியாகிக்கொண்டே போகின்றன. அவைகளையடைய, அவன் செய்யும் பிரயத்தனங்கள் நானாவிதமான விஷய அறிவுக்குரிய மார்க்கங்களில், அவைகளைப் புகட்டுகின்றன. பரபரப்பே, அவனுடைய, சுபாவமாக ஏற்படுகிறது. எல்லாக் கிருத்தியங்களும், தன் சுயநயத்தையே நோக்கி நடக்கின்றன. ராகத்துவேஷங்கள் அவனைக் காரியங்களில் பிரவிருத்திக்கும்படி தூண்டுகின்றன.

சத்துவகுணம் மேலிட்டால், ஸ்வப்பிரயோஜனமாகச்செய்யும் காரியங்கள் அற்பமென்றும் உலக சம்பந்தமான, மனோபாவங்களும், ஆசைகளும், நசுவரமென்றும் உலக விஷயாதிகளுக்குரிய காரியங்களெல்லாம் துக்ககரமென்றும், சஞ்சலமென்றும் உணருகிறான். இனி மனச சமாசாரங்களை நோக்கி, அறிகிறான். சத்தியமிது அசத்தியமிது, நித்தியமிது, அநித்தியமிது, சாசுவதானந்தமிது நசுவரானந்தமிது என்று பகுத்தறிகிறான். சாந்தி சமாதானம் அமைதி இவைகளை அபேக்ஷிக்கிறான்.

ஒவ்வொருவனும் அவனவனுக்குரிய விகாசநிலைமையை, இவ்விதமாய் அமைப்பெற்றிருக்கிறான். அந்த நிலைமை பொதுவாய அவனவனின் ஜனனகால விசேஷங்களினால் தெரியவரும். முக்கியமாயும், குறிப்பாயும், அவனவனுடைய குணங்களால் வெளியாகும் வர்ணம் ஆச்சிரமம் இவைகள் போன்ற குறிப்பிட்ட மனுஷ விகாஸநிலைமைகளுக்கு விதிகள் ஏற்பட்டாலும், சாதாரணமான அறி

தான் முன்செய்த கருமவசமான ஒரு சீலத்துடன ஒருவன் இந்தவுலகத்திற் பிறக்கிறான். இந்தச்சீலம் மித்திரமோ சத்துருவோ, இதை வைத்துத்தான் அவன இனிமேல் நடைபெற வேண்டும். அதை வைத்துக்கொண்டு தான இன்ன நோக்கத்தை இன்ன உதவியினால் நிறைவேற்றினால் பலவத்தாகும் என்று தெரிந்துதான் கிருஷிசெய்ய வேண்டும்.

ருதம் அநிருதம் இவைகளின் மூலத்தைத் தெரிந்து கொள்ளவேண்டும். அதினால் ருதம் இன்னதென்றும் அநிருதம் இன்னதென்றும் தெரிந்துகொள்வான். பிறகு பூந்தோட்டம் போடுகிறவன புஷ்பங்களைப் பயிற்சிசெய்து, களைகளை வேறுபடுத்துவதுபோல் இவனும் ருதங்களைப் பயிற்சித்து, அநிருதங்களை வேரறுப்பான். ஒவ்வொரு மனிதனும், தான் ஒரு பூந்தோட்டம்போ லிருக்கிறான். கவனமுள்ள தோட்டக்காரனுகத் தன்னை செய்துகொள்ளக்கடவன.

## மூன்றாவது பகுதியில்

### மூன்றாவது அதிகாரம்

முற்றிற்று.

## III வது பகுதியில்

## IV. வது அதிகாரம்.

---

### தரும முறையின் நிர்ணயம் (பிரமாணம்)

இப்போதிய விகாச நிலைமையில் ஒரு காரியம், ருதம் அல்லது அநிருதம் என்பதை அக்காரியம், நேர்மை (ஐக்கியத்தன்மை) பயக்கக்கூடியதா, அல்லது வேற்றுமை யாகக் கூடியதா, என்ற நிர்ணயம்(பிரமாணம்) மூலமாய்த் தீர்மானிக்கவேண்டும்.

விகாசத்தின் தற்காலகதியானது ஜீவாத்துமாக்களின் ஐக்கியபாவத்தைக் கோரியே, நிகழுகின்றது. சரீர வேறுபாடுகளைக் கவனியாது அவைகளில் இயங்குகின்ற பிராண ஏகபாவத்தை நாடி சத்திய நெறியாகிய ஐக்கியத்தை உண்டுபண்ணும் வழியை அநுசரித்து நடைபெறுகின்றது.

தருமமுறையின் நிர்ணயம் யாதெனில், ஒற்றுமையே தவிர வேற்றுமையன்று. ஜீவாத்மாக்களுக்குள் எல்லாம் நேர்மையான சம்பந்தங்களை நிலைநிறுத்தி ஒற்றுமையை உண்டுபண்ணலாம்.

தருமமுறையின் கருத்தாவது நேர்மையான சம்பந்தங்களை அமைப்பித்து அதன் மூலமாய்ச் சந்தோஷம் ஜனிக்குமாறு செய்வித்தல் என்று முன் I-வது அதிகாரத்தில் சொன்னதின் காரணம், இப்பொழுது நன்கு விளங்கும்.

தருமமுறையின் காரியமானது, மேற்கண்டபடி நேர்மை சம்பந்தங்களை அமைப்பிப்பதாம். அதுவே ஜன சமூகத்தின் பலவாறான அங்கங்களை ஒன்றோடொன்று நேர்மையாக ஒழுகும்படி செய்விக்கின்றது. எல்லா ஜாதியார்களும், எல்லாத் தேசத்தார்களும், ஒரு, மகாபுருஷனாகக் கவனிக்கத்தக்கது. இது வெறுமையான உருவகமன்று. அந்தர்யாமியான புருஷனே, அல்லது ஆத்மாவே உண்மையில் புருஷோத்தமன். அவனே ஈசானன். அவனே ஈசுவரன். அவனுக்குச் சரீரம் ஜனசமூகமதான. அந்த விரிந்த சரீரத்தின் கண், ஒவ்வொரு பிரதக்கான ஜீவனும அதின ஜீவஅணு. அந்த மகத்தான சரீரத்தை, வருத்துகின்ற வியாதிகளாவெனில், தேசத்தார்களுக்குள நேரிடும் போர்கள், மனிதர்களுக்குள் ஒருவருக்கொருவர் செய்யும் சண்டைகள, வறுமை, பஞ்சம, போட்டிகள், வலுத்தவன எளியவனை ஹிம்ஸித்தல், இது முதலான எண்ணிறந்தியவைகளாம். இவைகளினால் அந்தச்சரீரத்தின் அங்கங்களான மனிதர்கள் நேர்மையிழந்து பொதுக்ஷேமம கருதாமலும் பொதுவான நோக்கமின்றியும, தனக்குத்தனக்கென்று போட்டியாய்க் கிருஷி செய்கிறவர்களாய் ஒழுகுகின்றார்கள்.

மனிததரும நீதி ஸ்வபாவங்களை ஸ்ரீ கிருஷ்ணபகவான் கீதையில் தெய்வசம்பத்து எனறும் ஆசுரசம்பத்து எனறும் இருபான்மையாகப் பொதுவில் வகுத்திருக்கின்றார்.

தெய்வசம்பத்தின்கண் அடியில்வரும் குணங்கள் அடங்கும். எல்லா ஜீவராசிகளுக்குள்ளும் நேர்மையான பாவங்கள் ஜனிக்குமாறு ஒழுகும் ஒழுக்கம் அவைகளுக்குள்

ஏகபாவத்தையும் சினேகத்தையும் விருத்தி செய்தல், சாந்தி, சமாதானம், நிலைபெறச்செய்யும் நடை, சுருக்கமாய் ஜீவவிகாசத்தைப் பூர்த்தியாய் முறைதவறாது நடைபெறச் செய்தல்.

𑌅𑌭𑌯𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌃
  𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 ।
𑌦𑌾𑌨𑌂 𑌦𑌮𑌶𑍍𑌚 𑌯𑌜𑍍𑌞𑌶𑍍𑌚
  𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌸𑍍𑌤𑌪 𑌆𑌰𑍍𑌜𑌵𑌮𑍍 ।
𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌸𑌤𑍍𑌯𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌃
  𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌪𑍈𑌶𑍁𑌨𑌮𑍍 ।
𑌦𑌯𑌾 𑌭𑍂𑌤𑍇𑌷𑍍𑌵𑌲𑍋𑌲𑍁𑌪𑍍𑌤𑍍𑌵𑌂
  𑌮𑌾𑌰𑍍𑌦𑌵𑌂 𑌹𑍍𑌰𑍀𑌰𑌚𑌾𑌪𑌲𑌮𑍍 ॥
𑌤𑍇𑌜𑌃 𑌕𑍍𑌷𑌮𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌶𑍌𑌚𑌮𑍍
  𑌅𑌦𑍍𑌰𑍋𑌹𑍋 𑌨𑌾𑌤𑌿𑌮𑌾𑌨𑌿𑌤𑌾 ।
𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌸𑌂𑌪𑌦𑌂 𑌦𑍈𑌵𑍀𑌮𑍍
  𑌅𑌭𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌰𑌤

(கீதை. 16–அது. 1–3)

(இ-ள்) பயமின்மை, மனோ நிர்மலம், ஆத்மஞான உபாயத்தை ஆராய்ந்து அநுஷ்டையிலிருத்தல், தானம் செய்தல், இந்திரியங்களை அடக்குதல், யாகஞ்செய்தல், அத்தியயனம் செய்தல், தபஞ் செய்தல், நேர்மை, பிறருக்குத் துன்பம் செய்யாமை, பொய்யின்மை, கோபமின்மை, தன்னை மறத்தல், (அகங்காரமின்மை) மனத்தை அடக்குதல், புறங்கூறாமை, ஜீவராசிகளிடத்தில் செந்தண்மை பூண்டொழுகுதல், பொருளாசையற்றிருத்தல், சாந்தமாயிருத்தல், நாணமும் அடக்கமும், சபலமின்மை, பெருந்தன்மை, பொறுமை, தைரியம், சரீர மனசுத்தி, பிறருக்கு துரோகஞ்செய்யாமை, கர்வமின்மை, இவைகளெல்லாம், ஓ! பாரதவம்சத்திற்பிறந்தவனே, தெய்வசம்பத்துடன் பிறந்தவனுடைய குணங்களாம்.

ஆசுரசம்பத்தின்கண், மேற்கண்டவைகளுக்கு மாறுன பாபசுவபாவங்களை வைத்து ஸ்ரீகிருஷ்ணபகவானசொல்லுகிறார். இவைகளின் கதி என்னவென்றால், ஜீவாத்மாக்களில் பேதபுத்திகற்பித்தலும், அகங்காரத்தையும் வேற றுமையையும் விருத்திசெய்தலுமாம்.

பேதபுத்தியான மயக்கமே, வித்தாக அதினின்று, இந்த ஆசுரசுவபாவங்கள், விளைகின்றன.

𑌦𑌮𑍍𑌭𑍋 𑌦𑌰𑍍𑌪𑍋𑌽𑌭𑌿𑌮𑌾𑌨𑌶𑍍𑌚
𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 𑌪𑌾𑌰𑍁𑌷𑍍𑌯𑌮𑍇𑌵 𑌚
𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚𑌾𑌭𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯
𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸𑌮𑍍𑌪𑌦𑌮𑌾𑌸𑍁𑌰𑍀𑌮𑍍 ।

(கீதை. XVI. 4)

(இ-ள்) ஓ! பார்த்தா, டம்பமானமிஷம், தானென்ற அகம்பாவம், தற்புகழ், கோபம், குரோதத்தன்மை, அஞ்ஞானம், இவைகள் ஆசுர சம்பத்துடன் பிறந்தவனுடைய சுவபாவங்களாம்.

𑌆𑌤𑍍𑌮𑌸𑌮𑍍𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌃 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑌾
𑌧𑌨𑌮𑌾𑌨𑌮𑌦𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃
𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌨𑌾𑌮𑌯𑌜𑍍𑌞𑍈𑌸𑍍𑌤𑍇
𑌦𑌮𑍍𑌭𑍇𑌨𑌾𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍 ।
𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌂 𑌬𑌲𑌂 𑌦𑌰𑍍𑌪𑌂
𑌕𑌾𑌮𑌂 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 𑌚 𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ।
𑌮𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌪𑌰𑌦𑍇𑌹𑍇𑌷𑍁
𑌪𑍍𑌰𑌦𑍍𑌵𑌿𑌷𑌨𑍍𑌤𑍋𑌽𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌕𑌾𑌃 ।
𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 𑌨𑌰𑌕𑌸𑍍𑌯𑍇𑌦𑌂
𑌦𑍍𑌵𑌾𑌰𑌂 𑌨𑌾𑌶𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।

காமக்ரோதபராயணா
ஸ்வஸ்வாதேஹத்ருயாதஜெஜக

கீதை. XVI, (17. 18. 21.)

(இ-ள்) தற்புகழுடையவர்களாயும், படிவாதமுள்ளவர்களாயும், பணத்தினால் உண்டான கர்வமதமுள்ளவர்களாயும், டம்பார்த்தமாய் வேதவிதிப்படியில்லாமல், பெயர்க்குமாத்திரம் யக்ஞமென்ற கிரியையைச் செய்கின்றார்கள்.

அகங்காரத்தையும், மூர்க்கத்தனத்தையும், இச்சையையும், கோபத்தையும் ஆசிரித்தவர்களாய் தங்களிடத்திலும் மற்றைச் சரீரங்களிடத்திலும் அந்தர்யாமியாகவிருக்கின்ற என்னைத் துவேஷிக்கின்றார்கள்.

தனக்கு நாசத்திற்கு ஏதுவானதும், நரகத்திற்கு முப்பான்மை வாசலாகவும் இருக்கின்ற காமம் குரோதம், லோபம் என்ற மூன்றையும் ஒருவன் விட வேண்டும்.

பகவத்கீதை XVI வது அத்தியாயம் முழுமையும், இதுசம்பந்தமாய் நன்றாய்ப்படித்துச் சிந்தனை செய்தல் வேண்டும்.

III-வது பகுதி

III-வது அதிகாரம் முற்றிற்று.

---

## III-வது பகுதி

## V-வது அதிகாரம்.

### புண்ணிய கருமங்களும் அவைகளின் ஆதாரமும்.

நேர்மையான சம்பந்தங்களை அமைப்பித்தல் என்றால் அவரவர்கள் பரஸ்பர சுயநய அபிமானங்களைத் தியாகஞ் செய்தலாம். எல்லா ஜீவர்களும் ஒரு ஜீவனின் அங்கங்க

ளென்றுணர்ந்து, அந்த ஜீவனின் உயிர் வாழ்க்கைக்குள்ளடங்கி பணிந்து நடைபெறவேண்டுமென்பதாம். சரீரத்தின்கண் சிற்றறைகள் (cells) ஏராளமாயிருப்பினும், அவைகளின் ஒவ்வொரு சிற்றறையின் இயங்குகின்ற பிராணன் தனிப்பட பிரதக்காக நிகழாது. சரீரம் முழுமையும் பரவிச் சலிக்கும் பிராணனுக்குள்ளடங்கி எவ்விதமொழுகுகின்றதோ, அவ்விதமே, பிரபஞ்சத்தில் ஈசுவரனின்பிராணசத்திக்குள்ளடங்கியதாக ஒரு ஜீவனும் அமைந்திருத்தல் வேண்டும். மேற்கண்ட சிற்றறைகள் தனித்தனியே வெவ்வேறான தொழில்களைச் செய்ய உரிமைப்பட்டிருக்கின்றன. ஆயினும், அந்தந்தத்தொழில் ஒவ்வொன்றும் சரீரத்தின பொதுவான ஒழுக்கத்தின் ஒரு பகுதியாகஇருக்கின்றது. சரீரத்தில் ஒவ்வொரு சிற்றறைக்கும் அததற்குரிய ஸ்தானம் ஏற்படுகிறது. அவ்வாறே ஒவ்வொரு ஜீவனும் பிரபஞ்சத்தில் அததற்குரியஸ்தானம் விதிக்கப்பட்டு அமையப் பெற்றுள்ளது. எல்லா ஜீவர்களையும் ஒரே பிராணன் வியாபித்திருக்கின்றது. ஒவ்வொரு ஜீவனும் இந்தஒரே பிராணரூபியான ஆத்மா. அதாவது ஈசுவரனின ஆக்ஞைக்கனுசரணையாய்ஒழுகவேண்டும். இந்தவரம்புக்குட்பட்டுத்தான் நாமெல்லாம் தொழில் செய்யவேண்டும். நம்முடைய ஜீவஒழுக்கத்திற்கு விதிபூர்வமானவரம்பு இதுதான். எல்லா ஜீவர்களும் சங்கிலிபோல் பரஸ்பரம் பிணைப்பட்டிருக்கின்றார்கள். இதனால் பரஸ்பர சம்பந்தங்களும் அவைகளின் மூலமாய்த் தியாகங்களும் ஏற்படுகின்றன. எல்லா ஜீவர்களும் ஒருவரைஒருவர் சார்ந்திருக்கின்றார்கள். எல்லாம் மகத்தான ஒரேபிராணனைச் சார்ந்திருக்கின்றன. இந்தப் பரஸ்பர அந்நியோந்நிய சார்பான நிலைமை, அதினால் நிகழும் பரஸ்பரதியாகம் இவைதாம் யக்ஞமென்று வழங்குகிறது. இதைப்பற்றி முன்னமே I, II வது பகுதிகளில் பிரஸ்தாபித்திருக்கிறோம்.

நாம் எந்தக்கருமங்கள் செய்திடினும் அவைகளெல்லாம் யக்ஞத்தின் பொருட்டே செய்யக்கடவோம். அப்பொழுதுதான் விதிபூர்வமாக அதை அனுசரித்து ஒழுகுவோமாவோம். பிரபஞ்ச சக்கிரத்தின் மையமான பொது பிராணகதியை அனுசரியாமல் ஒருவன் தனக்குத்தானென்று நினைத்து சுயநய விருப்பமுள்ளவனாக ஒழுகுவானாகில் தனக்குத்தானே பந்தங்களை உண்டுபண்ணி அவைகளினால் வருந்துகிறான்.

𑌯𑌜𑍍𑌞𑌾𑌰𑍍𑌥𑌾𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑍍𑌰
𑌲𑍋𑌕𑍋𑌽𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌨𑌃॥
𑌤𑌦𑌰𑍍𑌥𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯
𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑌙𑍍𑌗𑌃 𑌸𑌮𑌾𑌚𑌰।

(கீதை. III. 9.)

(இ-ள்) ஆராதன ரூபமான கருமத்தைவிட்டு மற்ற காம்ய கருமத்திலே பிரவிருத்திக்கின்ற இந்த ஜனங்கள் கர்மத்தினால் கட்டப்பட்டவர்களாகின்றார்கள். ஆகையினாலே குந்தி புத்திரா, ஆராதனரூபமான கருமத்தைப் பலாபேக்ஷையின்றிச் செவ்வையாகச் செய்.

பிரபஞ்சத்தில் பரஸ்பர சம்பந்தப்பட்டிருக்கிற வெவ்வேறு ஜீவவர்க்கங்கள் முன்சொல்லியபடி அடியில்வருவனவைளாம். தேவர், பிதுரு, ரிஷிகள், மக்கள், பிராணிகள். இவர்களை உத்தேசித்துச் செய்யும் யக்ஞங்களை ஒவ்வொருவரும் செய்யக்கடமைப்பட்டிருக்கின்றார்கள்.

தருமநீதிமுறையில் கடமை என்றால் செய்யக்கடவன, அதாவது கடன்பட்டிருக்கும் செய்கை, அதாவது தீர்க்கவேண்டியதென்ற உத்தரவாதம் பொருந்திய செய்கை என்று பொருள்படும். பிரபஞ்சத்தின் சமநிறையில் குறைவு நேர்ந்தால் சுவாபாவிகமாய அதைநிறைவுசெய்யப் பிரவிருத்தி ஏற்படுகின்றது. இதுதான் கிருத்தியம். பிரதி கிருத

தியம் என்று சாமாந்நியகர்மவிதி யெப்பொழுதும் இந்த நிகழ்ச்சியால் விதி நேர்மை உண்டாகின்றது. கடமைகள் என்றால் மனிதன் தான் பெற்றிருக்கும் உபகாரங்களுக்கு பிரதிப்பிரயோஜனமாகத்தான் பிறர்களுக்கு உத்தரவாதம் பண்ணவேண்டிய கடன்களாம். அதாவது ரணங்களாம்.

பஞ்சமகா யக்ஞங்கள் என்று ஐந்து கடமைகளில் மூன்று முக்கியமாய் விசேஷ பொதுவான நோக்கத்தின மேல் ரணங்கள் என வழங்குகின்றன. அவைகளை மனிதன் ஆயுள்காலவரை செய்யக்கடவன். அவைகளாவன: (1) ரிஷி ரணம். (2) பித்ரு ரணம். (3) தேவ ரணம்.

𑌅𑌧𑍀𑌤𑍍𑌯 𑌵𑌿𑌧𑌿𑌵𑌦𑍍𑌵𑍇𑌦𑌾𑌨𑍍
𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌂𑌶𑍍𑌚𑍋𑌤𑍍𑌪𑌾𑌦𑍍𑌯 𑌧𑌰𑍍𑌮𑌤𑌃
𑌇𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌚 𑌶𑌕𑍍𑌤𑌿𑌤𑍋 𑌯𑌜𑍍𑌞𑍈𑌃
𑌮𑌨𑍋 𑌮𑍋𑌕𑍍𑌷𑍇 𑌨𑌿𑌵𑍇𑌶𑌯𑍇𑌤𑍍 ।

(மனு. VI. 36)

(இ-ள்) விதிப்படி வேதாத்தியயனம் செய்தும் தருமவழியாய்ப் புத்திரர்களை உற்பத்திசெய்தும், சக்தியானுசாரமாய் யஞ்ஞம் செய்தும், பிறகு மோக்ஷத்தை ஒருவன் அபேக்ஷிக்கவேண்டும்.

பிரஹ்மசாரி, கிரகஸ்தன், வானப்பிரஸ்தன், என்ற முறை ஆச்சிரமத் துவாராக இம்மூன்று ரணங்களையும் தனித்தனியே துவிஜர்கள் தீர்க்கக் கடமைப்பட்டிருக்கின்றார்கள். ஒவ்வொரு ஆச்சிரமமும் ஒரு ரணத்திற்குச் சம்பந்தப்பட்டிருக்கின்றது. ரிஷிருணம், குருகுலவாசியாகி, பிரம்ஹசாரி ஆச்சிரமியாய் அத்தியயனம். அத்தியாபனம் என்ற இருதொழிலால், நிவிருத்தியாகின்றது. பித்ருரணம் தானம் முதலான கடமைகளை வகித்துக் கிரஹஸ்தனாயிருந்து குடும்பம் உற்பத்தி செய்தலினால் நிவி

ருத்தியாகின்றது. தேவாரணம் முக்கியமாய் வானப்பிரஸ்தாச்சிரமியாகவிருந்து, யஜனம் யாஜனம் செய்தல் மூலமாய் நிவிருத்தியாகின்றது. நான்காம் ஆச்சிரமமான சந்நியாஸம், மற்ற மூன்று ஆச்சிரமங்களின் முடிவு நிலையாய் மேலான பதவியாக நிகழ்கின்றது. விகான நிலைமையில், பாலனான சூத்திரர்களுக்கு சுச்ருஷை என்ற ஒருவார்த்தையில் அடங்குகின்ற கடமைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. உண்மை நோக்கில், உயர்ந்த சந்நியாசியின் கடமைகள் எல்லாம் லோகோபகாரார்த்தமாய்ச் செய்யும்பணிவிடைகளாம் என்னவும் அவனுக்குத்தான்டைய வேண்டிய தொண்டு மிகலே. ஆகவே விகான நிலைமையில் பாலனான சூத்திரர் கடமையே விகான நிலைமையின் விருத்தாப்பியனான சந்நியாசியின் கடமையாக முடிகின்றது. ஆனால் பிறப்பட்டவர் கடமை, பெருந்தன்மையாக நிகழ்கின்றது.

பிதா புத்திரன் இவர்களுடைய சம்பந்த ரூபமாய் கடமை முறையை உதாகரிப்போம். பிதா அவன் பால்ய தசையில் தன்னுடைய மாதா பிதாக்களால் போஷிக்கப்பட்டும், பாதுகாக்கப்பட்டும், அதன் மூலமாய் ருணத்திற்குள்ளாகிறான். அதையே தன்னுடைய புத்திரனுக்குச் சரீரத்தைக் கொடுத்து அவனைப் பால்யகாலத்தில் பாதுகாத்தல் என்ற கடமை மூலமாய்த் தீர்க்கிறான். அப்புத்திரன் தன் பிதாவிடமிருந்து சரீரம் பெற்று அவனுக்குச் செய்யும் சுச்ருஷை மூலமாக கடமை தீர்க்கிறான். தன்னுடைய பால்யகாலத்தில் தான் பெற்ற உபகாரத்தைத் தன்னுடைய மக்களுக்கு அவ்வாறே தான் செய்யக் கடமைப்பட்டிருக்கிறான்.

ஒரு கடமையைச் செய்யும்படி ஏவும் குணத்தைப் புண்ணியமென்றும் அதைச் செய்யாமல் தடுக்கும் குணத்

தைப் பாபமென்றும், சொல்லுகிறது. எந்தச் சம்பந்தத்தி னின்று சந்தோஷம் ஜனிக்கவேண்டு மென்றாலும் சரி, அந்தது அந்தச் சம்பந்தத்தில் உடன் பட்டவர்கள் அவரவர் தந்தம் நிலைமைக்குரிய கடமைக் கேற்பட்ட கருமங்களை நிறைவேற்றுகிறதைப் பற்றியதாக இருக்கிறது. அவ் வாறே துன்பமும் அவர் அவர் செய்யவேண்டிய கடமைக் கருமங்களைச் செய்யாமையைப்பற்றியே நிகழுகின்றது. தகப்பனும் மகனும் ஒருவருக்கொருவர் அந்நியோந் நியமாகவும் சந்தோஷமாகவு மிருக்கவேண்டுமானால், தகப்பன் மகனிடத்தில் அன்பும் ஆதரவும், அவன் க்ஷே மத்தில் கவனமும் பாராட்டல் வேண்டும். மகன் தகப்ப னிடத்தில் பணிவும் பக்தியும், உதவியும் பாராட்டல்வேண் டும். அப்படியின்றித் தகப்பன் மகனிடத்தில் கொடூரமும் ஹிம்சையும், பராமுகமும்செய்தும், மகன் தகப்பனிடத்தில் வணக்கமின்மையும், அலக்ஷியமும் உதாசீனமும பாராட் டியும், ஒருவருக்கொருவர் இவ்விதம் ஒழுகுவராகில் இரு வர்களும் சந்தேகமின்றித் துன்பப்படுவார்கள். தகப்பனும் மகனும் ஒருவருக்கொருவர் அன்பு பாராட்டுவாராகில், அதினாலுண்டாகும், நற்குணங்களுக்குரிய கருமங்கள் செய்வாராவார்கள். ஒருவருக்கொருவர் பகைபாராட்டு வாராகில் துர்க்குணங்களுக்குரிய கருமங்கள் செய்வாரா வார்கள். பிரகிருதி பாவத்தினால் ஏற்படும் வேற்றுமை யைவிட ஆத்துமபாவத்தினால் ஏற்படும் ஒற்றுமை, உணர் வினால் பயக்கும் அன்பின் வழியனவாம். புண்ணிய கருமங் கள் ஆத்தும பாவத்தினால் ஏற்படும் ஒற்றுமையைவிடப் பிரகிருதி பாவத்தினால் ஏற்படும் வேற்றுமையைப் பாராட் டும் பயிற்சியில்லாத அறிவின் பயனாகிய பகைமைக்குணத் தின வழியனவாம் பாபகருமங்கள்.

புண்ணியம், பாபம் என்றும் ருதம் அநிருதம் என்றும் நன்மார்க்கம், துன்மார்க்கம் என்றும் மனுஷனின் ஒழுக்கத்தைப்பற்றி எவ்வாறாக நாம் வசனித்தாலும் அவைகளெல்லாம் தருமத்தின் சுவரூபமாகிய சத்தியத்தையே ஆதாரமாக அமைக்கப் பெற்றன. தியாகமும் கடமையும், தருமத்தை அனுசரித்தே நிகழ்கின்றன. தருமமே சத்தியமாக ஜ்வலிக்கிறது. உண்மையில் ஈசுவரனே சத்தியம். ஈசுவரன் ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரித்துப் பிரசன்னமான காலத்தில் தேவர்கள் அடியில் வருமாறு ஸ்தோத்திரம் செய்தார்கள்.

ஸத்யவ்ரதம் ஸத்யபரம் த்ரிஸத்யம்
ஸத்யஸ்ய யோநிம் நிஹிதம் ச ஸத்யே।
ஸத்யஸ்ய ஸத்யம்ருதஸத்யநேத்ரம்
ஸத்யாத்மகம் த்வாம் சரணம் ப்ரபந்நா:॥

(பாகவதம். X. ii. 26)

(இ-ள்) ஸ்ரீ சத்தியத்தையே விரதமாகக் கொண்ட மூர்த்தியே, சத்திய விருத்திரூபியே, மூன்று காலத்திலும் சத்தியமான மூர்த்தியே, சத்தியத்தின் மூலமே, சத்தியத்தின் வாயிலே, சத்தியத்தின் சத்தியமே, ருதம் சத்தியம் இவைகளின் நியாமகரே, சத்திய சுவரூபியே, உம்மையே சரணமடைகின்றோம்.

நற்குணங்களெல்லாம் சத்தியத்தின் சுவரூபங்களேயாம். பீஷ்மர் பின்வருமாறு அவைகளைச் சொல்லுகிறார்.

ஸத்யஞ்ச ஸமதா சைவ
தமச்சைவ ந ஸம்சய:
அமாத்ஸர்யம் க்ஷமா சைவ
ஹ்ரீஸ்திதிக்ஷாநஸூயதா।
த்யாகோ த்யாநமதார்யத்வம்
த்ருதிச்ச ஸததம் தயா

அஹிம்ஸாசைவராஜேந்த்ர
ஸத்யாகாராஸ்த்ரயோதஸ॥
(மகாபாரதம். சாந்திபர்வம். CLxii. 8-9.)

(இ-ள்) (1) வாய்மை. (2) நடுநிலைமை. (3) புலனடக்குதல். (4) ஐயமின்மை. (5) பொறாமையின்மை. (6) பொறுமை. (7) சகிப்பு. (8) அழுக்காறாமை. (9) கொடை. (10) பிறர் நன்மை பாராட்டல். (11) மனோதைரியம். (12) எப்பொழுதும் செந்தண்மை பூண்டு ஒழுகுதல். (13) பிறர்க்கு இன்னாசெய்யாமை. இப்பதின்மூன்றும் சத்தியத்தின் பரிணாமங்களாம்.

சத்தியமென்பது என்றுமுள்ளது. பீஷ்மர் சொல்லுகிறபடி,

ஸத்யம்ப்ரஹ்மஸநாதநம்
ஸர்வம்ஸத்யே ப்ரதிஷ்டிதம்॥
(ஷை. சாந்திபர்வம். 5)

(இ-ள்) சத்தியமென்பது என்றுமுள்ள பிரமன் சத்தியத்திலேயே எல்லாம் நிலைபெறுகின்றது.

பிரபஞ்ச தருமங்களெல்லாம் சத்தியத்தின் பரிணாமங்களே. அஃதாவது, அவைகள் அநாத்மாவாகவும் அசத்தியமாகவும், மாயாமயமாகவுமுள்ள மூலபிரகிருதியின் வசப்புக்குட்பட்டதாய். சத்தியமும், ஆத்மாவும், புருஷன் விகசிக்கும் முறைமையின் விதங்களாம். ஆகவே அவைகள் நேர்மை பிறழாமல் நடுநிலைமையோடும் நுட்பமாயும் நடைபெறுகின்றன. வாய்மை என்பது இந்தத் தருமங்களுடன் நேர்மை பற்றியிருப்பது தான்; அப்படி நடப்போமாயின் பிரபஞ்ச விகாசத்திற் குரிய சக்திகள் நமக்கனுகூலமாகவும் நம்முடனேயும் இசைந்து ஒழுகுவனவாகும். இதுவே ஈசுவரனுடன் ஒத்து ஒழுகுவதாம். விஞ்ஞானத்தினால் உள்ளது, இல்லாததுஎன்றதையும் ஆத்துமா, அநாத்

பாவனையும், விவேசனம் செய்தும் நித்யாநித்ய விவேகம் பெற்றும், ஒருவன் நித்யத்தையே கடைப்பிடியாகக் கைகொண்டு சத்தியத்தின பரிணாமங்களான புண்ணியங்களைப் பயிற்சி செய்கிறான்.

அசத்தியம் என்பது இல்லாமை. புண்ணியங்கள் சத்தியத்தின் பரிணாமங்களைப்போல பாபங்களும் அசத்தியத்தின் பரிணாமங்களாம். ஆகையால் சத்தியத்தின மதிப்பு ஏற்படுகிறது. அது தனிமையான ஒரு புண்ணியமாக இராமல் எல்லாப் புண்ணியங்களினும், ஆதாரமாகவும் அம்சமாகவும் இருக்கிறது

வாய்மை புராதனமாக ஆரியனின், முக்கியமான கடைப்பிடியாக இருந்திருக்கிறது. வீரத்தன்மையின் ஒரு அம்சமாகவே அடிக்கடி அறிவுறுத்தப் பட்டிருக்கிறது. இதை அனுசரித்தே ஸ்ரீ கிருஷ்ணபகவானும் அபிமன்யுவின் மரித்த குழந்தையைப் பிழைப்பிக்குங் காலத்தில் அடியில் வருமாறு சொல்லுகிறார்.

நப்ரவீம்யுத்தரே மித்யா ।
ஸத்யமேதத்பவிஷ்யதி
ஏஷ ஸஞ்ஜீவயாம்யேநம்
பஶ்யதாம் ஸர்வதேஹிநாம் ।
நோக்தபூர்வம் மயா மித்யா ।
ஸ்வைரேஷ்வபி கதாசந
நச யுத்தாத் பராவ்ருத்த
ஸ்ததா ஸஞ்ஜீவதாமயம்
யதாஹம் நாபிஜாநாமி
விஜயேந கதாசந ।
விரோதந்தேந ஸத்யேந

ததா ஜீவத்வயம் ஶிஶு:॥
யதா ஸத்யம் ச தர்மஶ்ச
மயி நித்யம் ப்ரதிஷ்டிதௌ॥
ததா ம்ருத: ஶிஶுரயம்
ஜீவதாதபிமந்யுஜ:॥

(மஹாபாரதம் அசுவமேதபர்வம். LXIX. 18-19-21-22.)

(இ-ள்) ஓ உத்தரே? நான் பொய் சொல்லுகிறவனல்லன். என்வார்த்தைகள் இப்பொழுது நிஜமாகப் போகிறது பார். எல்லாரும் பார்க்க இந்தக் குழந்தையை நான் உயிர்ப்பிக்கிறேன் பார்.

விளையாட்டிலும் கூட நான் ஒரு பொய் சொன்னவனல்லன். யுத்தத்தினின்று நான் புறங்காட்டி இதுவரை வந்தேன் அல்லன். இவைகளெல்லாம் வாஸ்தவமாயிருக்கும் பக்ஷத்தில் இந்தக் குழந்தை உயிர்ப்பிக்கட்டும்.

. ... . ..... .. ............

எனக்கும் என் நண்பன் அர்ஜுனனுக்கும் ஒரு காலும் மனஸ்தாபம் நேரிடவில்லை. இது வாஸ்தவமானால் மரித்த இக்குழந்தை உயிருடன் எழுந்திருக்கட்டும்.

ஸத்தியமும் தருமமும் என்னிடத்தில் ஸ்திரமாக இருத்தல் வாஸ்தவமானால் அபிமன்யுவின் இந்த இறந்த குழந்தை ஜீவனுடன் எழுந்திருக்கட்டும்.

இம்மாதிரியே மற்ற வீரர்களும் சொல்லியிருக்கின்றார்கள். என் நா ஒரு பொய் எப்பொழுதும் சொல்லியிருக்காது. தகப்பனார் வார்த்தை பொய்த்துப் போகாமலிருக்கும் பொருட்டு ஸ்ரீ ராமன் 14 வருஷம் வனவாசம் செய்தார். தான் வனவாசம் செய்கிறதாக வாக்குத்தத்தம் பண்ணியதால் யுதிஷ்டிரர் அதற்கேற்பட்ட காலங்கழியு முன், தன் ராஜ்யம் வேண்டிப் போர்புரிய இணங்கினாரில்லை. இவ்விதமாக அடிக்கடி சொல்லப்பட்ட புத்திமதியினுடைய

யும் இவ்வுதாரணங்களுடையவும் பலனாக, ஆரிய சுபா வத்தில் சத்தியத்தின் அத்தியந்தப்பிரியம் ஒரு விசேஷ அம்சமாக அமைந்தது. இந்தக் குணமானது இந்துக் களுடைய பிராதான்னிய குணமாக அடிக்கடி பிறரா லும் குறிக்கப்பட்டிருக்கிறது.

சத்தியம் ஆதாரமாக அமையாத புண்ணிய நிலை யில்லை. சத்தியபாவம் களங்கமற்று நிகழுமாகில் அவனு டைய சீலம், இழிவாக இராது. அதுவே உண்மையான புருஷத்தன்மையின் மூலமாம். அதுவே நிரனின சிரேயஸ் ஸாம். அதுவே சத்தியவான்களுடைய கிரீடமாம். அதுவே குடும்ப க்ஷேமத்தின் ஆதாரமாம். அதுவே இரா ஜாங்கத்தின் ரக்ஷையாம். அசத்தியமோ வென்றால், குல த்தையும் தேசத்தையும், வேரோடழித்தும், புண்ணிய கருமங்களான வற்றுக்களில் ஈடுபடும் சீலத்தை அசுத் தப்படுத்தவும் தாழ்மைப்படுத்தவும் செய்யும். பொய் யன் எப்பொழுதும் தைரியஹீனன். எப்பொழுதும் நிந் தைக்குப் பாத்திரன். பிறர் வெறுப்பும் பிறர் இகழ்வும் அவனுடைமை. சீலம் ஏற்படவேண்டுமானால் சத்தியத் தையே அதின் ஆயதனமாகக் கொள்ளல்வேண்டும்

தருமநீதி முறையின் மூலாதாரத்தை இப்பொழு தும் கவனிப்போமாகில் சத்தியத்தின் உயர்வின் காரணமா கவாகு விளங்கும் மூலத்தை நோக்கி விசாரிப்போமாகில் பொய்மையானது பிருதக்பாவ இச்சையின் காரியமாய் முடிவில் அமைகிறதும் தவிர, வெறுப்பு, வேற்றுமை, பகைமை, இவைகளுக்கு வித்தாகவும் ஏற்படுகிறது. வாய் மையோவென்றால் அன்புக்கு வித்தாகிய, ஆத்ம ஏகீபாவ த்தின் இச்சையின் காரியமாய் முடிவில் அமையும்.

மூன்றாம்பகுதியில்

5-வது அதிகாரம்

முற்றுப்பெற்றது.

# மூன்றாம்பகுதி.

## VI-வது அதிகாரம்.



### ஆனந்தமும் அந்தக்கரண விருத்தியும்.

ஈசுவராம்சம் ஜீவராசிகளில் வியாபித்து, அவைகளின் சரீரவரம்புக்குட்பட்ட தாய்ச், சித்தாகவும் ஆனந்தமாகவும் விளங்குகிறது. ஜீவசரீரம் மேன்மேலும் பலவாறான வேறுபாடுகளை அமையப்பெற்றுக் கருவிகரணங்கள் விகஸித்து அவைகளின் மூலமாய் ஜீவன் மேனமேலும் விளங்குகிறான். ஜீவசக்தியே விகாசத்தைப் பிரேரித்து நடத்துகிறது. இந்தச் சக்தியின் சலனத்தினால் ஜீவன் தாதுவர்க்கத்தின் வரம்பு கடந்து பிறந்து மேன்மேலும் நெகிழ்ந்த தன்மையுள்ள சரீரம்பெற்று. விஷயாதி சலனங்கள் பற்ற ஆயத்தமாகிறான். இந்தச் சக்தியே எல்லா ஜீவர்களிடத்திலும் கடைசியாய் அகங்காரத்தன்மையை உற்பத்தி செய்கிறது. இந்திரியங்களை அமைப்பிக்கிறது. அவைகள் மூலமாய் வெளிவிஷயங்களைக் கிரகித்துத் தன்மயப்படுத்தி மனிதனின் சீலத்தை உண்டுபண்ணுகிறது. இவ்விதமாகப் புண்ணியம், பாபம், ருதம், அநிருதம, நன்மை, தீமை, இவைகளின் பாவங்கள் உண்டாகின்றன.

ஜீவசக்தியானது ஆனந்த நோக்க ரீதியான அவாவினாலும், விக்ஞானத்தின் ஆக்ஞையினாலும், வெளியில் பிரவிருத்திக்கின்றது. மனுஷவர்க்கத்திற்கும் புறம்பான மற்ற ஜீவவர்க்கங்களைப்பற்றி இந்தப் புஸ்தகத்தில் விசாரிக்க வேண்டுவதில்லை. ஆனந்த அனுபவத்திற்குக் காரணமான விஷயாதிகள் நோக்கி, சுவாபாவிகமாக விவஸ்தையின்றி மனிதன் செல்லுகிறான். துன்பம் நேரிட மேற்செல்

லாமல் நின்று யோசிக்கிறான். இவ்விதமாக ஜீவயாத்திரையில் சம்பவங்கள் அடிக்கடி நேரிடுகின்றன. மறுபடியும் விஷயாதிகளை நோக்கிச் செல்லுகிறான். அவ்வாறே மறுபடியும் விஞ்ஞானம் மேற்செல்லாமல் தடுக்கிறது. இவ்விதமாகச் சுவாபாவிக கதி தடைபட்டுச் சீர்திருத்தப்பட்டு, சரியான வழியில் பிரவர்த்தகம் மேற்படுகிறது. ஆனந்தமும், விஞ்ஞானமும், பரஸ்பரம் ஒன்றை ஒன்று பிரேரிப்பிக்கும்படி செய்விக்கிறதினாலேயே மனிதன் மேன்மேலும் அபிவிருத்தியடைகிறான். ஒன்று மனநெகிழ்ச்சி யெனவும் மற்றது பகுத்தறிவெனவும் சொல்லப்படுகின்றது. மனிதன் மேன்மேலும் இடையறாமல் விருத்தியாகவா இனிமேல் ஒன்றையும் வேண்டுவதில்லை. தன்னைத் தூண்டிய மனநெகிழ்ச்சியும் வேண்டுவதில்லை. ஒரு நியதமான ஆனந்தரூபமும், ஒரு நியதமான விஞ்ஞான ரூபமும் வேண்டுவதில்லை. இவை இரண்டும் சுவாரஸ்யத்தின தோற்றங்களாம். அவைகளைத் தாதாத்மியப்படுத்தித் தானாகப் பாவிக்கிறான் அவைகள் அவனுடன் அபின்னமானவைகளாகின்றன.

அந்தக்கரண விருத்தியினால் மனிதன் வெளிவிஷயங்களில் பிரவிருத்தித்து வெளிவஸ்துக்களுடன் ஒற்றுமை பாவத்தை அடைந்து அந்தந்த விஷயாகாரமாகிறான். சைதந்நியமோ வென்றால் நான் என்ற பாவத்தை உண்டுபண்ணி, அனுபவங்களை எல்லாம் அதை நோக்கி நடைபெறும்படி செய்வித்து, எல்லா விஷயங்களையும் நான் பாவத்தை கருதியே, விவேசனம் செய்கின்றது. சைதன்னியமே அகங்காரமாகப் பரிணமித்து நான் அவனென்று வேற்றுமைப்படுத்துகிறது. பின்பு ஞானம் மேன்மேலும் விருத்தியாக, ஜீவன் எல்லாமனிதர்களையும், எல்லாப் பிரபஞ்சத்தையும், தன்னிடத்தில் அடங்கியிருக்கிற

தான பாவத்தை, அடைந்து (அதாவது,) எல்லாம் தானாகி, அகங்காரம் என்ற வரம்பு அழிந்து ஈசுவராம்சத்தை அடைகிறான். வேற்றுமைக்குக் காரணமான அகங்காரதத்துவத்தை அதிக்கிரமிக்கிறான். மஹத்தத்துவத்தில் பிரவேசித்து சர்வஞ்ஞத்துவத்தை அடைகிறான்.

பிரதக்ஜீவ பாவத்தைப் பற்றிய அந்தக்கரண விருத்தியானது, இந்திரியங்கள் துவாரராக வெளியில் பிரவிருத்திக்கின்றது. இந்திரியங்கள் வெளிநோக்கி, அனுபவங்களைச் சைதன்னியத்திற்குத் தெரிவிக்கின்றன. அவையவன் நேர்மையாயிருப்பின் சந்தோஷகரமானவை யென்றும். நேர்மையின்றி யிருப்பின் துக்ககரமானவை என்றும், சைதன்னியம் பாவிக்கிறது. அதுவே ஸ்மிருதிஞானமாகிறது. காலக்கிரமத்தில் சந்தோஷகரமானவை இவையென்றும், துக்ககரமானவை இவையென்றும். ஜீவன பகுத்தறிகிறான். இவ்விதமாய் அந்தக்கரண விருத்தி பயிற்சியடைகின்றது. சைதன்னிய விவேசனம விருத்தி பகுடைய விருத்தியடைய அதனால் நடத்தப்பட்டு அந்தக்கரண விருத்திகள், விருப்பாகவும் வெறுப்பாகவும் சுபாவமாய் வெளிப்படுகின்றன.

இந்திரியங்கள் மனத்துடன் ஐக்கியப்படுகின்றன. அந்தக்கரண விருத்திகள் சைதன்னியத்துடன் ஐக்கியபபடுகின்றன. ஆகவே மனிதன அந்தக்கரணோபஹித சைதன்னியமுள்ளவனாகவும், கர்ம பாவங்களுள்ளவனாகவும் கிரமமாய் ஆகிறான். இந்த நிலைமையானது அவனுடைய விகாசமுறையில் இப்பொழுது நிகழவேண்டியது அவசியமதான்.

முதலில் மனிதன் ருசியுள்ளவைகளை விரும்புகிறான். கசப்புள்ளவைகளை வெறுக்கிறான். ஆனால் அனுபவத்தில்

ருசியுள்ளவைகள் அளவுக்குமிஞ்சினால் கசப்பாகவே முடிகிறது. அறிவுப் பயிற்சியுள்ளவனுக்கு மிதமாயிருத்தல் இயற்கையான அந்தக்கரண விருத்தியாக அமைகிறது.

துவக்கத்தில் ருசியாயிருக்கிறவை, கடையில் சிலவேளை கசப்பாய் ஆகும். தோற்றத்தில் ருசியானது, உண்மையில் சிலவேளை கசப்பாயிருக்கும்.

யத்தத³க்³ரே விஷமிவ
பரிணாமே(அ)ம்ருதோபமம் ।
தத்ஸுக²ம் ஸாத்த்விகம் ப்ரோக்தம்
ஆத்மபு³த்³தி⁴ப்ரஸாத³ஜம் ॥
விஷயேந்த்³ரியஸம்யோகா³த்
யத்தத³க்³ரே(அ)ம்ருதோபமம் ।
பரிணாமே விஷமிவ
தத்ஸுக²ம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥

(பகவற் கீதை : XVIII. 37, 38).

(இ-ள்) எந்தச் சுகமானது துவக்கத்தில் விஷம்போலவும், முடிவில் அம்ருதம்போலவும் இருக்கிறதோ, அந்தச் சுகமானது பரிசுத்தமான ஆத்ம ஸ்வரூப நிர்மலஞானத்தால் உண்டான சாத்வீகமென்று சொல்லப்படுகிறது.

எந்தச்சுகமானது விஷயங்களும் இந்திரியங்களும் சம்பந்தப்படுவதினாலே துவக்கத்தில் அமிருதத்திற்குச் சமானமாயும்முடிவில் விஷத்தைப்போலுமிருக்குமோ, அந்தச் சுகமானது இராஜஸம் என்று சொல்லப்படுகிறது.

இந்த அநுபவங்கள் திரும்பித்திரும்பி நிகழவே, மனிதன் முன்யோசனையுள்ளவனாக ஆகிறான். அந்த முன்யோசனை பயிற்சியடைந்த அந்தக்கரண விருத்தியாக அமைகிறது.

ஆராய்ச்சியின்றி திடீரென்று ஒரு கர்மத்தில் பிரவேசித்தல் சிலவேளை அபாயத்திற் கிடமாய் முடிகிறது. கோபங்கொள்வதினால் வெகுவாய் நேர்மையில்லா அநுபவங்கள் சம்பவிக்கும். ஆகையினால் சகிப்பும் பொறையுடைமையும், மனிதனின் பயிற்சியடைந்த அந்தக்கரண விருத்திகளாக ஏற்படுகின்றன.

அந்தக்கரண விருத்திகள விவேகத்தை அநுசரித்து, நிகழுமாகில் சீலம் ஏற்படுகிறது. அந்தக்கரண விருத்திகளின் பயிற்சியினால் மனிதனுடைய சீலமும், தருமநீதி பாவமும் உண்டாகின்றன. அந்தக்கரண விருத்தியின் பயிற்சிதான, மனிதனின உயர்ந்த பயிற்சி விருப்புவெறுப்புக்களை நேர்மைபபடுத்துவதுதான, அவனுடைய விகாச முறையின உயர்வைக்காட்டுகிறது. தேர்ச்சியுள்ள அந்தக்கரண விருத்தியையுடையவன் சத்தியமென்று எதை நினைக்கிறானோ, அதையே செய்வான. சுதேசாபிமானியானவன் பரோபகாரி ஆவான். ஜீவகாருண்ணிய முள்ளவன் எல்லா ஜீவராசிகளிடமும் செந்தண்மை பூண்டு ஒழுகுவான். அவனுடைய சித்த விருத்திகள், அன்பின்வழிப்பதாக இருக்கும். அவனுடைய அன்பின் காரியமெல்லாம், மேன்மேலும் வெகுவாகவே நடைபெறும். நான் என்ற பிரதக்பாவ வரம்பு அழியவே அகங்காரம் நீங்கி, அதில் மகத்துவத்துடன் பிரதிபிம்பிக்கிறது. சித்த விருத்திகளோவென்றால் இந்திரியங்களைக்கடந்து புத்திதத்துவத்தில் லீனமாகி அதில் ஈசுவராம்சம் பிரதிபிம்பிக்கின்றது. ஆகவே முப்பான்மையதான ஆத்துமா, புத்தி, மனம் ஒன்றுபட்டு ஏகமாகின்றது. மனிதனும் ஜீவன்முக்தனாகிறான்.

இதனால் தருமநீதி சாஸ்திரமானது அந்தக்கரண விருத்திகளைப்பற்றியும் அக்காரணப்பற்றி ஈசுவரனின்

(இ-ள) (அது ஜீவாத்மா) சுத்தமென்றும், அமிர்தமென்றும் அறியத்தக்கது.

ஜீவாத்மாவின் லக்ஷணம் சுத்தமும் ஆனந்தமுமாம் அவைகள் பிரிக்கப்படாவாம். ஏனெனில் ஒற்றுமை சுத்தமும் ஒன்றே. ஒற்றுமை உணர்வு ஆனந்த அனுபவமே.

ஒவ்வொரு ஜீவாத்மாவும் ஒரே பரமாத்மாவின் அம்சமாகையால் சரீரியாயிருக்கும்பொழுது மற்றைச் சரீரங்களிலியங்கும் ஆத்மாக்களின் ஐக்கியத்தை எப்பொழுதும் நாடுகின்றது இந்த ஐக்கியத்தையும் ஐக்கியத்தின் ஆனந்தத்தையும் நாடுதல் ஜீவனின் இயற்கை. ஐக்கியம் நேரிடவும், ஆனந்தம் ஜனிக்கிறது. இந்த விஷயத்தில் எல்லா ஜீவராசிகளும் சமம். ஜனங்கள் அவரவர்கள் விரும்பும் விஷயங்களில் வித்தியாசமிருப்பினும் ஆனந்த அவாப்தியின் இச்சையில் எல்லோரும் ஒரே தன்மையுடையவர்களாம். பலவழியாலும ஆனந்தத்தையே அடைய விரும்புகிறார்கள். ஜீவாத்மா சரீர சம்பந்த அவிவேகத்தினால் வெகுவாய்ப் பிசகான விஷயங்களை நாடுகிறான் ஆனால் அவன் கருதது ஒன்றுதான். (அஃதாவது) சந்தோஷ அவாபதியாம். சுபாவத்தில் ஜீவன் ஆனந்தி ஆகவே அத்தன்மையை வெளியிட எப்பொழுதும் முயலுகிறான். நீடித்ததான யாத்திரை முழுவதிலும் ஆனந்தத்தையே நாடுகிறான். அதுதான் அவனுடைய மூலக்கருத்து. அக்கருததையே இடைவிடாமல் நிறைவேற்றமுயலுகிறான். துனபகரமான கருமத்தைச் செய்வானாகில் அதைவிட அதிகமான சந்தோஷத்தை அடையும் படியாகத்தான் சந்தோஷமென்ற பலனையடைய உழைப்பும் சிரமும் பொறுக்கிறான். சநதோஷம் அவன் கடைப் பிடி. ஒவ்வொரு கருமமும் அதை நோக்கியே அமைகிறது. துறவறமும் ஆத்ம பரித்தியாகமும், துன்பங்

களைப் பொறுத்தலும் பரமானந்தத்தை அடையலாமென்ற நம்பிக்கையினால் தான். ஜீவவிகாசமெல்லாம் ஆனந்த அவாப்தியின் முயற்சியேயாம். அடிக்கடி லபிக்காமற்போயும் தளராமலும் சோர்வில்லாமலும், விடாமுயற்சியாய் ஆனந்தாவாப்திநோக்காய்த் திரும்பத்திரும்ப முயற்சிக்கிறான். கடைசியில் சுத்தம், ஞானம், ஆனந்தம், ஒன்றே என்றும் அபின்னமானவை என்றும் தெரிந்துகொள்ளுகிறான். பிறகு சாந்தியடைகிறான். ஒழிவு பெறுகிறான்.

சுத்தம், ஞானம், ஆனந்தம், அஃதாவது, சத், சித், ஆனந்தம், இவை ஈசுவர லக்ஷணங்களாம். அவைகளே ஜீவாத்ம லக்ஷணங்களாம்.

இவ்விதமாகத் தருமநீதி விசாரணையானது, சமயதத்துவத்தினாலும் அதன் தத்துவங்களின் நிதர்சனானுபவத்தினாலும் பரிசமாப்தியாகிறது. அப்பொழுது தருமநீதி முறையும், சமயதத்துவமும் ஒன்றுபடுகின்றன. இரண்டினுடைய வரம்புகள் மறைகின்றன. ஆகவே தருமநீதி முறைதான் சமயம், சமயம்தான் தருமநீதி முறை. இவ்விரண்டினுடைய எல்லை ஈசுவரனும் ஈசுவர ஒழுக்கமுமாம். இக்காரணம்பற்றியே இந்துக்களின் தருமநீதி முறை அவர்களின் சமயத்தின் ஒரு பகுதியாம். ஒன்று மற்றையதினின்று வேறுபடுத்த முடியாததாம்.

மூன்றாம் பகுதியில்

6-வது அதிகாரம் முற்றிற்று.

## மூன்றாம் பிரிவு.

## VII-வது அதிகாரம்.

---

### சுயநயமுள்ள புண்ணிய கருமங்கள்.

தருமநீதி முறையின் நோக்கமானது ஜனங்களுக்குள் நேர்மையான சம்பந்தங்களை உண்டுபண்ணுதலென்று முன்னமேயே தெரிந்திருக்கிறோம். இச்சம்பந்தங்கள் தன் குலம், தன் நகரம், தன் ஜாதி, தன் சரீரம், முதலியவைகளைச் சார்ந்திருக்கின்றன. மனிதன் சரீரம் சுருதி பிரமாணத்தின்படி பலகோசங்களை யமைக்கப் பெற்றிருக்கின்ற ஒரு தொகுதியாம்: (1) ஸ்தூல கோசம், (அன்னமயம், பிராணமயம், இரண்டுமடங்கிய கோசம்). (2) இந்திரிய கோசம் (காம கோசம் அல்லது அசுத்த மனோமயகோசம்), (3) சுத்தமனோமய கோசம் (விஞ்ஞானமய கோசம்). (4) புத்தி கோசம் (ஆனந்தமய கோசம்). தருமநீதி முறையானது இப்பொழுது ஸ்தூல, காம, மனோ, விஞ்ஞானமய கோசங்களைப் பற்றியதாகவிருக்கிறது. ஆனந்தமய கோசத்தை மனிதன் அடையும் காலத்தில் அவன் தெய்வாம்சத்தை அடைகிறான். தருமநீதி முறையை அதிக்கிரமிக்கிறான்.

ஆகவே தருமநீதி முறைகள் மனிதனின் கீழான கோசங்களைப் பற்றியதாகவும், அவைகள் சம்பந்தமான பல ஜீவவர்க்கங்களைப் பற்றியதாகவுமிருக்கின்றன. மேற்கண்ட பல ஜீவவர்க்கங்கள் யாவையெனின், அவைகள் தேவர்கள், பிதுருக்கள், ரிஷிகள், மனிதர்கள், பிராணி

காரம். (அஃதாவது மனிதனுக்கு மேற்பட்டவும், கீழ்பட்டவுமான ஜீவராசிகளும், மனுஷ சமூகமுமாம்.) முதலில் நம்முடைய சரீர சம்பந்தமான கோசங்கள் ஏற்ற கடமைகளையும், பின்னர் தேவர்கள், பிதுருக்கள், ரிஷிகள், மனிதர்கள், பிராணிகள் இவர்களுக்குரிய கடமைகளையும், நாம் செய்ய உத்தரவாதியாக விருக்கிறோம்.

நம்முடைய சரீரமானது ஜீவாத்மாவினுடன் நேர்மையாகுமாகில், ஈசுவரனின் அம்சமாகிய, அந்த ஜீவாத்மாவிற்குள்ளடங்கிய, பதார்த்தமான உபகரணமாக அமைகிறது. ஜீவாத்மாவுடன சமஷ்டிப் பிரபஞ்சம் நேர்மையாகுமாகில், அந்த ஜீவாத்மாவின் துவாராக, ஈசுவரனின் சக்தியும் அருளும் பிரபஞ்சத்திற்கு வருகின்றன. அப்பொழுது மனிதன தருமமே பரிணமித்த மூர்த்தியாகிறான். ஈசுவரனுக்கு வாகனாக ஆகிறான். அவனே பிரணவஸ்வரூபி. அந்தப்பதவியை அடைய நாம் எல்லோரும் முயற்சிக்கவேண்டும். தரும நீதி முறை எல்லாம் அப்பதவியை நோக்கியே சொல்லுகிறது.

இப்பொழுது நம்முடைய சரீரங்களைப்பற்றிப் பேசுவோம்.

I ஸ்தூல சரீரம்.—ஸ்தூல சரீரம் சுத்தமாகவும் சவுக்கியமாகவும் இருக்கவேண்டும். சுத்தம், சவுக்கியம் இரண்டும் முறையே நேர்மையும் ஒழுங்குமாம். சுத்தமானவும் சவுக்கியமானவுமான சரீரத்துடன் அதிக கருமம் செய்ய முடியும். அவன் அப்பொழுது சந்துஷ்டனாயும் தேஜஸ்வியாயுமிருப்பான. வியாதிஸ்தன் கருமத்தில் மனது கொள்ளாது மனைவியாகுலமாக விருப்பான். ஒரு கோசம் நேர்மையின்மையாயும் ஒழுங்கீனமாயுமிருப்பின், அத்தன்மை மற்றைக் கோசங்களையும் தாக்குகிறது.

ஸ்தூல சரீரத்தை சத்வ ஆகாரத்தை உண்பித்துக் காப்பாற்றவேண்டும். அன்னமானது இரக்தமாக மாறும் போதும் அதனுடைய காந்த சத்துத்தன்மை, இருந்து கொண்டேயிருக்கிறது. இந்திரியங்களுக்கும்மனத்திற்கும் அததற்குத் தக்கவாறு ஏற்ற புஷ்டியைக் கொடுக்கிறது.

𑌆𑌯𑍁𑌃𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌬𑌲𑌾𑌰𑍋𑌗𑍍𑌯
𑌸𑍁𑌖𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌵𑌿𑌵𑌰𑍍𑌧𑌨𑌾𑌃 ।
𑌰𑌸𑍍𑌯𑌾𑌃 𑌸𑍍𑌨𑌿𑌗𑍍𑌧𑌾𑌃 𑌸𑍍𑌥𑌿𑌰𑌾 𑌹𑍃𑌦𑍍𑌯𑌾
𑌆𑌹𑌾𑌰𑌾𑌃 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 ॥
𑌕𑌟𑍍𑌵𑌮𑍍𑌲𑌲𑌵𑌣𑌾𑌤𑍍𑌯𑍁𑌷𑍍𑌣
𑌤𑍀𑌕𑍍𑌷𑍍𑌣𑌰𑍂𑌕𑍍𑌷𑌵𑌿𑌦𑌾𑌹𑌿𑌨𑌃 ।
𑌆𑌹𑌾𑌰𑌾 𑌰𑌾𑌜𑌸𑌸𑍍𑌯𑍇𑌷𑍍𑌟𑌾
𑌦𑍁𑌃𑌖𑌶𑍋𑌕𑌾𑌮𑌯𑌪𑍍𑌰𑌦𑌾𑌃 ॥
𑌯𑌾𑌤𑌯𑌾𑌮𑌂 𑌗𑌤𑌰𑌸𑌂
𑌪𑍂𑌤𑌿 𑌪𑌰𑍍𑌯𑍁𑌷𑌿𑌤𑌂 𑌚 𑌯𑌤𑍍 ।
𑌉𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟𑌮𑌪𑌿 𑌚𑌾𑌮𑍇𑌧𑍍𑌯𑌂
𑌭𑍋𑌜𑌨𑌂 𑌤𑌾𑌮𑌸𑌪𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 ॥

(பகவற் கீதை: XVII. 8-9-10)

(இ-ள்) ஆயுள், உற்சாகம், பலம், ஆரோக்கியம், சுகம், பிரீதி, செய்கிறவும், ரசமுள்ளவும், தைலமுள்ளவும், ஸ்திரமாயுள்ளவும், மனத்திற் கின்பமானவையாயும் உள்ள ஆகாரங்கள் சாத்வீகர்களுக்குப் பிரியமானவைகள்.

அதிக கசப்பு, புளிப்பு, உப்பு, சூடுகாம், வறட்சி, தாகத்தைக் கொடுத்தல் இவைகள் உள்ளதாயும், துக்கம், சோகம், ரோகம் இவைகளை உண்டாக்கத்தக்கவைகளாயும் இருக்கிற ஆகாரங்கள் இராஜஸ சுபாவமுள்ளவனுக்கு இஷ்டமானவை.

(சமையல்செய்து) ஒரு ஜாம நேரம் சென்றதாயும், சாரமற்றுப் போனதாயும், துர்வாசனையுள்ளதாயும், சமையல்செய்து ஒரு இரவு

வைத்திருந்ததாயும், ஒருவன் சாப்பிட்டு மிச்சம் விட்டதாயும், அசுத்தமானதாயுமிருக்கிற ஆகாரமெதுவோ, அஃதானது தாமச குணமுடையவனுக்குப் பிரியமானது.

சத்வம் மேலிட மேனமேலும் விகாசமுறையினால் அபிவிருத்தி நேரிடுகிறது. சத்வமென்றால் நேர்மையான தன்மை.

## II. சூக்ஷ்ம சரீரம்.

பூர்வ ஜன்ம அனுபவ வாசனையினால் ராஜஸ சுபாவமுள்ள சரீரத்தினவுகள இந்திரியங்களை அவலம்பித்து நடத்துகின்றன.

ஆகையினால் நம்முடைய இந்திரியங்களை அடக்கவேண்டும். நாம் பார்க்கலாம், கேட்கலாம், முகரலாம், ருசிக்கலாம், ஸ்பரிசிக்கலாம், ஆனால் அந்தந்த இந்திரியங்களுடைய விஷயங்களில், வெறுப்பு, விருப்பு என்ற பாவங்கள் நமக்கு உண்டாகமாட்டாது.

அவசியம் நாம் விஷயாதிகளைப் புலன்களால் நுகரவேண்டுவதுதான். ஆனால் விருப்பு, வெறுப்பு, என்ற பாவங்கள், அந்த நுகர்வில் பற்றக்கூடாது. அப்படிப் பற்றுகிறதினால் நமக்கும் வெளிப்பிரபஞ்சத்திற்கும் ஒருதடையை ஏற்படுத்திக்கொள்ளுகிறோம். அதனால் நேர்மையான சம்பந்தங்கள் அசாத்தியமாய்ப்போகின்றன. ஒவ்வொருவனும் விருப்பு, வெறுப்பு என்ற பாவங்களால் தனக்கு ஓர் உலகவரம்பை உண்டுபண்ணிக்கொள்ளுகிறான் ஆகவே இவ்விதமாக வெவ்வேறான அநேக உலக வரம்புகள் ஏற்படுகின்றன. இவைகளின் நடை, ஈசுவரனால் ஏற்பட்ட உலகமுறைக்கு முற்றும்மாறாகவே முடிகின்றது. ஜனங்கள் அவரவர்களுடைய பிரதக்பாவங்களினால், மோஹாந்தகாரத்திற்குள்ளாகி, ரஜோகுணத்தினால், மனத்தில் கோபமுண்டாகி, ஈசுவராதேசமான தருமநீதி முறையை அறியாமல் போகின்றார்கள்.

ஆகையால் இந்திரியங்களுடைய போக்கின்படி நடவாமல் நம்முடைய மனத்தை விவேகத்தினால் நடத்தி அதின் மூலமாய் இந்திரியங்களை அடக்கல் வேண்டும். ஞானேந்திரியங்களைந்தும் (ஸ்தூலதேகத்திற்குரிய) கர்மேந்திரியங்களைந்தும் இருவிதங்களாம் விருப்பு, வெறுப்புப்பற்றாமல் இந்திரியகோசரமான விஷயங்களை உணருகிறதினால் மாத்திரம் யாதொரு தோஷமும் நேரிடாது. ராக(விருப்பு). துவேஷங்கள் (வெறுப்பு) நம்மைப் பரவசப்படுத்தி அவைகளின் வழியில் சீர்கதியாய்க் கர்மேந்திரியதுவாராக அவைகளின் திருப்தியை நோக்காக நடத்துகின்றன.

ഇന്ദ്രിയസ്യേന്ദ്രിയസ്യാർഥേ
രാഗദ്വേഷൗ വ്യവസ്ഥിതൗ।
തയോർ ന വശമാഗച്ഛേത്
തൗ ഹ്യസ്യ പരിപന്ഥിനൗ॥

(பகவத்கீதை: III. 34.)

(இ-ள்) அந்தந்த இந்திரியத்தினுடைய விஷயத்தில், ஆசையும், துவேஷமும் இருக்கின்றன. அவைகளுடைய சுவாதீனத்தை அடையக்கூடாது. அவை நம் ஞானிக்குச் சத்துருக்களாக இருக்கின்றன.

விருப்பும், வெறுப்பும், ராக, துவேஷங்கள் மனிதனின் ஆசா சுபாவமாக அமைகிறது. இவை உற்பத்தியில் மனத்தில் சலனமாம். இதை அடக்கவேண்டும். ராகமானது அகண்ட அன்பாக விரியவேண்டும். மனிதர்களுக்குள்ளும் துவேஷமே வரக்கூடாது. சுத்தமாய்ப் பிடுங்கி எறியவேண்டும். ஆனால் தரும நீதி முறைக்கும் ஈசுவர சங்கல்பத்திற்கும் விரோதமாய் ஏற்படும். எந்த விஷயத்திலும் அதைப்பற்றிய துவேஷமும் இருத்தல் வேண்டும். இந்தத் துவேஷக்கருத்தானது, எல்லா ஜீவராசிகளிடமும் அன்பு பாராட்டி ஒழுகுதலில், கொஞ்சமேனும் சம்பந்திக்

க்கூடாது. அந்தத் துவேஷபாவம் தன்னைப் பரிசுத்தம் பண்ணுவதிலும், தீமையக்கும் எல்லாவற்றையும் விலக்கும் விஷயத்திலும், உபயோகப்படுத்தத் தக்கது. தீயநெறிகளை வெறுக்கவேண்டும், ஆனால் தீயார்களைத் துவேஷிக்கக்கூடாது.

மனம் இந்திரியங்களுடன் சம்பந்திக்க, ரஜோகுணத்தைப்பெறுகிறது; புத்தியுடன் (ஆனந்த மயகோசத்துடன்) சம்பந்திக்க, சத்துவகுணத்தைப் பெறுகிறது. இக்காலத்தில் சாதாரண மனிதனின் சுபாவம் ரஜோகுண சம்பந்தமாயிருக்கிறது. அது சத்வகுண சம்பந்தமாயிருந்தலைப பெறும்படி முயற்சிசெய்யவேண்டும்.

மனம், விருப்பு, வெறுப்புக்களை விடவேண்டுமென்று முன்னமே சொன்னோம். விருப்பு, வெறுப்பு என்பன மனத்தின மலங்களாம். அவைகளை விலகினால் மனம் சுத்தமாக ஆகிறது.

மனத்திற்கு இன்னும் ஒரு தோஷமிருக்கிறது. அது மனச் சஞ்சலமாம். அது வெவ்வேறான பல வெளி விஷயங்களை நாடிச் செல்லுகிறது. அந்த ஒன்றிலிருந்து மற்றொன்றிற்குத் தாவி ஓடுகிறது. அந்த ஒன்றையே பற்றியிருக்கும்படி செய்தல் சிரமமான விஷயமாம். 10 இந்திரியங்களாகிற 10 குதிரைகள் கட்டியவும், 10 குதிரைகளில் சவிக்கும் ஒரு ரதத்திற்கு அதை உவமிக்கிறதுண்டு. இந்தச் சலனந்தான் அதின் விக்ஷேபம் எனறு பெயர். அதை அடக்கவேண்டும் அதாவது மனத்தை ஒருமுகப்படுத்தவேண்டும். அந்த ஒன்றையே பற்றி நிற்றல்வேண்டும்.

மனத்தினின்று இரு மலங்களும், சலனமும் விலகுமாகில் அது சத்துவகுணத்தை அமையப்பெறுகிறது. அப்பொழுது அதில் ஆத்மா பிரதிபிம்பிக்கிறான். அப்பொ

பூது சாந்தமும் ஆனந்தமும் உண்டாகின்றன. இந்தச் சாந்தந்தான் பிரபஞ்சத்துடன் நேர்மையாம். அஃதாவது பிரபஞ்சத்தின்கண் விகாசமாயிருக்கும் ஈசுவர சங்கல்ப ரூபமான நேர்மையாம்.

மனத்தின் சலனத்தை விலக்க முதல் உபாயம் என்ன வெனில், பலவாறான வஸ்துக்களைக் கவனியாது அவை களின் குணங்கள், தருமங்கள், தத்துவ உண்மைகள் இவைகளைக் கவனித்துப் பழகவேண்டும். பல தத்துவங் களை ஆராய்ந்து, பொது நேர்மையான உண்மைகளை உண ர்ந்து, கடைமுறையில் ஒன்றாய், எப்பொழுதும் உளதாய், உயர்வற உயர்வாய் நிற்கின்ற ஒரு சத்திய வஸ்துவாகிய ஈசுவரனை அறிந்து, அதை ஓரே பிடியாய்ப் பற்றவேண்டும். அப்படியாகில், பிரபஞ்சமெல்லாம் அவருடைய காட்சித் தோற்றமென்றும், எல்லாக் கிரியைகளும் அவருடைய செயல் என்றும், எல்லாத் தரும நீதி முறைகளும் அவரு டைய ஆதேசமென்றும் தெரியவரும்.

வேற்றுமை பாவங்கள் விலகும்; வித்தியாசங்கள் மறையும்; ஒற்றுமை மேலாகும். மனத்தை ஒழுங்குபடுத்தி அடக்குதல், ஒவ்வொருவனுடைய முக்கியமான கடமை யாம். அதின் பின்வாக்கையும், கர்மங்களையும் ஒழுங் காக்கி அடக்கவேண்டும். அதே காலத்தில், தன் ஸ்தூல தேகத்தை வசப்படுத்தல் வேண்டும். தன்னுடைய எல்லாக் கோசங்களையும், சுவாதீனப்படுத்தி ஒன்றோடொன்று நேர்மையாய் நிகழும்படி செய்யவேண்டும். மனுவினால் விதிக்கப்பட்டிருக்கிற 10 வகையான விதியில், அவசிய மான சில முறைகள் வருகின்றன.

யஂ திஃக்ஷஊாஒஶாZ வெுயப
ஶௌவஜீநூயதிமூஹ:

அத்ரோஹோ நாதிமாநிதா||
பவந்திஸம்பதம்தைவீம்
அபிஜாதஸ்ய பாரத||

(பகவத் கீதை: XVI. 1—3)

(இ-ள்) பயமின்மை, மனோநிர்மலம், ஆத்மஞானம், உபாஸ்த்தை ஆராய்ந்து அந்த நிஷ்டையில் இருத்தல், தானஞ்செய்தல் (கருமேந்திரியங்களை) அடக்குதல், யாகங்களைச் செய்தல், சாஸ்திரம் முதலியபடனஞ் செய்தல், தவஞ்செய்தல், நேர்மையாக ஒழுகுதல்,

பிறருக்குத் துன்பஞ் செய்யாமை, வாய்மை, கோபமின்மை, தியாகம், மனத்தை நிறுத்தல், புறங்கூறாமை, ஜீவகாருண்ணியம், அவா இன்மை, குரூரமற்ற தன்மை, வெட்கம், சபலமின்மை,

பெருந்தன்மை, பொறுமை, தைரியம், சரீரசுத்தி, மனச்சுத்தி, பிறருக்கு துரோகம் செய்யாமை, கர்வமின்மை இவைகள், ஓ, அர்ஜுனா! தேவதைகள் அடையக் கூடிய சம்பத்தை அடைகிறதற்கு யோக்கியதை யுடன் பிறந்தவனுக் குண்டாகின்றன.

இந்தக் குணங்களிற் சில முன் பிரஸ்தாபித்திருக்கிற 3 வகுப்புக்களில் யாதாமொன்றில் அடங்கும். ஆனால் அவைகள் பெரும்பான்மையாய் ஜீவாத்மாவின் அறிவின் நிகழ்ச்சியைப் பற்றியதாய். அதன்காரியமாகப் பக்கும் குணங்களாயும், ஜீவாத்மாவின் மனநேர்மையுடையவும், அவனுடைய சக்திகளை அடக்குதலினால் ஏற்படும் குணங்களாக இருக்கின்றன.

சத்தியத்தின முக்கியத்தைப்பற்றி முன்னமேயே விஸ்தரித்திருக்கிறோம். அது சாமான்னிய தருமமாக வாய்மையென்றும், நேர்மை என்றும், ருஜுபாவம் என்றும், நம்பிக்கை என்றும் வழங்குகின்றது. சத்தியம்

உடவழக்கில் இன்றியமையாமையைப்பற்றி அர்த்த புஷ்டியுள்ள குறுகிய வசனங்களான அடியில்வரும் பழமொழிகளில்வழங்குகின்றது. சத்தியமே உயர்ந்தஉபாயம்.

ஸத்யமேவ ஜயதே நாந்ருதம்

முன்னெடுத்துக் காட்டிய வசனங்களில் வருகிற தன்னை யடக்குதல் என்ற தருமமானது என்னவென்றால், மனத்தின்சக்திகளை அடக்குதலும், மனத்தின் ஆசாபாவத்தைக் கண்டித்தலும், ஐந்தால் சரீரத்தைக் காவனைப் படுத்தலும், அவைகளை யெல்லாம் தன்னை மீறி நடவாமல் தன்னிச்சைப்படி அவைகளைப் பணிந்து நடக்கும்படி செய்தலுமாம். இதனால் தனக்கும் தன்னுடைய உபாதிகளுக்கும் இருக்கும் வித்தியாசத்தை மனிதன் நன்றாயுணர்ந்திருக்கவேண்டுமென்றும் குதிரைமேல் சவாரி செய்கிறவன் குதிரையைத் தானினைத்தபடி நிலையாயிருப்பானோ, அவ்வாறு தன்னுடைய உபாதிகளைத் தானாளவல்லனா றமிருக்கிறனென்றும் ஏற்படுகிறது.

தன்னை அடக்காத மனிதன், தன்னை அடக்கினமனிதன் இவ்விருவர்களுக்குள்ளும் இருக்கும் வித்தியாசமும், பழக்காத குதிரையின்மேல் சவாரி செய்யத் தெரியாத சாரதிக்கும், பழக்கிய குதிரையின்மேல் சவாரிசெய்யத்தெரிந்த சாரதிக்கும் உள்ள வித்தியாசமும் நேர். முன்னவன் விஷயத்தில், குதிரை பிடுங்கிக் கொண்டும், கதியற்ற சாரதியை இழுத்துக்கொண்டும், முரட்டுத்தனமாய் ஓடியும், சாரதிக்கு அபாயமுண்டாகும்படியாய்த் தானாகிறது; பின்னவன் விஷயத்தில், சாரதி சவுக்கியமாய்க் குதிரையின்மேலிருந்துகொண்டு அவன் நோக்கும் வழியெல்லாம் குதிரையை நடத்தி, வேகமாய் வேண்டுமானால் வேகமாய் நடத்தியும், நிற்கவேண்டுமானால் அதை

நிறுத்தியும், அவன் தாவவேண்டுமானால் அதைத் தாவும்படி செய்தும், நடையில்போகவேண்டுமானால் அவ்விதம் செய்வித்தும், சாரதி இஷ்டங்களை எல்லாம் நிறைவேற்றுகிறான். குதிரையும் சாரதியின் ஆக்ஞைக்குப் பணிந்து நடக்கிறது.

இந்திரிய மனோ நிக்கிரகம் அவ்வளவு முக்கியமானதினால், தருமநீதி சாஸ்திரக்ஞர்கள் அதைப்பற்றி அடிக்கடி வற்புறுத்திக் கூறுகின்றார்கள். மனுவும் அதின் அவசியத்தைப்பற்றி விஸ்தாரமாய்ச் சொல்லியிருக்கிறார். கர்மம் உண்டாவதற்கு 3 காரணங்களிருக்கின்றன. ஒவ்வொன்றையும் அடக்கியாளவேண்டும்.

𑌕𑌰𑍍𑌮 𑌮𑌨𑍋𑌵𑌾𑌗𑍍𑌦𑍇𑌹𑌸𑌂𑌭𑌵𑌂॥

(மனு ஸ்மிருதி: XII.—3)

(இ-ள்) கர்மமானது, மனோவாக்குகாயம் இவைகளினின்று உற்பத்தியாகிறது.

மனம், வாக்கு, காயம் இவை ஒவ்வொன்றையும், முற்றும் சுவாதீனப்படுத்தல் வேண்டும். அதின் பின்பு நிக்கிரகம் சித்தியாகும்.

𑌵𑌾𑌗𑍍𑌦𑌣𑍍𑌡𑍋𑌽𑌥 𑌮𑌨𑍋𑌦𑌣𑍍𑌡𑌃
𑌕𑌾𑌯𑌦𑌣𑍍𑌡𑌸𑍍𑌤𑌥𑍈𑌵 𑌚।
𑌯𑌸𑍍𑌯𑍈𑌤𑍇 𑌨𑌿𑌹𑌿𑌤𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍌
𑌤𑍍𑌰𑌿𑌦𑌣𑍍𑌡𑍀𑌤𑌿 𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇॥
𑌤𑍍𑌰𑌿𑌦𑌣𑍍𑌡𑌮𑍇𑌤𑌨𑍍𑌨𑌿𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌯
𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌮𑌾𑌨𑌵𑌃।
𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑍌 𑌤𑍁 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯
𑌤𑌤𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌨𑌿𑌯𑌚𑍍𑌛𑌤𑌿॥

(மனு ஸ்மிருதி: XII. 10. 11.)

(இ-ள) எவனுடைய புத்தியில், வாக்கு, மனம் காயம் இவைகளின் நிக்கிரகம் ஒழுங்கே ஸ்திரமாக நிற்கின்றதோ, அவனே திரிதண்டியாம்.

சகல பிராணிகளிடத்திலும், மேற்கண்ட திரிதண்டித்தன்மையைக் கைக்கொண்டு ஒருவன் ஒழுகுவானாகில், காமக் குரோதங்களை அடக்கினவனாய்ப் பூரணத்தைப் பெறுகிறான். வாக்கும் காயமும் மனத்தைப்பற்றியே நடைபெறுகின்றமையால், இம்மூன்றில் மனோ நிக்கிரகமே, முக்கியமாம். இதைப்பற்றி மநுபடி மநு சொல்லுகிறதாவது:

[illegible] (மநு ஸ்மிருதி XII. 4)

(இ-ள) மனத்தை [illegible] நடத்துகிறவனென்றது.

மனம் மாத்திரம் அடங்கினால் மற்றவைகள் பின் தொடரும். "மனமெனனும் மாடு அடங்கில் தாண்டவக்கோனே, மற்றும் முக்தி பெறலாம் தாண்டவக்கோனே" என்பது தமிழ் நாட்டில் வழங்கும் பழமொழி.

அறநெறிச் சாரத்திலும்,

"நினையறப் பெறுகிற் கிலேன் நன்னெஞ்சே
பினையான் யாரைப் பெறுகிற்பேன்—நினை
யறப்பெறுகிற்பேனேல் பெற்றேன் மற்றீண்டு
துறக்கக் திறப்பதோர் தாள்."

ஆனால் மனமானது மிகவும் சஞ்சல சுபாவமுள்ளதினால் மனோ நிக்கிரகம் அதிக கஷ்டமானது. அனதுபற்றி இன்றைக்கு 5000 வருஷங்களுக்கு முன்னரே, அர்ஜுனன் இந்தச்சிரமத்தை, ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு அடியில் வருமாறு தெரிவித்திருக்கிறான்.

சஞ்சலம்ஹி மந: க்ருஷ்ண
ப்ரமாதி பலவத்த்ருடம்॥
தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே
வாயோரிவ ஸுதுஷ்கரம்॥

(பகத் கீதை: VI. 34.)

(இ-ள்) ஓ. ஸ்ரீகிருஷ்ண ஸ்வாமியே! மனமானது சுபாவமாகவே சஞ்சலமானது, தேகேந்திரியங்களைக் கலக்கச் செய்கிறது, அடங்காதது, விஷயங்களில் கெட்டியாய்ப் பற்றுதலையுடையது. மனத்தை அடக்குதல, காற்றைப் பிடித்துக் கரகத்தில் அடக்குவது போல் மிகவும் அசாத்தியமாக நான் எண்ணுகிறேன்.

இதற்குச் சமாதானம் அந்தப் பகவான் சொன்ன உத்தரத்தைத் தவிர வேறு சொல்ல முடியாது.

𑌅𑌸𑌂𑌶𑌯𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋
𑌮𑌨𑍋 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 𑌚𑌲𑌮𑍍।
𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌤𑍁 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯
𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑍇𑌣 𑌚 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇॥

(பகவத் கீதை: VI. 35.)

(இ-ள்) ஓ. புஜபல முள்ள அர்ஜுனா! மனமானது அடக்குவதற்கு மிகவும் பிரயாசை எனபதும, சஞ்சலமென்பதும் சந்தேகமில்லை. அப்படியிருந்தபோதிலும், பழக்கத்தினாலும் விஷயங்களில் வைராக்கியமடைவதினாலும் அடக்கப்படுகிறது.

நீடித்த விடாமுயற்சியும், பிடிவாதமான வைராக்கியமும் இருந்தால்தான், பலமான சலனமுள்ள மனத்தை ஆண்டு அடக்கலாம்.

இப்படி நிக்கிரகம் செய்யாவிடில் மனிதனுக்குச் சந்தோஷமில்லை.

𑌯𑌤𑍋 𑌯𑌤𑍋 𑌨𑌿𑌶𑍍𑌚𑌰𑌤𑌿
𑌮𑌨𑌶𑍍𑌚𑌞𑍍𑌚𑌲𑌮𑌸𑍍𑌥𑌿𑌰𑌮𑍍।
𑌤𑌤𑌸𑍍𑌤𑌤𑍋 𑌨𑌿𑌯𑌮𑍍𑌯𑍈𑌤𑌦𑍍
𑌆𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵 𑌵𑌶𑌂 𑌨𑌯𑍇𑌤𑍍॥

(கீதை: VI. 26.)

(இ-ள்) நிலையற்றதும் சஞ்சல ஸ்வபாவமுள்ளதுமான மனமானது எந்தெந்த விஷயங்களில் பிரவேசிக்கின்றதோ, அந்தந்த விஷயங்களினின்று மனத்தைத் திருப்பி, பரமாத்மாவினிடத்திலேயே நிற்கும்படி செய்யவேண்டும். இப்படிச் செய்யின் சந்தோஷம் லபிக்கும். அதனாலேதான் ஸ்ரீ கிருஷ்ணபகவான், மனத்தின் தவத்தை நிறைவேற்றலின் பயனைச் சந்துஷ்டியென் றெடுத்துக் கூறியிருக்கின்றார்.

𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌃 𑌸𑍌𑌮𑍍𑌯𑌤𑍍𑌵𑌂
𑌮𑍌𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ।
𑌭𑌾𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍
𑌤𑌪𑍋 𑌮𑌾𑌨𑌸𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

(பகவத்கீதை: VII. 16.)

(இ-ள்) மனம் எல்லா விருத்தியிலும் நிர்மலமாயிருப்பதும், குரூரமின்மையும், மௌனம் சாதித்தலும், மனத்தை விஷயங்களினின்று திருப்புவதும் கபடமின்மையும், மனத்தினால் செய்யத்தக்க தவமென்று சொல்லப்படுகின்றன.

ஆனால் மனிதனுடைய ஸ்வபாவத்தைக்கெடுக்கும் முக்கியமானகாரணம், ஆசை ஒருகாலும் ஓயாத திருப்தி கொள்ளாத, அவா என்பதாம். வாஸ்தவத்தில் அதற்கிடங்கொடுத்துத் திருப்தி செய்யச்செய்ய அதிக உக்கிரமாக விருத்தியாகின்றது.

𑌨𑌜𑌾𑌤𑍁 𑌕𑌾𑌮𑌃 𑌕𑌾𑌮𑌾𑌨𑌾
𑌮𑍁𑌪𑌭𑍋𑌗𑍇𑌨 𑌶𑌾𑌮𑍍𑌯𑌤𑌿 ।
𑌹𑌵𑌿𑌷𑌾 𑌕𑍃𑌷𑍍𑌣𑌵𑌰𑍍𑌤𑍍𑌮𑍇𑌵
𑌭𑍂𑌯 𑌏𑌵𑌾𑌭𑌿𑌵𑌰𑍍𑌧𑌤𑍇 ॥

(இ-ள்) விஷயாதிகளை அனுபவிக்கிறதினால் ஆசை தீருமென்பதில்லை. அக்கினியானது ஆஹுதியினால் மேன்மேலும் விருத்தியடைகிறதுபோல, ஆசையும் விருத்தியடைகிறது.

இந்திரியங்களை வசப்படுத்தவேண்டுமானால் மனம் முயலவேண்டும். இல்லாவிடில் சஞ்சலமும், சமாதானமின்மையும், இருந்துகொண்டேயிருக்கும்.

இந்திரியங்களை அடக்கத் தன மனத்தைப் பயிற்சிக்கவேண்டும். ஏனெனில், இந்திரிய துவாரமாய் ஆசாபாசமயக்குதல்கள் உண்டாகின்றன.

ஓர் இந்திரியங்கூட விடாமல், வசப்படுத்தல்வேண்டும். ஏதேனும் ஒரு இந்திரியம் அடங்காமல் நிகழுமாகில் மனத்தை விபரீதத்தில் கொண்டு விடும்.

இந்த்ரியாணாம் ஹி சரதாம்
யந்மநோ'நுவிதீயதே ।
தத³ஸ்ய ஹரதி ப்ரஜ்ஞாம்
வாயுர்நாவமிவாம்ப⁴ஸி ॥

(பகவத்கீதை: II. 67.)

(இ-ள்) விஷயங்களிற் பிரவேசிக்கின்ற இந்திரியங்களை, மனமானது அனுசரித்துப்போக, அந்தப் புருஷனுடைய விவேகத்தைச் சமுத்திரத்திற் கப்பலைகாற்று(எப்படி இழுத்துக்கொண்டுபோகுமோ அப்படி)ப்போல மனம்இழுத்துக்கொண்டுபோகிறது.

ஓர் இந்திரியமாவது நிக்கிரகம் செய்யாமல் விடப்பட்டிருக்குமாயின், அதனால் அபாயம் நேரிடுமென்று வெகு தெளிவான உபமானத்தினால், மனுவும் நிரூபிக்கிறார்.

இந்த்ரியாணாந்து ஸர்வேஷாம்
யத்³யேகம் க்ஷரதீந்த்³ரியம் ।

𑌤𑍇𑌨𑌾𑌸𑍍𑌯 𑌕𑍍𑌷𑌰𑌤𑌿 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾
𑌦𑍃𑌤𑍇𑌃 𑌪𑌾𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌵𑍋𑌦𑌕𑌮𑍍 ।

(மனு ஸ்மிருதி: II. 99.)

(இ-ள்) இந்திரியங்களில் யாதேனு மொன்று அடக்கப்படாமல நழுவவிடப்பட்டால விவேகம் அந்தவழியே நழுவுகிறது. எதுபோ லென்றால், ஜலபாத்திரத்தில் அடியில் ஒரு சிறு ஓட்டையிருந்தால், எல்லாஜலமும் ஓடிப்போகிறது போலுமாம்.

ஜலம் கொண்டுபோகிறவனுடைய ஜலபாத்திரத்தில் ஓர் ஓட்டையிருந்தால், எல்லா ஜலமும் வெளியேறும், அதுபோல் ஒரு இந்திரியம் அடக்கப்படாமலிருந்தால், அதின் வழியாய், மனிதனுடைய விவேகம் வெளியேறி நழுவிவிடும்.

மனத்தை அடக்கி அதன் மூலமாய் இந்திரியங்களை அடக்கவேண்டும். கடோபநிஷத்தில் மனத்தைச் சாரதி கையில் வைத்துக் குதிரையைச் சுவாதீனப்படுத்தி, நடத்துகிற கடிவாளவாருக்கும், சரீரத்தையும் அதின்கண்ணிருக்கிறசரீரியானஜீவாத்மாவையும், தன்வசப்படுத்திப்பிடுங்கிக்கொண்டுபோகிற இந்திரியங்களைக் குதிரைகளுக்கும் உவமித்திருக்கின்றது.

𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌰𑌥𑌿𑌨𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿
𑌶𑌰𑍀𑌰𑌂 𑌰𑌥𑌮𑍇𑌵 𑌤𑍁 ।
𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌤𑍁 𑌸𑌾𑌰𑌥𑌿𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿
𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌗𑍍𑌰𑌹𑌮𑍇𑌵 𑌚 ॥
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌹𑌯𑌾𑌨𑌾𑌹𑍁𑌃
𑌵𑌿𑌷𑌯𑌾𑌂𑌸𑍍𑌤𑍇𑌷𑍁 𑌗𑍋𑌚𑌰𑌾𑌨𑍍 ।
𑌆𑌤𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍋𑌯𑍁𑌕𑍍𑌤𑌂

𑌭𑍋𑌕𑍍𑌤𑍇𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌰𑍍𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 ॥
𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌾𑌨𑍍𑌭𑌵𑌤𑍍𑌯
𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑍇𑌨 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌦𑌾 ॥
𑌤𑌸𑍍𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍍𑌯𑌵𑌶𑍍𑌯𑌾𑌨𑌿
𑌦𑍁𑌷𑍍𑌟𑌾𑌶𑍍𑌵𑌾 𑌇𑌵 𑌸𑌾𑌰𑌥𑍇𑌃 ॥
𑌯𑌸𑍍𑌤𑍁 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌾𑌨𑍍𑌭𑌵𑌤𑌿
𑌯𑍁𑌕𑍍𑌤𑍇𑌨 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌦𑌾 ॥
𑌤𑌸𑍍𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌵𑌶𑍍𑌯𑌾𑌨𑌿
𑌸𑌦𑌶𑍍𑌵𑌾 𑌇𑌵 𑌸𑌾𑌰𑌥𑍇𑌃 ॥

𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌾𑌰𑌥𑌿𑌰𑍍𑌯𑌸𑍍𑌤𑍁
𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌗𑍍𑌰𑌹𑌵𑌾𑌨𑍍𑌨𑌰𑌃 ।
𑌸𑍋𑌽𑌧𑍍𑌵𑌨𑌃 𑌪𑌾𑌰𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿
𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌮𑍍 ॥

(கடோபநிஷத்: III. 3. 6. 9.)

(இ-ள்) (சர்வ பல போக்தாவான) ஜீவனை இரதத்தின் சுவாமியாக அறி, தேகத்தை இரதமாகவே அறி, புத்தியைச் சாரதியாக அறி, மனத்தைக் கடிவாளமாக அறி.

இந்திரியங்களைக் குதிரைகளாகவும், அவைகளுக்குச் செல்லும் மார்க்கங்களாக (சப்தாதி) விஷயங்களையும் சொல்லுகிறார்கள் சரீரம், இந்திரியங்கள், மனம் இவைகளுடன் கூடினவனை, போக்தாவென்று அறிஞர்கள் சொல்லுகிறார்கள்.

எவனுடைய புத்தியானது, அவிவேகமாய் அடங்காத மனத்துடன் எப்பொழுதும் கூடி நடைபெறுகின்றதோ அவனுடைய இந்திரியங்கள், சாரதிக்கு வசப்படாத கெட்ட குதிரைகள்போல் இருக்கின்றன.

எவனுடைய புத்தியானது, விவேகமுடையதாய் அடங்கிய மனத்துடன் எப்பொழுதும்கூடுகை பெறுகின்றதோ, அவனுடைய இந்திரியங்கள், சாரதிக்கு அடங்கிய நல்ல குதிரைகள்போல் இருக்கின்றன.

... ... ... ... ... ... ...

எந்த மனிதன் விவேகமுள்ள புத்தியைச்சாரதியாக உடையவனும், ஏகாக்ரசித்தத்துடன் கூடியவனும், இருக்கிறானோ, அந்த மனிதன், ஸம்ஸார மார்க்கத்திற்கு எல்லையான உயர்வான விஷ்ணுபதத்தை அடைகிறான்.

மனுவும் இதே உவமானத்தின் மூலமாய் உதாகரிக்கிறார்.

இந்த்ரியாணாம் விசரதாம்
விஷயேஷ்வபஹாரிஷு ।
ஸம்யமே யத்நமாதிஷ்டேத்
வித்வாந் யந்தேவ வாஜிநாம் ॥

(மனு: II. 88.)

(இ-ள்) குதிரைகளை எப்படிச்சாரதி அடக்குவானோ, அப்படிப்போல் வித்துவான் விஷயாதிகளால் இழுக்கப்பட்ட, இந்திரியங்களை அவ்வழி செல்லாமல் நிக்கிரகம் செய்யமுயலவேண்டும்.

மனுவானவர் 5 கர்மேந்திரியங்களையும், 5 ஞானேந்திரியங்களையும், விவரித்துச்சொண்டு வருகிறதில் மனத்தை அடக்கினால் இவைகளெல்லாம் அடங்குமென்று, உறுதிப்பாடாய்ச் சொல்லுகிறார்.

ஏகாதஶம் மநோ ஜ்ஞேயம்
ஸ்வகுணேநோபயாத்மகம் ।

𑌯𑌸𑍍𑌮𑌿𑌞𑍍𑌜𑌿𑌤𑍇 𑌜𑌿𑌤𑌾𑌵𑍇𑌤𑍌
𑌭𑌵𑌤𑌃 𑌪𑌞𑍍𑌚𑌕𑍌 𑌗𑌣𑍌॥

(மனுஸ்மிருதி: II. 92.)

(இ-ள்) இந்திரியங்களின் இரண்டு வகுப்பிற்கும் பொதுவான மனம், 11 வது இந்திரியமென்று அறியத்தக்கது. இதை ஜயித்தால் ஷ இரண்டு ஜாதங்களும் ஜயிக்கப்பட்டனவாக ஆகும்.

வாக்கை அடக்குதலென்றால், பெரியோரை வணக்கமாகவும், சமானர்களை மரியாதையாகவும், கீழோரைப்பக்ஷமாகவும், பேசுதலாம். இதன்விவரங்களைப்பற்றிப்பின்பேசுவோம். இப்பொழுது சத்தியவாக்கு இன்னதென்பதைப் பற்றிப் பேசிமுடிப்போம்.

𑌅𑌨𑍁𑌦𑍍𑌵𑍇𑌗𑌕𑌰𑌂 𑌵𑌾𑌕𑍍𑌯𑌂
𑌸𑌤𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌹𑌿𑌤𑌂 𑌚 𑌯𑌤𑍍।
𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌾𑌭𑍍𑌯𑌸𑌨𑌂 𑌚𑍈𑌵
𑌵𑌾𑌙𑍍𑌮𑌯𑌂 𑌤𑌪 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇॥

(இ-ள்) பிறர் மனத்தை சோகஞ்செய்யாததும், நிஜமாகவும், இன்பம் தரத்தக்கதும், பிரயோஜன முள்ளதுமான வாக்கியமும், வேத சாஸ்திராப்பியாசங்களும், வாக்கினால் செய்யத்தக்க தவமென்று சொல்லப்படுகின்றது. இதைப்பற்றி மனு சொல்லுகிறதாவது:

𑌵𑌾𑌚𑍍𑌯𑌰𑍍𑌥𑌾 𑌨𑌿𑌯𑌤𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇
𑌵𑌾𑌙𑍍𑌮𑍂𑌲𑌾 𑌵𑌾𑌗𑍍𑌵𑌿𑌨𑌿𑌃𑌸𑍃𑌤𑌾𑌃॥
𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑍁 𑌯𑌃 𑌸𑍍𑌤𑍇𑌨𑌯𑍇𑌦𑍍𑌵𑌾𑌚𑌂
𑌸 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌤𑍇𑌯𑌕𑍃𑌨𑍍𑌨𑌰𑌃॥

(மனு: IV. 256.)

(இ-ள்) வாக்கே எல்லா விஷயங்களுக்கும் நியந்தாவாக இருக்கிறது. வாக்கேமூலம். அதினின்று எல்லாக் காரியங்களும் உண்டா

கின்றன. வாக்கு அசுத்தமாயிருக்கிறவன் எல்லாவற்றிலும் அயோக்கியனாவான். (திருடனே)

வாக்கின் முக்கியம் இவ்விதமாயிருக்கிறது.

காயம் அல்லது சரீர நிக்கிரகத்தைப் பற்றி ஸ்ரீ கிருஷ்ணபகவானனவர் சம்க்ஷேபமாய்ச் சொல்லுகிறார்.

𑌦𑍇𑌵𑌦𑍍𑌵𑌿𑌜𑌗𑍁𑌰𑍁𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞
𑌪𑍂𑌜𑌨𑌂 𑌶𑍌𑌚𑌮𑌾𑌰𑍍𑌜𑌵𑌮𑍍 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌮𑌹𑌿𑌂𑌸𑌾 𑌚
𑌶𑌾𑌰𑍀𑌰𑌂 𑌤𑌪 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

(பகவத்கீதை: XVII. 14.)

(இ-ள்) தேவதைகள், பிராமணர்கள், குருக்கள், ஞானிகள், இவர்களைப் பூஜிப்பதும் தேகசுத்தமாயிருத்தலும் நேர்மையும் சன்மார்க்கத்தில் நடத்தலும் பிரமசரியமும் பிறருக்குத் துன்பம் செய்யாமையும் சரீரத்தினால் செய்யத்தகுந்த தவமென்று சொல்லப்படுகின்றன.

இவ்விதமாய் நிக்கிரகம் செய்வதினால் மனச்சமாதானம அமைவு, சாந்தி, திருப்தி, இவைகள் உண்டாகின்றன.

தன்னை அடக்குகிறதற்கு உபாயம், முன் சொல்லியிருக்கிறபடி, அப்பியாச மென்ற பிரதியசொல் அர்த்த புஷ்டியுள்ளது. கடோப நிஷத்தினின்று மேற்கோளாக, எடுத்துக் காட்டிய சுலோகங்களின் அர்த்தத்தின் வழியே ஸ்ரீ விஷயதலைத் தெரிந்துகொள்ள வேண்டும். பரிசுத்தமான விவேகமானது புத்தி, அதை அந்த உபநிஷத்தில், சாரதியாக உவமித்திருக்கிறது, அதின்கையில் மனத்தின் பல்வாறுன கடிவாளவார்களிருக்கின்றன. புத்தியென்ற கரணம், முன்சொல்லியபடி, ஆத்ம ஏகீபாவத்தை உணர்ந்து சாக்ஷாத்கரிக்கிறது.

மனமோவென்றால் விஷயாதிகளின் வேற்றுமையையும், பலவற்றையும் கருதுகிறது. இரதஸ்வாமியாகிய ஜீவாத்மா, புத்தியே இரதத்தை நடத்தும் படியாய்ப் பார்த்துக்கொள்ளவேண்டும். அப்படியானால் கடிவாளவார்களும், குதிரைகளும், நன்றாய்ச் சுவாதீனப்படும்.

ஆகவே இவ்விதம். புத்தி தன் சரீரமென்ற ரதத்தை நடத்தவேண்டுமென்றிருக்கிறவன் ஆத்ம ஏகீபாவத்தையே அடிக்கடி சிந்திக்கவேண்டும்.

ஶநை: ஶநைருபரமேத்
புத்த்யா த்ருதிக்ருஹீதயா
ஆத்மஸம்ஸ்தம் மந: க்ருத்வா
ந கிஞ்சிதபி சிந்தயேத்॥
யதோ யதோ நிஶ்சரதி
மநஶ்சஞ்சலமஸ்திரம்
ததஸ்ததோ நியம்யைத-
தாத்மந்யேவ வஶம் நயேத்॥

(பகவத்கீதை: VI. 25-26.)

(இ-ள்) தைரியத்தினால் ஸ்வாதீனம் செய்துகொள்ளப் புத்தியினால் மனத்தை ஆத்மாவினிடத்திலேயே இருக்கும்படி செய்து சிறுகச்சிறுக மனத்தை நிறுத்தவேண்டும். வேறொன்றையும் சிந்திக்காமலிருக்கும்படி செய்யவேண்டும்.

நிலையற்றதும் சஞ்சல சுபாவமுள்ளதுமான, மனமானது எந்தெந்த விஷயங்களில் பிரவேசிக்கின்றதோ, அந்தந்த விஷயங்களினின்றும், மனத்தைத் திருப்பிப்பரமாத்மாவினிடத்திலேயே நிற்கும்படி செய்யவேண்டும்.

இந்த அப்பியாசந்தான் வேண்டுவது. இந்த அப்பியாசத்தினால்வைராக்கியம் இயற்கையாகச்சித்திக்கும்; சுய

கய விருப்பங்களற்றுப்போகும். எப்பொழுதானாலும், அவ்வித சுயநய விருப்பங்கள் தன்னிடத்தில் உதயமாகுமேயாகில், தக்ஷணமே மனத்தினால் அவைகளை ஆராய்ந்து பார்த்தும் அவைகளுக்கிடங்கொடுத்து ஒழுகுகிறதினால் மற்றவர்களுக்குண்டாகும் துன்பத்தை உணர்ந்தும், தனக்குச் சரீராபிமானம் அதிகப்படுமென்பதையும், அதனால் தன்னைச் சார்ந்திருக்கும் ஜனசமூகத்துக்கும் பெருகிய துன்பமும், சங்கடங்களும் தன்னால் விளையுமென்று மறியவேண்டும். தன் நடவடிக்கைகளிலும், பிறர் நடவடிக்கைகளிலும், சுயலாபங்களைக் கருதிப்பற்றுவனவாகி யிருக்கிறதினால், உண்டாகும் விபரீத பலன்களைத் தெளிவாயறிந்தும், அவைகளைப்பற்றிப் புராணாதிகளிற் சொல்லி யிருக்கும் உதாரணங்களைப் படித்தும் தன்னைச் சிறுகச் சிறுக அடக்கிக்கொண்டு ஒழிவுபெற்றுச்சுருதிகளில் அடிக்கடி வற்புறுத்தி உபதேசித்திருக்கின்ற சத்தியமும் தருமமும், பொருந்திய, நேர்மையான நெறியில் நிற்கக்கடவன்.

தருமத்தையே செய்யக்கடவன் என்று திரும்பத் திரும்பச் சொல்லி யிருக்கிறது.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

ஸத்ய: பலதி கௌரிவ।
ஶனைராவர்த்யமானஸ்து
கர்த்துர்மூலானி க்ருந்ததி॥

(மனு. IV. 170–172.)

(இ-ள) அதர்மிக்கும் அசிருதத்தினுல் தனத்தை தேடுகிறவ னுக்கும், பிறருக்குத் தீங்கு புரிதலில் பிரீதியுள்ளவனுக்கும், இவ்வுல கில் சுசம்கிடையாது.

தர்மவழியில் துன்பம் நேரிட்டாலும், அதர்ம த்தை நோக்கி மனம் செல்லாதிருக்கட்டும், அதர்மிகளும் பாவிகளும் சீக்கிரத்தில் விபரீத கதியை அடைய நாம் பார்ப்போம்.

இந்த உலகத்தில் பசுவானது உடனே எப்படி பல னைக் கொடுக்கிறதோ, அப்படி அதர்மத்தொழில் உடனே பலனைக்கொடுக்காது. சிறுகச்சிறுக நாளடைவில் செய்கிறவனை வேரோடு களைந்து விடும்.

ஒருமுறையில் தருமமென்றால் சத்தியமென்ற பொரு ளாம். அதின் முக்கியார்த்தம், அடியில் வருமாறு: (1) தருமம்செய்தல், (2) அவனவனுக் குரியதைக் கொடுத் தல், (3) உண்மை அறிதலும் அதின் வழி நிற்றலும், பிற வழி ஒறுத்தலும் ஆகிய இவ்வழி நிகழும் விருப்பமாம்.

தருமவழிபாடு ஒருவனுக்கு எப்பொழுதும் உதவும் துணைவன்; எது அவனை விட்டு விலகினும், இந்தப்பிரியாத் துணைவன் கூடவே இருப்பான். மரணத்திலும் விலகான். சிரேயஸ் என்ற போர்வை போர்த்துவான். இதைப்பற்றி அடியில் வருமாறு மனுசொல்லுகிறார்.

யஜ்ஞம் ஸஹைநஸ்ஸம்வி நந்யா
அத்ரீ கஜிவ ப்ராப்திகா:।

பரலோகஸஹாயார்த்தம்
ஸர்வபூதாந்யபீடயந்॥
நாமுத்ர ஹி ஸஹாயார்த்தம்
பிதா மாதா ச திஷ்டத:।
ந புத்ரதாரம் ந ஜ்ஞாதிர்
தர்மஸ்திஷ்டதி கேவல:॥
ஏக: ப்ரஜாயதே ஜந்து:
ஏக ஏவ ப்ரலீயதே।
ஏகோऽநுபுங்க்தே ஸுக்ருதம்
ஏக ஏவ ச துஷ்க்ருதம்॥
ம்ருதம் சரீரமுத்ஸ்ருஜ்ய
காஷ்டலோஷ்டஸமம் க்ஷிதௌ।
விமுகா பாந்தவா யாந்தி
தர்மஸ்தமநுகச்சதி॥
தஸ்மாத்தர்மம் ஸஹாயார்த்தம்
நித்யம் ஸஞ்சிநுயாச்சநை:।
தர்மேண ஹி ஸஹாயேந
தமஸ்தரதி துஸ்தரம்॥
தர்மப்ரதாநம் புருஷம்
தபஸா ஹதகில்பிஷம்।
பரலோகம் நயத்யாஸு
பாஸ்வந்தம் கசரீரிணம்॥

(மனு. IV. 238-243.)

(இ-ள்) எந்தப் பிராணிகளுக்கும் எவ்விதத் துன்பமு முண்டா காமல் சிறுகச் சிறுகக் கரையான்கள் புற்றை உண்டு பண்ணுகிறது

போல தருமத்தை மேன்மேலும் செய்யக்கடவன். அது பரலோகத்தில் துணையாகவிருக்கும்.

மாதா, பிதா, புத்திரன், களத்திரம், பந்துக்கள், இவர்கள் பரலோகத்திற்குப் பின்தொடர்ந்துவாரார், தருமம் ஒன்றே கூடத்தொடரும்.

ஒருவன் தனிமையாகவே பிறக்கிறான். தனிமையாகவே இறக்கிறான். தனிமையாகவே புண்ணியபாப கருமங்களை நுகர்கிறான்.

பிணத்தைக் கட்டைபோலும் மண்கட்டிபோலும் தரையிற் போட்டுவிட்டு உறவினர் பராமுகமாய்த் திரும்புவார்கள் 'தருமம்' ஒன்றே அவனைத் தொடருகிறது.

ஆகவே விலகாமல் உதவும் துணையைப்பெற தருமத்தை எப்பொழுதும் மேன்மேலும் செய்யக்கடவன். தருமமென்ற துணையைக்கொண்டு சிரமசாத்தியமான இருளைத்தாண்டலாம்.

தருமத்தையே பிரதானமாகக்கொண்டு நாடுகிறவனும் தபஸினால் பாபங்களைத் தொலைத்தவனுமான, புருஷன் தேஜோமயமான திவ்விய சரீரத்துடனே பரலோகத்திற்குப் போகிறான்.

இவ்வுலகிலும் மற்ற எவ்வுலகிலும் ஆனந்தாவாப்திக்குக் காரணம் தருமமொன்றேஎன்று அறிவுறுத்துகிறது சனாதன தருமத்தின் முக்கிய இலக்ஷணமாம். அதின்ஹிருதயம் கடமை; அதின்கலை (மூர்ச்சை) நடுநிலைமை; அதின் பிராணவாயு மாறாத தருமம்; ஒவ்வொருவனும் அவனவன் தேடியதை அடைகிறான். கூடுகிறதுமில்லை, குறைகிறதுமில்லை. ஒவ்வொரு கடனும் கொடுத்தே தீரவேண்டும், காரணமிருந்தால் காரியம் நிகழ்ந்தே தீரும்.

திருப்தி என்ற குணம் மேற்கண்ட உண்மை உணர்வால் நிகழ்வது. அதுவும்சந்துஷ்டிக்குக் காரணமாம். வொருவனும் இந்தக் குணத்தைத்தான் சில இயல் அமையுமாறு முயலவேண்டும்.

ஸந்தோஷம் பரமாஸ்தாய
ஸுகார்த்தீ ஸம்யதோ பவேத்
ஸந்தோஷமூலம் ஹி ஸுகம்
து:கமூலம் விபர்யய:

(மனு. IV. 12)

(இ-ள்) சந்தோஷத்தை விரும்புகிறவன் அடக்க முடையனுய்த் திருப்தியை அடைக்கலமாக அடையவேண்டும், திருப்தி ஸந்தோஷத்திற்கு உண்மையான காரணம். அதன் எதிரிடையான அதிருப்தி என்பது துக்கத்திற்குக் காரணம்.

திருப்தியுள்ளவன் எவ்வளவு கொடுமையான சந்தர்ப்பங்களிலும், சந்தோஷமாக விருப்பான். சந்துஷ்டிக்கு காரணம் அவன் தனக்குள்ளே வைத்திருக்கிருன், அதிருப்திசுபாவமுள்ளவனுக்கு எவ்வளவு சவுகரியங்க ளிருந்தலும், அதிருப்திக்கிடமிருந்துகொண்டேயிருக்கும். எப்பொழுதும் உலகத்தில், பதவியிலும் செல்வத்திலும், அதிருஷ்டத்திலும் நம்மைவிட மேலானவர்க ளிருந்துகொண்டேயிருப்பார்கள். அறிவற்றவனுக்கு அதிருப்திக்குக் காரணங்கள் எப்பொழுது மிருந்துகொண்டே யிருக்கும். பிராப்தானுசாரமாய்க் கிடைத்த மட்டில் திருப்தி யடைவதே, விவேகியின் சுபாவம். அதிருப்தியா யிருத்தல் அறிவின்மையாம்.

ஜீவாத்மாக்களுக்குள் நேர்மையான சம்பந்தத்தை உண்டுபண்ணும் தருமநீதிமுறைகளைப்பற்றிப்பிரஸ்தாபித்

திருக்கிறேம், இவைகளினுல் அவனவனுக்கு க்ஷேமகர மாயும், அவனவன் விகாசத்திற்கு அனுகூலமாயு மிருக்கிறதாக வெளிப்படையில் தோன்றும், தருமநீதி முறைகளை விலக்கினதாகக் கொள்ளக்கூடாது. ஏனெனில் உற்றுநோக்கில் சுயநயங்களைப் பற்றியன வென்று சொல்லப்படும் நீதிமுறைகள் நேரிலில்லாமற் போனுலும், சிறுகச்சிறுக நாளடைவில் பிறருக்கும க்ஷேமகரமாகவே, அமைகின்றன. ஜீவஒழுக்கம் விகாசம், புண்ணியம, பாவம் கடமை, இவை முதலியன ஓரே ஜீவனைப்பற்றி ஏற்படா. இவைகள் நடைபெற ஜனசமூகம் இருந்துதீர வேண்டும. தன் கடமை அல்லது தனக்கேற்ற தருமநீதி முறையென்றல் கடைமுறையில் பிறருக்கு ஓர் உதவி, அல்லது துன்ப நிவிருத்தியாகவே முடியும்.

உதாரணமாக:— நாம் அசுத்தமாக இரும்போமாகில், அயலாருடன் சம்பர்க்கம் நேரிடுங்கால் அவர்களுக்குத் துன்பம் விளைவிப்போம். நீர் இப்படிச் செய்ய உமக்கே கடைமைப்பட் டிருக்கிறீர் என்று சொன்னுல் அதின் தாற்பரியம் அடியில்வருமாறு.—ஏகிபாவாத்மகமாய் நடைபெறும் இந்த மனுஷ ஜீவ விகாசத்தில் உம்முடைய ஜீவவிகாசமும் அடங்கி யிருக்கின்றமையால். அம்முறையில் நீர் இப்படிச் செய்யக் கடமைப்பட் டிருக்கிறீர். ஒரு ஜீவன் மற்ற ஜீவர்களன்றி விகாசம்பெருது. தனக்குத்தானே உதவிபுரிந்தாலும் அல்லது சங்கடம் செய்விததாலும், அது பிறர்களுக்கு முறையே அபிவிருத்திகளாயும், அல்லது க்ஷீணகரமாயும், நேரிலாவது அல்லது சிறுகச் சிறுக நாளடைவிலாவது முடியும், அசுத்தமான குணமுள்ள ஒரு மனிதன் முதன் முதலில் தனக்குத் துன்பம் விளைவித்துக் கொள்ளுகிருன். பிறகு அதைப்பார்க்கப்

பிறர்கள் மனோ நேர்மைகுன்றி அம்மாதிரி ஒழுக நிகழ்கின்றமையால் அவர்களும் துன்பமடைய அவன் ஏதுவாகிறான்.

இப்புஸ்தகத்தில் I, II வது பிரிவுகளில், தேவர்கள், பிதுருக்கள், ரிஷிகள், மனிதர்கள், பிராணிகள் இவர்களுக்குரிய கடமைகளைப்பற்றி விவரித்திருக்கிறோம். மனிதர்களுக்கு நடைபெற வேண்டும் கடமைகளை விசாரிக்கப் புகுமுன், நாம் பொதுப்படப் பிறர் நோகாமலிருக்கும் வண்ணம், கடைப்பிடியாகப் பற்றவேண்டும்.

அஹிம்ஸா பரமோ தர்ம:॥

(மகாபாரதம் ஆனுசாசனிக பர்வம், 114.)

(இ-ள்) "பிறரைஹிம்சியாமலிருத்தல் உயர்ந்த தருமம்" என்று பீஷ்மாசாரியார் உபதேசம்செய்தார்.

மனுவும் இதைப்பற்றி அடியில்வருமாறு:

யஸ்மாதண்வபி பூதானாம்
த்விஜான்னோத்பத்யதே பயம்
தஸ்ய தேஹாத்விமுக்தஸ்ய
பயம் நாஸ்தி குதஶ்சன ।

(மனு, VI. 40.)

(இ-ள்) எந்தத்துவிஜனைக்கண்டு ஒரு பிராணியும், பயப்படுகிறதில்லையோ, அவனும் தேகாபிமானமற்றவனாய, ஒரு பிராணியினின்றும் பயங்கொள்ளுகிறானில்லை.

ஈசுவரன் நீதிஸ்வரூபி, துன்பஞ் செய்யான், துன்பம் செய்யப்படான். அன்பும் செந்தண்மையும் பூண்டு ஒழுகும் யோகியானவன் யாதொரு பயமில்லாமலும் அபாயத்திற்கு இடமன்றியும் காட்டுமிருகங்களின் மத்தியில், சஞ்சரிப்பான். பீஷ்மர், வாக்கியம்: "கொல்லுகிறவன்

கொல்லப்படுவான்,'' ''ஒன்றையும் கொல்லான் ஒன்றாலும் கொல்லப்படான்.'' துன்பம் செய்யாதவன் ஜீவகாருண்ணிய முடையவனாய் ஒவ்வொரு ஜீவனிலும் ஆத்ம ஸ்வரூபத்தைப் பார்க்கிறான். ஒவ்வொன்றையும் தன் சரீரத்தின் ஓர் அம்சமாக நினைக்கிறான். அப்படிப்பட்டவன் சர்வ பூதங்களுக்கும் ஹிதமானவன். அவன் எங்கேபோனாலும் அவனுக்குப் பயமின்றாம்.

யக்ஞத்தினால் மாத்திரம் ஜீவர்களுக்குள் நேர்மை சம்பந்தங்களை ஏற்படுத்தலா மென்றும், அந்நேர்மையே நம்முடைய அபிவிருத்திக்கும் விகாசத்திற்கும் இன்றியமையாத சாதனமென்றும் முன்னர் விசாரித்து அறிந்திருக்கிறோம். மனிதன் தன் சுயநயத்தையே கருதி நடைபெற முடியாது. உலகம் ஒருவன் பொருட்டாக அன்றாம். ஒருவன் தன் இஷ்டப்படி நினைக்கலாம், நினைத்தபடி செய்யலாம். ஆனால் ஈசன் சங்கல்பத்தை அனுசரிக்காமலும், அஃதாவது அவருடைய பரிணமமாகியபிரணவத்தை மீறி நடைபெறுவானாயின், அவன் துக்கத்திற்குப் பாத்திரனாவான். துக்கமே அவன்கதியாக முடியும். அடிக்கடி துன்பம்சம்பவிக்க அதினால்அறிவு உண்டாகித்தன்சுயநயத்தை யேபற்றி ஒழுகும் சுபாவம் நீங்கும். கடையில் பிரபஞ்சத்துடன் நேர்மைபற்றி ஒழுகுவான்.

இந்தத் தத்துவத்தை நாம் மனத்தில் உறுதியாய்ப் பதிய வைப்போமானால், அதின்மேல் பின்வரும் அத்தியாயம் நன்குவிளங்கும்.

மூன்றாம்பகுதியில்

7-வது அதிகாரம்

# மூன்றாம் பிரிவு.

## 8-வது அதிகாரம்.

### ஜனசமூகத்தில் புண்ணிய பாவ கருமங்கள்.

### பெரியோர்களிடம் ஒழுகும் ஒழுக்கம்.



புண்ணிய பாவ கருமங்களைப் பிரியத்துவேஷ பாவங்களினின்று அபிவிருத்தியான காரியங்களாக நாம் அறியத்தக்கது. அன்பினால் ஏவப்பட்டவர்களாய் நாம் தியாகம் செய்கின்றோம்; நம்மைச் சங்கோசித்துக் கொள்ளுகின்றோம்; நம்மை அடக்கிக்கொள்ளுகிறோம்; பொதுநன்மையை உத்தேசித்துச்சுயசயங்களை உபேக்ஷிக்கின்றோம். இந்த அன்பு அந்தர்யாமியான ஆத்மாவினின்று விகசிக்கிறது. அதுவே ஆத்மானந்தத்தின் ஓர் அம்சமாம். அதனால் நாம் செய்யும்கடமை, பிரியகரமாயும், நாம் செய்யும் தியாகம் சந்தோஷகரமாயும் அமைகின்றன.

அந்தக் கரணவிருத்திகள் சுபாவத்தில் முதன்மையில் விதியை மீறி நிகழ்கின்றன. அப்பொழுது விதிப்பிரக்ஞை ஏற்படவில்லை. ஆனால் விதிப்பிரக்ஞை ஜனித்து அனுபவசித்தியாகிச்சைதன்னியமும்ஆனந்தமும்ஒன்றுபட விக்ஞானமய சுவரூபமான ஆத்ம பாஸத்தினால் அந்த விருத்தி பிரகாசிக்கின்றது. பின்னர் விக்ஞானமய ஸ்வரூபியான ஆத்மா, ஆனந்தமய ஸ்வரூபியான பரமாத்மாவாக விகசிக்கும்பொழுது அந்தக்கரண விருத்தி ஒவ்

வொன்றும், புண்ணிய கருமமாகிறது. அப்பொழுது ஒவ்வொரு விருத்தியும், ஈசுவர வாக்காக அமையும்.

ஒவ்வொரு புண்ணிய கருமத்திற்கும், பிரியம் ஆதாரமாக விருக்கிறதுபோலத் துவேஷபாவம், பாவகருமத்திற்குக் காரணமாக விருக்கிறது. ஒற்றுமையாயிருத்தலிலே, விதி வேற்றுமை, அதற்கு மாறுனது. நேர்மையானது பிரபஞ்ச விகாசத்திற்குக் காரணமாம். நேர்மையின்மை சங்கோசத்திற்கு (அழிவு பிரளயம்) க்காரணமாம்.

நமக்குள் பரஸ்பர சம்பந்தங்கள் அன்பின் வழியனவாயின் அந்தச் சம்பந்தங்கள் நேர்மையாகவும் சந்தோஷகரமாகவும் நடைபெறும் வண்ணம், நாம் சுபாவமாய் உடனுக்குடனே தியாகம் செய்கின்றோம்.

ஜனசமூக சம்பந்தமாய் புண்ணிய பாவகருமங்களை விசாரிப்பதில், அவைகளைப் பெரியோர்களை நோக்கினவைகளென்றும், சமானஸ்தர்களை நோக்கினவைகளென்றும், கீழானவர்களை நோக்கினவைகளென்றும், மூன்று பகுதிகளாகப் பிரித்துப் பேசுவோம்.

மனிதனுக்கு இயற்கையாய் மேற்பட்டவர்களாவன: ஈசுவரன், அரசன், பெற்றோர், ஆசாரியன், வயோதிகன். இவ்வரிசையில் ஒருவருக்கொருவர் உயர்வு தாழ்வு என்ற அவாந்தர வித்தியாசங்கள் குறிக்கப்படவில்லை. சாஸ்திரங்கள் பலவாறுக உயர்வு தாழ்வு ஏற்படுத்தி விதிக்கின்றன.

ஒவ்வோர் சமயத்தில் பெற்றோருக்கும் ஆசாரியருக்கும் சமானமானவர்களாய், அறிவிலும் குணசீலத்திலும் தம்மைவிட மேன்பாட்டை யுடையவர்கள், யதேச்சையாய் நேர்வார்கள். அவர்களை நோக்கி ஒழுகுகிறதில், இனிப் பிரஸ்தாபிக்கப் புகும் மரியாதைகளின் தாரதம்மி

யங்களுடனே ஒழுக வேண்டும். அந்த மரியாதைகளைப் பாகுபாடுசெய்து சமயோசிதமாக உடனுக் குடனே இசைத்து ஒழுகக்கூடும். அதனால் முன்சொல்லிய மரி யாதைக் குரியவர்களின் வகுப்பின் முறையை மாற்ற வேண்டுவதில்லை.

ஈசுவரனை நோக்கி நாம் பாராட்டும் அன்பானது உயர்ந்த பக்தியாம். அது முக்கியமாய் வழிபாட்டின் மூல மாய், விளங்கப்பெறும். ஈசுவர சம்பந்தமான பாவங்கள், வழிபாட்டுக் குரிய திரவியங்கள், புண்ணிய க்ஷேத்திரங் கள், புண்ணிய மூர்த்தங்கள், இவைகளைக் கௌணபக்ஷ, மான சிரத்தையுடன் உபசரித்து அனுஷ்டிக்கவேண்டும். அவர் அளவிறந்த மகிமையுடையவ ரென்ற உணர்வின் வழியாய் பக்தி நிகழ்கின்றது. அவருடையவொப்பு உயர்வற்ற ஞானமும் கருணையும் அன்பின் நிகழ்ச்சியை உண்டு பண்ணுகிறது. நாம் கிஞ்சித்க்ஞர் என்ற மனவியாகுல மின்றி சந்துஷ்டியான பாவனையும், அவருடைய ஆக் ஞைக் கடங்கி ஒழுகுதல் முறையென்ற பாவனையும், அமைந்த பணிவும் (1) அவருடைய சர்வக்ஞதையில் சிரத்தையும் அதினால் நிகழும் அமைதியும், (2) அவ ருடைய கருணையினால் உண்டாகும் பக்தியும் கிருதக் ஞதையும், (3) அவருடைய ஏவலாளாகி அவருக்குப் பூர்ண பரித்தியாகமும், (4) இவைகளெல்லாம் அவருக்கு வழி படும் பக்தியின் மூலமாய்ச் சுபாவமாய் உண்டாகும். ஈசு வரனிடத்தில் வைக்கும் அன்பில் பயக்கும் இக்குணங்களை இடையறாது பயிலுதல் நாம் அவருக்கு வழிபடவேண் டும் கடமையாம். அக்குணங்களாவன: பக்தி, பணிவு, சிரத்தை, அமைதி, வணக்கம், கிருதக்ஞதை பரித் தியாகம்.

ஹிந்துக்களுடைய புராணங்களில் மேற்கண்ட குண ங்கள் பூர்ணமாய் அமைந்தவர்களும் ஈசுவரனிடம் பரம பக்தியுள்ளவர்களுமான சிறந்த பக்தர்களின் சரிதங்கள் அனேகங்களுண்டு. அவைகளைப்படித்து அம்மாதிரி ஒழுக வேண்டும். யுத்தகளத்தில் பீஷ்மர் தேகம் முழுமையும் புண்பட்டவராய்க் கிடந்த சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணபக வானை நோக்கி அவர் சொல்லியிருக்கின்ற கம்பீரமான ஸ்துதி நன்றாய் வாசித்து மனனம் செய்யற்பாலது. அந்த ஸ்துதியினால் ஸ்ரீ கிருஷ்ணபகவானைத் தன் பக்கத் தில் வரும்படி செய்துகொண்டார். (மகாபாரதம் சாந்தி பர்வத்தைப் பார்க்க.)

தமக்கு வந்த ஆபத்துக்களையெல்லாம் பக்தியினால் வென்ற பிரஹ்லாதர் ஈசுவரனைநோக்கிச் செய்த பிரார்த் தனையாவது, "நான் எத்தனை ஆயிரம் ஜன்மங்களைக்கர்ம கதியால் எடுத்தாலும் அப்பொழுதெல்லாம், ஓ அச்சுதா! உம்பேரில் எனக்குள்ள அன்பு குறையாமலிருக்கட்டும். உலக அபிமானிகள் விஷயாதிகளில் வைக்கும் அவா உம் மிடம் எனக்குப் பக்தி பூர்வமாக என்னை ஏவட்டும்."

(விஷ்ணுபுராணம் IX. X.)

இவ்வித பக்தர்களைப்பற்றி ஸ்ரீ கிருஷ்ணபகாவன் சொல்லுகிறதாவது :

𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑍁𑌮𑌾𑌂𑌪𑌾𑌰𑍍𑌥
𑌦𑍈𑌵𑍀𑌂𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃।
𑌭𑌜𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑌨𑍍𑌯𑌮𑌨𑌸𑍋
𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍॥
𑌸𑌤𑌤𑌂𑌕𑍀𑌰𑍍𑌤𑌯𑌨𑍍𑌤𑍋𑌮𑌾𑌂
𑌯𑌤𑌨𑍍𑌤𑌶𑍍𑌚𑌦𑍃𑌢𑌵𑍍𑌰𑌤𑌾𑌃॥

𑌨𑌮𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌮𑌾𑌂 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾
𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇 ॥
𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌚𑌾𑌪𑍍𑌯𑌨𑍍𑌯𑍇
𑌯𑌜𑌨𑍍𑌤𑍋 𑌮𑌾𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇
𑌏𑌕𑌤𑍍𑌵𑍇𑌨 𑌪𑍃𑌥𑌕𑍍𑌤𑍍𑌵𑍇𑌨
𑌬𑌹𑍁𑌧𑌾 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍋𑌮𑍁𑌖𑌮𑍍 ॥

(பகவத்கீதை, IX. 13. 15.)

(இ-ள) ஓ பார்த்தா ! மஹாத்மாக்கள சாத்விகசுபாவத்தையே ஆசிரயித்துப் பிரபஞ்சத்திற்குக் காரணமாகவும் நாசமற்றவுமான என்னையறிந்து அந்நிய தேவதைகளிடத்தில் மனத்தை வைக்காமல் என்னிடத்திலேயே மனத்தை வைத்து என்னையே பஜிக்கிறார்கள்.

இந்திரிய நிக்கிரகம், சமம், தமம், தயை, முதலிய கருமங்களோடு கூடினவர்களாய் எப்பொழுதும் என்னை கீர்த்தனஞ் செய்கின்றவர்களாயும், ஸ்திரமான விருதமுடையவர்களாயும், ஜாக்கிரதை யுடையவர்களாயும், பக்தியினால் நமஸ்காரம் செய்கின்றவர்களாயும், உபாசிக்கின்றார்கள்.

பின்னும் சிலர் சர்வாத்மகனான என்னை ஞானமாகின்ற யக்ஞத்தினாலே பூஜித்துக் கொண்டும், அபேத பாவனையினாலும் பேதபாவனையினாலும் அனேகவிதமாய் உபாசிக்கின்றார்கள்.

மறுபடி அவர் சொல்லுகிறதாவது :

𑌅𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑌵𑍋
𑌮𑌤𑍍𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ।
𑌇𑌤𑌿 𑌮𑌤𑍍𑌵𑌾 𑌭𑌜𑌨𑍍𑌤𑍇 𑌮𑌾𑌂
𑌬𑍁𑌧𑌾 𑌭𑌾𑌵𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 ॥

𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌾 𑌮𑌦𑍍𑌗𑌤𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌃
𑌬𑍋𑌧𑌯𑌨𑍍𑌤𑌃 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌂।
𑌕𑌥𑌯𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂
𑌤𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚 𑌰𑌮𑌨𑍍𑌤𑌿 𑌚॥
𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌤𑌤𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂
𑌭𑌜𑌤𑌾𑌂 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌂॥
𑌦𑌦𑌾𑌮𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌂 𑌤𑌂
𑌯𑍇𑌨 𑌮𑌾𑌮𑍁𑌪𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇॥

*(பகவத்கீதை, X. 8-10.)*

(இ-ள்) நான் சகலத்திற்கும் உற்பத்திகாரணன்; என்னிடத்தினின்றே சகலமும் பிரவிருத்திக்கின்றன. இவ்விதமாய்த்தெரிந்து விவேகிகள் என்னைப் பிரியமுடன் பஜிக்கின்றார்கள்.

என்னிடத்தில் மனமுடையவர்களாய், என்னிடத்தில் பிராணனை வைத்தவர்களாய் என்னை ஒருவருக்கொருவர் போதிக்கிறவர்களாய், கீர்த்தனஞ்செய்கின்றவர்களாய், எப்பொழுதும் சந்தோஷத்தையும் அடைகிறார்கள்; சுகத்தையும் அடைகிறார்கள்.

எதனால் அவர்கள் என்னை அடைவார்களோ அப்படிப்பட்ட புத்தியோகத்தை எப்பொழுதும் என்னிடத்தில் மனத்தையுடையவர்களாய்ப் பிரீதியோடுபஜிக்கிறவர்களாக இருக்கின்ற அவர்களுக்குக் கொடுக்கிறேன்.

தியேயமான வஸ்துவைத் தியானிப்பதினாலும், அவரை வழிபடுவதினாலும், அவரைப்பற்றிய புராணங்களைப் படிப்பதினாலும், கேட்பதினாலும், சாதுசங்கத்தினாலும், அவர்சம்பாஷணையினாலும், பக்தியானது பயிற்சியடைகிறது. இவ்விதமாய்ப் பக்தி விருத்தியாகிறது.

𑌯𑍇 𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿
  𑌮𑌯𑌿 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌃 ।
𑌅𑌨𑌨𑍍𑌯𑍇𑌨𑍈𑌵 𑌯𑍋𑌗𑍇𑌨
  𑌮𑌾𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍𑌤 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇 ॥
𑌤𑍇𑌷𑌾𑌮𑌹𑌂 𑌸𑌮𑍁𑌦𑍍𑌧𑌰𑍍𑌤𑌾
  𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑌾𑌗𑌰𑌾𑌤𑍍 ।
𑌭𑌵𑌾𑌮𑌿 𑌨 𑌚𑌿𑌰𑌾𑌤𑍍 𑌪𑌾𑌰𑍍𑌥
  𑌮𑌯𑍍𑌯𑌾𑌵𑍇𑌶𑌿𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍 ॥

(பகவத் கீதை, XII. 6. 7.)

எவர்கள் சகலகர்மங்களையும், என்னிடம் சமர்ப்பித்தும், என்னைச் சரணமடைந்தவர்களாய் ஒரேவிதமான பக்தியோகத்தினால் என்னைத் தியானம்செய்துகொண்டும் உபாசிக்கிறார்களோ, என்னிடத்தில் வைக்கப்பட்ட மனத்தை உடைத்தான அவர்களை, ஓ! அர்ஜுனா! மிருத்தியுவாகிற சம்சார சாகரத்திலிருந்து சீக்கிரம் நான் கரையேற்றுகிறேன்.

பக்தியின் பயனாக, எல்லாம் ஈசன் செயல், என்ற பாவம், தானாகவே உண்டாகிறது. ஏனெனில் பெரியோர்களினின்றும் நாம் உணர்ந்து அன்புபாராட்டுவோமானால் நாம் அவர்களுக்கு உடனே பணியப் பிரியமுள்ளவர்களாவோம். அறிவும், அன்பும், உபசாந்தியையும், வணக்கத்தையும் உண்டுபண்ணும். அறிவு உத்தமமான மார்க்கத்தைத் தேடும்; அன்போ ஜீவஹிம்ஸை நீங்கின மார்க்கத்தைத் தேடும். ஈசுவரனிடத்திற்போல், அறிவும் அன்பும், ஒருவனிடம் பூர்ணமாய் அமையுமாகில் (பிரபத்தி) உபசாந்தி தானாகவே நிகழும். நம்முடைய உலக சம்பந்தமான எல்லாக் காரியங்களும், ஈசன் செயலின்

வழியானவைகளென்று உணர்ந்தோமானால் அவைகளின் சம்பந்தங்கள் திருப்தியாகவும் சந்தோஷமாகவுமிருக்கும். "அவ னசையாமல் அணுவு மசையாது" என்ற உணர்வு ஜனித்து மனச்சமாதானம் உண்டாகும். இம்மாதிரியாய், மனிதன் ஈசுவரனிடம் ஒழுகும் ஒழுக்கம், வணக்கமுள்ள மகன், அன்பும் அறிவுமுள்ள பிதாவிடம் ஒழுகும் ஒழுக்கத்திற்கு நேராகும். ஆனால், அந்த இதைவிட அதிக மேன்பாட்டை யுடையதாக விருக்கும்.

𑌪𑌿𑌤𑌾𑌹𑌮𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑍋
𑌮𑌾𑌤𑌾 𑌧𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌃 ।
𑌭𑌰𑍍𑌤𑌾 𑌨𑌿𑌵𑌾𑌸𑌃 𑌶𑌰𑌣𑌂
𑌸𑍁𑌹𑍃𑌤𑍍 ... ॥

(பகவத்கீதை, IX. 17. 18.)

(இ-ள்) இந்த ஜகத்திற்குத் தகப்பனும், தாயும், பிதாமகனும், தரிக்கிறவனும், போஷகனும், இருப்பிடமும், சரணமடையத் தகுந்தவனும், பிரியத்தைச் செய்கிறவனும், நானே.

அப்பேர்ப்பட்டவரைக் குறித்து நன்றியறிதல்தானே உண்டாகும். அறிவு மிக மிக மேன்மேலும் நன்றியறிதல் விருத்தியாகும். பிரபத்தி, தியாகம், இவை இரண்டும் பக்தியின் முதிர்ச்சியின்பயனும் நம்முடைய கருமங்களைத் தினந்தோறும் ஈசுவரார்ப்பணம் செய்துகொண்டு வருவோமாகில் தியாகபாவம் பயிற்சியாகும். இதுமுதிர்ச்சியாகக் காமமனசு ஜயிக்கப்பட்டு பரமாத்ம தரிசனம் கிடைக்கிறது.

𑌯𑌤𑍍𑌕𑌰𑍋𑌷𑌿 𑌯𑌦𑌶𑍍𑌨𑌾𑌸𑌿
𑌯𑌜𑍍𑌜𑍁𑌹𑍋𑌷𑌿 𑌦𑌦𑌾𑌸𑌿 𑌯𑌤𑍍

யத்தபஸ்யஸி கௌந்தேய
தத்குருஷ்வ மதர்ப்பணம்॥

(பகவத்கீதை, IX. 27.)

(இ-ள்) ஓ குந்தி புத்திரா! எதைசசெய்தாலும், எதைப்புஜித்தாலும், எந்த ஹோமம் செய்தாலும், எந்தத்தானம் செய்தாலும், எந்தத் தபசு செய்தாலும் அதை எனக் கர்ப்பணமாகச்செய்.

பெரியோர்களை நோக்கி அன்பின் வழியாய் நிகழும் பக்தியின் பலபிரிவான இந்தச் சன்மார்க்க பாவங்களைப் போலவே, பெரியோர்களை நோக்கிக் குரோத பாவத்தின் வழியாய் நிகழும் பயத்தின் பலபிரிவான துன்மார்க்க பாவங்கள் உண்டு. அடிக்கடி பெரியோர்களின் யோக்கியதையைக்குறைக்க முயன்றும், நம்முடையசமானநிலைக்கு அவரைத் தாழ்த்தியும் செய்கிறோம். அதனால் அவரிடம் நமக்கிருந்த பயபக்தி இல்லாமற் போய்விடுகிறது. ஒரு பெரியவரை நமக்கு விரோதியாகப் பாவிப்போமானால் அவர் தம்முடைய மேலான சக்தியினால் என்ன செய்து போடுவாரோ என்ற பயம், இயற்கையாகவே நமக்கு இருக்கத்தானிருக்கிறது. அதை எதிர்க்க நாம் அசக்தராக விருக்கிறோமென்று தெரிகிறோம். ஆகையால் அவருடைய விரோதகர மனோசக்தியைக்குறைக்க வழிபார்க்கிறோம். அல்லது அதினின்று தப்பி ஓடப்பார்க்கிறோம். இந்தத்துவேஷ பாவமானது ஈசுவரனை நோக்கில், அவருடைய மகிமையின் உணர்வையும் அவருடைய அபார சக்திகளின் உணர்வையும் குறைக்க முயலுகின்றோம். இம்மாதிரி யானவர்களிடம், சாதாரண துர்க்குணம் அவமதிப்பாம் புண்ணிய மூர்த்தங்கள் புண்ணிய க்ஷேத்திரங்கள் இவைகளைப்பற்றி நிந்தையாகவும் அசிரத்தையாகவும் பேசுவார்கள்; அப்படியே நடப்பார்கள். பிறர்களின் சமயக் கொள்கைகளைப்

பற்றி நகைப்பார்கள். நையாண்டி செய்வார்கள். இவ்வொழுக்கம் கடையில் தெய்வநிந்தை என்ற பாவத்திற் கொண்டுவிடும். மேற்கண்ட இருவித ஒழுக்கங்கள் சுத்தாந்தக்கரண விருத்திகளைக் கலைத்துவிடும் ஆகையால், அவ்வித வொழுக்கங்களுக்குட்படாமல் கவனமாய் விலக வேண்டும். மேன்மையான சுத்தாந்தக் கரண விருத்திகள் நிகழாமல் செய்துவருவோமாகில் சமய நெறிகளினின்று விலகிவிடுவோம். சுத்தாந்தக் கரண விருத்திகளாலும் அன்பினின்று நிகழும் பக்திவழிபாடுகளாலும், தான் ஈசுவரனை யடையலாம். துவேஷபாவத்தினால் ஈசுவரனை விட்டு மேன்மேலும் தூரவிலகி விடுகிறான். அவன் ஈசுவர சான்னித்தியத்துவ உணர்வின்றி தருமநீதி முறையில் நம்பிக்கையற்றவனாய்த் துன்மார்க்கத்தில் பிரவேசிக்கிறான்.

𑌅𑌸𑌤𑍍𑌯𑌮𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌂 𑌤𑍇
𑌜𑌗𑌦𑌾𑌹𑍁𑌰𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ॥

(பகவத்கீதை. XVI. 8.)

(இ-ள்) ஜகத்தானது சத்தியமில்லாமலும், தருமா தருமங்களுடைய விவஸ்தை யில்லாமலும், ஈசுவரனில்லாமலும், நடைபெறுகின்றதென்று அவர்கள் பிதற்றுகின்றார்கள்.

ஈசுவரனிட மிருக்கும் பயபக்திக்குப் பிறகு அரசனிடம் பயபக்தி இருக்கவேண்டும். அரசன் உலகத்தில் ஈசுவரனின் பிரதிநிதியாக இருந்துகொண்டு செங்கோல் முறையில் நீதிசெலுத்திப்பிரஜைகளைப்பாதுகாக்கிறான். பிரஜைகளின் க்ஷேமங்களைக்கோரினவனாகத் தன்னுடைய விருப்பங்களையும் சவுகரியங்களையும் கொஞ்சமேனும் பேணாமலும், ஜனங்களுடைய நன்மையையே கருதியும், நடைபெறுகிறான். இம்மாதிரியாகப் பூர்வீக தெய்வத்தன்மை பொருந்

றிய அரசர்கள் ஆண்டு வந்தார்கள். அவர்களின் செங்கோல் முறையானது உயர்ந்த இறைமாட்சி இத்தன்மையது என்று இன்னும் நிதர்சனமாக விளங்குகிறது. முன் பிரஸ்தாபித்திருக்கிற சன்மார்க்க முறைகளை, ஈசுவரனை நோக்கில், கொஞ்சங்குறைவாகப் பிரஜைகள் அனுசரித்து அரசனை வழிபடவேண்டும். இராஜபக்தி, உண்மை பாராட்டல், கீழ்ப்பணிவு, இவைகள் நல்ல பிரஜைகளின் இலக்ஷணமாம். இவைகள் ஜன ஸமூகத்தின் க்ஷேமத்திற்கு இன்றியமையாத முறைகளாம். மனுசொல்லுகிறதாவது: உலகரக்ஷணைக்காக ஈசுவரன் அரசனை ஏற்படுத்துகிறான். இந்திரன், வாயு, யமன், சூரியன், அக்கினி, வருணன், சோமன், குபேரன், இவர்களுடைய அம்சங்களால், அரசன் அமைக்கப் பெற்றிருக்கிறான். இந்திரனாக, அரசன் பிரஜைகளுக்கு நன்மைகளைக் கொடுக்கிறான்; வாயுவாக, எல்லாவிஷயங்களையும் அறிகிறான்; யமனாக, பிரஜைகளைத் தருமமாகப் பரிபாலனஞ் செய்கிறான்; சூரியனாக, பிரஜைகளிடம் நின்று வரிவசூலிக்கிறான்; அக்கினியாக, தேஜஸ்வியாக விருக்கிறான்; வருணனாக, துன்மார்க்கிகளைத் தண்டிக்கிறான்; ஸோமனாக ஜனங்களை ரஞ்சிப்பிக்கிறான்; குபேரனாக, பிரஜைகளை ரக்ஷிக்கிறான்.

(மனு VII. 3. 4 யும் IX. 303—311 யும் பார்க்க.)

மகாபாரதம் சாந்திபர்வத்தில் (56 முதல் 91 வரையுள்ள அத்தியாயங்களில்) ராஜனுடையவும், பிரஜைகளுடையவும், முறைகளைப்பற்றி பீஷ்மாசாரியர் செய்திருக்கிற உபந்நியாஸம் அதிக அறிவு பயக்கத்தக்கது. அரசன் ஈசுவரன் ஸ்தானத்திலிருந்து பிரஜைகள் ரக்ஷகனாகவும் பாதுகாப்பவனாகவும் இருக்கவேண்டும்.

இதிஹாஸங்களில் நல்ல அரசர்களின் செங்கோன்மையினால், ராஜபக்தியுள்ள பிரஜைகள் நல்ல வாழ்வை

அனுபவித்தார்கள் என்று பல விருத்தாந்தங்களிருக்கின்றன. இராஜபக்தி எவ்வளவு முக்கியமென்று சொல்லப்பட்டதோ அதற்கு முற்றும் மாறான துன்மார்க்க முறைகளான ராஜநிந்தை, இராஜதுரோகம், இராஜாவிற்கு விரோதமான கலகம் இவைகள் தகாதவைகளென்று விலக்கத்தக்கன. அரசின்மையால் தேசத்திற்குத் துன்பங்கள் பலவாறாக விளைகின்றன.

இராஜபக்தி என்ற சீலத்தின் தன்மையுள்ளது தேசாபிமானம். இந்த முறையில் தேசமுழுமையும் ஒன்றாக ஓரே புருஷனைப்போலும் பாவிக்கப்படுகிறது. அதின் பொது க்ஷேமத்தின்பொருட்டுச் சேவகம் செய்யக்கடவன். உண்மையில் ஜனசமூகமென்ற மகத்துவமே அரசனாக மூர்த்திகரித்திருக்கிறது. ராஜபக்தியானது தேசாபிமான பாவத்தின் உத்தமமான பயனாகவிருக்கிறது. அந்தக்கரண விருத்திகளின் பலவைகளின் காரியமாக தேசாபிமானமென்ற சீலம், ஏற்படுகிறது. சுதேசத்தின் பூர்வ காலத்தின் கௌரவத்தைப்பற்றி உண்டாகும், விசுவாஸமும், சுதேசத்தின் ஞானிகள், தீரர்கள், யுத்தவீரர்கள், எவ்வழியானும் மேன்மை பெற்றவர்கள், அதின் பராக்கிரமம் பிரதாபம் இவைகளைப்பற்றி உண்டாகும் அன்பும் ஆச்சரியமும் இந்தச் சுதேசாபிமானத்திற்குக் காரணமாம். சுதேசாபிமானியானவன் தன்னையும் தன் தேசத்தையும், ஒன்றாகவே பாவிக்கிறான். அதின் சந்தோஷம், துக்கம், ஜயம், அபஜயம், சம்பத்து, விபத்து எல்லாம் அவனுடையதே. தன் தேசத்தின் நிலவளமை, இயற்கை அழகு, கலைத்திறமை, வெற்றி, கைவினைத்திறமை, இவைகளைப்பற்றி அன்பு பாராட்டுபவன் தன் தேசத்திற்கு எவ்விதத்தானும் பாடுபடுவன். சேவகம் செய்வன். அதுவே தன் பக்திசிரத்தை வழிபாட்டுக்கு யோக்கியமான உயர்

வான விஷயமாக ஏற்படும். தேசாபிமானியைவிடத்தேசம் பெரிதாயினும் தான்செய்யும் அன்புள்ள சேவகத்தால் அவன் அதைக் காப்பாற்றுவன். தன் தேசக்ஷேமத்தின் பொருட்டு உடல், பொருள், ஆவி மூன்றையும் தியாகம் செய்வன். அன்புள்ள கிருகஸ்தன் தன் குடும்பத்தின் க்ஷேமத்தைக் கருதி எப்படி நடைபெறுவானே அப்ப டியே தேசாபிமானியும் தன் லாபங்களைக் கருதாமல் தேசத்தின் மேன்பாட்டையே கோருவன். பொது நன் மையைக் கருதல் என்றது தேசாபிமானத்தின் பிரீதி. பதமாம். பொது நன்மையைக் கருதுகிறவன், சுவப் பிரயோஜனத்திற்கு உழைப்பதைப்பார்க்கிலும, அதிக ஊக்கத்துடனும், அதிக அன்புடனும், பொதுநன்மை யை உத்தேசித்து, உழைப்பான்.

நீதிமுறையின் ஆதாரமாக, அடிக்கடி வற்புறுத்திச் சொல்லப்பட்டிருக்கிற, ஆத்ம ஏகீபாவத் தன்மையே, பொது நன்மை கருதல் என்ற பதத்தினுல், மாயாசுபாவ மாகவழங்குகிறது. பொதுநன்மை கருதல் என்ருல், ஜன சமூகத்தின்பொதுவானஓரேதன்மையானகருத்து என்று பொருள்படும். பொதுநன்மை கருதுவோன் என்பான், தெரிந்தோ, தெரியாமலோ, தன்னிடமான ஜன சமூகத் தின்கண்ணுள்ளார் யாவரையும்,ஆத்மைகீபாவத்தன்மை யை உணர்ந்து பாராட்டுவோனுவான். ஒவ்வொருவனு டைய நன்மை, தீமையை, எல்லாருடையதெனப்பாவித்து எல்லாருடைய க்ஷேமத்தின்பொருட்டு எல்லாரும் மேன் பாட்டையடைய முயலுகிருன்.

ஈவசுர சம்பந்தமாயுள்ள புண்ணிய பாவமுறைகள் போல, தேசம், அதின் அரசன், சம்பந்தமான தர் மாதர்ம முறைகள் ஒவ்வொன்றிலும், அவைகளின்

யதார்த்தமான தன்மையை, முற்றும் ஆராய்ந்து. அதனுலுண்டாகும் தன் மனோபாவமும், தன் ஒழுக்கமும், ஒவ்வொரு நிமிஷமும், நேர்மையாகநிகழும்படி ஒருவன் கவனமாய்ப்பார்த்துக்கொள்ளல்வேண்டும். கொடிய அநீதி நேர்ந்தால், அதில் தன் உடன்பாடும் உத்தரவாதமும் தன்னை விட்டு விலகாது. அவ்விதமே, ஓர் அபிப்பிராயம் பிசகென்று தெரிந்தாலும், அல்லது அதைப்பற்றிச் சந்தேகமிருக்கையில், சரியோ, சரியன்ரே, என்று பரிசீலனைசெய்ய முயலாமலும், ஒருவன் அப்பொழுது, ஜன அபிப்பிராய கதியாய் நடைபெறுவானுகில் அதன் உத்தரவாதத்தினின்றும், தான் விலக ஒண்ணுது. போலி ராஜபக்தியுமுண்டு. முகஸ்துத்தியஞ் செய்பவருடையதைப்போன்றது. உண்மையில் அனுகூலமாகவும், வெளிப் பார்வையில் பிரதிகூலம் போன்றிருக்கிற மந்திரியின் ஆக்ஷேபணையைவிட, இந்த முகஸ்துத்தியத்தின் துவாரா ஏற்படும் முறையானது, பாபகரமாகவும் அபாயமாகவுமிருக்கும். அதுபோலவே அறிவில்லாருக்கு, ருசிகரமாய் நடைபெறும் போலி தேசாபிமானம் உண்டு.

𑌸𑍁𑌲𑌭𑌾𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾 𑌰𑌾𑌜𑌨𑍍
𑌸𑌤𑌤𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌵𑌾𑌦𑌿𑌨𑌃।
𑌅𑌪𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚 𑌪𑌥𑍍𑌯𑌸𑍍𑌯
𑌵𑌕𑍍𑌤𑌾 𑌶𑍍𑌰𑍋𑌤𑌾 𑌚 𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌃॥

(இ-ள்) ஓ ராஜாவே! பிரியமாய்ச் சொல்லுகிறவர்களை இலகுவாய்க் காணலாம். அனுகூலமாகவும், ஆனுல்கடுமையான வார்த்தைகளைச் சுகிருதமாய்ச் சொல்லுகிறவர்களையும், அவைகளைக் கேட்கிறவர்களையும் காண்டல் அரிது.

சுதேச அபிமானம், பொது நன்மைகருதல், என்ற சன்மார்க்க முறைகளால், மனமானது பிரதக்கான தன்

னுடைய லாபங்களைக் கருதாமல் பொதுவிஷயங்களைக் கோரியதாய் நிகழ்சீலம், சிரேயஸ்கரமாயும், விசாலமாய் அமைகிறது. அதன் பயனாக, மனிதன மேலான நோக்க முடையவனாய், எல்லாம் ஒன்றே என்ற உணர்ச்சியை அடையும் மார்க்கத்தில் நிற்கிறான். சுயநன்மையைக் கருதும் அற்ப புத்தியுள்ளவர்களை விடப் பொதுநன்மையைக் கருதிய தேசாபிமானியானவன, ஈசுவரப்பிரஸாதம் பெற அதிக சமீபத்திலிருக்கிறவனுவான். நாளடைவில் இவனுடையதேசாபிமானமானது,வரம்பற்ற,பொதுஜன அன்பும் அபிமானமுமாகவிகாசிக்கும். தேசாபிமானமுள்ளவர்களிருக்கின்ற தேசமானது சந்தோஷகரமானது. அந்து உலகத்தில் மேன்மைபெற்று நிச்சயமாய் உயர்வை அடையும்.

நமக்கு மேலானவர்களாகிய பெற்றோர்கள், ஆசாரியர்கள் இவர்களிடம் நாம் ஒழுகும் முறைகளைப்பற்றி இனிப் பேசுவோம். ஈசுவரன், அரசன், இவர்களுக்குச் செய்யும் வழிபாடுகள், மேற்கண்டவர்களுக்கும் பொருந்தும். தவிரவும், அவைகளுடனே சாந்தமும், நம்பிக்கையும், படிதலும், பணிவும், இருத்தல்வேண்டும். பெற்றோர்களுக்கும் ஆசாரியருக்கும் வழிபடவேண்டிய கடமைகளைப்பற்றி மற்றைய தர்ம முறைகளைவிட அதிகமாக வற்புறுத்திச் சொல்லப்பட்டுவருகின்றது. இக்காலத்திலும் அந்த முறைகள், யதார்த்தமான ஆரியர்களின் முக்கியமான இலக்ஷணங்களாம்.

யம்ʼமாதாபிதரௌ க்லேஶம்
ஸஹேதே ஸம்஭வே ந்ருணாம்
ந தஸ்ய நிஷ்க்ருதி꞉ ஶக்யா
கர்தும் வர்ஷஶதைரபி ॥

𑌤𑌯𑍋𑌰𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾
𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾।
𑌤𑍇𑌷𑍍𑌵𑍇𑌵 𑌤𑍍𑌰𑌿𑌷𑍁 𑌤𑍁𑌷𑍍𑌟𑍇𑌷𑍁
𑌤𑌪𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑌮𑌾𑌪𑍍𑌯𑌤𑍇॥
𑌤𑍇𑌷𑌾𑌂 𑌤𑍍𑌰𑌯𑌾𑌣𑌾𑌂 𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌾
𑌪𑌰𑌮𑌂 𑌤𑌪 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇॥
𑌨 𑌤𑍈𑌰𑌨𑌭𑍍𑌯𑌨𑍁𑌜𑍍𑌞𑌾𑌤𑍋
𑌧𑌰𑍍𑌮𑌮𑌨𑍍𑌯𑌂 𑌸𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍॥
𑌤 𑌏𑌵 𑌹𑌿 𑌤𑍍𑌰𑌯𑍋 𑌲𑍋𑌕𑌾
𑌸𑍍𑌤 𑌏𑌵 𑌤𑍍𑌰𑌯 𑌆𑌶𑍍𑌰𑌮𑌾𑌃।
𑌤 𑌏𑌵 𑌹𑌿 𑌤𑍍𑌰𑌯𑍋 𑌵𑍇𑌦𑌾
𑌸𑍍𑌤 𑌏𑌵𑍋𑌕𑍍𑌤𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌯𑍋𑌽𑌗𑍍𑌨𑌯𑌃॥

... ... ... ... ...

𑌤𑍍𑌰𑌿𑌷𑍍𑌵𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌨𑍇𑌤𑍇𑌷𑍁
𑌤𑍍𑌰𑍀𑌂𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌵𑌿𑌜𑌯𑍇𑌦𑍍𑌗𑍃𑌹𑍀॥
𑌦𑍀𑌪𑍍𑌯𑌮𑌾𑌨𑌃 𑌸𑍍𑌵𑌵𑌪𑍁𑌷𑌾
𑌦𑍇𑌵𑌵𑌦𑍍𑌦𑌿𑌵𑌿 𑌮𑍋𑌦𑌤𑍇॥

... ... ... ...

𑌸𑌰𑍍𑌵𑍇 𑌤𑌸𑍍𑌯𑌾𑌦𑍃𑌤𑌾 𑌧𑌰𑍍𑌮𑌾
𑌯𑌸𑍍𑌯𑍈𑌤𑍇 𑌤𑍍𑌰𑌯 𑌆𑌦𑍃𑌤𑌾𑌃।
𑌅𑌨𑌾𑌦𑍃𑌤𑌾𑌸𑍍𑌤𑍁 𑌯𑌸𑍍𑌯𑍈𑌤𑍇
𑌸𑌰𑍍𑌵𑌾𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌫𑌲𑌾𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃॥
𑌯𑌾𑌵𑌤𑍍𑌤𑍍𑌰𑌯𑌸𑍍𑌤𑍇 𑌜𑍀𑌵𑍇𑌯𑍁
𑌸𑍍𑌤𑌾𑌵𑌨𑍍𑌨𑌾𑌨𑍍𑌯𑌂 𑌸𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍
𑌤𑍇𑌷𑍍𑌵𑍇𑌵 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌾𑌂
𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌿𑌯𑌹𑌿𑌤𑍇 𑌰𑌤𑌃॥

𑌤𑍍𑌰𑌿𑌷𑍍𑌵𑍇𑌤𑍇𑌷𑍍𑌵𑌿𑌤𑌿𑌕𑍃𑌤𑍍𑌯𑌂 𑌹𑌿
𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌸𑌮𑌾𑌪𑍍𑌯𑌤𑍇।
𑌏𑌷 𑌧𑌰𑍍𑌮𑌃 𑌪𑌰𑌃 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾
𑌦𑍁𑌪𑌧𑌰𑍍𑌮𑍋𑌽𑌨𑍍𑌯 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇॥

(மனு: II. 227—230. 232. 234. 235. 237.)

(இ-ள்) மாதா, பிதா இவர்கள் புத்திரோத்பத்திவிஷயத்தில் அடையும் கிலேசத்திற்கு நூறுவருஷங்களில் (அநேகமென்றபடி) சுசுரூஷைசெய்தாலும் கைம்மாறு ஆகா.

எஞ்ஞான்றும் இவ்விருவர்கட்கும் ஆசாரியருக்கும் பிரியமானவைகளை ஒருவன் செய்யக்கடவன். இம்மூவர்கள் திருப்தராளானால், தபசு சம்பூர்ணமாகும்.

இம்மூவர்கட்குச் செய்யும் சுசுரூஷை, பரமதவமென்று சொல்லப்படுகிறது. அவர்கள் அனுமதியின்றி ஒருதருமமும் செய்யாதிருக்கக்கடவன்.

உண்மையில் இம்மூவர்களே மூன்று லோகங்களாம்; இம்மூவர்களே மூன்று ஆச்சிரமங்களாம்; இம்மூவர்களே மூன்று வேதங்களாகவும், மூன்று அக்கினிகளாகவும் சொல்லப்படுகிறார்கள்.

..... . . .. . . ....

கிரகஸ்தன் இம்மூவர்களையும் அலக்ஷியம்செய்யாமல் நடைபெறுவானாகில், மூன்று லோகங்களையும் ஜயிக்கிறான். திவ்விய தேஜோரூபமான சரீரத்துடனே, ஸ்வர்க்கத்தில் சந்துஷ்டியுடன இருப்பான்.

..... . .. . . . . ..... .

இம்மூவர்களையும் ஆதரித்துத்திருப்திசெய்வானாகில், எல்லாத்தருமங்களையும் செய்து, சிரேயஸ்பெற்றவனாவான். இம்மூவர்களை ஆதரிக்காவிடில், செய்யும் தருமங்களெல்லாம், நிஷ்பலமாகும்.

இம்மூவர்க ளிருக்கும்வரை, இவர்களை வழிபடுதல் தவிர வேறுகருமம் செய்யவேண்டுவதில்லை. அவர்களை நோக்கி, நித்தியம் பிரியமானவும் ஹிதமானவுமான சிசுருஷைகளைச் செய்யக்கடவன்.

.... . ..... . . . . ..... , ..... .....

இம்மூவர்களைப் பூஜித்தால், மனிதன் செய்யவேண்டியதெல்லாம் செய்து முடிவு பெற்றது. இதுவே உத்தமமான தருமம், மற்றதருமங்களெல்லாம் கீழானவை.

மாதா, பிதா, குரு தெய்வமாம்; ஆசாரியனை வணங்கிப் படித்தலும், பணிவும், சிஷ்யனின் முக்கியதருமங்களாம். சிஷ்யனின் கடமையை வற்புறுத்தும் வண்ணம், அனேக விதிகள் சொல்லப்படுகின்றன. தன்னுடைய பிதாவைப்போல் உயர்வானகௌரவத்திற்குப் பாத்திரராகவிருக்கிற குருவுக்கு, எப்போதும் சிசுருஷை செய்யவேண்டும். அவர் மனம் நோவாமலிருக்கும்படி கவனமாய் ஒழுகவேண்டும்.

𑌉𑌤𑍍𑌪𑌾𑌦𑌕𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌦𑌾𑌤𑍍𑌰𑍋𑌰𑍍
𑌗𑌰𑍀𑌯𑌾𑌨𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌦𑌃 𑌪𑌿𑌤𑌾 ॥
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑌨𑍍𑌮𑌹𑌿 𑌵𑌿𑌪𑍍𑌰𑌸𑍍𑌯
𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 𑌚𑍇𑌹 𑌚 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌮𑍍 ॥

(மனுஸ்மிருதி, II. 206. 207.)

(இ-ள்) சரீர உற்பத்தி செய்கிற பிதா, பிரம்ம வித்தையைக் கொடுக்கிற குரு, இவ்விருவர்களில் பிரம்ம வித்தையை உபதேசிக்கிற குரு, பிதாவைவிடக் கௌரவமான பூஜிதர். பிராமணனிடத்தில் பிரமமாகுதல், இகத்திலும் பரத்திலும் சாசுவதமாக விருக்கிறது.

வணக்கமுள்ள சிஷ்யனுக்குத்தான் உபதேசம் செய்யவேண்டும்.

யதா²க²நந் க²நித்ரேண
நரோ வார்யதி⁴க³ச்ச²தி ||
ததா² கு³ருக³தாம் வித்³யாம்
ஶுஶ்ரூஷுரதி⁴க³ச்ச²தி ||

(இ-ள்) "தொட்டனைத்தூறும் கேணி" போல், சுசுருஷைக்குத் தக்கவாறு குருவனுக்கிரகஞானம் நிகழும்.

ஈசவரன், அரசன் இவர்களின் வழிபாடு முறைகளில் உண்டாவதுபோலப் பெற்றோர், ஆசாரியர் இவர்கள் சம்பந்தமாய் குரோதபாவத்தின் காரியமாக பாவங்கள் உண்டாகின்றன. அவநம்பிக்கை. அச்சம், பொய்மை, நிந்தை இவைகளும், பாவமுறைகளிற் சேர்ந்தனவாம். நம்மைவிட பலிஷ்டனிருக்கிறானென்ற பயமிருக்குமாயின, நமக்கு நன்மையின்றித் துன்பம்விளைவிக்கக்கூடிய காரியத்தைச் செய்வானென்ற அவநம்பிக்கை தக்ஷணமே உண்டாகிறது. ஒருவருக்கொருவர் நிகழும் சம்பந்தங்களுக்கு அவநம்பிக்கையைவிட அதிகக் கொடுமையான வேறு நஞ்சு கிடையாது. அதற்கு ஒவ்வொன்றும் விபரீதமாகத் தோன்றும்; ஒவ்வொரு கிருத்தியமும் மாறியே தோன்றும்; அற்பவிஷயம் பெரிதாகக் காட்டும்; குற்றமற்ற செய்கைகளெல்லாம், கெட்ட எண்ணங்களால் விளைந்தவைகளாகக் காணப்படும். அவநம்பிக்கை சுவபாவமுள்ளவன் எவ்விடத்திலும் பகைக்குறியைக் காண்பான்; பயத்தால் பிடிக்கப்பட்டவனும் எப்பொழுதும் துக்கத்திற்குள்ளாகி இருப்பான். அச்சம், பொய்மையை உண்டு பண்ணுகிறது. ஏதோ விபரீதமான சம்பவம் நேரிடுமென்று பயந்து உண்மையை மறைத்த போலி ஒழுக்கத்தை வகிக்கிறான். ஒருவனுடைய அந்தக்கரண விருத்திகள் மற்றவர்களைத்தாக்கி, அதினால் ஏற்படும் பயன்களைப்பற்றி

விசாரிப்போமாகில், பலிஷ்டனிடம் நிகழும் கொடூரமான செய்கையானது, கீழானவனிடம் பாவங்கள் அபிவிருத்தியடையக்காரணமாக அமையும். அடிமைகள், பிறர் நிர்ப்பந்தத்திற்குள்ளாவார்கள்; இவர்களின் பாவ ஒழுக்கங்கள் எல்லாம் இக்காரணத்தை முக்கியலக்ஷணமாக உடையன.

மேலோனுக்கும் கீழோனுக்குமுள்ள வித்தியாசம் குறைபடவேண்டி, படிதல், வணக்கம் என்ற சன்மார்க்கங்களை விட்டு, அவைகளுக்கு முற்றும் விரோதமான அகந்தை, அதினாலுண்டாகும் இறுமாப்பு, திமிர்ச்சி என்ற துற்குணங்களைக் கீழோன் பயிற்சிசெய்துகொள்ளுகிறான். ஆகவே, பெற்றோர்களுக்குள்ளும், மக்கள்களுக்குள்ளும், குருசீஷர்களுக்குள்ளும், சம்பந்தங்கள் நேர்மைகுன்றிப் பரஸ்பரசந்துஷ்டி மங்கி, பிரயோஜனமற்றதாகமுடியும். அன்பின் வழியதாகிய இனிமையான இயற்கை அனுபந்தங்கள், குரோதத்தின் வழியதாகிய துன்மார்க்கங்களால் சின்னபின்னப்பட்டு, முடிவில் குடும்பங்களில் சமாதானமும் சந்துஷ்டியும் கெட்டுப்போய், இந்தத் துன்மார்க்கங்கள் அதிகப்பட தேசத்தின் க்ஷேமக்குறைவும் சமயமுறையின் வழிபாட்டின் குறைவும் நேரிடுகிறது.

கீழானோன் மேலானவனிடத்தில் ஒழுகும் ஒழுக்கமுறையானது, குருவினிடம் சீஷன் ஒழுகும் முறை போன்று இருத்தல் வேண்டுமென்று மனு சுருக்கிச் சொல்லியிருக்கிறார்.

𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌗𑍁𑌰𑍁𑌷𑍍𑌵𑍇𑌤𑌦𑍇𑌵
𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃𑌸𑍍𑌵𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 ।
𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑌤𑍍𑌸𑍁𑌚𑌾𑌧𑌰𑍍𑌮𑌾𑌦𑍍
𑌹𑌿𑌤𑌂𑌚𑍋𑌪𑌦𑌿𑌶𑌤𑍍𑌸𑍍𑌵𑌪𑌿 ॥

ஶ்ரேயஸ்ஸு குருவத்வ்ருத்திம்
நித்யமேவ ஸமாசரேத்॥

(மனுஸ்மிருதி, 206. 207.)

(இ-ள்) வித்தியாகுருக்கள், பந்துக்கள், துன்மார்க்கங்களினின்று விலக்கி நன்மார்க்கத்தை உபதேசஞ்செய்கின்றவர்கள் இவர்களிடம் நித்தியமாய் முன்போல நல்ல ஒழுக்கமுறையை அனுஷ்டிக்கவேண்டும். பொதுவாய், மேலானவர்களிடம் சஶ்ருஷை செய்கிறதுபோல நேர்மையாக ஒழுகவேண்டும்.

சன்மார்க்கப்பயிற்சியிலும் துன்மார்க்கங்களைக்களைந்தெடுப்பதிலும், அடியில்வரும் ஒரு முக்கியமான விஷயத்தைக்கருத்தில்வைக்கவேண்டும். பிராரப்தகர்மவசத்தினால் (வினைவினையின் காரியமாக) பெற்றோர்கள் அமைகின்றார்கள். ஆசாரியன் லபிக்கிறது முற்றும் பிராரப்த கர்மவசத்தால் மாத்திரமன்று. ஆனால் பெரும்பான்மையாய், நம்மறிவுபூர்வமாய் விவேசனஞ்செய்து குருசிஷ்ய சம்பந்தம் உண்டுபண்ணிக்கொள்ளுகிறோம். ஆகவே, பெற்றோர்கள் இருக்கவேண்டியபடி அன்பும் ஆதரவுமில்லாமலிருப்பினும், அவர்களிடம் பயபக்தி, விசுவாசம, நம்பிக்கை, குறையாத பணிவு என்ற பாவவிருத்திக்கு ஹேதுவான தருமமுறைகளை ஒருசமயம் நீங்கலாக மற்றெப்பொழுதும் நாம் அனுஷ்டிக்கற்பாலது. ஆனால் குரு விஷயத்திலோ வென்றால், வேறுநோக்கங்களினால் நம்மொழுக்கம் மாறி நடைபெறக்கூடியதாக விருக்கிறது. நாம் பால்யமாகவிருக்குங்காலத்தில், பெற்றோர்கள் நம்முடைய ஆசாரியனை ஏற்படுத்துகின்றார்கள். அல்லது நமக்குத் தகுந்த வயது வரும்பொழுது நாமே தெரிந்து ஏற்படுத்திக்கொள்ளுகிறோம். முன்னதில் குருவானவர், பெற்றோர்கள் பிரதிநிதியாய் அவர்கள் ஸ்தானத்தில் இருக்கிறார். அப்போ

பூது ஒரு அதிகாரத்தை நடத்தும் விஷயத்தில் ஏதே னும் சந்தேகமுண்டானால், அதைப்பெற்றோர்களுக்குஅறி வித்து அவர்களின் தீர்மானப்படி நடந்துகொள்ளவேண் டும். பின்னதில் ஏதேனும் சந்தேகமுண்டானால் அப் பொழுது, தான் அவரை ஏற்றுக்கொள்ளுங் காலத்தில் எப்படி விமோசனம் செய்தானே அப்படியே, தான் இப் பொழுதும், அவர் நடத்தையைப்பற்றித் தீர்க்கமாக யோஜிக்கவேண்டும். தவிரவும், குருவும் சீஷனும் அவரவ ருடைய தர்மங்களை நன்றாய் உணர்வாராகில், சந்தேகம் ஜனிக்குங்கால், சீஷன் செய்யவேண்டிய புத்திசாலித்தன மானதும் உபயோகமானதுமான முறை என்னவென்றால், "ஐயா! என் மனத்தில் இன்னஇன்ன சந்தேகமுளது; அ தைத்தயவுடனதீர்ப்பீர்களாக." அதைக்கேட்டுக் குருவா னவர் அனுஷ்டித்துவருகிறமார்க்கம்சரியானதென்று சீஷ னைத்திருப்தி செய்விக்கவேண்டும், அல்லது தான் அனு ஷ்டித்துவருகிற மார்க்கம் சரியன்றென்று தோன்றினால், அதை மாற்றிவிடவேண்டுமென்பதாம். மேற்கண்ட விஷ யம் முக்கியமாய் மனத்தில்வைக்கவேண்டியது. ஏனெனில், குரு அதிகாரமுறையை மாறாகநடத்துவதும், சீஷன் அறிவீனத்தினால் குருவிடம் பூர்த்தியாக நம்பிக்கை வைத்துக் கேடு உறுவதும், விசனிக்கக்கூடும் வண்ணம், அதிக சாதாரணமாக விருக்கின்றது. முக்கியமாய், உண்மைகுரு இருந்த ஆதிகாலந்தொட்டு குருபக்தி அதிகமாயுள்ள இந்த இந்தியாதேசத்தில், ஒருவன் நம்பிக் கைவைத்து அதினால் வெகுவாய் மோசமபோகக்கூடிய தாக இருக்கின்றமையால் போலிகுருவைத் தவிர்க்கிற தற்கு, விசேஷ அறிவையும மன நடுநிலைமையையும், அமைத்துக்கொள்ளவேண்டும்.

விருத்தர்களுக்குப் பாலர்கள் எப்பொழுதும் மரி யாதை செய்யவேண்டும். பாலர்கள் அவர்களை மேலான வர்களாகப் பாவிக்கவேண்டும்.

𑌶𑌯𑍍𑌯𑌾𑌸𑌨𑍇𑌽𑌧𑍍𑌯𑌾𑌚𑌰𑌿𑌤𑍇
𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌾 𑌨 𑌸𑌮𑌾𑌵𑌿𑌶𑍇𑌤𑍍 ।
𑌶𑌯𑍍𑌯𑌾𑌸𑌨𑌸𑍍𑌥𑌶𑍍𑌚𑍈𑌵𑍈𑌨𑌂
𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌯𑌾𑌭𑌿𑌵𑌾𑌦𑌯𑍇𑌤𑍍 ॥
𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾 𑌹𑍍𑌯𑍁𑌤𑍍𑌕𑍍𑌰𑌾𑌮𑌨𑍍𑌤𑌿
𑌯𑍂𑌨𑌃 𑌸𑍍𑌥𑌵𑌿𑌰 𑌆𑌯𑌤𑌿
𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌨𑌾𑌭𑌿𑌵𑌾𑌦𑌾𑌭𑍍𑌯𑌾𑌂
𑌪𑍁𑌨𑌸𑍍𑌤𑌾𑌨𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 ॥
𑌅𑌭𑌿𑌵𑌾𑌦𑌨𑌶𑍀𑌲𑌸𑍍𑌯
𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑍃𑌦𑍍𑌧𑍋𑌪𑌸𑍇𑌵𑌿𑌨𑌃
𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑌿 𑌤𑌸𑍍𑌯 𑌵𑌰𑍍𑌧𑌨𑍍𑌤𑍇
𑌆𑌯𑍁𑌰𑍍𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌯𑌶𑍋 𑌬𑌲𑌮𑍍 ॥

(மனுஸ்மிருதி, 119. 121.)

(இ-ள்) மேலானவர்களுடைய படுக்கை அல்லது ஆசனத்தை ஒருவன் பயோகிக்கக்கூடாது. படுக்கையில் படுத்திருந்தாலும் உட்கார்ந்திருந்தாலும் பெரியோர்களைக் கண்டால் எழுந்து நமஸ்கரிக்க வேண்டும்.

விருத்தன் சமீபித்தால், பாலனுடைய பிராணன்கள் அவனை நோக்கி மேலெசெல்லுகின்றன. ஆகவே, பாலன் எழுந்து அவரை நமஸ்கரித்துத் தன் பிராணன்களை திருப்பிக்கொள்ளுகின்றான்.

விருத்தர்களை எப்பொழுதும் பூஜித்து நமஸ்கரிப்பாளுகில், ஆயுள், அறிவு, கீர்த்தி, பலம் என்ற நான்கு சம்பத்துக்கள் விருத்தியாகும்.

மறுபடியும் மனு சொல்லுகிறார்:

𑌅𑌭𑌿𑌵𑌾𑌦𑌾𑌤𑍍𑌪𑌰𑌂 𑌵𑌿𑌪𑍍𑌰𑍋
𑌜𑍍𑌯𑌾𑌯𑌾𑌂𑌸𑌮𑌭𑌿𑌵𑌾𑌦𑌯𑌨𑍍

க்ருதாஞ்ஜலிருபாஸீத
கச்சத: ப்ருஷ்டதோऽந்வியாத்॥

(மனுஸ்மிருதி, IV. 154.)

(இ-ள்) விருத்தர்களைக்கண்டால் நமஸ்காரஞ் செய்யக்கடவன். தன்னுடைய ஆசனத்தையே கொடுக்கக்கடவன். கைகூப்பி அவர்கள் சமீபம் இருக்கக்கடவன். அவர்கள் எழுந்து போகும் பொழுது பின்னால் போகக்கடவன்.

விருத்தர்களை இவ்விதம் மரியாதை செய்தல், பாலர்கள், யுவாக்கள் இவர்களுடைய அதிக அழகிய ஒழுக்கங்களில் ஒன்றும். அப்படி நிகழுகிறவன் எல்லாராலும் அன்பு பாராட்டப்பட்டு நன்குமதிக்கப்படுகிறான். இவ்வொழுக்கமானது பணிவின் அம்சமாகிய விநயத்துடன் கூடியே யிருக்கிறது.

முன் எடுத்துக்காட்டிய இரண்டாவது சுலோகத்தில், விருத்தர்களுக்கு நமஸ்காரஞ்செய்தல், பாலர்களின் சரீரத்திற்கே அனுகூலத்தைப்பயக்கக்கூடியதாக இருக்கிறதென்று தொனிக்கிறது. சமநிலை குறைவுபடின், அதன் நிறைவுநோக்கியே நடைபெறுதல் உலக அமைப்பு விதிகளில் ஒன்றும். உதாரணமாக, உஷ்ணரச்மிகள் சூடுள்ள திரவியங்களினின்று குளிர்ந்த (சூடுகுறைந்த) திரவியங்களைநோக்கிச் செல்லுகின்றன. அம்மாதிரியே வீரியமும் பலமும் பலமுள்ளவர்களிடமிருந்து பலஹீனர்களை நோக்கிச் செல்லுகின்றன. வியாதியால் தளர்ந்தவர்கள் பலமுள்ளவர்களிடமிருந்து வீரியத்தை ஆகர்ஷிக்கின்றார்களென்றும், பலஹீனர்கள் சவுக்கியமுள்ள பலவான்களினின்று உயிரையே இழுக்கிறார்களென்றும், வைத்திய சாஸ்திரிகள் அனுபவ ரூபமாய் சித்தாந்தப்படுத்தியிருக்கின்றார்கள். காந்த ஆகர்ஷண சக்தியின் மூலமாய்

ஏற்படும் வியாதிகள் நிவிருத்திகளில் வெகுவாய் இக்காரணம் பற்றியே சம்பவிக்கிறது. இந்த விதியை அனுசரித்தே பாலர்களின் பிராணன்கள், விருத்தர்கள், பலஹீனர்கள் இவர்களைநோக்கி வெளியேறுகின்றன. அப்பொழுது பாலனானவன் எழுந்து நமஸ்கரிப்பானாகில், விருத்தர்கள் மனத்தில் அருள்நெகிழ்ச்சியுண்டாகி கிரகிக்கும்சுபாவமின்றிக் கொடுக்கும் தன்மை பெறப்பட அதின் துவாராக பாலனை நோக்கித் திரும்புகின்றன.

மேலானவர்களிடம் ஒழுகும் நல்லொழுக்கம் என்றால், மரியாதை, விநயம், வாய்மை, சிசுருஷையில் ஊக்கம், பயமின்மை, நம்பிக்கை. குணமுமை, கபடமின்மை, இவைகள் அமையவேண்டும். இக்குணங்களையுடைய வாலிபன் எப்பொழுதும் எல்லாராலும் அனுகூலம் பெறுவான். தனக்கு மேலானவர்கள், வயோதிகர்கள் இவர்களுடைய கோஷ்டியில் அபிவிருத்திபெற நல்ல சமயங்கள் வாய்க்கும். அவன் வரவை எல்லாரும் விரும்புவார்கள். மூத்தோர்கள் அவனுக்கு உதவிபுரிவதிலும், தங்களுடைய அனுபவ ஞானத்தை உபதேசிப்பதிலும், அதிக பிரீதியுள்ளவர்களாக இருப்பார்கள்.

விருத்தர்களைநோக்கி ஒழுகும் ஒழுக்கங்களில் ஏற்படும் துன்மார்க்கங்கள் யாதெனின், மற்றைய மேலோர்களைநோக்கி ஏற்படும் துன்மார்க்க முறைகளுடனே மரியாதையின்மையும், அகந்தையும் சேரும். இன்னதின்ன துன்மார்க்கம் உண்டாகுதல் சாதாரணம். ஏனென்றால், தான் சரீர பலத்திலும், வீரியத்திலும் விருத்தர்களைவிட மேலாயிருக்கின்றமைபற்றி அப்படி நிகழுவான். அவர்களுக்கு வயசுமூப்பினால் இருக்கும் அனுபவ அறிவையும், முதிர்ந்த உணர்வையும் கவனியான். இக்குணத்தை

அனுசரித்ததாய பரபரப்பு என்ற ஒரு துர்க்குணமும் உண்டாகிறது. பாலியாவஸ்தைக்குரிய பரபரப்பு விருத்தர்களது ஆறி அமர்ந்த நடைக்கு முற்றும் மாருய் நிகழுகிறது.

இந்த அதிகாரத்தில் பிரஸ்தாபித்திருக்கிற நல்லொழுக்கங்களைவிட இக்கால உலகவழக்கில் வேறுவகைகளைப் பயிற்சி செய்யவேண்டுவது அநாவசியமாம். ஏனெனில், பரபரப்பும் அவசரமும் மிகுதியாயுள்ளவும், போட்டி லக்ஷணமுள்ள நாகரீகம் நடைபெற்று அகங்காரம் மேலிட்டுமுள்ள இக்காலத்தில், மேற்கண்ட ஒழுக்கமுறைகள், மறைந்து பொய்த்துப்போகும்படியான நிலைமையிலிருக்கின்றன.

புல்லறிவு சாஸ்திரங்கள் அரைவாயும் கால்வாயுமாய் முற்றுண்மைகளை அறியாது மேன்மேலும் அபிவிருத்தியடைந்துகொண்டுவர, அதன் பயனுக, சமய ஒழுக்கங்கள் குன்றி ஈசுவரபகதியும் விசுவாசமும் பாராட்டுதல் பேதமையென்றும், மனத்தளர்ச்சி யென்றும் இகழப்படுகிறது. ஆனுல் சமய ஒழுக்கங்களோ உறுதியான தீரத்தன்மைக்கு ஆதாரமாகவிருக்கின்றன. சரித்திரவாயிலில், தீரர்களிடம் அவைகள் காணப்படுகின்றன. புல்லறிவாளர்களிடமும் குணக்கேடர்களிடமும் அவைகள் இரா.

மேலும் உயர்வுள்ள இராஜபக்தி, தேசாபிமானம் இவைகளின் க்ஷீணகதி, மென்மேலும் வெளியாகிறது. ஜனங்கள் பிற உதவியின்றித் தாமே குழந்தைபோல் தத்தித்தடுமாறிக் கஷ்டநிஷ்டூரங்களை அனுபவத்தின் மூலமாய் அறிவு அடையவேண்டுமென்ற நோக்காய், தெய்வீகத்தன்மை பொருந்திய ராஜவம்சம் உலக ஆளுகையை விட்டு விலகவே, ஜனசமுகத்தின் கண்ணே உண்டான விபரீதங்களே மேற்கண்ட க்ஷீணகதிக்குக் காரண

மென்று நாம் பூர்வசரித்திரத்தை நன்றாய் வாசிப்போமா ஞல் உணர்வோம். (அஃதாவது), ராஜாக்கள், பிரஜை கள் பரஸ்பரமாய் அவரவர்கள் செய்யவேண்டிய கடமை கள் குன்றி நடைபெறுகிறதின்றுன் என்று புலப்படும்.

ஆழ்ந்த அறிவுகுன்றி மேலெழுந்தவாறான அறிவுபரவ வும், துஷ்டகரமான சண்டைகள் நேர்ந்து அவைகளின் பயனுகப்பிரஜைகளின் ஆளுகைஏற்படவும், அதிகாரமுறை பெரும்பான்மையோரைப்பற்றியதாக நிகழவும், (அறிவும் அனுபவமுள்ளவர்களின்மையாலும், அல்லது, அவர்கள் தங்களுடைய கடமைகளை வகிக்க திறமையின்மையி ஞலும்), ராஜாவின் யதார்த்தமான சுதந்தரங்களும கட மைகளும், சாதாரணமாய்ப் பார்க்கிறவர்களுக்கும், உணரு கிறவர்களுக்கும் தெரியவராமல் மறைபட்டுப் போயின. இராஜமுறையின் கருவிகளான மந்திரிசபை, ஆலோசனைச் சங்கம், ஜனப் பிரதிநிதிகள் அமைந்த மாஹாசபை, பிர ஜாபூத்தியத்திற்குரிய ஆலோசனை சபைகள், பிரஜா பத்தியத்திற்குரிய மஹாசபைகள், இவைகளை ஒருதலை யாய் வரம்புகடந்து உயர்த்திப்பேசுவதினுல், ஆளுகிற அரசனின் கௌரவம் மங்கி மறைந்துவிட்டது. ஜனசமூ கத்தில் ராஜரீகமுறை இவ்வாருகப்பரீக்ஷைக்கு உட்பட்ட தாக நடைபெறுகின்றமையால் அனுபவக்குறைவினுலும் சுயநன்மை கருதி ஒழுகுவதினுலும் தவறுதல்கள் நேரிட, அவைகளின் பயனுக, பெருகியதுன்பமும் வறு மையும், தொழிலாளிகளுள்ளும் முதலாளிகளுள்ளும் நிராப்போரும், ஜனநேர்மைக்கேடும், சீர்குலைவும் சம்ப வித்திருக்கின்றன. இவைகளுக்குப் பரிகாரம் என்னவென் ருல், அரசன் மந்திரிகள் இவர்களுக்குள்ளும், சபை ஜனங்கள் இவர்களுக்குள்ளும் நேர்மையான பாவம் முன் போல அமைத்தும், இராஜாங்கத்தின் எல்லா அவயவங்

களுக்குள்ளும், அங்கங்களுக்குள்ளும், பரஸ்பரநேர்மை, ஏற்றபிரகாரம் நிகழும்படி செய்வித்தும், எல்லாரும் அவர் அவர்கள் கடமைகளுக் குரியவாறு உண்மையாயும், உறுதியாயும், வணக்கமாயும, காத்தும், ஆண்டும், புத்தி கற்பித்தும், உதவிபுரிந்தும், சுருங்கச்சொல்லில் கால சக்கிரகதியின் முறைப்படி முற்றறிவுடனே, பூர்வீக ராஜநெறியை மேன்மையான மார்க்கத்தில், நடைபெறும் வண்ணம் செய்வதுமேயாம். பூர்வீக ஒழுக்கங்களில் பயிற்சியடைந்த ஆரியபாலர்கள் ஈசுவரபக்தி, இராஜ விசுவாசம், தேசாபிமானம் இவைகளுள்ளவர்களாய் ஒழுகி, மஹாநுபாவன் இம்மாதிரியாக இருக்கவேண்டு மென்று காட்டி, இக்காலத்தின் உலக ஒழுக்கமுறையைச் சீர்திருத்துவார்களென்று நம்ப இடமுண்டு என்று தோன் றுகிறது.

இவ்விதம் சம்பவிக்கும் வண்ணம் மாதா பிதாக்கள் பெருமையுடைய உயர்வான ஸ்தானத்தை வகிக்கின்றமை யால், குடும்பத்திலேயே இந்நல்லொழுக்கங்களைப் பயிற்சி செய்ய ஆரம்பிக்கவேண்டும். தற்காலத்தில் இந்தியர் களுக்குள் பெற்றோர்களுக்கு ஒழுகும் ஒழுக்கத்தில் பக்தி, பணிவு, மரியாதை, சிசுருஷை இவைகளெல்லாம் க்ஷீணித் துப்போயிருக்கின்றன என்ற விஷயம் வெளிப்படையா னது. இந்தத் தேசத்தில் பிராசீனகாலத்தின் ஒழுக்கங் களை யனுஷ்டித்துச் சத்புத்திரனாகத் தந்தம் கிருகத்தில் ஒவ்வொருவனும் நடைபெறவேண்டும். பெற்றோர்களின் விருப்பங்களை நிறைவேற்றியும் அவர்களின் மனோபீஷ்டங் களின்வழி சந்துஷ்டியாகவும், ஊக்கமாகவும் நடைபெற் றும், அவர்களின் ஆசீர்வாதத்தின் பயனில் உண்மையான நம்பிக்கையும் அவர்களின் ஆழ்ந்த யோசனை பூர்ணமான

அபிப்பிராயத்தில் பூர்ணமான சிரத்தையும் உடையவனுயும் இருந்தால், யோக்கியமுள்ள தேசாபிமானியாகக் கூடிய தீரத்தன்மையும், பணிவும், ஒழுங்கான சீலமும் உண்டாக ஹேதுவாகவிருக்கும்.

ஆசாரியனிடம் சிஷ்யன் ஒழுகுகிறதில் அந்நிலைமைக் குரிய ஒழுக்கங்களை அனுஷ்டிக்கவேண்டும். குரு சிஷ்ய பாவநிலைமை இக்காலத்தில் முற்காலத்தினின்று வேறு பட்டிருந்தாலும், அந்நிலைமைக்குரிய ஒழுக்கங்களை அனுஷ்டிப்பின், நாளடைவில் முற்காலத்தியதுபோல குரு சிஷ்யபாவம் அன்புள்ள சிநேகபாவத்தை அமையப்பெறும்.

விருத்தர்களிடமும் ஒழுகுகையில் இந்திய வாலிபன் தவறாமல் மரியாதையும், மதிப்பும், சிசுரூஷையில் ஊக்கத்தையும் உடையவனாய் அவர்களுடைய தளர்ந்த தசையில் தம்முடைய சரீரத்தினால் செய்யக்கூடும் உதவிபுரிந்தும், வயதான புருஷர்களைப் பிதாவாகவும், வயதான ஸ்திரீகளை மாதாவாகவும் பாவித்து புத்திரன்போல் நடைபெற வேண்டும்.

ஆகவே வாலிபன் இந்தஒழுக்கங்களை நன்றாய்க்கற்று இடைவிடா முயற்சியாலும், ஆழ்ந்த உண்மையான மனச் சிந்தனையினாலும், ஈசுவர நம்பிக்கையுடனும் மேற்கண்ட நல்லொழுக்கங்களைத் தன் சீலத்தில் அமையும்படி செய்து கொள்ளக்கடவன். இப்படி நேர்ந்தால் அவன் உபகாரியாகவும் கௌரவமுடையவனாகவும் ஆவான். அவன் ஜன்மபூமிக்கு அவனால் சிரேயஸ் உண்டாகும்.

III-வது பகுதியில்

VIII-வது அதிகாரம்

முற்றிற்று.

# மூன்றாம்பகுதி.

## IX வது அதிகாரம்.

### சமானர்கட்குச் செய்யும் கடமை.

### சமானர்களிடம் ஒழுகும் ஒழுக்க முறை.

### நல்லவை, தீயவை

அன்பும் குரோதமும், குடும்பத்திலும் அதின் புறம்பான ஜன சங்கத்திலும், ஒழுக்க முறைகளில், சமானர்களிடம் எவ்வாறு நடைபெறுகிறதென்றும், அன்பு மேலிட ஐக்கியமும், குரோதம் மேலிட விரோதமும், எப்படி உண்டாகிறதென்றும் விசாரிப்போம். ஸ்திரீ புமான், சகோதரன் சகோதரி, ஒருதலைமுறை பந்துக்கள், சிநேகிதர்கள், ஒரே வயதுள்ளவும் ஒரே அந்தஸ்துள்ளவுமான சுகிருத்துக்கள், மித்திரர்கள், ஒரே சபையின் அங்கத்தினர்கள், இவர்களுக்குள் பரஸ்பரம் நிகழும் சம்பந்தங்களினால் குடும்பத்திலும், ஜனசங்கத்திலும் அடிக்கடி உண்டாகின்ற அந்தக்கரண விருத்திகளே, நல்லொழுக்கங்களாகவும் அமைகின்றன.

ஒரேதலைமுறையைச் சேர்ந்தவர்களுள்ள ஒரு குடும்பத்தில் ஏற்படும் நல்லொழுக்கங்களினால் நாளடைவில் ஜீவாத்மாவானவன், ஏகி பாவத்தன்மையை அறிந்து கடைசியாய் எல்லாவற்றிலுமியங்குகின்ற ஆத்மா ஒன்றே

என்று உணர்கிறான். தன்னைச் சுற்றியும், தன்னைப் போன்று திகழ்கின்ற ஜீவாத்மாக்கள் ஓரேவிதமான நிலைமைகள், இஷ்டங்கள், விருப்பங்கள், வெறுப்புக்களுள்ளவைகளாயிருக்கிறார்களென்றும், அவர்கள் சுகதுக்கங்கள் தன்னுடையவை என்றும், அவர்கள் உயர்வும் தாழ்வும் தன்னுடையவையென்றும், அவர்களின் சம்பத்தும் விபத்தும் தன்னுடையவையென்றும், அவர்களினின்று தனது என்று வேற்றுமைப்படுத்தமுடியாதென்றும் உணர்கிறான். குடும்பத்திற்குரிய தரும ஒழுக்கங்களை அனுஷ்டிக்கிறதினால் தீமையும் துக்கமும் உண்டாகின்றனவென்றும் அறிகிறான். ஆகவே பொது ஜன ஸந்துஷ்டியை உண்டுபண்ணவேண்டுமானால், எல்லாரையும் ஒரு குடும்பினர்கள்போலச் சகோதரர்களாகப் பாவித்து ஒழுகவேண்டுமென்றும் இச்சகோதரபாவம் திகழாமையால் ஜனங்களுக்குள் துக்கங்கள்நேரிடக்காரணமாகவிருக்கின்றனவென்றும் நாளடைவில் தெரிந்துகொள்ளுகிறான்.

சமானர்களுக்குள் சிநேகபாவமான அந்தக்கரணவிருத்தியைப்பயிற்சிசெய்யவேண்டும். அதினால்மனம்வாக்குகாயம் இவைகளின் அன்பு விகாசிக்கும். அன்புள்ள மனத்தின் வழியதாய் வாக்கும் செய்கையும் ஏற்படும். குரோதமனோபாவம் உண்டாகாமல் ஒருவன் தடுப்பானாகில் வார்த்தையும் செய்கையும் வித்தியாசமாகச் சம்பவிக்காது. வாக்கை அடக்கவேண்டியதைப்பற்றி மனுவானவர் அதிகமாகவற்புறுத்திக் கூறியிருக்கிறாரென்று நாம் அறிவோம். குடும்ப வழக்குக்களிலும் உலகவழக்குக்களிலும்இன்சொல் பயிலத்தக்கது.

யவஸ்வாஜநவிமடுகெ
ஸஜ்ஜமடுவெநவஸவஷா॥

ஸ வை ஸர்வ மவாப்நோதி
வேதாந்தோபகதம் பலம் ||
நாருந்துஃ ஸ்யாதார்த்தோபி
ந பரத்ரோஹ கர்மதீ: ||
யயாஸ்யோத்விஜதே வாசா
நாலோக்யாம் தாமுதீரயேத் ||

(இ-ள்) எவனுடைய மனமும் வாக்கும் சுத்தமாயும், சர்வதா அடக்கப்பட்டதாயுமிருக்கிறதோ, அவன் வேதாந்தத்தால் அடையும் சகல பலத்தையும் அடைவான்.

கஷ்ட தசையில் இருப்பினும், தன்னுடைய நாவினுல் வன்சொல் சொல்லி மற்றவனைத் துன்பப்படுத்தாமலிருக்கக்கடவன். துரோககர்மங்களை நினையாமலிருக்கட்டும். கேட்கிறவன் மனத்தை நோகச் செய்யும் வன்சொல் சொல்லாதிருக்கட்டும்.

மேற்கண்ட சிறப்பினை பெரியோர்கள் சிறியோர்களை நோக்கி ஒழுகும் முறையில் முதன்மையாக அனுஷ்டிக்கத்தக்கதாம். அஃது எல்லாரிடமும் ஒழுகும் முறையில் உபயோகமாம். குடும்பவழக்கில் அஃது இன்றியமையாததாம். ஏனெனில் ஒவ்வொருவருடைய குற்றமும் குறையும் நன்குய்த் தெரிந்துகொண்டிருக்கையில் வன்சொல் வழங்க நா தீட்டிக்கொண்டிருக்கக்கூடியதாக விருக்கும். குடும்பத்தின் சம்பந்தங்களின் நேர்மையைப் பற்றி அடியில் விவரித்திருக்கின்றது.

ந பாணிபாத சபலோ
ந நேத்ரசபலோऽந்ருஜு:
ந ஸ்யாத்வாக்சபலச்சைவ
ந பரத்ரோஹ கர்மதீ: ||

𑌋𑌤𑍍𑌵𑌿𑌕𑍍𑌪𑍁𑌰𑍋𑌹𑌿𑌤𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑍈-
𑌰𑍍𑌮𑌾𑌤𑍁𑌲𑌾𑌤𑌿𑌥𑌿𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑍈𑌃॥
𑌬𑌾𑌲𑌵𑍃𑌦𑍍𑌧𑌾𑌤𑍁𑌰𑍈𑌰𑍍𑌵𑍈𑌦𑍍𑌯𑍈-
𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑌿𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌿𑌬𑌾𑌨𑍍𑌧𑌵𑍈𑌃॥
𑌮𑌾𑌤𑌾𑌪𑌿𑌤𑍃𑌭𑍍𑌯𑌾𑌂 𑌜𑌾𑌮𑍀𑌭𑌿-
𑌰𑍍𑌭𑍍𑌰𑌾𑌤𑍍𑌰𑌾 𑌪𑍁𑌤𑍍𑌰𑍇𑌣 𑌭𑌾𑌰𑍍𑌯𑌯𑌾॥
𑌦𑍁𑌹𑌿𑌤𑍍𑌰𑌾 𑌦𑌾𑌸𑌵𑌰𑍍𑌗𑍇𑌣
𑌵𑌿𑌵𑌾𑌦𑌂 𑌨 𑌸𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍॥

(மனுஸ்மிருதி, IV. 177. 179. 180. 184. 185.)

(இ-ள்) கைகள், கால்கள், கண்கள், இவைகள் வீணான சபலங்களின்றி இருக்கட்டும்; கோணலான மார்க்கத்தைத் தவிர்க்கட்டும்; வீணாக நாவானது துடிக்காதிருக்கட்டும்; பிறருக்குத் தீயகாரியங்களை எண்ணாதிருக்கட்டும்.

ருத்விக்குடனும், புரோஹிதர், ஆசாரியர், மாமன், விருந்தினர், ஆசிருதன், குழந்தைகள், விருத்தர்கள், வியாதிஸ்தர்கள், வைத்தியன், உறவினர், பந்துக்கள், மாதா, பிதா, பந்துக்களான ஸ்திரீகள், சகோதரன், புத்திரன், பாரியை, புத்திரி, வேலைக்காரன் இவர்களுடனும் விவாதம் செய்யக் கூடாது.

மேற்கண்டவர்கள் சம்பந்தப் பட்டிருக்கின்ற பலவாறான உலகங்களைப்பிரஸ்தாபித்தும், அவைகள் பிரம்மாண்டத்தில் எவ்வாறு அமைந்திருக்கின்றன வென்றும், அவைகளின் சம்பந்தங்கள் ஜனசமூக வழக்கில் எவ்வாறு பிரவேசித்து நடைபெறுகின்றனவென்றும, ஒருவன் இவர்களுடன் நேர்மையாக ஒழுகுவானாகில் உலகங்களின் நேர்மை சித்திக்கும் என்றும் சொல்லியும் அடியில் வருமாறு மனுவானவர் முடிக்கின்றார்.

𑌭𑍍𑌰𑌾𑌤𑌾 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌃 𑌸𑌮𑌃 𑌪𑌿𑌤𑍍𑌰𑌾
𑌭𑌾𑌰𑍍𑌯𑌾 𑌪𑍁𑌤𑍍𑌰𑌃 𑌸𑍍𑌵𑌕𑌾 𑌤𑌨𑍁𑌃 ॥
𑌛𑌾𑌯𑌾 𑌸𑍍𑌵𑌾 𑌦𑌾𑌸𑌵𑌰𑍍𑌗𑌶𑍍𑌚
𑌦𑍁𑌹𑌿𑌤𑌾 𑌕𑍃𑌪𑌣𑌂 𑌪𑌰𑌮𑍍 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌤𑍈𑌰𑌧𑌿𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌤𑌃
𑌸𑌹𑍇𑌤𑌾𑌸𑌂𑌜𑍍𑌵𑌰𑌃 𑌸𑌦𑌾 ॥

(ஷ )

(இ-ள்) ஜேஷ்டசகோதரன் பிதாவுககுச் சமானன். பாரியை யும், புத்திரனும், தன்சரீரமாய். வேலைக்காரர்கள தன் சாயை யாம. புததிரியானவள பரமகருணைக்குப்பாத்திரமானவள். ஆகையி ஞல் இவர்கள் அலக்ஷியம் செய்தாலும், மனம் சலிக்காமல் ஒருவன் பொறுத்துக்கொள்ளவேணடும்

ஸ்திரீ, புமான், பிதா, புத்திரர்கள், சகோதரர்கள், இவர்கள் ஒருவருக்கொருவர், ஒழுகவேண்டும், நேர்மை யான முறைகளைப்பற்றிச் சீதையும், இராமனும், தெய்வத் தன்மை பொருந்திய புத்திரர்களும், தசரதரும், ஸ்ரீரா மர், லக்ஷ்மணர், பரதர், சத்துருக்கினர், என்ற நான்கு சகோதரர்களும், இவர்களுடைய உதாரணபூர்வமாக, அறியத்தக்கது. இவர்களை மாதிரிகளாக முன் வைத்துக் கொண்டு பாலர்கள் தங்களுடைய சீலத்தை அமைத்துக் கொள்ளவேண்டும். சற்குணமுடைய மனைவியைப்பற்றி மனு சொல்லுகிறதாவது.

𑌪𑍍𑌰𑌜𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌮𑌹𑌾𑌭𑌾𑌗𑌾𑌃
𑌪𑍂𑌜𑌾𑌰𑍍𑌹𑌾 𑌗𑍃𑌹𑌦𑍀𑌪𑍍𑌤𑌯𑌃 ॥
𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌃 𑌶𑍍𑌰𑌿𑌯𑌶𑍍𑌚 𑌗𑍇𑌹𑍇𑌷𑍁
𑌨 𑌵𑌿𑌶𑍇𑌷𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌨 ॥

𑌉𑌤𑍍𑌪𑌾𑌦𑌨𑌮𑌪𑌤𑍍𑌯𑌸𑍍𑌯
𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌪𑌰𑌿𑌪𑌾𑌲𑌨𑌮𑍍।
𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌹𑌂 𑌲𑍋𑌕𑌯𑌾𑌤𑍍𑌰𑌾𑌯𑌾𑌃।
𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌂 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌨𑌿𑌬𑌨𑍍𑌧𑌨𑌮𑍍॥
𑌅𑌪𑌤𑍍𑌯𑌂 𑌧𑌰𑍍𑌮𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌣𑌿
𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌾 𑌰𑌤𑌿𑌰𑍁𑌤𑍍𑌤𑌮𑌾॥
𑌦𑌾𑌰𑌾𑌧𑍀𑌨𑌸𑍍𑌤𑌥𑌾 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌃।
𑌪𑌿𑌤𑍄𑌣𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌶𑍍𑌚 𑌹॥
𑌪𑌤𑌿𑌂 𑌯𑌾 𑌨𑌾𑌭𑌿𑌚𑌰𑌤𑌿
𑌮𑌨𑍋𑌵𑌾𑌗𑍍𑌦𑍇𑌹𑌸𑌂𑌯𑌤𑌾।
𑌸𑌾 𑌭𑌰𑍍𑌤𑍃𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿
𑌸𑌦𑍍𑌭𑌿𑌃 𑌸𑌾𑌧𑍍𑌵𑍀𑌤𑌿 𑌚𑍋𑌚𑍍𑌯𑌤𑍇॥

(மனு, IX. 26—29.)

(இ-ள்) லக்ஷ்மீதேவிக்கும் புத்திரர்களைப் பெற்றிருக்கிற கிருகிணிக்கும் வித்தியாசமில்லை. அவளே குடும்பசம்பத்திற்குக் காரணம். அவள் பூஜாருகை. அவளே வீட்டிற்குத்தீபம்போலாம்.

மக்கட்பேறு, மக்கள் பரிபாலனம், உலகநடைப்பேறு இவைகளுக்கெல்லாம் கிருகணியானவள் பிரத்தியக்ஷமான காரணமாக விருக்கிருள்.

சந்ததி விருத்தி, தருமகிருத்தியங்கள், சுசுரூஷை இல்வாழ்க்கை, தனக்கும் பிறர்களுக்கும் சொர்க்கப் பிராப்தியும் கிருகணி மூலமாய் ஏற்படுகின்றன.

மனம் வாக்கு காயம் இவைகளை அடக்கினவளாய்ப் புருஷனுக்குத் துரோகம் செய்யாமல் நடைபெறுகின்ற ஸ்திரீயானவள் புருஷனுடன் சொர்க்கத்தை அடைகிருள். அவளை அறிவுள்ளவர்கள் உத்தமஸ்திரீ என்று சொல்லுகிருர்கள்.

𑌏𑌤𑌾𑌵𑌾𑌨𑍇𑌵 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋
𑌯𑌜𑍍𑌜𑌾𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌜𑍇𑌤𑌿 𑌹
𑌵𑌿𑌪𑍍𑌰𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌸𑍍𑌤𑌥𑌾 𑌚𑍈𑌤𑌦𑍍
𑌯𑍋 𑌭𑌰𑍍𑌤𑌾 𑌸𑌾 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌙𑍍𑌗𑌨𑌾॥

(மனு, IX. 45.)

(இ-ள்) தான், தன் மனைவி, தன் மக்கள், இவர்கள் ஒருங்கே உள்ளவன் பூர்ணபுருஷன். புருஷனும் ஸ்திரீயும் ஏகபாவமென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

இம்மாதிரியாக குடும்பம் ஏகாத்ம பாவமாக நிகழ்கின்றமையால் குடும்ப தரும ஒழுக்கமுறைகளுக்கு உறுதியான ஆதாரம் ஏற்படுகிறது. இக்காரணம்பற்றித்தான் ஆரியர்களுக்குள் விவாக சம்பந்தம் உலைவினமாகக் கூடாதது என்ற தருமம் ஏற்பட்டுள்ளது. மாதா, பிதா, மக்கள் இவர்களெல்லாம் ஒன்று. இவர்கள் ஒருவரோடு ஒருவர் தன்னைப்போல பாவித்து அன்பு பாராட்ட வேண்டும். ஒருவருக்குப் பிரியமானது மற்றவர்களுக்குப் பிரியமாகவே இருக்கவேண்டும். ஒருவருக்குத் துன்பகரமா யிருக்கிறது மற்றவர்களுக்கும் அப்படி யிருக்கவேண்டும். குடும்பத்தில் எல்லாத்தருமங்களும் ஒழுகற்பாலது. அஃது ஒரு சிறுஉலகம். பெற்றோர்கள் பெரியோர்கள்ஸ்தானத்திலும், மக்கள் அவர்களுக்குள் சமானர்களாகவும், பெற்றோர்களை உத்தேசித்துச் சிறியவர்களாகவும் இருக்கிறார்கள். குடும்பத்தில் நல்லொழுக்கங்களை அனுஷ்டிக்கிற பையன் குடும்பத்திற்குப் புறம்பான பெரிய உலகத்திலும் அவ்வொழுக்கங்களுடையவனாய் நடைபெற ஆயத்தமுள்ளவனாகவிருப்பான். தான் யௌவன தசையில் தனக்குரியவும் வேண்டுவனவுமான நற்குணங்களைக்குடும்பத்தின்கண்ணே பழகிக்கொள்ளக்கூடும். தவிரவும் உண்மையுள்ள நண்பனாகவும், கௌர

வந் தங்கிய நேர்மையுள்ள மரியாதை பொருந்திய மகா னுபாவனாகவும், தீரத்தன்மை பொருந்திய சுயநன்மை நோக்காத தேசாபிமானியாகவும் ஆகக்கூடிய குணசீலத் தைக் குடும்பத்தின்கண்ணே விருத்தி செய்யக்கூடும்.

சகோதரருள்ளும் சகோதரிகளுள்ளும், உருக்கமான அன்பு நிகழுமாயின் அதுவே குடும்பக்ஷேமத்திற்கு மூல மாம். பாண்டவர்களுள் அன்பு நிகழ்ச்சியானது அவர் கள் ஆபத்துக்காலத்தில் ஆறுதலைத்தந்து, கடைமுறை யில் உயர்வான சம்பந்தத்தை அடைய ஹேதுவாக விருந்ததென்று அவர்களுடைய சரிதத்தினால் நாம் அறிவோம்.

மரியாதையும், பிறர் மனம் நோகாமல் நடைபெறுத லும், நம்முடைய ஒழுக்கத்தின் முக்கிய முறைகளாம். மேன்மையும் விநயமும் பொருந்திய ஒழுக்கமானது, உண் மையான ஆரியனின் லக்ஷணமாம். ஆகவே வாய்ப்பிறப்பு உண்மையாகவும், இனிமையாகவுமிருக்கவேண்டும்.

ஸத்யம்ப்ரூயாத் ப்ரியம்ப்ரூயாத்
நப்ரூயாத்ஸத்யமப்ரியம்॥
ப்ரியஞ்ச நாந்ருதம்ப்ரூயாத்
ஏஷதர்மஸ்ஸநாதந:॥

(மனுஸ்மிருதி, IV. 138.)

(இ-ள்) வாய்மை ஆற்றுக, இன்சொல் ஆற்றுக, இனியவை குன்றிய வாய்மை ஆற்றற்க, இனிமையமைந்த பொய்மை ஆற்றற்க; இதுவே சனாதனதருமம்.

ஆனால் இனிமை குன்றிய வார்த்தையை ஒருவன் சொல்லித் தான் தீரவேண்டிய சமயங்களுண்டு. அதாவது

அதிகாரமுறையில் ஒருவன் மற்றொருவனைக் கண்டித்தும் திருத்தவும் செய்யவேண்டிய காலத்தில், அவ்விதம் செய்துதான் ஒழுகவேண்டும். அக்காலத்திலும் இனிமையாகப் பேசவேண்டும். அந்த ஒரு சமயத்தை முன்னிட்டுக் கொண்டு கடூரமான அவசியமில்லாத கடுஞ்சொல் சொல்வது தருமன்று. அப்படிச்செய்தால் கண்டிப்பு கண்டிக்கப் பட்டவன்மனத்தில் புகாமல் பிரயோஜனமற்றதாகமுடியும். இக்காலத்திய நாகரீகம் பதட்டமும் பரபரப்புமுள்ளதாய் நிகழ்கின்றமையால் நல்லமாதிரியான ஒழுக்கங்களின் பிரயோஜனத்தைப்பற்றி மதிப்புக் குறைவாய் எண்ணப்படுகிறது. இவ்விதம் மதிப்புக்குறைவான எண்ணம்குற்றமே. நல்ல மனமும் சாந்த சுவபாவம் உள்ளதாயின் நல்லொழுக்கங்கள் ஏற்படும். அதின்வழியாய் அன்பும் சீரானசீலமும் நிகழும். இவைகளினால் சித்த சுவாதீனமும், தன்னுடைய மரியாதை கௌரவம் இவைகளின் உணர்ச்சியும், இத்தன்மையனவென்று வெளியாகும். மேலும் சிக்கலான உலக விவகார சம்பந்தங்களில் நல்ல மாதிரியான ஒழுக்கங்கள் குன்றியிருக்கின்றவர்கள், ஒருவருக்கொருவர் சச்சரவுகள் புரிந்துகொள்ளுவார்கள். நல்ல மாதிரியான சீலமுள்ளவர்களென்றால் யாதொரு சச்சரவும் மனவருத்தமுமின்றிக் காரியங்களை நேர்மையாய்க்கொண்டு செலுத்துவார்கள். மிருது பாஷை, மரியாதையான அபிநயங்கள், இனிய புன்சிரிப்பு, கௌரவமான நடை, இவைகள் இருக்குமாயின் உலக சகவாசம் திருப்திகரமாயும், சந்துஷ்டிகரமாயும், சுககரமாயும் நிகழும். ஆகவே ஹிந்துவாலிபன் பெரியோர்களைப்பார்த்து அவர்களின் உயர்வான ஒழுக்க முறைகளை வணக்கமாய் அப்பியாசம் செய்யக்கடவன். அதன் மூலமாய்த் தற்கால உலக சகவாசமுறை இனிமையாய் நடை

பெறும்வண்ணம் செய்யவேண்டும். புடம்போட்ட தங்கமும தன்மாற்று உயர்ந்து அதிக அழகாகவாகும். அதுபோல நல்ல சீலத்துடன் நல்ல நடையும் சேருமாயின் அதிக அழகுசெய்யும்.

விருநதோம்பல் என்றது அதிக முக்கியமான தரும மாம். அதிதி என்பான் தேவனைப் பூஜிக்கத் தக்கவன்.

𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌾𑌯 𑌤𑍍𑌵𑌤𑌿𑌥𑌯𑍇
𑌪𑍍𑌰𑌦𑌦𑍍𑌯𑌾𑌦𑌾𑌸𑌨𑍋𑌦𑌕𑍇 ।
𑌅𑌨𑍍𑌨𑌂 𑌚𑍈𑌵 𑌯𑌥𑌾𑌶𑌕𑍍𑌤𑌿
𑌸𑌤𑍍𑌕𑍃𑌤𑍍𑌯 𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍 ॥
𑌤𑍃𑌣𑌾𑌨𑌿 𑌭𑍂𑌮𑌿𑌰𑍁𑌦𑌕𑌂
𑌵𑌾𑌕𑍍 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍀 𑌚 𑌸𑍂𑌨𑍃𑌤𑌾 ।
𑌏𑌤𑌾𑌨𑍍𑌯𑌪𑌿 𑌸𑌤𑌾𑌂 𑌗𑍇𑌹𑍇
𑌨𑍋𑌚𑍍𑌛𑌿𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌕𑌦𑌾𑌚𑌨 ॥
𑌅𑌪𑍍𑌰𑌣𑍋𑌦𑍍𑌯𑍋𑌽𑌤𑌿𑌥𑌿𑌃 𑌸𑌾𑌯𑌂
𑌸𑍂𑌰𑍍𑌯𑍋𑌢𑍋 𑌗𑍃𑌹𑌮𑍇𑌧𑌿𑌨𑌾 ।
𑌕𑌾𑌲𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌕𑌾𑌲𑍇 𑌵𑌾
𑌨𑌾𑌸𑍍𑌯𑌾𑌨𑌶𑍍𑌨𑌨𑍍 𑌗𑍃𑌹𑍇 𑌵𑌸𑍇𑌤𑍍 ॥

(மனு, III. 99. 101. 105.)

(இ-ள) வரும் விருந்தினர்க்கு ஆஸனம், தீர்த்தம், அன்னம், இவைகளை அவனவன் சக்திக்குத் தககபடி விதிப்படி மனோநேர்மை யாய்க் கொடுக்கக் கடவன்.

சத்துருக்களுடைய கிருகத்தில் ஆசனத்திற்காகத் திருணம் (புல், தர்ப்பை) ஸ்தலம், தீர்த்தம், நாலாவதான இன்சொல், இவைகள் எப்பொழுதும் கிடையாமல் இரா.

சாயங்காலத்தில் சூரியாஸ்தமான சமயத்தில் கிருகத்திற்கு வரும் விருந்தை இல்வாழ்வான் போகச்சொல்லக் கூடாது. காலத்திலாயினும் அகாலத்திலாயினும் அதிதி வருவானாகில் சாப்பிடாமல் அவன் கிருகத்தில் தங்கக் கூடாது.

இக்காலத்தில் போல், யாத்திரை சாதனங்களிலும் தீவிரத்திலும் அவ்வளவு சௌகரியங்களில்லாத பண்டையக்காலத்திலும், இந்தியாவில் யாத்திரைகள் பிரயோஜனமுள்ளவைகளாகவும், வெகுவாயும் இக்காலம் போலவே நடந்து வந்தன. அதற்கு பெரிய சாதகமாக இந்த அதிதி தர்மமுறையானது எங்கும் பிரபலமாய் ஒழுகப் பெற்று வந்தது. அதிதி பூஜை சமயமுறையின் ஒருபாகமாக அனுஷ்டிக்கப்பட்டு நடைபெற்றது. க்ஷேத்திரங்கள் தோறும், நகரங்கள்தோறும், துயர்ந்த யாத்திரைகள் நடைபெற்றுவரவே, அவைகளின் பயனாக, ஜனங்களின் மனம், விகாசம்பெறவும், அநுபவமும் அறிவும்அகலவும், வெவ்வேறான தூரதேசங்களிலுள்ள ஜனங்களுடன் அந்நியோந்நிய சகவாசம் ஏற்படவும், பரஸ்பரப் பிரியமும் க்ஷேமக் கோரிக்கையும் நிகழவும் இடமுண்டாயின. இப்படி அமைகிறதற்கு அனுகூலமாய், தர்ம சிந்தையுள்ள ஸ்ரீமான்கள் தாமே, பலஇடங்களில் ஏராளமான தருமசாலைகளையும் தங்கு மிடங்களையும் ஏற்படுத்தியும், உணவும் உடையும் பிரயாணிகளுக்குக் குறைவின்றி இனமாகக் கொடுக்கவும், இவ்வித யாத்திரைகள் சுலபமாய் நடந்து வந்தன.

நேர்மை, சீரானநடத்தை, நாணயம், கௌரவம், நடுநிலைமை, விநயம், விசுவாசம், தைரியம், சகிப்பு, ஒற்றுமை,

இவைகள் சந்துஷ்டியாகவும் க்ஷேமகரமாகவும் உலகவாழ்க்கு நிகழும்வண்ணம் ஏற்ற அவசியமான நல்ல ஒழுக்க முறைகளாம். இவைக ளிருக்குமாயின் ஜனசமூகத்தில் சமாதானமும் திருப்தியும் உண்டாகும். இக்குணங்களைத் தங்களுடைய சீலத்தில் அமைத்து ஒழுகுகின்றவர்கள். நன்மைபொருந்தி, நகரவாசிகள் என்று பெயர்பெற்று சந்தோஷமாகக் காலங்கழிப்பார்கள்.

குற்றங்களை மன்னித்தல்,சமாதானமாய் உலகவாழ்வு நடைபெறுவதற்கு அவசியமான தருமமாம். ஏனெனில், எப்பொழுதாவது ஒருகாலத்தில், எல்லாரும், கோபத்தினாலும், பொறாமையினாலும் அல்லது வேறு கெட்ட சித்தவிருத்தியினாலும் ஏவப்பட்டவர்களாய் பிறருக்கு யாதாமொரு தீங்கு செய்வார்கள். அத்தீங்கை க்ஷமிக்கிறது தான் நல்ல குணவானின் லக்ஷணமாம். பிறர் குற்றங்களையும் குறைவுகளையும் நோக்காது குணங்களையேகொண்டு, அவர்களின் நடத்தைகளையும் மனோபாவங்களையும் கிருபாநோக்காய்ப் பார்க்கும் பெருந்தன்மையானது, விசாலமான மனத்தின் சுபாவமாம்.

அபிப்பிராய வேற்றுமைச் சகிப்பு, முந்திய தருமத்துடன் சம்பந்தப்பட்டது. சமானர்களிடமும், கீழோர்களிடமும் ஒழுகற்பாலது. ஒரே ஆத்மா பலவாறாக விகாசிக்கிற தென்றும் ஒருவனும் தன் கொள்கைகளையும் தன் முறைகளையும் பிறர் அனுசரிக்கும்படியாய்க் கட்டாயப்படுத்தக் கூடாதென்றும் உணரற்பாலது. பிறமதபேதத்தைச்சகித்தல் இந்துசமயமுறையின் முக்கியமானலக்ஷணமாகவே நடந்தேறி வந்திருக்கிறது. புறச்சமயத்தான் ஒருவனையும் அவன் மதத்தினின்றுமாற்ற, இந்து சமயம் எப்

பொழுதும் எத்தனித்ததில்லை. அதற்குள் அவாந்தரபேதங்களிருக்கிறதில் ஒரு சார்பான மனோபாவத்தை மற்றவர்களும் அனுசரிக்க வேண்டுமென்ற நோக்காய் நிர்ப்பந்தப்படுத்தியன்றும். அதன் வரம்புக்குள் ஆறு தரிசனங்கள் போன்று தத்துவபாவங்களின் வேற்றுமைகள் நிகழுகின்றமை அச்சமயத்தின் விரிவான மனோபாவத்திற்கும் சகிப்புக்கும் சான்றும். இதற் காதாரம் யாதெனில், ஒரே ஆத்துமா உண்டென்று நம்பிக்கையும், அதுவே வெவ்வேறான விஞ்ஞானவிகாசம் அடைந்திருக்கிற தென்று பக்தி பூர்வமான உணர்வுமாம். ஆகவே ஈசுவரத் தன்மைபோல இந்து சமயத்தில் பெருந்தன்மையான மத வேற்றுமைச் சகிப்பு வியாபித்திருக்கிறது. எல்லாம் அவரைப்பற்றியதே. ஜனங்கள் நாடும் வழிகளெல்லாம், அவரையே நோக்கிச் செல்லுகின்றன. எதிர் திக்குகளினின்று வரும் ஜனங்கள் ஒரு நகரத்தில் எப்படிச் சந்திக்கிறார்களோ, அப்படியே ஈசுவரனை நோக்குகின்றவர்கள் எந்தத் திக்குகளினின்று வந்தாலும் கடைமுறையில் அவரிடமே சந்திக்கிறார்கள். மார்க்க வித்தியாசங்களைப் பற்றி வாதம்செய்தல் அறிவீனமாயும் சிறுபிள்ளை வியாபாரமாயு மிருக்கின்றது.

𑌯𑍇𑌯𑌥𑌾𑌮𑌾𑌂𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇
𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑌥𑍈𑌵𑌭𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ।
𑌮𑌮 𑌵𑌰𑍍𑌤𑍍𑌮𑌾𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇
𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌃𑌪𑌾𑌰𑍍𑌥𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ॥

(கீதை, IV. 11.)

(இ-ள்) ஓ பார்த்தா! எவர்கள் எவ்விதமாய் என்னை உபாசிக்கிறார்களோ, அவர்களை அவ்விதமாகவே நான் அனுசரிக்கிறேன். மனிதர்கள் அனுசரிக்கும் பலவிதமான மார்க்கங்கள் என்னை

நோக்கியவைகளே. அபிவிருத்திக் குறைவினாலும் ஞானக்குறைவினாலும், உயர்வான மார்க்கத்தை அனுஷ்டிக்காமல் கீழான தேவதைகளை உபாசித்தபோதிலும், அப்பொழுதுங்கூட, அதே ஈசுவரனே அவர்களின் அறிவுக்கேற்ப அவர்கள் வழிபடும் தெய்வங்களின் மேல் பக்தி பாராட்டும்படிசெய்விக்கிறார். அவர்கள் இச்சிக்கும் அழியக்கூடிய பலனையும், அவரே கொடுக்கிறார்.

காமைஸ்தைஸ்தைர்ஹ்ருதஜ்ஞாநா:
ப்ரபத்யந்தே(அ)ந்யதேவதா:|
தம் தம் நியமமாஸ்தாய
ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா||
யோ யோ யாம் யாம் தநும் பக்த:
ஸ்ரத்தயார்ச்சிதுமிச்சதி|
தஸ்ய தஸ்யாசலாம் ஸ்ரத்தாம்
தாமேவ விததாம்யஹம்||
ஸ தயா ஸ்ரத்தயா யுக்த:
தஸ்யாராதநமீஹதே|
லபதே ச தத: காமாந்
மயைவ விஹிதாந்ஹி தாந்||
அந்தவத்து பலம் தேஷாம்
தத்பவத்யல்பமேதஸாம்|
தேவாந்தேவயஜோ யாந்தி
மத்பக்தா யாந்தி மாமபி||

(பகவத்கீதை. VII. 20-23.)

(இ-ள்) தங்களுடைய பூர்வஜன்ம கருமவாசனையினாலே, கட்டுப்பட்டும் எவை எவைகளின் இச்சையோ அந்தந்த விஷயங்களினாலே, ஞானமற்று மிருக்கிற ஜனங்கள் எந்தெந்த தேவதைகளைக்குறித்து என்னென்ன விரதாதிகளைச் செய்யவேண்டுமோ அந்தந்த நியமங்களைச் செய்து இதர தேவதைகளைப் பஜிக்கின்றார்கள்.

எந்தெந்தப் பக்தன் எந்தெந்தத் தேவசரீரத்தை விசுவாசத்துடன் பூஜிக்கிறதற்கு இச்சிக்கின்றானோ, அந்தந்தப்

பக்தனுடைய அந்த விசுவாசத்தை, ஸ்திரமாக இருக்கும்படியாக நான் செய்கிறேன்.

மேற்சொன்ன பக்தன் ஸ்திரமான விசுவாசத்துடன் கூடினவனாய் அந்தத்தேவதையினுடைய ஆராதனத்தைச் செய்ய இச்சிக்கிறான். என்னாலேயே ஏற்படுத்தப்பட்ட அந்த இச்சித்த விஷயங்களாகிய பலன்களை அந்தத் தேவதையினாலேயே அடைகிறான். அற்பபுத்தியுள்ளவர்கள் அந்தத் தேவதையைப் பூஜிக்கிறதினால் உண்டாகும்பலன் முடிவையுடையதாகவே இருக்கிறது.

𑌯𑍇𑌽𑌪𑍍𑌯𑌨𑍍𑌯𑌦𑍇𑌵𑌤𑌾𑌭𑌕𑍍𑌤𑌾𑌃
  𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 ।
𑌤𑍇𑌽𑌪𑌿 𑌮𑌾𑌮𑍇𑌵 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯
  𑌯𑌜𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍 ।
𑌅𑌹𑌂 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂
  𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌚 𑌪𑍍𑌰𑌭𑍁𑌰𑍇𑌵 𑌚 ।
𑌨 𑌤𑍁 𑌮𑌾𑌮𑌭𑌿𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿
  𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌨𑌾𑌤𑌶𑍍𑌚𑍍𑌯𑌵𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 ॥

(பகவத்கீதை, IX 23. 24.)

(இ-ள்) ஓ குந்திபுத்திரா! எந்தப்பக்தர்கள் விசுவாசத்துடனே அந்ய தேவதைகளை ஆராதிப்பார்களேயாகில் அவர்களும், கிரமமான மார்க்கம் தப்பியும் என்னையே ஆராதிக்கின்றார்கள்.

சகல யக்ஞபலன்களையும் அனுபவிப்பவனும், பலனைக் கொடுக்கிறவனும் நானே. ஜனங்கள் என்னை யதார்த்தமாக அறிகிறார்களில்லை யாகையால் அவர்கள் நழுவுகின்றார்கள் (என்றால், புனர் ஜன்மத்தை அடைகின்றார்கள்.)

இதுவே இந்து மதத்தில் உயர்வும் கம்பீரமுமான உபதேசம். இதையே அனுசரித்து ஒவ்வொரு உண்மையான ஆரியனும் நடைபெற்று ஒழுகவேண்டும். புறச்சமயங்களைப்பற்றிக் குறைவாகவாவது தூஷணையாகவாவது செய்யாம லிருக்கவேண்டும். மத துவேஷிகளிடத்தும் சகிப்பையும் பொறுமையுமையையும் உள்ளவனாய் ஒழுகு முறையைத் திருஷ்டாந்தமாகக் காட்டக்கடவன்.

சமயவேற்றுமைகளிலும் அபிப்பிராய பேதங்களிலும் ஒருவன் பொறுமையும், சகிப்பும் உடையவனாக இருக்க வேண்டுமென்றதினால், சத்தியமானவர்கள், தீங்கற்றவர்கள் இவர்களுக்கு வேண்டுமென்று ஒருவன் துன்பம்செய்வானாகில், அதைப் பொறுத்துக்கொண்டு அதற்குடன்பட்டு இருக்கவேண்டு மென்று தாத்தம் செய்யக்கூடாது தனக்கு யாதானும் துன்பம் வேறு ஒருவன்செய்வானாகில், அதைக் கூடுமானவரை சகித்து அவனை மன்னிக்க வேண்டுவது தான். அந்நியர்களுக்கு ஒருவன் துன்பம் செய்வானாகில், முதன்மையில் இனிமையான சமாதான வழியாய், அதை, நிவிருத்தி செய்ய முயலவேண்டும். அம்முறை பயன்படாவிடில் தேசவளமைக்குரிய நீதி முறை (சட்டதிட்டங்கள்) ப்படி கண்டிப்பான வழிதேடி அதை நிவிருத்திக்க வேண்டும். பகவத் கீதையில் அடங்கியிருக்கிற தத்துவஞான மேற்கோளால் ஸ்ரீ கிருஷ்ண பகவானனவர் இந்த மார்க்கத்தையே அனுசரிக்கக்கடவது என்று அர்ஜுனனுக்கு வியக்தமாய் உபதேசம் செய்தார். புத்தி கற்பிக்கிறதிலாவது படிப்பிலாவது நேரிடும் ஒழுக்க முறைச துவேஷத் தன்மையைத் தான் சகிப்பின்மை என்று விபரீதார்த்தம் கொள்ளக் கூடாது. யாதானும் ஒரு விஷயத்தில், ஜன சமூக அபிப்பிராயத்தைச் சீர்படுத்திச் சரியான வழி

படுத்த முயன்றாலும் சரி, துன்மார்க்களின்று ஜனங்களைத் தவிர்த்து நேர்மையான நெறிகளில் நடக்கும்படி செய்யும் பிரயத்தனங்களாயினும் சரி, அவைசம்பந்தமாய் உண்மை பயக்கவேண்டு மென்று கருதிச் செய்யும் அறிவுள்ளவாதங்களாயினும் சரி, இவைகளெல்லாம் துவேஷம் பற்றிய சகிப்பில்லாதது என்று ஏற்படமாட்டாது. உண்மை எல்லாம் தன்னிடமே முழுமையாய்க் குடிகொண்டிருக்கிறதென்று நினைத்துத் தன்னால் வகுத்தவழிக்குப் புறம்பாய் அற்பமாய் மாறி ஒழுகினும், அதற்குத்தண்டனை விதிக்கும் தான் என்ற அகம்பாவமே, சிந்திக்கற்பாலது

சமானர்களிடம் அன்பின் வழியாய் நிகழ்கின்ற சன்மார்க்கங்களுக்கு, நிரை நிரையே, விரோத பாவத்தின் வழியான துன்மார்க்கங்களும் இருக்கின்றன. ஒழுக்க முறையின் அனேக சாதாரண குற்றங்கள் இந்த விரோத பாவத்தின் பயனாக உண்டாகின்றனவென்று தெரிய நமக்கு ஆச்சரிய முண்டாகும். கொஞ்சம் கவனிப்போமாகில், அக்குற்றங்கள் விரோத பாவலக்ஷண முடையனவாக முடியும். அவைகள் ஜனங்களைப் பிரித்து அவர்களுக்குள் ஒருவருக் கொருவர் துவேஷத்தை உண்டு பண்ணுகின்றன. இத்தன்மையானது வேற்றுமைப்படுத்தும் குரோத பாவத்தின் பயனும்; ஒற்றுமைப்படுத்தும் அன்பின் வழியது அன்றாம்.

அருளுடைமைக்கு எதிர்மறை குரூரம். இதுவே கடுகடுப்பாயும், வெடுவெடுப்பாயும், எரிப்பாயும், முறு முறுப்பாயும் பரிணமித்துக் குடும்பங்களின் சமானத்தையும், நேர்மையையும் கெடுக்கும். அருள்புரிந்தமுக மலர்ச்சியுள்ள நற்குணத்தினால் விகாசிக்கும் உல்லாசமான தேஜஸுக்கு முற்றும் மாறாக இத்துர்க்குணங்களின் பயனான கடுமையான தமஸானது குடும்பத்தார்களுக்குள் பரவு

கிறது இவைகள் குரோதபாவத்தின் வழியாய் நிகழும் கோபத்தின் பரிணாமங்களாம். கோபத்தையும் குரூரத்தையும் முக்கியமாய் விலக்கவேண்டிய பாபங்களிற் சேர்த்தவைகளென்று மனு சொல்லுகிறார்.

நாஸ்திக்யம் வேதநிந்தாஞ்ச
தேவதாநாஞ்ச குத்ஸநம்
த்வேஷம் தம்பஞ்ச மாநஞ்ச
க்ரோதம் தைக்ஷ்ண்யஞ்ச வர்ஜயேத்॥

(மனு, IV. 153.)

(இ-ள்) நாஸ்திகத்துவம், வேத நிந்தை, தேவதை இகழ்வு, த்வேஷம், டம்பவாதம், அகம்பாவம், கோபம், குரூரம் இவைகளை வர்ஜிக்க வேண்டும்.

இப்படிச் சொல்லுதல நியாயமே. இவைகள் முக்கியமாய துக்கத்துக்கு ஹேதுவான பாபங்களாம். உலகவழக்கில், சங்கடத்திற்கும தொந்திரவுக்கும் காரணமான நித்தியம் நிகழும் துன்பங்கள் எல்லாம் கோபத்தின் பரிணாமங்களின் யாதானும் ஒன்றால் உண்டாகின்றன.

காமம், லோபம் இவைகளுடனே குரோதம் (அதாவது கோபம்) சேர்ந்து நரகத்துக்குப் போகும் மூன்றுவித வாசல் என்றும், ஆசுர சுபாவத்தில் ஒன்று என்றும், ஸ்ரீ கிருஷ்ண பகவான் கீதை 16 வது அத்தியாயம் 21-4 வது சுலோகங்களில் சொல்லி யிருக்கிறார். கோபத்தினால் கலங்கியிருக்கிற மனம் மற்ற பாபங்களைச் செய்ய, வெகுவாய், தீவிரமாய்ச் செல்லும் சகல குற்றங்களுக்கும மூலகாரணங்களில் ஒன்று. கோபத்தின் ஒரு சிறு அவசரம், பொறுமையின்மை. தன் சீலத்தின்சேர்மையை அபிவிருத்திசெய்ய விரும்புகிறவன் தனக்குப் பெரிய பகையாகிய கோபத்தின் பரிணாமமாகிய இந்த அபேக்ஷித அற்ப

பாவமேனும், தன்னிடம் நிகழாம லிருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும். எல்லோரிடமும் பொறுமையாகவும் அன்பு புரிந்தும் நடக்க முயலுவானாகில், கோபம் என்ற துர்ச்சுபாவத்தை நாளடைவில் விலக்கி விடலாம்.

குரூரமாய் குற்றங்காண்டல், புறங்கூறுதல், அவதூறு செய்தல், நிந்தை இவைகளெல்லாம், பெருந்தன்மையின் எதிர்மறைச்சுபாவங்கள். இவைகள் அவமதிப்பு முதலான துர்க்குணங்கள்போல, ஓரேகாரணம்பற்றி உண்டாகின்றன. இக்குற்றங்களைக் களையவேண்டும்முறை யாதெனில், எந்தக்குறைக்காகப் பிறரை நிந்திக்கிறோமோ அக்குறை நம்மிடமும் இருக்கிறதா அல்லவாவென்று நம்மைநோக்கிப் பரீக்ஷிக்க வேண்டும்.

திருதராஷ்டிரரை நோக்கி விதுரர் சொல்லுகிறபடி:

ராஜந்பரஸ்ய தோஷாணி
ஸர்ஷபாணி ஸமாநி
ஆத்மநோ பில்வமாத்ராணி
ஸமம் நஸம் பஸ்யஸி ||

(இ-ள்) இராஜாவே, பிறர்குறைகளை கடுகுபோன்றிருப்பினும், நீர் பாராட்டுகிறீர். ஆனால் உம்முடைய குறைகளை, வில்வப்பழம் போன்றிருப்பினும், பார்த்தும் பாராததுபோ லிருக்கிறீர்.

முரட்டுத்தனமும், கடுகடுப்பான நடையும், நயமில்லாத ஒழுக்கமும் இவைகள் மதிப்பு, மரியாதை இவைகளின் எதிரிடையான துன்மார்க்கங்களாம். அவைகள் இக்காலத்தில் அதிக சாதாரணமாயிருக்கின்றன. இந்தியாவில் இக்காலத்தில் வரவரப் பரவுகின்றன. அவைகள் நாகரீகமின்மையின் லக்ஷணங்களாம். தமக்கிருக்கும் யோக்கியதை இம்மட்டென்றும், பிறருக்குக் காட்டவேண்டிய மரியாதை இம்மட்டென்றும், நிதானப்படாமல் ஆர

வாரத்தினால்தான் என்ற அகம்பாவம் மேலிட்டு இவ்வொழுக்கம் பிறர் கவனிக்கவேண்டுமென்றே நடைபெறுகிறது. இது தன்னுடைய அந்தஸ்தையும் யோக்கியதையையும் உணர்ந்து மரியாதையாய் ஒழுகுகிறவனின் ஒழுக்கத்திற்கு முற்றும் மாறாய், பலஹீனனுடைய அற்பத்தனமானவும், முரட்டுத்தனமானவுமான ஒழுக்கம் இருக்கிறது. தன் அந்தஸ்துக்குத்தகுந்த யோக்கியதை தன்னிடமில்லாமையை உணர்ந்து ஆரவாரத் தன்மையுள்ள அகம்பாவமான ஒழுக்கத்தினால் அதை மறைக்க முயலுகிறான். குணக்கும், குறும்பும், வஞ்சகம், அவிசுவாசம், சர்சரவு, சஞ்சலபுத்தி, உறுதியின்மை என்றவை சமானர்களிடமும் ஒழுகும் ஒழுக்கமுறையில் நேரும் மற்ற துர்க்குணங்களாம். குடும்பத்திலும் ஜனாசாரத்திலும் இவைகளால் நேரிடும் துன்பங்கள் பல குடும்பங்களையும், ஜன சமூகங்களையும் சின்னாபின்னப்படுத்தும் அனுகூலிகளாக விருக்கின்றன. இத்துர்க்குணங்களை உடையவர்கள் நேர்மைதப்பிய நகராவாசிகளாகிறார்கள். காலக்கிரமத்தில், நியாயமாய எல்லாராலும், நிந்தனைக்கும் அவநம்பிக்கைக்கு முள்ளாகிறார்கள்.

பெருந்தன்மைக் குணத்தின் வழியதாகிய மன்னிப்பு என்ற சுபாவத்தின் எதிரிடையானவைகள், க்ஷாத்திரம் வைத்தலும் பழிவாங்குதலுமான துர்க்குணங்களுமாம். துன்பங்களை மறந்து அதினமூலமாய்த் துடைக்காமல் அவைகளை நினைவிலேயே வைத்துக்கொண்டு சதாகாலம் அவைகளைப் பாராட்டுதலாம்.

> "நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
> அன்றே மறப்பது நன்று."

பிறர் ஒரு தீங்கு செய்தால் அதற்குப் பர்த்தியாய்த் தீங்குசெய்து பழிவாங்குதல் கருமகதியின் முறையை

யறியாமையால் ஏற்படுகிறது. பிறரால் தீங்கு நேர்ந்தால் அது முன்பிறப்பில் செய்த தீங்கின் பயனாகும் என்று நினைக்கத்தக்கது. இவ்விதமாய்ப் பழவினையைத் தீர்க்கிறான். அப்படியல்லாமல் தீங்குக்குத் தீங்கு இப்பொழுது பழிவாங்கினால் இக்கர்மத்தின் சரியானபலனை இனிவரும் பிறப்பில் தன் பகைவரின் மூலமாய் அனுபவித்தே தீர வேண்டும். பழிவாங்கினவன் பகைவன் தனக்கு அநீதியாகத் தீங்கு திரும்பிச் சம்பவித்திருக்கிறதென்று நினைப்பான். இவ்விதமாய்ப் பழிவாங்குகை என்பது குரோதபாவம். இடையறாது முடிவில்லாமல் தொடர்ந்துகொண்டு போகும். பகையைத் துடைத்தல் பகைவனை மன்னித்ததின் மூலமாய்த்தான். பழிவாங்கும் சுபாவம் இனி வரும துன்பத்திற்கு ஆலயமாக விருக்கிறது. அவை குரோத புத்தி யுள்ளவனைப் பற்றியே திரும்ப வந்தே சேரும. இப்பொழுது படுகிற துன்பங்கள் முன்வினையில் நாம் பழி வாங்க வேண்டுமென்ற பாவத்தின் பயனாக நம்மையே தாக்குகின்றன. முற்பிறப்பில் நம்மூழ்வினையின காரியமாக ஒரு ஆயுதத்தைப் பிறர்கையில் கொடுத்தாலன்றி ஒருவன் நமக்குத் துன்பம் செய்ய ஒண்ணாது. யாதாமொருவன் தீங்குசெய்யும்பொழுது இந்தக் கற்பனையை மனத்தில் வைக்கவேண்டும். பழைவினைக் கடனைக் குரோதமில்லாமல் சரியானவனாக இருந்து தீர்க்கக்கடவன. அப்பொழுது அந்தக் கடனும் தீரும்.

சமய வேற்றுமையில் சகிப்பின்மையால் உலகத்திற்கு முக்கியமாய் இக்காலத்தில் வந்த கேடு பல. ஒரு சமயத்தார் தம்முடைய மதக்கொள்கையை மற்ற சமயத்தாரை ஒழுகும்படி நிர்ப்பந்தத்தினால் தீராப் போர்கள் நிகழ்ந்து கடவுளின்பேரில் பழிசுமத்தி மனிதர்களைக் கொன்று ரக்தப் பிரவாகங்கள் ஓடச் சம்பவித்திருக்கிறது. மதக்

கொள்கை வித்தியாசத்திற்காக ஜனங்களை ஹிம்ஸை செய்து அதன் மூலமாய் ஓடின ரத்தமும், கண்ணீர் வெள்ளமும் சரித்திரவாயிலாக நாமறிவோம். மேற்குத் தேசங்களில் ஒருகாலத்தில் உயர்ந்த பதவியிலிருந்த ஸ்பெயின் என்ற தேசம் மத வேற்றுமைப்பாட்டுக்காக ஜனங்களை ஹிம்ஸித்ததின் பயனாக இப்பொழுதடைந்திருக்கிற தாழ்மையான கேடு நிதர்சனமான திருஷ்டாந்தம். மத வேற்றுமைக்காக யூதர்களையும் மகம்மதியர்களையும் ஆயிரக்கணக்காய் சம்ஹாரஞ்செய்து மிஞ்சினவர்களை நாட்டைவிட்டுத் துரத்தியகாலமே அந்த ஸ்பெயின் நாடு கெட்டுப் பாழாய்ப்போக ஆரம்பித்தது.

சமயக் கட்டுப்பாடுகளின் அனாவசிய வேற்றுமைகளைச் சகிக்காமல் சச்சரவையும் கொடுமையையுமுண்டாக்கித் தற்காலத்தில் இந்தியாவில் அந்த சமயத்தின் உயர்வான முறைக்கு முற்றும் விரோதமாகத் தேசத்தின் நேர்மையை வேர்ப்புழு இருந்தாற்போல் கெடுத்துக்கொண்டு வருகின்றது. இவ்வாறான சமயக் கோட்பாடு வேற்றுமையினால், நீ வேறு, நான் வேறு, என்ற பாவமானது அந்தந்தங்களிற் பரவி, இருவருக்கும் பொதுப்படையாயிருக்கும் ஏகபாவமான முக்கிய தத்துவ பாவங்களைக் கவனியாது அமுக்கியமான வேற்றுமைகளையே பெருக்க நினைத்தும், காட்டியும் ஜனங்கள் குருட்டுத்தனமாகத் திரிகின்றார்கள். சமயத்தின் உண்மையைத் தெரியாமல் இருந்து, அதின் வெளிப்படையான வேஷங்களைப்பற்றிக்கொண்டு, வெளிக்கர்மங்களையே காட்டி அவைகளின் உண்மையையும், அவைகளின் நோக்கையும் கருத்தையுங்கூடத் தெரிந்துகொள்ளாமல், ஜனங்கள் மென்மேலும் மத துவேஷிகளாய் மதபாஷண்டிகளாய்ப் பலவாறான வகுப்பினர்களாய்ப் பிரிந்துகொண்டு வருகின்றார்கள். ஆகவே சமயமானது ஜனங்களை ஐக்கிய முறை

யில் நிகழும்படி செய்யவேண்டியிருக்க, அது தவிர்த்து மதத் துவேஷத்தினால் சின்னாபின்னப்படுத்தும் ஒரு கருவியாக ஏற்பட்டிருக்கிறது.

மதத்துவேஷத்தின் கொடுமைகளைப்பற்றிய முன்குறித்திருக்கின்ற விஷயங்கள் இந்தியாவிலும் பிறவிடங்களிலும் சமயசம்பந்தமல்லாத ஜனசமூகக்கட்டுப்பாடுகளுக்கும் பொருத்தமாகும். இந்தியாவில் அதிகபொருத்தமாக ஏற்படும். ஏனென்றால், இந்ததேசத்தில் ஜனக்கட்டுப்பாடுகள் சமயக்கொள்கைகளுடனா ஒன்றுபடும் தன்மை வெகுவாய் அதிகமாக இருக்கிறது. சில குறிப்பிட்ட சமயங்களில், அவசர நிமித்தியமாகத தாத்கால ரீதியாய்மட்டும் உண்டாகும் சில அற்ப வழக்கங்கள்கூட வெகு சீக்கிரத்தில் மதசம்பந்தங்களாபற்றி ஸ்திரமான வழக்கங்களாக அமைகின்றன.

யதார்த்தமான ஆரியன், மதத்துவேஷத்தை விஷத்தைப்போலத் தவிர்க்கவேண்டும். அது தன்னுடைய ஆரிய சநாதனதர்மத்திற்கு முற்றும் விரோதமாக இருக்கிறதை உணரவேண்டும். இந்துக்களின் பலவாறான சமயிகளைத் தன் குடும்பத்தினர்கள்போலப் பாவித்து, அவர்களுடன் சச்சரவு, வேற்றுமை பாராட்டாமலிருக்க வேண்டும். ஹிந்து சமயம் போன்று ஒரே ஞான சூரியனினின்று வெளிப்படும் ரச்மிகளே யென்றுணர்ந்து அந்த மனோபாவத்தின் பயனாக, இந்தியாதேசமுழுமையும், சமாதானத்தைப் பரவச் செய்து ஒரே ஜனசமூகமாக நடைபெறும் வண்ணம், செய்யக் கடவனாக. வேற்றுமை விலக ஐக்ய பத்தியமே அவன் சமயக நடைப்பிடியாகட்டும். ஆத்மா ஒன்று. அதை அறியக்கடவன்.

மூன்றாம் பகுதியில்

ஒன்பதாவது அதிகாரம்

முற்றிற்று.

## III-வது பிரிவு.

### X-வது அதிகாரம்.

---

பிறரிடம் ஒழுகும் ஒழுக்கமுறை.

ஜனசம்பந்த முறைகளில், நல்ல ஒழுக்கங்கள், தீய வொழுக்கங்கள் பற்றிய சங்கிரகம் பூர்த்திசெய்யவேண்டிப் பிறரிடம் ஒழுகும் ஒழுக்க முறைகளைப்பற்றி விசாரிப்போம்: அவைகள் அன்பின் வழியதாகவும், குரோதபாவ வழியதாகவும் நடைபெறுகின்றன. இந்த நீதியான சன்மார்க்கங்கள் கிருபை, அல்லது அருள்பற்றியே ஏற்படுகின்றன. இந்த அருள் நம்மைவிடப் பிறர்களுக்கு நன்மைசெய்யவேண்டுமென்ற மனநெகிழ்ச்சியின் வாயிலாக உண்டாகிறது. இது சம்பந்தமான துன்மார்க்கங்கள், அகங்காரம்பற்றியே ஏற்படுகின்றன. அந்த அகங்காரம் குரோதபாவத்தின் வழியதாக, உண்டாகிப பிறரை இழிவாகப் பாவித்தும் தீங்கு விளைவித்தும், நடைபெறுகிறது.

பிறரிடம் பாராட்டும் அன்பானது, எப்பொழுதும் அருள் ரூபமாகவே நிகழுகின்றது. இரக்கம், பரிதாபம என்பது, அதின் சாதாரண சொரூபம் பலமின்மை, அறிவின்மை, மூடத்தனமை இவைகள் அன்புள்ளவர்களின் மனத்தை இரங்கும்படிசெய்து, அந்தத் தௌர்ப்பாக்கிகளுக்கு முறையே பலத்தையும், அறிவையும், ஞானத்தையும் அளிக்குமாறு தூண்டுகின்றன. பார்த்தமாத்திரத்தில் இரக்கமுண்டாகிப் பின்னர் அனுதாபத்தினால், பிறரிடம் நிகழும் பலமின்மை, அறிவின்மை, இவைகள் தன்னிடமிருக்கின்றனபோல் பாவித்து, அவைகளை விலக்கச் சிந்தை புள்ளவனாகி, அக்குறைகள் உள்ளவனை நிறைவுபடுத்திக்

கைதூக்கிவிடுகிறுன். இந்த மனோதர்மங்களின் பயனுக, உபகாரகுணம் உண்டாகிறது. அஃதாவது, அருளானது நற்செய்கையாக விகாசிக்கிறது.

குழந்தைகளிடம் பெற்றோர்கள் ஒழுகும் முறைகளில் இந்நற்குணங்கள் நன்ருய்ப் பிரகாசிக்கின்றன. குழந்தையானது துர்ப்பலமாயும், பிறருதவியைச் சார்ந்தும, அதை நாடியுமிருத்தலால் பெற்றோர் மனமிரங்கச் சக்தியும் உதவியுமற்ற அக்குழந்தையை நோக்கிப பரிதாபமும் இரக்கமும் உண்டாகின்றது. இம்மனோபாவங்கள் இனசொல்லாகவும், சீராட்டும் அபிநயமாகவும், உற்சாகத்தை உண்டு பண்ணும் முகமலர்ச்சியாகவும், புன்னகையாகவும் பரிணமிக்கின்றன. அதனுல் குழநதையும், தன்னுடைய சிறுமையையும் குறைவையும் நினையாமல் பெரியோருடைய சக்தி சாமர்த்தியத்தைத் தன்னுடையவைபோலவே பாவித்துத்தன்குறையை நிறைவுபடுத்திககொள்ளுமாறு நடைபெறுகின்றது. ஆகவே அன்பின் வழியதாகிய எல்லாக் குணங்கள் போலவே இரக்கமும் பரிதாபமுமுள்ளவர்கள் அவர்களுக்கும் அவர்களால் பாராட்டப்படுபவர்களுக்குமுள்ள தாரதம்மியத்தைக் குறைககவும், கடைமுறையில, அவர்களை உயர்த்தித தஙகளுடன சேர்பபித்துக்கொள்ளவும் நாடுகிறுர்கள். மேலானவர்களின உயர்வை நோக்குகிறதினுல், கீழோர்களுக்கு உண்டாகும் பயம், மேலானவர்கள் பலமாதிரியாக அன்புபாராட்டிப் பயப்படவேண்டாமென்று சொலவதுபோனறு ஒழுகும் முறையால் விலகிவிடும். கீழோர்களிடம் எவ்வளவுக்கெவ்வளவு அச்சமும சங்கோசமும் உண்டாகின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு இனிமை, சாந்தம், பிரியம இவைகளை அதிகமாகக் காட்டுவார்கள்.

பலத்தினாலாவது வயதினாலாவது மற்று எக்காரணம் பற்றியாவது மேம்பாட்டை அடைந்தவர்கள், எக்காரணத்தினாலாவது கீழோரிடம் மேற்கண்ட தன்மையான மாதிரியாக ஒழுகப் பயிலவேண்டும். மேலானோர் ஏதேனும் துன்பம் செய்வார்களென்று பயம் கீழோரிடம் உண்டாகுமேயாகில், மேலானோர் மேற்கண்ட நல்லொழுக்கம் அதிக ஆவசியகமென்று உணரவேண்டியது. பலமும் அதிகாரமும் ஒருவருக்கிருந்தால் பிறரை அடிமைகளாகவும் துன்பப்படுத்தவும் அப்படி அதை உபயோகிப்பது வழக்கம். அதனால் மேலானவர்களைக் கீழானவன் பார்த்தமாத்திரத்தில் பயமுண்டாகிறது. அன்புபாராட்டி இப்பயத்தை அவசியம் விலக்கவேண்டும்.

பரிதாபம், இரக்கம் இவை மூலமாய்ப் பலிஷ்டர்கள் தீங்குசெய்யப் பயமுறுத்துங்காலத்தில், பலஹீனர்களைக் காப்பாற்ற எண்ணமுண்டாகிறது. அப்படிக் காப்பாற்றுவதில் பலஹீனர்களைக் குறித்துத் தன்னுயிரை அபாயத்துக்குட்படுத்தும் தீரத்தன்மை ஏற்படுகிறது. “உற்று விடத்து” ஸ்வபக்ஷம் உன்னாமல் நன்மையையே கருதினவனும் “உயிர் வழங்குந் தன்மையோனே” தீரன் ஆவான். தன் அரசனையும், தன் தேசத்தையும் உத்தேசித்து உயிர்விடும் போர்வீரனையும், தன் மதத்தை உத்தேசித்துப் பிராணத்தியாகம் செய்பவனையும் தீரனென்று சாதாரணமாய் வழங்குவோம். ஆனால் இப்பெயரானது பெரும்பாலும் உலகவழக்கில், எத்தனையோ பேர்கள், ஆணும் பெண்ணும், தங்களுடைய உடல், பொருள், ஆவிகளைப் பிறர் நன்மைநோக்கித் தியாகம் செய்கின்றவர்களுக்குப் பொருந்தக்கூடியதாக விருக்கிறது. உதாரணமாக, கொள்ளைநோயால் வருந்தியவர்களுக்கு உழைத்து உழைத்து உயிர்மாண்ட வைத்தியன் என்ன, தாதி என்ன,

வியாதியால் வருந்தும் குழந்தையை இடைவிடாமல் பேணிக்காத்துத் தன் சுகத்தையும், தன் உயிரையும் கவனியாது, அதற்கு வேண்டுவனவெல்லாம் கொடுக்கிறதிலேயே, மனம்பற்றியிருக்கும் தாய் என்ன, தன்னை நம்பிய அசக்தர்கள் பசியால் வருந்தாமல் தன் அவகாசத்தையும், சுகத்தையும், பலத்தையும் தியாகஞ்செய்து, அன்னம் தேடும்பொருட்டு வருந்தி உழைத்துத் தளர்ந்துபோன கிரகஸ்தன் என்ன, இன்னும் இவர்கள்போன்ற பலராம். தீரத்தன்மைக்குரிய தைரியம், வீரியம், சகிப்பு முதலிய குணங்கள் பெரும்பான்மையாய் இரக்கபாவத்தின் வழியதாகவும், பலஹீனர்களுக்கு உதவிபுரிகின்ற, கடமைபற்றியும், அவர்களுக்குத் துன்பம் நேரிடுங்காலத்தில அனுதாபப்பட்டு அத்துன்பத்தை துடைக்கிறதில் முயலும் தன்மையையுடையதாகவும் நடைபெறுகின்றன. உதவிவேண்டும் வறியோர்கள் நேர்ந்தால், இக்குணங்கள் விகாசிக்கின்றன. மேலானவர்கள், சமானர்கள் இவர்களிடம் தீரத்தன்மைநிகழவேண்டுமானால், அவர்கள் அபேக்ஷிக்க, அவர்கள் வேண்டுகோளைத் தீரன் நிவிருத்திக்கக் கடமையுள்ளவனாகிறான். அப்படிவேண்டுகிறவர் அரசனாயிருக்கலாம். தனிமையாக நோக்க, யுத்த வீரர்களைவிட மேன்மையுள்ளவனாக, இருந்தாலும் அரசன் தன் இராஜ்ஜியத்தைக் காப்பாற்ற, வீரர்களின் உதவியை நாடுவன. சாதாரணமாய்ச் சமானமானவனான சகோதரன் ஒரு காலத்தில் ஒரு குறைநீர்க்க, மற்ற தீரனான சகோதரனை உதவிவேண்டுவன. இப்படியே இன்னும் அனேகம் நேரிடும். இத்தருணங்களிலுங்கூட தீரன் கொடையாளியாகவே இருப்பான். தன்னுடைய பொருள், ஆவி இவைகளின் தியாகத்தினால், பிறரைத் தனக்கு கடன்பட்டவர்களாக ஆக்குவன். கருணை, சம்ரக்ஷணை, தீரத்தன்மை, இக்குணங்கள் அரசர்களுக்கு முக்கியமாய் உரியலக்ஷணங்களாம்.

உதாரகுணம், கீழோர்பற்றி நிகழும் தருமகுணம், ஈகை இவை ஹிந்துசமயமுறையில் உயர்வான குணமாக மதிக்கப்படுகிறது. தானம் ஒவ்வொரு யக்ஞத்திலும் முக்கியமான அங்கம். அம்மாதிரியே பிராமணர்களைப் போஜனஞ் செய்வித்தலும் முக்கிய அங்கமாம். இவ்விதிகளினால் பிறர் நன்மைக்காக நம்பொருளைத் தியாகம் செய்தல் என்னும் முறையில் பயிலுகிறோம். மேன்மேலும் தியாகவிதியின் உண்மையை அறிந்து அதை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவருகிறோம்.

அடியில்வருமாறு மனுசொல்லுகிறார்:

[illegible]

(மனு, IV. 226—228.)

(இ-ள்) இஷ்டா பூர்த்தங்கள் சிரத்தையுடனும், ஜாக்கிரதையுடனும், செய்யத் தக்கன. சிரத்தையுடனும், தீவினைவிட்டு ஈட்டிய பொருளுடனும் இவைகளை நடத்துவாரானால், இவை அக்ஷயமாகி, அபிவிருத்தியாகும்.

(இ-ள) தானதருமத்தை இஷ்டாபூர்த்தங்களுடன் பாத்திரத்திற்குச் சமாதான பாவத்துடனே ஜாக்கிரதையாய் ஒருவன் செய்யக்கடவன்.

இயன்றமட்டில யாதேனும் யாசிக்கிறவனுக்கு அருவையில்லாமல் ஒருவன் கொடுக்கக் கடவன். இப்படிச்செய்வானாகில் பாபத்தைப் போக்கடிக்கக்கூடிய சத்பாத்திரன நிச்சயமாய் ஏற்படுவன.

தானமுறைகளைத் தெளிவாய் ஸ்ரீகிருஷ்ணபகவான சொல்லி, அவைகளைச் சத்துவ, ரஜஸ், தமஸ் என்று முப்பான்மையாகப் பிரித்திருக்கிறார்.

[illegible]

(பகவத்கீதை, XVII. 20—22.)

(இ-ள) கொடுக்கவேண்டுமென்கிற நிச்சயபுத்தியுடன் எந்த தானமானது புண்ணிய தேசத்திலும், புண்ணியகாலத்திலும் பிரதி உபகாரம் செய்யத்தகாத சத்பாத்திரத்தில் கொடுக்கப்படுகிறதோ, அந்தத் தானமானது, சாத்விகமென்று சொல்லப்படுகிறது.

பிரதிஉபகாரத்தை, உத்தேசித்தாவது, வேறு (சுவர்க்காதி) பலத்தை உத்தேசித்தாவது, மனவருத்தத்துடனேயாவது எந்தத் தானமானது கொடுக்கப்படுகிறதோ, அது, ராஜஸம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அசுத்தமான தேசத்திலும், காலத்திலும் அயோக்கியர்களின் பொருட்டும், பூஜை முதலியவை செய்யா அவமரியாதையுடனேயும் எந்தத் தானமானது கொடுக்கப்படுகிறதோ, அது, தாமஸமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

தானம் உபசாரத்துடனும் அன்புடனும் செய்யக்கடவது என்றுவிதி வற்புறுத்திச் சொல்லப்பட்டிருக்கிறது. தானம் செய்வதில் மரியாதைகாட்ட வேண்டியதைப்பற்றி விதிகள் இதிஹாசங்களில் அடிக்கடி சொல்லப்பட்டிருக்கின்றன. கருணையான மலர்ந்தமுகத்துடனே தானஞ் செய்யவேண்டும். நிந்தை அல்லது அவமரியாதை கிலேசமேனும் இருந்தால் முன்சொல்லியிருக்கிறபடி அந்தத் தானம் தாமஸமாம்.

அந்தஸ்துள்ளவர்கள், மேலானவர்கள் இவர்களுக்குக் காட்டும் மரியாதையும், உருக்கமான ஒழுக்கமும் நம்மின் மெலியாரிடமும் காட்டவேண்டுமென்ற அபிப்பிராயம், அடியில்வரும் சுலோகத்தில் நன்கு விளங்கும்.

[illegible]
[illegible]

[illegible]
[illegible]

(மனுஸ்மிருதி, II. 138.)

(இ-ள்) வண்டியிலிருக்கிறவனுக்கும், 90 - வயதுக்கு மேற்பட்ட கிழவனுக்கும், வியாதியஸ்தனுக்கும், சுமைதூக்கிக்கொண்டு

போகிறவனுக்கும், ஸ்திரீக்கும், ஸ்நாதனுக்கும், இராஜாவுக்கும், வாளனுக்கும் வழிவிடவேண்டும்.

அவ்விதமாக அன்னம் கொடுக்கிற முறைக்கிரமத்தைப்பற்றிய அந்தஸ்தை விவரிக்கிற இடத்தில் மெலியாருக்கே முதன்மை ஏற்பட்டிருக்கிறது.

𑌸𑍁𑌵𑌾𑌸𑌿𑌨𑍀𑌃𑌕𑍁𑌮𑌾𑌰𑍀𑌶𑍍𑌚
𑌰𑍋𑌗𑌿𑌣𑍋𑌗𑌰𑍍𑌭𑌿𑌣𑍀𑌃𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌃 ॥
𑌅𑌤𑌿𑌥𑌿𑌭𑍍𑌯𑍋𑌽𑌗𑍍𑌰𑌏𑌵𑍈𑌤𑌾𑌨𑍍
𑌭𑍋𑌜𑌯𑍇𑌦𑌵𑌿𑌚𑌾𑌰𑌯𑌨𑍍 ॥

(மனு, III. 114.)

(இ-ள) நூதனமாய் விவாகஞ்செய்த ஸதிரீகளுக்கும், குமாரி, வியாதியஸ்தர், கர்ப்பிணி இவர்களுக்கும், யாதொரு விசாரணையில்லாதவனாக அதிதிகளுக்கும் முன் அன்னமிடல்வேண்டும்

மெலியாரைநோக்கி இன்னும் ஒழுகவேண்டிய ஒரு ஒழுக்கமுறைமை என்னவென்றால், அவர்களிடம் உள்ள உத்தம அம்சத்தை உணர்ந்து அதைக் கௌரவப்படுத்தலாம். அன்பும் ஆதரவுடனேயும், இப்படி நன்குமதித்தலால் அவர்களுக்குத் தைரியம் உண்டாகி உற்சாகத்துடனே பூர்ணயோக்கியதைகளை வெளியிடுவார்கள். தான் கீழானவன், மெலியான், அற்பன் என்ற உணர்வே, அனேகர்களுக்குத் தைரியச்சோர்வை உண்டுபண்ணித் தம்யோக்கியதைகளில் நம்பிக்கையில்லாதவர்களாய் தவறிப்போகின்றார்கள். அவர்களிடம் மனமொப்பிய நன்கு மதிப்புள்ள ஒருவார்த்தை சொல்லுவோமாகில் மொக்குள் மேல்விழும் சூரியரச்மி அதை மலர்த்துகின்ற தன்மைபோல அவ்வன்பான தைரியத்தை உண்டுபண்ணி அவர்கள் உள்ளம் விரிந்து விகாசிக்கும்படி செய்விக்கும்.

நம்மின் மெலியாருடன் நிகழும் சம்பந்தங்களில் பொறுமை மிக அவசியமானது. குறைந்தசாமர்த்தியமென்றால், விஷயங்களை அறிதலில் புத்திநுட்பக் குறைவும், கிரகிப்பதிலும் சாதிப்பதிலும், பலக்குறைவுமாம். ஆகவே, மேலானவன் மெலியார் கலங்கவும், திகிலடையவும் செய்யாது பொறுமை பாராட்டக்கடவன். குழந்தைகள், சேவகர்கள் இவர்களிடம் இந்தப் பொறுமைக் குணம் பாராட்டச் சந்தர்ப்பங்கள் வெகுவாய் ஏற்படுகின்றன. அவ்விதம் பொறுமையான ஒழுக்கம் குடும்பத்தின் நேர்மைக்கும், க்ஷேமத்திற்கும் அனுகூலமாம். மெலியாருக்கு உதவிபுரிந்து காப்பாற்றும் பொருட்டு பலத்தை உபயோகம் செய்ய வேண்டுமேயல்லாது, அவர்களை ஹிம்சிக்கவும், பயமுறுத்தவும் கூடாது. எதிலும் சலிக்காத இனிய பொறுமையுடைமை பெருந்தன்மையான தீரனின் லக்ஷணமாம். பொறுமையும், குணங்கண்டு உயர்வுபடுத்தலும் பெற்றோர்களிடமும், உபாத்தியாயரிடமும் அவசியமாக இருக்கவேண்டியவை.

தம்மின் மெலியாரைநோக்கிக் குரோதபாவத்தின் வழியதாகி நிகழ்கின்ற துர்க்குணங்கள் அகங்காரத்தைப்பற்றியதாம்; தானென்ற கௌரவம் பாராட்டியும், கீழோரை இகழ்ந்தும் தன்னுடைய உயர்வை அதிகமாய்க் காட்டவேணும் என்ற கருத்துடனே அவரை அதிக தாழ்வுபடுத்தியும் செய்யும் சுபாவமாம். இவ்வித கௌரவமுடையவனைப்பற்றி ஸ்ரீகிருஷ்ணபகவான் தெளிவாய் விவரித்திருக்கிறார்.

[illegible]

[illegible]

இதமஸ்தீதமபி மே
 பவிஷ்யதி புநர்தநம்॥
அஸௌ மயா ஹத: ஶத்ரு:
 ஹநிஷ்யே சாபராநபி
ஈஶ்வரோऽஹமஹம் போகீ
 ஸித்தோऽஹம் பலவாந் ஸுகீ॥
ஆட்யோऽபிஜநவாநஸ்மி
 கோऽந்யோऽஸ்தி ஸத்ருஶோ மயா
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்யே

(பகவத்கீதை, XVI. 13—16.)

(இ-ள்) இப்பொருள் என்றால், இன்று அர்ஜிக்கப்பட்டது. இக்கோரிக்கையை நிறைவேற்றுவேன். இப்பொருளானது எனக்கு (மாத்திரம்) இருக்கிறது. இப்பொருளுங்கூடப் பின்னும் உண்டாகும்.

இந்தச் சத்துருவானவன் என்னால்கொல்லப்பட்டான். மற்ற சத்துருக்களையும் கொல்லுவேன். நான் சாமார்த்தியமுடையவன். நான் போகத்தை அனுபவிக்கிறவன். நான் உத்தேசித்த காரியங்களை நிறைவேற்றுகிறவன். பலமுள்ளவனும், சுகமுடையவனும், சம்பத்துடையவனும், உயர்குலத்தோனுமிருக்கிறேன். எனக்குச் சமானமானவன் வேறே எவன் இருக்கிறான். நான் இதோ யாகஞ்செய்யப்போகிறேன். இதோ தானஞ்செய்யப் போகிறேன். சந்தோஷமடையப் போகிறேன்.

இக்குணமுள்ளான் தம்மின்மெலியாரை நோக்கி இகழ்ச்சி பாராட்டிச் சுயநயத்தையும் லாபத்தையும் கருதித் தன் காரியம் கைகூடும் பொருட்டு ஏற்பட்ட ஏவலாட்களாக அவர்களை எண்ணுகிறான். அவர்களிடம் ஒழுகும்

ஒழுக்கமுறையில் ஹேளனம், அலக்ஷியம் அகம்பாவம் அவமதிப்பு, இத்துர்க்குணங்களைக் காட்டித் தமக்கும் அவர்களுக்கும் உள்ளதூரம் இவ்வளவென்று வார்த்தையாலும், நடதையாலும் வெளிப்படுத்துகிறான். அவன் நடத்தையானது சண்டை உண்டுபண்ணும் சுபாவமும், தானென்ற அகம்பாவமும், நிஷ்டூரமும், உள்ளதாக அமைகிறது. தவிரவும் தன்னைச் சந்திக்கிறவர்களில உயர்ந்த அன்புடைமை பற்றியவர்களல்லாத ஏனையர்களிடம் அருவருப்பையும், துவேஷத்தையும் உண்டு பண்ணுகிறான். தனக்குக் கீழோர் தனக்குப் பிரியப்பட்டவை யாதேனும் உடையராகி தனக்கபாயமின்றி அவரிடமிருந்து அபகரிக்க முடியுமாகில் தன்னுடைய மேன்பாட்டைக்கொண்டு அவனை ஹிம்சிக்கவும், அடிமைப் படுத்தவும், முயலுகிறது மல்லாமல் கொள்ளை புரியவும், கொலைபுரியவும் துணிவான். இத்தன்மையானவர்களின் குணங்களைச் சரித்திரமூலமாய் அறிவோம். கொடுங்கோல் மன்னர்கள் ஜனங்களை ஹிம்சிக்கிறவர்களாய் விரிவாய் ஏராளமாய் நாசம்செய்து துன்பத்தைவிளைவித்துத் துன்பமுண்டானவர்களின் மனத்தில் அரிஷ்டவர்க்கங்களின் வித்தை விதைத்து அவைகளின் பலனாகக் கலகம், கொலை, அரசனின்மையால் உண்டாகும் குழப்பம், இவைகளுக்குக் காரணஸ்தர்களாக ஏற்படுகின்றார்கள். ஜன சம்ரக்ஷணையில்குறைவுபடும் அரசனைத்திர்க்கமாய் மனுகண்டிக்கிறார்.

𑌅𑌦𑌣𑍍𑌡𑍍𑌯𑌾𑌨𑍍𑌦𑌣𑍍𑌡𑌯𑌨𑍍𑌰𑌾𑌜𑌾
𑌦𑌣𑍍𑌡𑍍𑌯𑌾𑌂𑌶𑍍𑌚𑍈𑌵𑌾𑌪𑍍𑌯𑌦𑌣𑍍𑌡𑌯𑌨𑍍।
𑌅𑌯𑌶𑍋 𑌮𑌹𑌦𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿
𑌨𑌰𑌕𑌞𑍍𑌚𑍈𑌵 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿।

(மனு, VIII. 128.)

(இ-ள்.) தண்டிக்கத் தகாதவர்களை தண்டித்தும், தண்டிக்கக் கூடியவர்களை தண்டியாமல்விட்டும் இகழ்கின்ற அரசன் யசஸ் இழந்து நரகத்தை அடைவான்.

இத்துர்க்குணங்கள் குடும்பத்திலும், சங்கத்திலும், சிறு தன்மையதாகக் காணப்படுகின்றன. இங்கே பெரியோர்கள் அன்புடைமையின்றி குரோதகுணங்களை அனுஷ்டிக்கிறார்கள். குரூரமான தகப்பனும், யஜமானனும், முறையே மக்களிடமும், சேவகர்களிடமும், தங்களுடைய குரூர நடத்தையால் கொடுங்கோன் மன்னரால் ஹிம்சிக்கப்பட்ட ஜனங்களிடம்போன்று துர்க்குணங்களை விளைவிக்கிறார்கள். அவைகளைப் பின்னர் விலக்க முயன்றும் முடியாததாக விருக்கின்றது.

அகந்தை, இறுமாப்பு, கபடம், இவைகள் மேற்கண்ட சுபாவத்தின் பரிணாமங்களாம். அன்பு, பிரியம், கபடமின்மை, இக்குணங்கள் ஒருவருக்கொருவர் பாராட்ட வேண்டியிருக்க, அவைகளின்றி மேற்கண்ட துர்க்குணங்கள் நடைபெற அதிக விஷபமும், தீங்கும் நேரிடுகின்றது. தனக்கு வயதில் இளையவரிடம் ஒழுகுங்காலத்தில் எக்காரணத்தாலும் தான் மேலாகவும், மற்றவன் கீழாகவும், நேரிடும் சமயத்திலும், மேற்படி துர்க்குணங்களை அனுஷ்டிக்காமல் கவனமாய்த் தன்னை நடத்திக்கொள்ள வேண்டும். மேலானவரின் கடமை, கீழோரைக் கூடுமானவரை தன்னுடன் சமானமான நிலைமைக்குக் கொண்டுவர வேண்டுமென்பது என்றறியத் தக்கது. கீழாயினோரைக் கீழான பதவியிலேயே இருத்தி அந்தக் கீழான நிலைமையை அவர்மனத்தில் படும்படியாய்ச் செய்வதும் அவருக்கும் தமக்கு மிருக்கும் தாரதம்மியத்தைப் பற்றி எப்பொழுதும் நினைப்புமூட்டுகிறதும் நன்றன்று. பின்னதை அனு

சரித்து நடப்பானாகில் அடியிற்கண்டபடி இரண்டிலொன்று நேரிடுவது திண்ணம். கீழாயினோன் அடிமைபோலப் பதுங்கி அச்சம் மேலிட்டு நடக்க முற்றும் நிகழ்வான். அல்லது எதிர்த்து அகங்காரம் மேலிட்டு அலக்ஷியமுள்ளவனாக நிகழ்வான். இப்படிக்கன்றிக் கீழாயினோனைத் தன்னுடன் சமமாக நடத்துவானாகில் கீழானவன் அவனைத் தன்னைவிட உயர்ந்தோனென்று உணர்ந்து மரியாதையாகவும், பக்தி விசுவாசத்துடனும் ஒழுகுவான் என்பது அனேகமாக நிச்சயமான விஷயம். பிறர் உயர்வு உள்ளித் தம்மைமறந்து உதவிசெய்கிறவர்களுக்கே கௌரவம் உண்டாகிறது. தம்மை உயர்த்திக்கொள்ள வேண்டுமெனறு முயலுகிறவர்களுக்கு அன்றாம்.

ஆகையினால் தம்மின மேலோரைநோக்கி ஒருவனை ஒழுகும் ஒழுக்கங்களில் அன்பும், அருளும், நன்செய்கையும், பயில்கடவன. இளமையில் தன் குடும்பத்தில் இக்குணங்கள் வழிபாய்த் தன் இளைஞர்களிடமும், தன் சேவகர்களிடமும், நடைபெறுவானாகில் பின்னர் முதுமைப் பருவத்தில் ஜனசமூகத்தில் இககுணங்கள் தன் ஒழுக்கம் அமைந்து நடக்கும். அவன் பரோபகாரியாவான. தன் ஜாதியாருக்கும் தன் தேசத்தாருக்கும் உபகாரியாக அமைவான்.

III-வது பகுதியில்

X-வது அதிகாரம்

முற்றிற்று.

# III-வது பகுதி.

## XI-வது அதிகாரம்.

*புண்ணிய பாவங்களின் பரஸ்பர சம்பந்தங்கள்.*

ஒருவன் தன் சீலத்தை அபிவிருத்தி செய்யவும், உலகத்தில் நேரும் சங்கடங்கள், ஆசாபாசங்கள் இவைகளை விலக்கவும் எண்ணுவானாகில் ஜனங்களுக்குள் புண்ணிய பாவகதிகள் பரஸ்பரமாய்ச் சம்பந்திக்கும் முறைகளை உணர வேண்டுவது அவசியமாம். இதை அறிவானாகில் பாபசம்ஸ்காரங்கள் தன்னைப் பற்றாமலிருக்கும்படிக்கும், புண்ணிய சம்ஸ்காரங்கள் தன்னிடத்திலும் மற்றவர்களிடத்திலும் விருத்தியாகவும் ஏற்ற சாதனங்களைத் தெரிந்துகொள்ளுவான்.

ஓர் அந்தக்கரண விருத்தியை அதாவது புண்ணிய அல்லது பாவகதியின் ஸ்திரமான மனோபாவத்தை ஒருவன் மற்றொருவனிடம் வெளிக்காட்டிப் பாராட்டுவானாகில், அத்தன்மையதான புண்ணிய அல்லது பாவமனோபாவம் மற்றவனிடம் நிகழும்படி ஏவப்படுகின்றது. இது பொதுவிதி. நாம் அன்பு பாராட்டுவோமாகில் அன்பே பிறரிடம் நிகழும். பகைபாராட்டினால் பிறரிடம் பகைநிகழும். குரோதம் குரோதத்தை விளைவிக்கும்; எரிப்பு எரிப்பை விளைவிக்கும்; சாந்தம், சாந்தத்தை விளைவிக்கும்; பொறுமை பொறுமையை உண்டாக்கும். ஒருவன் தன்னையும் தன அயலாரையும், கவனித்துப் பார்ப்பானாகில் இந்தவிதியின் உண்மையை உணருவான். ஜனங்கள் ஒழுக்கங்கள் பிறரைப் பார்த்தே நடைபெறுகின்றன என்பதை அறிய

லாம். ஒரு துர்க்குணி ஒரு கூட்டத்தில் கலகத்தை மூட்டுவன். ஒரு நற்குணமுள்ளவன் எல்லாரையும் சமாதானப் படுத்துவன்.

இந்தப் பொது விதியானது சாதாரணமாய்ப் பெரும் பான்மையோர்களில் சமானர்களிடம் வழங்குவது. அவர்களிடம் அன்புடைமையும் பகையுடைமையும் சமமாய் நிகழுகின்றன. ஜனங்கள் சமானர்களில்லாமல் ஒருவன் மேலும் மற்றொருவன் கீழுமாக இருப்பின் ஒருவனிடம் நற்குணம், அல்லது துர்க்குணம் ஏற்பட்டால், மற்றவனிடம் அதே மாதிரியான குணம் நிகழாமல் அதற்கு இணையான குணம் ஏற்படும். உதாரணமாக, மேலானவன் கீழோனை நோக்கி அன்பு பாராட்டுவானாகில் கீழோனது அன்பு பற்றுகையை ஒட்டுவன். ஆனால் அவனது அன்பின் ரீதி தனனிலைமையைப் பற்றியதாகவே இருக்கும். பக்தி, நம்பிக்கை, சிநேகிதை முதலியனவாய்ப் பரிணமிக்கும். மேலானோனிடமுள்ள அருளுடைமையானது கீழோனிடம் செய்ந்நன்றி மறவாமை என்ற மனோபாவத்தையும் அவ்விதமே ஒருவனிடம் இரக்கம் மற்றவனிடம் நம்பிக்கையையும் உண்டு பண்ணுகிறது. மேலோனுன் கீழோனிடம் பகையைக் காட்டுவானாகில் கீழோனுன் பகையையே திரும்பச் செய்வான். ஆனால், இவன் பகை, இவன் நிலைமையைப் பற்றியதாக நிகழும். அஃதாவது பயம், வஞ்சகம் சதியோசனையுள்ள பழிவாங்கும் சுபாவம் முதலியனவாக பரிணமிக்கும். கொடுமைக்குப்பதிலாகக் கடுகடுப்பும், குரூரத்திற்குப் பதிலாகப் பழிவாங்கும் கபடமான பாவமும் ஏற்படுகின்றன. ஆகவே மேற்கண்ட பொது விதிப்படி நன்மை நன்மையையும், தீமை தீமையையும் விளைவிக்கும். ஆனால் நன்மை கதிகளின் முறைகள், தீமை அவைகளால் பாதிக்கப் படுமவர்களின் நிலைமையை நோக்கியே ஏற்படுகின்றன.

மேற்கண்ட விதி பெரும்பான்மையோர்களிடம் வழங்குகிறது. சிறுபான்மையோர்களிடம், வேறுவிதி வழங்குவது. அன்புடைமை மிகுதியாகி நடைபெறும் நற்குணவானைபார்ப்போமானல் அவன் கோபத்திற்குப்பதிலாகக் கோபம் காட்டான். அதற்கு மாருன நற்குண இயல்பாகிய அன்பையே பாராட்டுவன். ஒருவன் இறுமாப்புடன் ஒழுகுவானுகில் அதற்குப் பதிலாக அக்குணத்தின் எதிரான வணக்கம் பற்றி நற்குணவான் ஒழுகுவன். எரிப்புக்குப் பதிலாகச் சாந்தம்பாராட்டி நடப்பான். இப்படியே மற்றவைகளைக் கண்டுகொள்க. இதின் பயனுக, துர்க்குணத்திற்கும் ஒரு தடை ஏற்படுகிறது. துர்க்குண நடத்தையுடையவனே அதற்கு நேர் எதிரான நற்குண ஒழுக்கத்தைப் பார்க்கத் தானும் தன் பாவத்தை விட்டு நற்குணத்தை நாடி ஒழுகும்படி சம்பவிக்கிறது.

பாவசுபாவம் வரம்பு மீறியுள்ள துன்மார்க்கன், அஃதாவது, குரோத புத்தி மேலிட்டவன், நன்மை ஒருவன் பாராட்டில் அதற்குப்பதிலாகத் தீமையையேபுரிவன். ஒருவன் அவனிடம் வணக்கமாய் ஒழுகுகிருன். அவன் கௌரவமாக நடப்பன். சாந்த குணத்திற்குப் பதிலாக, அவமானம் புரிவன். பொறுமை ஒருவன் பாராட்டுவானுகில், அதற்குப் பதிலாக ஹிம்சையை உண்டு பண்ணுவான். ஆக இரண்டு விதிகள் ஏற்படுகின்றன.

(1) சாதாரண மனிதர்களைப்பற்றி ஒருவனிட நல்ல குணங்கள் அல்லது துர்க்குணங்கள் நேரிடுமாகில் அவைகளைப்போன்ற அல்லது அத்தன்மை பொருந்திய நற்குணங்கள் அல்லது துர்க்குணங்கள் பிறரிடம் உண்டாகின்றன.

(2) அன்புடைமை அல்லது பகையுடைமைமேலாடிக் கொண்டிருக்கிற சிலர்களைப் பற்றியது. ஒருவனிடம் நற்குணங்கள் அல்லது துர்க்குணங்கள் நேரிடுமாகில் அவைகளுக்கு நேர்மாறான குணங்கள் மற்றவனிடம் உண்டாகின்றன. .

இவைகளுக்குத் திருஷ்டாந்தங்களாவன: (1) இரண்டு சாதாரண சமானர்கள் சந்திக்கிறார்களென்று வைத்துக் கொள்ளுவோம். ஒருவன் குரோத சுபாவமுள்ளவனாய் மற்றவனை நோக்கிக்கோபமாய்ப் பேசுகிறான். மற்றவன் கோபமூண்டுகோபத்துடனேயே பதில் சொல்லுகிறான். இதைக் கேட்டமுன்னவன் அதிக கோபங்கொண்டவனாய்த் திரும்பிப் பேசுகிறான். இதனால் மற்றவனுக்கு அதிக கோபாக்கினி உண்டாகிறது. இவ்விதமாய் கோபத்தின்மேல் கோபம் விருத்தியாகி கடைமுடிவில் மும்மரமான போர் ஏற்படுகிறது. ஒருவனுடைய குரோத சுவபாவத்தின் வழியதாய் எத்துணையோ நணபர்கள் ஒருவருக்கொருவர் போர்புரிந்து பகைவர்களாகிறார்கள்.

(2) வேறு இருவர்கள் சந்திக்கிறார்கள். ஒருவன் குரோத சுபாவமுள்ளவனாய மற்றவனை நோக்கிக் கோபமாய்ப் பேசுகிறான். மற்றவனோ இனியபுன்சிரிப்புடனேயும், அன்பு அனுமந்த நடையுடனேயும் இனியசொல்லால் பதில்சொல்லுகிறான். முன்னவன் கோபம் திரவியம் ஏற்படாமல் தானாகவே தணிகிறது. இனியசொல்லும், இனிய புன்னகைப்பும் இவனிடமும் உண்டாகிறது. கோபம்போய் இருவரும் தோள்மேல் தோள் போட்டுக்கொண்டு, அன்பாய் நடைபெறுகிறார்கள்.

குரோதபாவம் மிகுதியாயுள்ளவன் தம்மின் மெலியாரைநோக்கி அகந்தையுடனும் பயமூண்டுபண்ணியும்

ஒழுகித் தன் மனப்படி அவனை நடக்கும்படியாகப் பலவந்தம் செய்வன். கீழானோன் இதுகண்டு பயந்து நம்பிக்கை குன்றி அருவருப்பாய் வணங்குவன். அவனுடைய மனத்தில் பழிவாங்கவேண்டுமென்ற எண்ணம் உண்டாகி விருத்தியடைய முன்னவனுக்குத் துன்பம் செய்யச்சமயம் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறான். இதை அறிந்த முன்னவன் இன்னும் அதிகமாய் அகந்தையையும் அருவருப்பையும் காட்டுகிறான்.

கீழானோன் கொண்டபயத்தை முன்னவன் தெரிந்துகொண்டு முன்விட அதிகமாய் ஹீனம் செய்யத் துணிகிறான். இத்தன்மையாய் மேலானவன் ஒழுக்கம் கீழானவனிடம் அதிக பயத்தையும், நம்பிக்கையின்மையையும், அடிமைத் தன்மையையும், பெருகிய பழிவாங்குகின்ற சுபாவத்தையும் உண்டாக்குகின்றது. இவ்விதம் குரோதம் மேன்மேலும் மாறிமாறி ஏற்பட அபிவிருத்தியாகின்றது.

அன்புடைமை அதிகமாக விருக்கின்ற மேலானவனைக் கீழானவன் பார்க்குமாத்திரத்தில் பயநடுக்கமும், நம்பிக்கைக் குறைவும், வழக்கம்போல், உண்டாகின்றன. இவ்வநீதியான ஒழுக்கங்களை மேலானோன் அறிந்து அன்பும் அருளுமுள்ளவனாய் பயத்திற்கும் அவநம்பிக்கைக்கும் பதிலாகப் பக்ஷமாய் மிருதுபாஷையுடனும், கீழானோனுடன் ஒழுகுகிறான். பின்னவன் இவ்விதமாய் அன்பும் தைரியமும் பெற்றவனாய்ப பயம் விலகி ஆனால் கொஞ்சம் கூச்சமாத்திரமுள்ளவனாய், நடைபெறுகிறான். இக் கூச்சம் கடைசியில் போகிறது. மேலானோனிடம் விசுவாசமும் நம்பிக்கையும், கீழானோனுக்கு ஏற்படுகிறது. ஆகப் பின்னவன் மனத்தில் அன்புநெகிழ்ச்சிஏற்பட பாவ குணங்

கள் நீங்கவும், புண்ணியசுபாவ வித்துக்கள் வேரூன்றிட வும், இவ்விருவர்களுக்குள்ளும் சந்துஷ்டியானவும் நேர் மையுள்ளவுமான சம்பந்தம் உண்டாகிறது.

இதிஹாஸங்களிலும் புராணங்களிலும், இம்மாதிரி யாக, நல்லொழுக்கங்களும் தீயவொழுக்கங்களும் ஒன்றோ டொன்று எதிர்த்து, அதினால் உண்டாகும் பரஸ்பரலக்ஷ ணங்களைப்பற்றிச் சொல்லியிருக்கின்றன. துரியோதனன் தவறுகள் செய்ய, அவைகளைக்கண்டு பீமன் கேலியாய் நகைக்க, அந்நகையை உணர்ந்த துரியோதனன் மனத்தில் குரோதபாவம் உண்டாகிப் பழிவாங்கவேண்டுமென்ற துர் எண்ணம் ஏற்பட்டது. இக்குரோதமே பாண்டவர்களுக் கும் கௌரவர்களுக்கும், நேர்ந்த கொடுமையான சண் டைக்கு ஒரு காரணமாயிற்று. ஸ்ரீ ராமனுக்குத் தச ரதர் செய்த கொடுமையைப்பற்றிக் கௌசல்யைக் கோப முடன் குத்திக்குத்திக்காட்டத் தசரதர் இனிமையாயும், பணிவாயும் வாங்கிக்கொண்டு சாந்தராய் ஒழுகக் கௌஸல் லியை தன் நடத்தைக் குற்றத்தை உணர்ந்து அனுதா பப்பட்டு அன்புடனே பணிவாய்த் தானும் ஒழுகுவாளாயி னாள். அர்ஜுனன் விசுவரூபத்தைக்கண்டு நடுக்கமுற் றிருக்கும் சமயத்தில், ஸ்ரீ கிருஷ்ணபகவான் சாந்த மாய்ச் சொல்லித் தன்னுடைய பழைய சாதாரண ரூபத் தை வகித்துக்கொண்டார். இக்கதைகளெல்லாம், நம் முடைய பிரயோஜனத்திற்காக ஏற்பட்டன. நாம் தீய ஒழுக்கத்தைப்பார்த்து அதை விலக்கி அதற்கு எதிரான நல்லொழுக்கத்தை அனுஷ்டிக்கக் கடவோம். நெருப்பை ஆரம்பத்தில், லகுவாய் அணைக்கலாம். அதில் திரவியங் களைப்போட அதிமாகப்பற்றி அது சம்பந்திக்கிறதை யெல்லாம் தகனம் செய்கிறது.

உலகத்தில் பரமாசாரியர்கள் தங்களுடைய சிஷர்களுக்குத் தீயவைக்குப் பதிலாகத் தீயவை செய்யாமல் நன்மையைச் செய்யற்பாலதென்று ஆதேசம் செய்திருக்கிறதின் தத்துவத்தை நாம் இப்பொழுது தெரிகிறோம். பிறர் உனக்கு எவ்விதம் செய்யக்கடவது என்று விரும்புகிறாயோ, அவ்விதமே நீயும் பிறருக்குச் செய்யக்கடவது என்ற தருமமுறை ஏன் ஏற்படவேண்டுமென்று இப்பொழுது தெரியவருகிறது. இதை அடியில்வரும் சுலோகம் தெரிவிக்கிறது.

யத³ந்யைர்விஹிதம் நேச்சே²த்
ஆத்மந: கர்ம பூருஷ:।
ந தத்பரேஷு குர்வீத
ஜாநந்நப்ரியமாத்மந:॥
யத்³யதா³த்மநி சேச்சே²த
தத்பரஸ்யாபி சிந்தயேத்॥

(மகாபாரதம் சாந்திபர்வம், L. XXXVI.)

இதுவே தரும ஒழுக்கமுறையின் சுருக்கம். ஏனெனில், பிறர் என்றவர் உண்மையில் நீயாகவேயிருக்கிறாய்.

மனுசொல்லுகிறார்:

க்ருத்⁴யந்தம் ந ப்ரதிக்ருத்⁴யேத்
ஆக்ருஷ்ட: குஶலம் வதே³த்॥

(மனுஸ்மிருதி: VI. 48.)

(இ-ள்) கோபிக்கிறவனிடம் கோபங்கொள்ளவேண்டாம், பிறர் கோபமாய்ப் பேசினாலும் சாந்தமாய் இன்சொல் சொல்லக்கடவன்.

சாமவேதத்தில் சொல்லியிருக்கிறதாவது:

ஸேதூம்ஸ்தர து³ஸ்தராந் அக்ரோதே⁴ந
க்ரோத⁴ம் ஸத்யேநாந்ருதம்॥

## ஆரண்ணியககானம், அர்க்கபர்வம், 2-வது பிரபாடகம.

(இ-ள்) கஷ்ட சாத்தியமான சேதுவைத் தாண்டு; சாந்தத்தினல குரோதத்தையும் சத்தியத்தினல அசத்தியத்தையும் ஜயி.

இம்மாதிரியே கௌதமபுத்தரும்: குரோதத்தினல் குரோதம் ஒருகாலும் தணியாது. அன்பினல் தணியும்.

மறுபடியும்:

நிஷ்காரணமாய் ஒருவன் எனக்குத் துன்பம் விளை விப்பானாகில், மனப்பூர்வமாய் நான அன்பு பாராட்டுவேன். அவனிடமிருந்து எவ்வளவு துன்பம் எனக்கு வரினும், நான் அவ்வளவு அன்புசெய்குவேன.

இனனுமவர் சொல்லுகிருர்:

துன்பம் செய்கிறவனுக்குத் துன்பம்புரியோர் ஒரு பொழுதும் பரிசுத்தராகார். துன்பபாவமில்லாதார் பிறர் குரோதத்தைத்தணிப்பர் கோபத்தைச்சினமின்மையால் தணிப்பர். தீயவை நனமையால் தவிர்க்கப்படும். பேராசை யை உதார குணத்தால் விலக்கு. பொய்மையை வாய்மை யால் வெல்லு.

ல்யோட்ஸ் என்ற மஹானுபாவன் சொல்லுகிருர்:

நல்லோருக்கு நல்லன் யான், தீயோருக்கும் நல்லன் யான்: இதுபற்றி எல்லோரும் நல்லோராவர். சத்தியமுள் ளோருக்குச் சத்தியமுள்ளவன் யான், அசத்தியமுள்ளோ ருக்கும் சத்திய முள்ளவன் யான்: இதுபற்றி எல்லோரும் சத்தியமுள்ளவராவர்.

ஏசுகிறிஸ்துவும் இவ்விதம் சொல்லுகிருர்:

உன் பகைவர்களிடம் அன்புவை உன்னைச் சபிக்கிற வர்களை ஆசிர்வதி. உன்னிடம் குரோதம் பாராட்டுகிறவர்

களுக்கு நன்மைசெய். உன்னை நிந்தித்துத் துன்பம் செய்கிறவர்களின் க்ஷேமத்தைப்பற்றிப்பிரார்த்தி.

தீயவை, தீயவை திரும்பிச்செய்யின் விருத்தியடைகிறது. தீயபாவம் அத்தன்மையானவையைச் சேரச்சேர மேன்மேலும் பலப்படுகிறது. அக்கினியில் ஜலம்போல, குரோதம் அன்புசேரத் தணியும். குரோதாக்கினி தணிந்தால்தான் சந்தோஷமுண்டாகும். அன்பு மிகுதியாய் நிகழுமாகில் சந்தோஷம் ஜனிக்கும்.

இதுதான் பொதுவிதி. முடிவிலும் தீயகுணத்தை நற்குணமாக்க, இதுதான் வழி. ஆனால் குறிப்பிட்டதேச காலவரம்புக்குள் ஜனசமூகத்தில் அதிகாரம் வகிக்கின்றவர்கள் தீயார் அநேகக்கொடுமைகளைச் செய்யுங்காலத்தில் அவர்களை அன்பினாலன்றி நீதிமுறையான தண்டனையால் சிக்ஷிக்கவேண்டியதாக ஏற்படுவார்கள். ஜகத்தின் நேர்மைபாவப் பிரதிநிதியாகிய அரசனும்நியாயாதிபதியும் தீயாரைத் தண்டித்துத் தீமையை அடக்கி அதின்வழியதாக நேர்மையைக் கொண்டுசெலுத்தவேண்டுவது அவர்களுடைய கடனாம். இந்த ஒரு விலக்குவிதி நீங்கலாக, எப்பொழுதும் மேற்கண்ட பொதுவிதி ஒழுகற்பாலது.

மேலும் புண்ணிய பாவங்களையும் அவைகளின் பரஸ்பரசம்பந்தங்களையும் உணர்ந்து, அன்புடைமையையும் அதின் வழியதாகிய நற்குணங்களையும், ஒருவன் தன்னிடம் அறிவு பூர்வமாய்ப் பயிலவேண்டும். இவ்விதம் தன்னிடம் நற்குணங்கள் உண்டாகவும், பிறரும் அவைகளை அனுசரித்து ஒழுகவும் செய்யக்கடவன்.

தன்னின் மேலானோரிடம் பக்தி, சிசுருஷை, பணிவு, வணக்கம் பாராட்டுவாராகில், அவர்கள் அருளும், கருணை

யும் உருக்கமும் இவனிடம் காட்டி ஒழுகுவார்கள். மேலானோன் ஒருகால் கோபம் அல்லது கர்வம் பாராட்டுவானாயின் அதனால் தன்னிடம் பயம் ஜனிக்காமல் தடுத்து கபடமற்ற பணிவுபொருந்தி அவரிடம் நம்பிக்கைபாராட்டி ஒழுகக் கடவன். இப்படியாகில் அவரிடம் அன்புநெகிழச் செய்வான். அவரிடம் உண்டான கோபமும், கௌரவமும் விலகிப் பக்ஷமும் கிருபையும் உண்டாகும்.

தன்னிடம் சமானர்களிடம் பிரியம பாராட்டியும் கொடுத்து மரியாதை வாங்கியும், நேர்மையாய் நடந்தும் அவர்களைத் தன்னிடம் அன்புள்ளவர்களாகச் செய்யக் கடவன். குரோத பாவத்தின் வழியதாகிய தீமையை அவர் செய்யின் அதற்குப் பதில் தன்னிடமெழும் தீய பாவத்தை அடக்கி அதற்குமெதிரான அன்பின் வழியதாகிய நற்குண பாவத்தையே காட்டித் தீமைக்குப் பதிலாக நன்மையும், நிந்தைக்குப் பதிலாக மரியாதையும், நேர்மையும் பற்றி ஒழுகக் கடவன். இவ்வித ஒழுக்கம் தீமை, அபிவிருத்தியைத் தடுக்கும். மேலும தீயவன் அதிகக் கொடுமையானவனாக இராமல் இருப்பானாகில் அவன் மனத்திலும், நேர்மையான பாவமுண்டாகி அவனை நல்வழியில் நடைபெறும் படியாகவும் செய்யக் கூடும்.

தம்மின் மெலியாரிடம் இனிமையும் பொறுமையும் பாராட்டியும், அதின் வழியாய்த தைரியத்தை விளைவித்தும் அவ நம்பிக்கை பயம் உண்டாகாமலும், அவரிடம் நம்பிக்கையும் தைரியமும் பலிக்கும் படியாய்த் தான முயல வேண்டும். தமமின மெலியார் இத்துர்க்குணங்களைப்பற்றி ஒழுகுவாராயின் அதைக்கண்டு அவரிடம் நிந்தையும், அலக்ஷியமும் பாராட்டாமல் தான் அன்பும்பொறுமையும் காட்டிச் சிறுகச் சிறுக அவரை அன்பின் வழிப்படுத்தித் தன்னுடன் நேர்மை பற்றி நடக்கும்படி செய்யக் கடவன்.

இம்முறைகளின்படி குடும்பமும் ஜனசமூகமும் தேசமும் நடைபெறுமாகில் உலகவழக்கு இப்பொழுது இருக்கிறதைவிட எவ்வளவோ வித்தியாஸமாக இருக்கலாகும். இப்பொழுது இருக்கும் குரோதபாவம் விரைவில் நீங்கி அசமாதானமும் கலகமும் ஒடுங்கி அமைதியும் துன்பமும் விலகி இன்பமும் நேருமாகும். தரும நீதி முறைப் படிக்கும் ஒவ்வொருவனும் நேர்மையான அறிவால் நேர்மையான ஒழுக்கம் அமையுமாறு கற்றதற் கிணங்க ஒழுகக் கடவன். கற்பவைகற்றபின் நிற்கஅதற்குத்தக. இம்மாதிரியாகத் தான் சீலம் ஏற்படவேண்டும் இவ்வாறு நடைபெறுவாராகில் இந்தியர்கள் தம்தேசத்தின் கௌரவத்திற்கு பாத்திரவான்கள் ஆவார்கள். இன்றுபாலன் நாளைக்குச் சுதந்தரமுள்ள தீரன. அவன சன்மார்க்க முறையில், நடந்து மேன்மையான வாழ்வைப் பெறுவானாக.

எல்லா மனமும் ஒற்றுமை அமையும் முறையைச் சொல்லுகிறேன். இதின் கண் குரோதபாவம் இன்றும். புதிதாய்த் தானீன்ற கன்றின்மீது பசு எப்படி அன்பு பாராட்டுமோ, அப்படி ஒவ்வொருவனிடமும் அன்பு பாராட்டுக; மகன பிதாவழி செல்லுக; மாதாவின் மனமொப்பி நடக்க; மனைவி கணவனுடன் நேர்மையாக வாழுக; இனியவை சொல்லுக; சகோதரன் சகோதரனிடமும் சகோதரியிடமும் தீயவை உன்னற்க; யாவரும் நேர்மையுடன் வாழ்க; யாவரும் அன்பின வழியராய் நிற்க.

சர்வோஜநாஸ்ஸுகினோபவந்து.

ததாஸ்து.

III-வது பகுதி

XI-வது அதிகாரம்

முற்றிற்று.

---

*Lo R*

# பிழைதிருத்தம். (தமிழ்)



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 85 | 14 | எல்ல | எல்லா |
| 89 | 3 | கர்மாக்கருடைய | கர்மாக்களுடைய. |
| 158 | 9 | யப்பொழுதும் | எப்பொழுதும். |
| 175 | 9 | வியாபகங்செய்து | வியாபகஞ் செய்து. |
| 177 | 8 | பொருருளை | பொருளை. |
| 178 | 25 | தாண் | தான். |
| ,, | 27 | மேகண்ட் | மேற்கண்ட. |
| 179 | 3 | வைகுவாய் | வெகுவாய். |
| 181 | 4 | உபநிஷத்தில்ச் | உபநிஷத்தில். |
| 184 | 24 | வவிவரித்திரு | விவரித்திரு. |
| 194 | 5 | அயிசுவரத்தினால் | சுவரத்தினால். |
| 241 | 17 | வழபட | வழிபட. |
| 242 | 23 | அதிம | அதிக. |
| 246 | 26 | உண்டுபண்ணியம் | உண்டுபண்ணியும். |
| 249 | 4 | மாந்திரிகம் | தாந்திரிகம். |
| 255 | 9 | பிரமசாரீ | பிரமசாரி. |
| 271 | 1 | முள்ளவனாகவு | முள்ளவனாகவும். |
| 297 | 13 | ஜீவரசி | ஜீவராசி. |
| 304 | 9 | உணருகிறனோ | உணருகிறானோ. |
| 306 | 7 | ஆராய்ச்சினால் | ஆராய்ச்சியினால். |
| 309 | 23 | பமவான் | பகவான். |
| 320 | 30 | ஜவகதியும் | ஜீவகதியும். |
| 330 | 11 | பயிற்சிசெய்து | பயிர்செய்து. |
| 409 | 6 | துஷ்டகரமான | துஷ்கரமான. |
| 420 | 6 | தருமன்று | தருமமன்று. |



# பிழை திருத்தம். (கிரந்தம்)



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| 12 | 22 | [illegible] | [illegible] |
| 38 | 7 | [illegible] | [illegible] |
| 45 | 22 | [illegible] | [illegible] |
| 46 | 8 | [illegible] | [illegible] |
| 49 | 20 | [illegible] | [illegible] |
| 50 | 4 | [illegible] | [illegible] |
| ,, | ,, | [illegible] | [illegible] |
| ,, | ,, | [illegible] | [illegible] |
| 51 | 6 | [illegible] | [illegible] |
| ,, | 19 | [illegible] | [illegible] |
| ,, | 23 | [illegible] | [illegible] |
| 54 | 19 | [illegible] | [illegible] |
| 63 | 20 | [illegible] | [illegible] |
| 88 | 20 | [illegible] | [illegible] |
| 91 | 27 | [illegible] | [illegible] |
| 93 | 8 | [illegible] | [illegible] |
| 101 | 15 | [illegible] | [illegible] |
| 109 | 24 | [illegible] | [illegible] |
| 131 | 9 | [illegible] | [illegible] |
| ,, | 23 | [illegible] | [illegible] |
| 134 | 26 | [illegible] | [illegible] |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 156 | 14 | [illegible] | [illegible] |
| 160 | 14 | [illegible] | [illegible] |
| 171 | 4 | [illegible] | [illegible] |
| 184 | 25 | [illegible] | [illegible] |
| 198 | 26 | [illegible] | [illegible] |
| 200 | 13 | [illegible] | [illegible] |
| 216 | 3 | [illegible] | [illegible] |
| ,, | 10 | [illegible] | [illegible] |
| 223 | 16 | [illegible] | [illegible] |
| 262 | 17 | [illegible] | [illegible] |
| 269 | 3 | [illegible] | [illegible] |
| 286 | 26 | [illegible] | [illegible] |
| 287 | 2 | [illegible] | [illegible] |
| 289 | 13 | [illegible] | [illegible] |
| ,, | 14 | [illegible] | [illegible] |
| ,, | 16 | [illegible] | [illegible] |
| 292 | 22 | [illegible] | [illegible] |
| 299 | 16 | [illegible] | [illegible] |
| 302 | 11 | [illegible] | [illegible] |
| 310 | 25 | [illegible] | [illegible] |
| 311 | 4 | [illegible] | [illegible] |
| 312 | 20 | [illegible] | [illegible] |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 334 | 25 | ந்வாமாந | நாமாந |
| 341 | 11 | ஸத்வவ்ரதம் | ஸத்வம்வ்ரதம் |
| ,, | 13 | ஸத்வஸத்வ | ஸத்வஸ்வ ஸத்வ |
| ,, | 25 | சுசாத்ஸ்வவர்ணம் | சுசாத்ஸ்வரூம் |
| 377 | 2 | வீஜயந்து | வீஐயந்து |
| ,, | 20 | க்லிஷ்டம் | க்லிஷ்டம் |
| 389 | 4 | யூராரக்ஷே | யூராயக்ஷே |
| 398 | 20 | த்ர்யாஃ | க்ர்யாஃ |
| 406 | 1 | கூதா | க்ருதா |
| 421 | 15 | சுவர்ணா | சுவர்ணா |
| 425 | 19 | யெஷாம் | தேஷாம் |
| 429 | 8 | தக்ஷிணவ | தக்ஷிணாவ |
| 440 | 19 | ரஜாநாம் | யஜாநம் |
| 443 | 27 | உநாராயம் | உ.நாராயம் |